# தமிழ் இலக்கிய வரலாறு

## பன்னிரண்டாம் நூற்றாண்டு

### பாகம் - 2

குறிப்புதவிநூல்

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*

*இராயப்பேட்டை*

*சென்னை - 14.*

# தமிழ் இலக்கிய வரலாறு

பன்னிரண்டாம் நூற்றாண்டு, பாகம் – 2

மு. அருணாசலம்



குறிப்புதவி நூல்

முதற் பதிப்பு : சித்திரை 1973.

திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.

பக்கம் : xii + 368 = 380.

பதிப்பு :
**தி பார்க்கர்**
293, அகமது வணிக வளாகம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

விலை : 284. 00

வடிவமைப்பு :
வே. கருணாநிதி

அச்சிட்டோர்:
**தி பார்க்கர்**
293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.

# முகவுரை

*திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.*

*'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.*

*திருச்சிற்றம்பலம்.* **அ. சிதம்பரநாதன்**
*15. 11. 2004.*

# நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவ்னத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பாலசுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல்விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், இது 12ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகம். இரண்டு பாகங்களாக 12ஆம் நூற்றாண்டு வரலாற்றை ஆசிரியர் எழுதி வெளியிட்டுள்ளார். 12ஆம் நூற்றாண்டு முதல் பாகத்தின் முகவுரையில் ஆசிரியர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"எவ்வளவுதான் கவனமாய்ச் சிந்தித்துக் கருத்துக்களைத் தொகுத்து ஒரு முகப்படுத்திய போதிலும் கூட, பல விட்டுப் போகின்றன. முக்கியமான சில கருத்துக்களே விடுபடுகின்றன. இவற்றை அடுத்த பதிப்பிற்குப் பயன்படுத்திக் கொள்வது எளிது. இங்கு அப்படிச் செய்யாமல் முடிந்தவரை அந்தந்த அத்தியாயத்தின் இறுதியில், விடுபட்ட குறிப்புக்களாகத் தந்துள்ளோம்."

"இவையன்றிப் பின்னும் பல செய்திகள் குறிப்பிட முடியாமல், சில குறிப்புக்கள் என்ற பகுதியில் பக்க எண் குறிப்பிட்டுத் தரப்பட்டுள்ளன. இவையனைத்தையும் வாசகர் உரிய இடத்தில் பொருத்தி வாசித்துக் கொள்வது பயனுடையது." என்று குறிப்பிட்டுள்ளார்.

இத்திருத்தப்பட்ட பதிப்பில் ஆசிரியருடைய மேற்கண்ட குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு உரிய செய்திகளை அதற்குரிய இடத்தில் நாம் சேர்த்துள்ளோம். முடிந்தவரை இது எம்மால் முறையாகச் செய்யப்பட்டுள்ளது.

திருச்சிற்றம்பலத்திலுள்ள ஆசிரியரது வீட்டில் இப்பணி தொடர்பாக நாம் சிலகாலம் தங்கியிருந்தோம். அங்குள்ள அவரது நூலகத்தில் அவரால் எழுதி வெளியிடப்பட்ட இலக்கிய வரலாற்றுத் தொகுதிகள் அனைத்தும் பக்கத்துக்குப் பக்கம் வெள்ளைத்தாள் இடையிட்டு கட்டமைப்புச் செய்யப்பட்ட ஒரு தொகுப்புக் காணப்பட்டது. இத்தொகுதிகளில் புதிய செய்திகளும் திருத்தங்களும் ஆசிரியரால் குறித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றை நாம் ஒவ்வொரு தொகுதியிலும்

சேர்த்தும் திருத்தியும் முறைப்படுத்தியுள்ளோம். இதனால் ஆசிரியரால் வெளியிடப்பட்ட முதல் பதிப்பிற்கும் எமது இத் திருத்தப்பட்ட பதிப்பிற்கும் இடையில் பக்க அளவிலும் வேறுபாடு காணப்படும்.

12ஆம் நூற்றாண்டுக்கான ஆசிரியரது முகவுரை மற்றும் முன்னுரை இந்நூற்றாண்டின் முதல் பாகத்திலேயே ஆசிரியரால் அச்சிடப்பட்டுள்ளது. மீண்டும் அதை 12ஆம் நூற்றாண்டின் இவ்விரண்டாம் பாகத்திலும் சேர்த்துக்கொள்ள நாமும் விரும்பவில்லை. வாசகர்கள் தேவை கருதி அதனை 12ஆம் நூற்றாண்டு முதல் பாகத்திலிருந்து பயன்படுத்திக் கொள்ளலாம்.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளிவருகின்றன. 14வது தொகுதியாக மேற்படி நூல்களில் உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன. ஆசிரியரின் கருத்துப்படி நாம் இம் முயற்சியை மேற்கொண்டுள்ளோம்.

இப்பதிப்பு முயற்சிக்கு 1992ஆம் ஆண்டளவிலேயே என் சிந்தனையில் வித்திட்டவர் எனது ஆய்வு மேற்பார்வையாளர் முனைவர் வீ. அரசு அவர்கள்.

தன் தந்தையாரின் இவ்விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக்கொணர எமக்கு அனுமதியளித்து, தனது வீட்டில் தங்கவைத்து எம்மை ஊக்கப்படுத்திய அவர் மகனார், உணவளித்து எம்மை உபசரித்த அவர் மருமகளார் இருவரும் மிகுந்த போற்றுதலுக்கு உரியவர்கள்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செலவிட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடுகொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக் குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படையில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

சென்னை
25. 12. 2005.

**வே. கருணாநிதி**

# பொருளடக்கம்

## அட்டவணைகள்



ooo

# இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்



○○○

அத்தியாயம் 5

# இலக்கிய உரை – 1

## அடியார்க்கு நல்லார்

### முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் இலக்கிய இலக்கணங்களுக்கு உரை எழுதும் மரபு ஒரு சிறந்த இலக்கியப் பிரிவாக வளர்ந்திருப் பதைக் காண்கிறோம். தொல்காப்பியம் ஆட்சி பெற்றிருந்த காலம் தொடங்கி இத்தகைய மரபு தோன்றியிருக்க வேண்டும். தமிழ்நாட்டின் வரலாற்றில் தமிழ் வளர்க்கும் பெரும்பணியில் மதுரை சிறந்து விளங்கியிருந்தது. கடைச்சங்கம் என்பது ஒரு பல்கலைக்கழகமாக அங்கு நெடுங்காலம் அமைந்தது; புலவர் களுக்கு இருப்பிடமாகவும், சிறந்த தமிழ் நூல்களை அரங் கேற்றும் இடமாகவும், மாணாக்கரைப் பயிற்றிப் புலவராக்கும் இடமாகவும், பாண்டி மன்னர் ஆதரவில் ஓங்கியிருந்தது. பாண்டியருக்கு ஏற்பட்ட தாழ்வே இச்சங்கம் அழிவதற்கும் காரணம் என்று வரலாற்றால் அறிகிறோம். பிற நாட்டிலிருந்து வந்த களப்பிரர் என்று பெயர் சொல்லப்படுகின்ற ஓர் அன்னிய இனத்தார் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மதுரையுள் புகுந்து, பாண்டியரைத் துரத்திவிட்டு, நாட்டைக் கைப்பற்றிச் சுமார் முந்நூறு ஆண்டுக் காலம் ஆட்சி புரிந்தனர். அக்களப்பிரர், நாட்டாலும், மொழியாலும் அன்னியர்; சைன ராயிருந்தபடியால், சமயத்தால் அன்னியர்; அவர்களுக்கு முன் பாண்டி நாட்டில் சைனம் நிலவியதில்லை. அவர்கள் ஆட்சிக் காலத்தில் தமிழ் வீழ்ச்சியடைந்தது. பாண்டியருக்கு இடுக்கண் வந்தமையால், அவரால் ஆதரிக்கப் பெற்ற தமிழ்ச் சங்கத்துக்கும் அழிவு வந்தது. அச்சைனர் இசையாலும் பெண்ணாலும் மனிதன் கெடுவான் என்ற சமயக் கொள்கையுடையவர்கள். ஆகவே,

இசையை ஒடுக்கினார்கள். இசைத்தமிழையும், நாடகத்தமிழை யும் ஆட்சியில்லாது ஒடுங்கச் செய்துவிட்டார்கள். முத்தமிழில் இரண்டு பெரும்பிரிவுகளாகிய இவை மறையலாயின. சிலப்பதி கார உரைகளால், நாம் அறிகின்ற பெருஞ்சிறப்பு வாய்ந்த இசை யும் நாடகமும் போனஇடம் கூடத் தெரியாமல் மறைந்தன. பின்னர் ஆறாம் நூற்றாண்டில் கடுங்கோன் என்ற பாண்டிய மன்னன் தோன்றிக் களப்பிரர் என்ற கலியரசரை வேரறுத்து மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிலைபெறுவித்தான் என்று வேள்விக்குடிச் சாசனத்தால் அறிகிறோம். அடுத்த நூற்றாண்டில் திருஞானசம்பந்தர் சோழநாட்டில் அவதரித்து, மதுரை அடைந்து சைவ சமயத்தை அங்கு நிலைநாட்டியதோடு, இசைத்தமிழையும் புதிதாகத் தூக்கி நிறுத்தினார். அவர் எங்கும் தம்மை 'இசை வல்ல தமிழ் ஞானசம்பந்தன்' என்றே கூறிக் கொள்வதால், அவருடைய அவதாரத்தின் பெருநோக்கம், சமயத்தின் மூலம் தமிழுக்கு வாழ் வளித்தல், சிறப்பாக இசைத்தமிழுக்கு வாழ்வளித்தல் என்பது நன்கு புலப்படுகிறது. இங்கு இசை நமக்கு நோக்கமல்லவாத லால், இதை இவ்வளவோடு நிறுத்திக் கொள்கிறோம்.

இங்கு சிறப்பாய்க் கருதத்தக்கது தமிழின் சிறப்புப் பகுதி யாயுள்ள அகப்பொருளுக்கு விளைந்த அழிவு. களப்பிரர் பெண்ணால் மனிதன் அழிவான் என்ற கொள்கையுடையவர் ஆதலால், அவர்கள் ஆட்சிக் காலத்தில், பெண்ணைப் பெருக்கிச் சொல்லுகின்ற அகப்பொருளுக்கும் அழிவு ஏற்பட்டது. அகப் பொருட் பயிற்சி குன்றிய நிலையால், தொல்காப்பியப் பொருளதி காரம் ஆட்சியின்றி மங்கியது. பின்னால் பாண்டிய அரசனுடைய கவலையைப் போக்குவதற்காக இறையனார் களவியல் செய்து தந்தபோது, பொருளதிகாரத்தில் களவியல் ஒன்றுமே செய்து கொடுத்தார். அரசன் கவலைப்பட்டதைக் கூறும் இடத்து 'என்னை, எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதி காரத்தின் பொருட்டன்றே? பொருளதிகாரம் பெறோம்யெனின், இவை பெற்றும் பெற்றிலேம் எனச் சொல்லா நிற்ப' என்று அவ்வுரை கூறுகிறது. அக்காலத்துக்கு முன்னிருந்த தொல் காப்பியம் இறையனார் களவியல் செய்த காலமாகிய எட்டாம் நூற்றாண்டில் இல்லை என்ற நிலை ஏற்பட்ட காரணம், களப்பிரர் ஆட்சியில் தொல்காப்பியப் பயிற்சியும் ஆட்சியும் இல்லாது போனமையே. ஒருகால் அக்காலத்துக்கு முன்னமே தொல்காப்பியத்துக்கு உரைகள் ஏற்பட்டிருத்தலும் கூடும். நமக்கு எதுவும் கிடைக்கவில்லை, வரலாறும் தெரியவில்லை.

## தமிழ் உரை மரபு

எட்டாம் நூற்றாண்டில் இறையனார் களவியல் எழுந்தது. அதற்கு உரை செய்தார் ஒரு நக்கீரர் என்பது வரலாறு. இதுவே இன்று கிடைக்கின்ற தமிழ் உரை நூல்களுள் முதல் உரை நூலாகும். தமிழ் இலக்கிய மரபில் உரைகள் மூன்று நெறியில் சென்றிருக்கின்றன. முதலாவது இலக்கண உரை, இரண்டாவது இலக்கிய உரை, மூன்றாவது சமயச் சார்பான உரை.

முதலாவதாக இலக்கண நூல் உரை நெறியைக் கருது வோமானால், அங்கு மேற்கூறியவாறு நக்கீரர் இறையனார் களவியலுக்கு எழுதிய உரையே முதல் உரை என்று தெரிகிறது. பின்னர் எப்படியோ, மறைந்து போயிருந்த தொல்காப்பியத்தை இளம்பூரணர் கண்டுபிடித்து, மிகவும் முயன்று உரை எழுதி வைத்தார்; இது நடந்தது பதினொராம் நூற்றாண்டில்; அக்காலம் தொடங்கி இலக்கண உரை நூல் மரபு வளர்ந்து வந்திருக்கிறது. இளம்பூரணருக்குச் சில ஆண்டுகள் முன்னமேயே யாப்பருங்கல விருத்தி உரை தோன்றியிருந்தது. பின்னர் பதினைந்தாம் நூற்றாண்டு வரையில் வீரசோழிய உரை, வச்சணந்திமாலை உரை, தொல்காப்பிய உரைகள், நம்பி அகப்பொருள் உரை, நன்னூல் உரை, புறப்பொருள் வெண்பாமாலை உரை, நேமிநாத உரை என்றெல்லாம் உரைகள் பெருகிக்கொண்டு போயின. தொல்காப்பியத்துக்கு அறுவருக்குமேல் உரை செய்திருப்பது அதன் சிறப்பு.

இனி, இலக்கியங்களைப் பார்த்தால், குறள் மணக்குடவர் உரையே முதன்முதலில் தோன்றிய இலக்கிய உரையாகும். அதிலிருந்து தொடங்கி, சிலப்பதிகார உரைகள், குறள் உரைகள், எட்டுத்தொகை உரைகள் என்றெல்லாம் உரைகள் வளர்ந்து கொண்டு போகின்றன. உரைகாரர் அனைவரிலும் பெருஞ் சிறப்புக்குரியவர் நச்சினார்க்கினியர். இவர் பேரிலக்கணமாகிய தொல்காப்பியத்துக்கு உரை எழுதியதோடு, பேரிலக்கியங்களாகிய சிந்தாமணி, பத்துப்பாட்டு, கலித்தொகை என்பவற்றுக்கும் சிறப்பான பேருரைகள் எழுதினார்.

இனி, சமய நூல் மரபில் உரை எழுதினார் இருவகை. முதல் வகை வைணவ ஆசாரியர் மரபில் நாலாயிரப் பிரபந்தங்களுக்கு எழுந்த சமய தத்துவ விளக்க உரைகள். இவை இராமானுசர் காலத்தில் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் எழுதிய ஆறாயிரப்படி என்ற வியாக்கியானம் தொடங்கி, 15ஆம்

நூற்றாண்டில் மணவாள மாமுனி செய்த பெரியாழ்வார் திருமொழி உரை வரையில், மிகவும் விரிவாக உள்ளன. உரை செய்தாருள் பெரியவாச்சான் பிள்ளை என்பவர் மிகப்பெருஞ் சிறப்புடையவராய் வியாக்கியான சக்கரவர்த்தி என்றும் கூறப் பெறுகிறார். இவ்வுரைகள் யாவும் ஒரு விலக்கும் இல்லாமல், தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் செய்யப் பெற்றிருந்தன. இவையன்றி, நீலகேசி உரை போன்ற சில, சைன சமயத்தில் மணிப்பிரவாளத்தில் தோன்றியிருக்கின்றன. மற்றொரு வகை, சைவ சாத்திர உரைகள், 16ஆம் நூற்றாண்டில் அபூர்வ மாகச் சிவாக்கிரயோகி ஒரு சைவ சாத்திர உரை முன்கூறிய மணிப்பிரவாள நடையில் செய்தார். திருக்கோவை உரைகள் இலக்கிய உரைகளாகவே அமைந்தன. 14ஆம் நூற்றாண்டில் இருபா இருபது சிவப்பிரகாசம் என்ற சித்தாந்த சாத்திரங்களுக்கு உரைகள் எழுந்தன. 15ஆம் நூற்றாண்டின் பிற்பாதியிலிருந்து தொடர்பாகச் சைவசாத்திர நூல் உரைகள் பல பெருகி வந்திருக் கின்றன: இவையாவும் சிறப்பான தமிழ் உரைகள்.

ஒரு பொதுநோக்காகப் பார்க்கும்போது, இலக்கிய இலக் கணப் பேருரைகள் 15ஆம் நூற்றாண்டோடு நின்று போகின் றன. பிறகு தோன்றியவை யாவும் சிறப்புடைய சைவ சாத்திர உரைகளே அன்றி, இலக்கிய இலக்கண உரைகள் எழவில்லை. இலக்கண உரை செய்தாருள் நூலாசிரியரே உரை செய்து உதா ரணச் செய்யுட்கள் எழுதி வைத்தலும் உண்டு. எடுத்துக்காட்டு கள் இலக்கணத்துள் மட்டும் உள்ளன - தமிழ் நெறி விளக்கம், நம்பி அகப்பொருள் விளக்கம், இலக்கண விளக்கம், பிரயோக விவேகம் முதலாயின; தண்டியலங்காரம் - மூலமும் மேற்கோள் புதுச்செய்யுட்களும் ஆசிரியரே செய்தவை.

உடன் உள்ள இலக்கிய இலக்கண உரை அட்டவணை இங்கே கூறிய கருத்துக்களை விளக்கிக்காட்டும். இவ்வட்ட வணையில், வரலாற்றுக்காகவே உரையாசிரியர்களின் சமயத் தையும் குறிப்பிட்டிருக்கிறோம். இவர்கள் பெரும்பான்மை யோர் சைவர். அவர்கள் தொகையில் பாதித் தொகையினர் சைனர். சைனர் செய்த இலக்கிய உரைகள் திருக்குறள் உரை நாலடி நீலகேசி என்பனவே. வைணவ சமயத்தினராய் இலக்கிய உரைசெய்த ஒரே பெரும்புலவர் பரிமேலழகர். இலக்கண உரை செய்தாருள் வைணவர் இல்லை; சைவர் தொகையும் சைனர் தொகையும் சமமாகவே உள்ளது.

## இலக்கிய இலக்கண உரைகள்

| எண் | நூற்றாண்டு | இலக்கிய உரையாசிரியர் | சமயம் | உரைசெய்த இலக்கியம் | எண் | இலக்கண உரையாசிரியர் | சமயம் | உரை செய்த இலக்கணம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| எட்டாம் நூற்றாண்டுக்கு முன் எந்த உரையும் எழவில்லை. | | | | | | | | |
| - | 8 | - | - | - | 1 | நக்கீரர் | சைவம் | இறையனார் அகப்பொருள் உரை எழுதப் பெறவில்லை. |
| - | 9 | - | - | - | 2 | நூலாசிரியரே | - | தமிழ் நெறி விளக்கம் |
| 1 | 10 | மணக்குடவர் | சைனம் | திருக்குறள் | 3 | நீலகண்டனார் | சைவம் | இறையனார் அகப்பொருள் உரையை எழுதி வைத்தார் |
| - | - | - | - | - | 4 | ஆத்திரையன் பேராசிரியன் | சைவம் | தொல்காப்பியப் பொதுப்பாயிரம் |
| 2 | 11 | அரும்பதவுரை காரர் | சைவம் | சிலப்பதிகாரம் | 5 | விருத்தியுரை காரர் | சைனம் | யாப்பருங்கலம் |
| 3 | - | பரிப்பெருமாள் | சைவம் | திருக்குறள் | 6 | குணசாகரர் | சைனம் | யாப்பருங்கலக் காரிகை |
| - | - | - | - | - | 7 | இளம்பூரணர் | சைனம் | தொல்காப்பியம் முழுமையும் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | 12 | பழையவுரை யாசிரியர் | சைவம் | புறநானூறு 266 பாடல் | 8 | பெருந்தேவனார் | சைவம் | வீரசோழியம் |
| 5 | 12 | அடியார்க்கு நல்லார் | சைவம் | சிலப்பதிகாரம் | - | - | - | - |
| 6 | - | பழைய உரை யாசிரியர் | சைவம் | திருக்கோவையார் | - | - | - | - |
| 7 | 13 | காலிங்கர் | - | திருக்குறள் | 9 | உரையாசிரியர் | சைனம் | வச்சணந்திமாலை |
| 8 | - | பரிமேலழகர் | வைணவம் | திருக்குறள் | 10 | பேராசிரியர் | சைவம் | தொல்காப்பியம் - பொருள் |
| - | - | - | - | பரிபாடல் | 11 | இராச பவித்திரப் பல்லவதரையர் | சைனம் | அவிநயம் நூலும் உரையும் இல்லை |
| 9 | - | பழைய உரை யாசிரியர் | சைவம் | திருமுருகாற்றுப் படை | | - | - | - - |
| 10 | - | பழைய உரை யாசிரியர் | - | ஐங்குறுநூறு | 12 | சேனாவரையர் | சைவம் | தொல்காப்பியம் - சொல் |
| 11 | - | பழைய உரை யாசிரியர் | - | அகநானூறு | 13 | நாற்கவிராச நம்பி | சைனம் | நம்பியகப் பொருள் |
| 12 | - | பழைய உரை யாசிரியர் | - | பதிற்றுப்பத்து | - | - | - | - |
| 13 | - | பதுமனார் | சைனம் | நாலடியார் | - | - | - | - |
| 14 | - | தருமனார் | சைவம் | நாலடியார் | - | - | - | - |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 15 | - | விளக்க உரைகாரர் | - | நாலடியார் | - | - | - | - |
| 16 | - | பேராசிரியர் | சைவம் | திருக்கோவை | - | - | - | - |
| 17 | - | பல உரைகாரர் | - | பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் | - | - | - | - |
| 18 | 14 | நச்சினார்க்கினியர் | சைவம் | பத்துப்பாட்டு | 14 | மயிலைநாதர் | சைனம் | நன்னூல் |
| - | - | - | - | கலித்தொகை | 15 | உரையாசிரியர் | சைவம் | களவியற் காரிகை |
| - | - | - | - | சிந்தாமணி | 16 | நச்சினார்க் கினியர் | சைவம் | தொல்காப்பியம் முழுமையும் |
| - | - | சமய திவாகர வாமன முனிவர் | சைனம் | நீலகேசி | - | - | - | - |
| 19 | 15 | பழைய உரை யாசிரியர் | சைவம் | தக்கயாகப்பரணி | 17 | கல்லாடர் | சைவம் | தொல்காப்பியம் - சொல் |
| 20 | - | பரிதியார் | சைவம் | திருக்குறள் | 18 | பழைய உரை யாசிரியர் | - | தொல்காப்பியம் - சொல் |
| - | - | - | - | - | 19 | தெய்வச் சிலையார் | - | தொல்காப்பியம் - சொல் |
| - | - | - | - | - | 20 | சாமுண்டிதேவ நாயகர் | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| - | - | - | - | - | 21 | உரையாசிரியர் | சைனம் | நேமிநாதம் |

## அடியார்க்கு நல்லார்

*சிலப்பதிகாரத்தின் அரும்பதவுரை முன்னமே எழுதப் பெற்றிருந்தது. அதை நன்கு பயின்று, விரிவுரை எழுதிய முத்தமிழ்ப் புலவர் அடியார்க்கு நல்லார் என்பவர்.*

**சிலப்பதிகாரம்**

*காதை - 22*

*பாடல் - 1 மங்கல வாழ்த்துப்பாடல்*

*மாலை - 2 துன்பமாலை, வஞ்சினமாலை*

*வரி - 3 கானல்வரி, வேட்டுவ வரி, ஊர்சூழ் வரி*

*குரவை - 2 ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை*

*கலிவெண்பா (தனிச்சீருடன்) 9, 21*

*கொச்சகக் கலிப்பா*

*மயங்கிசை - 1, 18, 24, 29; பஃறாழிசை - 12;*
*அயல் மயங்கிசை - 19; மற்றவை - 7, 17, 20, 23*

*நிலைமண்டில ஆசிரியப்பா - 18 காதைகள்*
*(2 - 6, 8, 10, 11, 13 - 16, 22, 25 - 28, 30)*

**வரலாறு**

*நச்சினார்க்கினியர் என்பது போல, இப்புலவருக்கும் அடியார்க்கு நல்லார் என்ற இனிய பெயர் அமைந்திருக்கிறது. இப்பெயர் சிவபெருமானை ஏத்தும் பெயராக, சம்பந்தர் திருக்கருவூரானிலைப் பதிகம் முதற்பாடலில் அமைந்திருக்கிறது:*

விண்ணு லாமதி சூடி வேதமே
பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூருள் ஆனிலை
அண்ண லார்அடி யார்க்கு நல்லரே. (1766)

*பிற்காலத்தில் அடியார்க்கு நல்லார் என்ற பெயரை ஒருபுடையொத்த பெயர்கள் இலக்கியங்களில் பயிலக் காண்கிறோம். பெற்றான் சாம்பானுக்கு முத்தியளிக்கும்படி சிற்றம்பலவர் உமாபதி சிவாசாரியருக்கு எழுதியதாக வழங்கும் பாட்டியல், 'அடியார்க் கெளியன் சிற்றம்பலவன்' என்பது அவருடைய கையெழுத்து. 15ஆம் நூற்றாண்டில் கந்தரலங்காரம் பாடிய அருணகிரிநாதர் முருகனை 'அடியார்க்கு நல்ல பெருமாள்' என்று கூறுவது காணத்தக்கது:*

முடியாப் பிறவிக் கடலிற் புகார்; முழு துங்கெடுக்கும்
மிடியால் படியில் விதனப் படார்; வெற்றி வேற்பெருமாள்,
அடியார்க்கு நல்ல பெருமாள், அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே. (33)

*சிலப்பதிகாரப் பதிக உரையின் இறுதியில் காணப்படுகின்ற சிறப்புப் பாயிரப் பாடல்கள் மூன்று. முதல் பாடல் இவர் பெயரைக் குறிப்பிடுகிறது:*

பருந்தும் நிழலும் எனப் பாவும் உரையும்
பொருந்து நெறிஎல்லாப் பொருளும் – தெரிந்திப்
படியார்க்கு நல்லமிர்தம் பாலித்தான் நன்னூல்
அடியார்க்கு நல்லன்என் பான்.

*இப்பாடல் உரையாசிரியர் பெயரைச் சொல்லுகிறது, எந்தநூல் என்பது சொல்லவில்லை. இவர் எழுதிய உரை, உலகத்தாருக்கு நல்லமிர்தம் பாலித்தது போன்றது என்று கூறுகிறது. இட அமைப் பால் உரை, சிலப்பதிகார உரை என்பது பெறுகிறோம்:*

*இரண்டாம் பாடல் நூற்பெயர், இவ்வுரைகாரர் பெயர், இவருடைய ஊர் என்பன கூறுகின்றது:*

ஒரும் தமிழொரு மூன்றும், உலகுஇன் புறவகுத்துச்
சேரன்தெரித்த சிலப்பதி காரத்திற் சேர்ந்த பொருள்
ஆருந் தெரிய விரித்துரைத் தான்–அடியார்க்கு நல்லான்,
காருந் தருவும் அனையான், நிரம்பையர் காவலனே.

*இப்பாடல், சேரர் முத்தமிழும் கொண்ட காப்பியமாகச் சிலப்பதிகாரத்தை வகுத்தமைத்ததைக் கூறிப் பின் அடியார்க்கு நல்லார், நிரம்பையர் காவலர், அதன் பொருளை விரித்துரைத்தார் என்று சொல்கிறது. காரும் தருவும் அனையான் என்பதால் இவர் செல்வர் என்பது பெறுகிறோம். நிரம்பையர் காவலர் என்பதால் இவர் ஊரை அறிகிறோம். இவர் ஊர் நிரம்பை. கொங்கு மண்டலத்தில் குறும்பு நாடு ஒரு பகுதி என்றும், அதில் நிரம்பையூர் என்ற ஊர் உள்ளதென்றும், கொங்கு நாட்டு ஊர்த்தொகை (36) கூறுகிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் (ஊர்த்தொகைப் பதிகம் இரண்டாம் பாடல்) கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் என்றே தொடங்குகிறது (7703). இந்நாட்டில் விசயமங்கலத்தின் அருகில் நிரம்பையூர் இருந்தது என்பர். கொங்கு மண்டல சதகம், அடியார்க்கு நல்லார் அவதரித்த நிரம்பையூர் இருப்பது கொங்கு நாடு என்றே கூறும்:*

குருவை யுணர்ந்த இளங்கோ வடிகளுட் கொண்டுசொன்ன
தருவை நிகருஞ் சிலப்பதி காரத் தனித்தமிழுக்கு
அருமை யுரைசெய் அடியார்க்கு நல்லார் அவதரித்து
வருமைப் பொழில்நிரம் பைப்பதி யுங்கொங்கு மண்டலமே. (95)

இனி மூன்றாவது பாட்டு: பொப்பண்ண காங்கேயர்கோன் என்ற கொங்குநாட்டு வள்ளல் இவரை ஆதரித்த சிறப்பினால் இவர் முத்தமிழ் நூலுக்கு உரைசெய்ய இயன்றது என்று கூறுகின்றது.

காற்றைப் பிடித்துக் கடத்தில் அடைத்துஅக் கடியபெரும்
சேற்றைக் குரம்பை செய்வார் செய்கைபோலும்; அற்காலமெனும்
கூற்றைத் தவிர்த்தருள் பொப்பண்ண காங்கெயர் கோனளித்த
சோற்றுச் செருக்கல்ல வோதமிழ் மூன்றுரை சொல்வித்ததே.

காங்கேயர் என்ற மரபினர் கொங்குநாட்டினர் என்று வரலாறுகள் கூறும். இப்பாடல் அடியார்க்கு நல்லார் தம்மை ஆதரித்த பொப்பண்ண காங்கேயனைப் புகழ்ந்து தாமே பாடியதாகத் தோன்றுகிறது; சோற்றுச் செருக்கு என்று மற்றொருவர் பாடியதில் சிறப்பு இல்லை. இப்பாடல்கள் கூறும் செய்திகளைத் தவிர இவரைக் குறித்து வேறுசெய்தி எதுவும் தெரியவில்லை. இவருடைய சிலப்பதிகார உரையில் இவரது கல்வியும், பெரும் புலமையும் விளங்குகின்றனவே அன்றி, இவருடைய வரலாறு எதுவும் விளங்கவில்லை. அடியார்க்கு நல்லான் என்ற பெயரைக் கடவுள் பெயராக்கி சோமசுந்தரக் கடவுள் திருவிளையாடல்களைக் கூறும் நம்பிபுராணம் பல இடங்களில் கூறுகிறது. நம்பி தமக்கு முற்பட்ட காலத்தில் (சற்று முன்னான 12ஆம் நூற்றாண்டில்) வாழ்ந்த அடியார்க்கு நல்லார் பெயரை அறிந்திருப்பார் என்று கருதத் தோன்றுகிறது.

இதுவரையில் அறிய வந்தவை, இவர் நிரம்பை என்ற ஊரினர், செல்வமுடையவர், பொப்பண்ண காங்கேயர் என்பவரால் ஆதரிக்கப்பட்டவர் என்பவை மட்டுமே. சிலப்பதிகார உரை அன்றி வேறு எந்த நூலோ, பாடலோ இவர் செய்ததாக வரலாறு இல்லை.

**சமயம்**

அடியார்க்கு நல்லார் என்ற பெயர் சிவபெருமான் பெயராக உள்ளது என்று முன்னமே குறிப்பிட்டோம். சிவபெருமானை இவர் எங்கும் இறைவன் என்றே குறிப்பிடுகிறார். இறைவன்

உறைகின்ற வெள்ளியம்பலம், இமயமும் இறைவனும், இறைவன் கோயில், இறைவன் நுதல் விழியான் இழந்த மெய், இறைவன் ஊராகிய கயிலாயம் நிற்கும் கோயில், கண் இறைவன் கண், கங்கையைச் சடை முடியின் மீதணிந்த இறைவன் - என்ற இடங்கள் காண்க. பிறவா யாக்கைப் பெரியோன் கோயில் என்ற இடத்து, என்றும் பிறவாத யாக்கையுடைய இறைவன் கோயில் என்று எழுதுகிறார். சிவபெருமான் என்பது பொருள். துறவறத்தைக் கூறுமிடத்து, அதன்துறை சரியை கிரியை யோகம் ஞானம் என்பன, சரியை அலகிடல் முதலியன, கிரியை பூசை முதலியன, யோகம் எண்வகைய, அவை இயமம் நியமம் ஆகாயம் வளிநிலை தொகைநிலை பொறைநிலை நினைதல் சமாதி என்பன என்று கூறி, எட்டையும் விளக்கும் எட்டு நூற்பாக்களை எடுத்துரைக்கிறார்.* இவர் கூறும் இக்கருத்துக்கள் சைவ சமயக் கருத்துக்கள். திருக்கோவையார்த் தொடர்களை மேற்கோளாகத் தந்தும் உரைநடையாகவே வைத்தும் எழுதுகிறார். இவற்றால் இவர் சிறந்த சைவர், சிவபிரானையே பரம் பொருளாகக் கொண்டவர் என்பது தெளிவு.

இவர் சைவராயினும், எங்கும் விரிந்த மனத்தோடு பிற சமயங்களைப் பக்திச்சார்பாக நின்றே குறிப்பிடுகிறார். இந்தத் தன்மையில் இவருடைய மனப்பாங்கு மூலநூலாசிரியரின் மனப்பாங்கையொத்தது. இளங்கோவடிகளைப் போலவே இவரும் பிற சமயங்களைப் பொது நோக்குடனேயே சொல்லுகிறார். எடுத்துக்காட்டாக, சைனம் பற்றி இவர் கூறும் சில நயமான கருத்துக்களைக் குறிப்பிடுவோம்.

நூலுள் பல இடங்களிலும், சைனசமயக் கருத்துக்கள் வரும்போது அவற்றை உரிய போற்றுதலுடன் விளக்கிக் கூறுவது கண்டு மகிழத்தக்கது. கவுந்தியடிகளுடன் கோவலனும் கண்ணகியும் மதுரை நோக்கிச் செல்லும்போது, அவர், வல்வினை ஒழியாது ஊட்டும் என்று சொல்லி அருகதேவனை ஏத்துகிறார். இவ்விடத்து இளங்கோவடிகள் அருகன் நாமாவளியாக 48 பெயர்களைச் சொல்கிறார். இவை ஒவ்வொன்றுக்கும் அடியார்க்கு நல்லார் நயமாக விளக்கவுரை எழுதியிருப்பது படித்து இன்புறத்தக்கது; நாமங்களின் வேர்ச்சொல்லின் பொருளை இங்கு உரைக்கிறார்.

---

* இவற்றைப் பின்னால் தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியரும் எடுத்துக் கூறுகிறார்.

செல்லும் நெறியிலுள்ள ஏதங்களைக் கூறிக்கொண்டு வரு மிடத்து, கவுந்தியடிகள் வயல்வழியாக யாம் செல்வோம் எனின், அங்கு கண்ணகியானவள்,

கரும்பிற் றொகுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கும்
அடங்கா வேட்கையின் அறிவஞர் எய்திக்
குடங்கையின் நொண்டு கொள்ளவும் கூடும். (10:82–5)

என்று கூறியவிடத்து உரை எழுதும்போது, தேனையும் உண்ண லாகாது, தேன்கலந்த நீரையும் அருந்தலாகாது என்ற சைனர் கருத்தை இவர் நயமாக எடுத்துரைக்கிறார்: ‘கரும்பல்லது காடின்மையான் அவ்விடத்து உளதாய கரும்பில் வைத்த பெருந் தேனடைகள் முற்றி நெருங்குதலானே தேன் அழிந்தொழுகிச் சுரும்பு சூழப்பட்ட பொய்கையின் நல்ல நீரோடு சென்று கலந்து விடும். ஆதலான் அதனை அறியாமல் தனியாக நீர் வேட்கையான் இவள் தன் குடங்கை யான் முகந்துகொண்டு பருகவும் கூடும் என்றார்...... இதனாற் சொல்லியது, நமது தரிசனத்துக் கடியப் பட்டவாற்றான் தேனுண்டலைப் பரிகரிக்க என்றதாம். எனவே ஊனையும் உடன் கூறிற்றாம்’.

அடுத்து, வாய்க்காலின் அடைகரையின் வழியே சென்றால் அங்கு காலில் அலவனும் நந்தும் மிதிபட்டு உறக்கடவ நோயை நம்மால் உறுமாயின் அதனால் நமக்கு வரும் கொலைப்பாவம் நம்மால் தாங்கவுமொண்ணாது என்றவிடத்து, இவர், ஆசிரியர் கொலை என்று கூறாது நோய் என்று கூறியதன் காரணம் கூறு கிறார்: ‘நோய் என்றார், கொலை என்று வாக்காற் கூறவும் ஆகாமையின். இக்கொலைப்பாவம் ஒன்றாலும் கழுவப்படாது’. இதற்குமுன்: ‘இதனாற் சொல்லியது உயிர்க்கொலை புகாமற் பரிகரிக்க என்பதாம்’. ‘பொருண்மொழியாகிய தெய்வம்; ஆவது பஞ்சமந்திரம் - அ சி ஆ உ சா’.

### அட்டாங்க யோகம்

அட்டாங்கயோகம் பற்றி இவர் கூறியிருப்பதைத் தொடர்ந்து சில கருத்துக்கள் சொல்லத்தக்கன. எட்டுப்படிகளும் பதஞ்சலி யோக சூத்திரத்தின் படி, இயமம் நியமம் ஆசனம் பிராணா யாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி எனப்படும்; நல்லார் கூறும் பெயர்கள் இயமம் நியமம் ஆசனம் வளிநிலை தொகைநிலை பொறைநிலை நினைதல் சமாதி என்பன. நான்கு

படிகள் இவர் தமிழால் குறிப்பிடுவது அறியத்தக்கது. ஆசனம் என்பதை இருக்கை எனப் பிறர் கூறியதும் உண்டு. இன்னும் பழமையாக, சமாதி என்ற கருத்தைப் பரிபாடல் குறிப்பிடக் காண்கிறோம். பரிபாடல் ஐந்தாம் பாடலுரையில், 'முனிவர் நொசிப்பின் உணர்ந்து' என்றவிடத்து, 'முனிவர் சமாதி யாலுணர்ந்து' என்று எழுதிப் பரிமேலழகர், 'மனத்தினை ஒன்றாக்கி நுண்ணியதாகக் காண்டலாதலிற் சமாதி நொசிப்பு எனப்பட்டது' என்று விளக்கவுரை கூறுகிறார். எனவே, இவ்வாறு பரிபாடலின் காலந்தொட்டு இந்த யோகத்தின் படிகளுக்குத் தமிழ்ப்பெயர் வழங்கியது தெரிகின்றமையால், இவை தமிழ் நாட்டு யோகமுறைகளாய் இருத்தலும் கூடும்.

**காலம்**

ஐயரவர்களுடைய சிலப்பதிகார மூன்றாம் பதிப்பில், 'இவருடைய காலம் புலப்படவில்லை. ஆனாலும் நச்சினார்க்கு இனியரால் மறுக்கப்படுவனவற்றுள் சில இவருடைய கொள்கை யாக இருத்தல் பற்றி, இவரது காலம் நச்சினார்க்கினியருடைய காலத்துக்கு முந்தியதாக இருக்கலாம் என்று யூகிக்கப்படுகின்றது' என்று எழுதியிருக்கிறார்கள். நச்சினார்க்கினியர் காலம் 14ஆம் நூற்றாண்டு, நல்லார் காலம் 12ஆம் நூற்றாண்டு என்று து. அ. கோபிநாதராயர் 1905இல் எழுதியிருக்கிறார் (செந்தமிழ் 4:401-3). இவை பற்றிய சில கருத்துக்களை இங்கே கூறலாம்.

இந்திரவிழவூர் எடுத்த காதை 88ஆம் அடி முதலிய இடங் களில் பலியூட்டுகின்ற செயல்களைக் கூறும்போது அடியார்க்கு நல்லார் சில பரணித் தாழிசைகளை எடுத்துத் தருகிறார். இங்கு காட்டப்பட்டுள்ள பாடல்களில் மூன்று கலிங்கத்துப்பரணியுள் காணப்படுகின்றன. (97, 98, 165 தாழிசைகள்). வேறு இரு தாழிசைகள் கலிங்கத்துப்பரணியுள் காணப்படவில்லை. அவற் றைப் பிறகு குறிப்பிடுவோம். கலிங்கத்துப்பரணி கொண்ட குலோத்துங்க சோழன் காலம் கி.பி. 1070-1120. கலிங்கப்போரின் காலம் 1112க்குப் பின் என்று தெரிகிறது. ஆகவே கலிங்கத்துப் பரணியின் காலம் இதற்குப் பின், இந்நூலை மேற்கோள் காட் டும் அடியார்க்கு நல்லார் இதற்குப் பின்னே உரை செய்துள் ளார் என்பது தெளிவு.

இவரை ஆதரித்த வள்ளல் பொப்பண்ண காங்கேயர்கோன். இவன் கங்க வமிசத்தில் பிறந்த ஒருவன். இவன் இராமானுசரால் வைணவ மதத்துக்கு மாற்றப்பட்ட போசள விஷ்ணுவர்த்தன

மன்னனின் மந்திரியும் படைத்தலைவனுமாகிய கங்கராசன் என்பவனது புதல்வன். இவன் கன்னட நாட்டினன். சமயத்தால் சைனன். சைனனாயிருந்தமை பற்றிச் சைன சமயத் துறவியாகிய கவுந்தியடிகள் முதலியோரைச் சிறப்பித்துச் சொல்லுகின்ற சிலப்பதிகாரத்துப் பெரும்புலவராக விளங்கிய அடியார்க்கு நல்லாரைக் கொண்டு இவன் உரை எழுதுவிக்க விரும்பியிருத்தல் கூடும். இவன் காலம் முதற்குலோத்துங்க சோழனுக்குப் பிந்தியது என்பர். அன்றியும், இராமானுசர் பரமபதித்தது 1137 ஆதலால், இதற்குப் பிற்பட்ட காலமே பொப்பண்ணனுக்குரியது எனல் பொருந்துவதே. அன்றியும், பொப்பண்ணன் தமிழ்ப் புலவருக்கு ஆதரவு அளித்தமைக்கு ராயர் ஒரு காரணம் கூறுகிறார். 'கன்னட நாட்டிலுள்ள சில சாசனங்கள் கூறுகின்ற செய்தி, தீபங்குடிக்கு அருகிலுள்ள நிடும்பரைத் தீர்த்தத்தினின்றும் பல சைனர்களை, சைனர்களுடைய சிறப்பான க்ஷேத்திரமாகிய சிரவணபெள் குளம் (வெள்ளைக்குளம்) என்னும் இடத்தில் பல காலங்களில் குடியேற்றினர் என்பது. தீபங்குடி* திருவாரூர் அருகில் முன்னொரு காலத்தில் சைனர் குடியிருப்பாயிருந்தது. அன்றி, இன்றும் சைனர் அதிகமாய்க் குடியிருக்கின்ற பிரதேசமாகிய திண்டிவனம் பக்கத்தில் ஒரு தீபங்குடி உள்ளது. நிடும்பரைத் தீர்த்தம் நிரம்பை என்று சிறப்புப்பாயிரப் பாடலில் மருவி வந்திருத்தல் கூடும். இந்த தீபங்குடிச் சைனர் பலமொழிப் பண்டிதராயிருந்தார்கள். அன்றியும், இன்றைக்கும் மேற்குறித்த சிரவண பெள்குள மடத்துச் சந்நியாசி போளூர்த் திருமலையி லிருந்து தேர்ந்தெடுக்கப்படும் ஒரு தமிழ்ச் சந்நியாசியே; எனவே இந்தத் தொடர்புகளையெல்லாம் வைத்து ஆராயும்போது, சைன னான பொப்பண்ணன் தமிழருக்கு ஆதரவளித்தது இயல்பே ஆகும். இவன் காலமாகிய பன்னிரண்டாம் நூற்றாண்டே அடியார்க்கு நல்லார் காலம் என்பது உறுதியாகும்'. மேலும், இவர் கருத்தின்படி, அடியார்க்கு நல்லார், கொங்குநாட்டின ரல்லர், தீபங்குடியருகே நிடும்பரைத் தீர்த்தக்கரையாகிய நிரம் பைக்குரியவரே என்பதாகும்.

கலிங்கத்துப்பரணியை இவர் மேற்கோள் தருவதால் அதன் காலமாகிய 12ஆம் நூற்றாண்டின் தொடக்கத்துக்கு இவர் பிந்தியவர் ஆகிறார்: அன்றியும், இளம்பூரணரைப் பெயர் குறிப் பிட்டும் அரும்பதவுரையைப் பெயர் குறிப்பிட்டும் முழுமையும்

---

* சயங்கொண்டார் என்ற கட்டுரை, இறுதிப்பகுதி பார்க்க.

பின்பற்றியும் இவர் உரை எழுதியிருப்பதாலும், இவர் அவ்விரு வருக்கும் காலத்தால் பிற்பட்டவர் ஆகிறார். அரும்பத உரை காரர் காலம் 1025 என்றும், இளம்பூரணர் காலம் 1070-95 என்றும் நிறுவப்பெற்றுள்ளது.* ஆதலால் அடியார்க்கு நல்லார் காலம் 12ஆம் நூற்றாண்டின் பிற்பாதி என்று முடிவு செய்வது பொருந்தக் கூடியதே.

## சிலப்பதிகார உரை

தமிழ்மக்கள் தமிழில் முத்தமிழிலும் இலக்கியம் பெற் றிருந்தோம் என்று சொல்வதெல்லாம், பழங்கதையாய்க் கன வாய்ப் போகாமல் காப்பது, சிலப்பதிகாரம் ஒன்றே. இதைத் தவிர வேறு முத்தமிழ் நூல் பழங்காலத்ததாக - பிற்காலத்த தாகக் கூட - எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. இந்நூலும், பெருங்கதைபோல் சிதைவுறாமல் முழுமையும் நமக்கு இன்று கிடைப்பது, நாம் செய்த பாக்கியம். இந்நூலினுள் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் வளமும் நிரம்பியுள்ளது. நூல் முழுமையுமே இயற்றமிழ், இது ஆசிரியப்பாவால் செய்யப் பெற்றது என்று பொதுவாக நாம் நினைப்பினும், சில பகுதிகள் கொச்சகக்கலிப்பா, கலிவெண்பா போன்றவற்றாலும் இயன் றுள்ளன. கானல்வரி, வேட்டுவவரி, குன்றக்குரவை, ஆய்ச்சியர் குரவை, வாழ்த்துக்காதை ஆகிய பகுதிகள் இசைத்தமிழ். அரங் கேற்றுக்காதை, இந்திரவிழவூரெடுத்த காதை என்பனவற்றின் பொருள் முழுமையும் நாடகத்தமிழ். இளங்கோவடிகள் முத் தமிழிலும் இணையற்ற பெரும் புலவராயிருந்தார் என்பதில் ஐயமில்லை. இவர்கூறும் இசைத்தமிழ் நாடகத்தமிழ்ச் செய்தி கள் இக்காலத்து ஒரு வகையாலும் அறிதற்கரியன. இயற்றமிழ்ச் செய்திகளே பெரும்பகுதி மறைந்து போயிருக்கும்போது,❖ பிறவற்றைச் சொல்லவா வேண்டும்? சிலப்பதிகாரத்துக்குப் பேருரை எழுதிவந்த ஆசிரியருக்கு எல்லையில்லாத முத்தமிழ்ப் புலமையும் பயிற்சியும் அமைந்திருந்தால் தான் உரை காண முடியும். இவை அடியார்க்கு நல்லாருக்கு இருந்தன என்று அவர் உரையுள் வரிதோறும் காணமுடிகிறது. இவருடைய உரை இல்லாதிருந்தால், சிலப்பதிகாரத்தின் சிறப்புக்களை நாம் உணர

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு பார்க்க.

❖ யாப்பருங்கல விருத்தி பார்க்க.

வியலாது போவது மட்டுமன்றி, பண்டைத் தமிழின் சிறப்புக் களையும் அறிய வாயிலே இல்லாது போயிருந்திருக்கும். நல்லார், தம் காலத்திற்கு முன்னமேயே இசைத்தமிழும் நாடகத்தமிழும் அழிந்து போனமையை உணர்ந்தார்; தம் காலத்திலேயே அவை பின்னும் அழிந்து வந்தமையையும் நேரில் கண்டார். கண்ட போது அவர் மனத்தில் எழுந்த கரையற்ற துயரத்தால், வருங் காலத் தமிழ் மக்களுக்குப் பண்டைத் தமிழின் சிறப்புக்களைத் தாமாவது உணர்த்தி வைக்கவேண்டும் என்று அவர் உணர்ந் தார். அவ்வுணர்வின் வெளிப்பாடே சிலப்பதிகார உரை. அவ் வுணர்வானது, முத்தமிழுக்குத் தொண்டு புரியவேண்டும் என்ற உணர்வு; இல்லையானால் அவர் ஏன் சிலப்பதிகாரத்தைத் தேர்ந்து கொள்ளவேண்டும்?

இது சிலப்பதிகார உரை மட்டுமன்று; இசை நாடகம் பற்றிய இலக்கண இலக்கியக் களஞ்சியம். எவ்வாறு இவருக்கு இத்தகைய களஞ்சியம் படைக்கும் பெரும்புலமை அமைந்தது என்றே நாம் வியப்படைய வேண்டியுள்ளது. இவ்வளவு பெருங் கலைச் செல்வங்கள் பண்டைத் தமிழரிடம் இருந்தன என்பதை இவர் உரையைக் கொண்டுதான் ஒரு தொலைநோக்கியால் காண்பதுபோல் காணமுடிகிறது.

மறைந்து போயிருந்த தொல்காப்பியத்தைப் பதினொராம் நூற்றாண்டில் இளம்பூரணர் கண்டார்; அதைப் பயின்று உரை எழுதிச் சிறப்பித்தார். அதுபோல, மறைந்துபோன இசை நாடகப் பொருள்களை அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தின் மூலம் அடுத்த நூற்றாண்டில் கண்டு, உரை எழுதித் தமிழ் மக்களுக்கு அளித்தார்.

### பண்டைத் தமிழ் இலக்கிய வரலாறுகள்

பண்டைத் தமிழ்நாட்டுச் செய்திகளையும் இலக்கிய வரலாறுகளையும் ஓரளவேனும் விளக்கமாகக் குறிப்பிடுபவை எந்த மூலநூல்களுமல்ல, இரண்டு உரைகளே. ஒன்று எட்டாம் நூற்றாண்டில் செய்து, பத்தாம் நூற்றாண்டில் முசிறி நீலகண்ட னாரால் ஏட்டில் எழுதி வைக்கப்பெற்ற நக்கீரனாரது இறைய னார் களவியலுரை.* மற்றது, சிலப்பதிகார அடியார்க்கு நல்லார்

* இவ்வுரை கூறும் முச்சங்க வரலாற்றை ஓர் அட்டவணையாக எமது தமிழ் இலக்கிய வரலாறு,10ஆம் நூற்றாண்டு நூலில் காணலாம்.

உரை. இந்த இரு உரைகளுமே முன்னாள் இருந்த முச்சங்கங்கள் பற்றிய வரலாறு, தமிழ் ஆராய்ந்தார், புலவர் தொகை, பாடினார் தொகை, பாடியநூல், மூலநூல், சங்கம் இருந்த கால எல்லை, அரசர், கவியரங்கேறினார், சங்கம் இருந்த இடம் என்ற பொருள்களைத் தருகின்றன. இவ்வுரைகள் இல்லாவிட்டால், இச்செய்திகளை அறிய வழியில்லை.

இவற்றுள், அடியார்க்கு நல்லார் உரைப்பாயிரத்துள் இடைச்சங்கச் செய்திகளைக் கூறுகிறார். கூறிய அளவுக்கு, இவை இறையனார் களவியலுரை கூறிய செய்திகளை ஒத்தே உள்ளது. இவர் கூறுவது: "இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச்சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்து அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி மோசியாரும், வெள்ளூர்க் காப்பியனாரும், சிறுபாண்டரங்கனாரும், மதுரையாசிரியன் மாறனாரும், துவரைக் கோமகனும், கீரந்தையாரும் என்றித் தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் உள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவர் தம்மாற் பாடப்பட்ட கலியும் குருகும் வெண்டாளியும் முதலிய செய்யுளிலக்கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதையுள்ளும், 'கருதுவதங்கொன்றுண்டோ காப்பியக் கவிகள் காம, வெரியெழ விகற்பித்திட்டார்' (1585) எனச் சிந்தாமணியுள்ளும், 'நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்' (19:80) என மணிமேகலையுள்ளும் பிறவற்றுள்ளும் கூறினமையானும், சொற்றொடர்நிலை பொருட்டொடர்நிலையென்னும் தொடர்நிலைச் செய்யுட்கும் காப்பியமென்று பெயர் கூறுதலும் ஆசிரியர் கருத்தென உணர்க".

இங்கு அடியார்க்கு நல்லார் களவியல் உரையின் கூற்றை அப்படியே எழுதியிருப்பது தெரிகிறது. மாறுதல் குறைவு. மதுரை ஆசிரியன் மாறனார் என்பது அங்கு திரையன் மாறனார் என்று சொல்லப்பட்டுள்ளது; வேறுபாடு எழுதினோர் பிழையால் வந்ததாகும். பாடப்பட்ட நூல்களில் களவியல் உரை, வியாழ மாலை அகவல் என ஒன்றை அதிகமாகக் கூறுகிறது. அன்றியும், 'தொல்காப்பியம் புலப்படுத்தியது மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்து' என்று இவர் இங்கும் வேனிற்காதை உரையிலும் கூறுகின்றார். இச்செய்தி களவியல் உரையில் இல்லை. மேலும், அவ்வுரை கூறுகின்ற மாபுராணம்,

பூதபுராணம் என்ற இரண்டையும் அடியார்க்கு நல்லார் குறிப் பிடவில்லை.* அன்றியும், இவர் இசைத்தமிழ் நூல்களையும் நாடகத்தமிழ் நூல்களையும் குறிப்பிட்டு, அவை இறந்தன என்று எழுதுகிறார். 'இனி இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங் குருகும், பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீயம் முதலா உள்ள தொன்னூல்களும் இறந்தன. நாடகத்தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாகவுள்ள தொன்னூல்களும் இறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றியம் என்பனவற்றுள்ளும் ஒருசார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணை யல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தன போலும். இறக்கவே வரும், பெருங்கலம் முதலிய பிறவுமாம். இவற்றுட் பெருங்கலமாவது பேரியாழ்; அது கோட்டினதளவு பன்னிரு சாணும், வணரளவு சாணும், பத்தரளவு பன்னிரு சாணும், இப்பெற்றிக்கேற்ற ஆணிகளும், திவவும், உந்தியும் பெற்று ஆயிரங்கோல் தொடுத்து இயல்வது; என்னை?

ஆயிர நரம்பிற் றாதியா ழாகும்,
ஏனை யுறுப்பும் ஒப்பன கொளலே,
பத்தர தளவும் கோட்டின தளவும்
ஒத்த வென்ப இருமூன் றிரட்டி,
வணர்சா ணொழித்தென வைத்தனர் புலவர்.

என நூலுள்ளும்,

தலமுதல் ஊழியிற் றானவர் தருக்கறப்
புலமக ளாளர் புரிநரப் பாயிரம்
வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்ச்
செலவுமுறை யெல்லாம் செய்கையிற் றெரிந்து
மற்றை யாழும் கற்றுமுறை பிழையான். (43:51–5)

எனக் கதையினுள்ளும் கூறினாராகலாற் பேரியாழ் முதலிய ஏனவும் இறந்தனவெனக் கொள்க'. இங்கு இவர் கூறுகின்ற செய்திகள் வேறு எங்கும் காண்பதற்கில்லை. இனி, இப்பகுதியை அடுத்து, இசை நாடகம் என்ற இருபொருள் பற்றியும் சிலப்பதி காரத்துக்கு உரை எழுதத் தமக்கு ஆதாரமாய் இருந்த ஐந்து நூல் களைக் குறிப்பிடுகின்றார். இவையும் வேறு எங்கும் குறிப்பிடப்

* தொல்காப்பிய உரையில் பேராசிரியர் குறிப்பிடுகிறார்.

பெறாத நூல்கள். இசைநுணுக்கம் ஒன்று மட்டும் களவியல் உரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூல் அடியார்க்கு நல் லார்க்குப் பயன்பட்டுப் பின்னால் இறந்து போயிருக்கிறது. இப் பகுதியை மூலநூல்கள் என்ற தலைப்பில் தந்திருக்கிறோம்.

இனி இவர் 'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும் தமிழ் வரம்பறுத்த தன்புனல் நன்னாட்டு' என்ற வரிகளுக்கு உரை எழுதுங்கால், தலைச்சங்க வரலாறுகளைக் குறிப்பிடுகிறார். 'நெடியோன் குன்றம் - வேங்கடமலை. தொடி யோள் - பெண்பாற் பெயராற் குமரி யென்பதாயிற்று; ஆகவே தென்பாற் கண்ணதோர் ஆற்றிற்குப் பெயராம். ஆனால், நெடி யோன் குன்றமும் தொடியோள் நதியுமென்னாது பௌவமு மென்றது என்னையெனின், முதலூழி யிறுதிக்கண் தென்மதுரை யகத்துத் தலைச்சங்கத்து அகத்தியனாரும் இறையனாரும் குமர வேளும் முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனும் என்றி வருள்ளிட்ட நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் எண்ணிறந்த பரிபாடலும் முதுநாரையும், முதுகுருகும் களரி யாவிரையும் உள்ளிட்டவற்றைப் புனைந்து தெரிந்து நாலா யிரத்து நானூற்று நாற்பத்திற்றியாண்டு இரீயினார் காய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈறாயுள்ளார் எண்பத்தொன் பதின்மர்; அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியருள் ஒருவன் சயமாகீர்த்தியனாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் தொல் காப்பியம் புலப்படுத்த இரீயினான். அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளியென்னும் ஆற்றிற்கும் குமரியென்னும் ஆற்றிற்குமிடையே எழுநூற்றுக் காவதவாறும் இவற்றின் நீர் மலிவானென மலிந்த ஏழ்தெங்க நாடும் ஏழ் மதுரை நாடும் ஏழ்முன்பாலை நாடும் ஏழ் பின் பாலை நாடும் ஏழ்குன்ற நாடும் ஏழ்குணகாரை நாடும் ஏழ் குறும்பனை நாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும் குமரி கொல்லம் முதலிய பன்மலை நாடும் காடும், நதியும், பதியும் தடநீர்க்குமரி வடபெருங்கோட்டின் காறும் கடல் கொண் டொழிதலாற் குமரியாகிய பௌவமென்றாரென்றுணர்க. இஃது என்னை பெறுமாறெனின்,

வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள. (11:18–20)

என்பதனாலும், கணக்காயனார் மகனார் நக்கீரனாருரைத்த இறையனார் பொருளுரையானும், உரையாசிரியராகிய இளம் பூரணவடிகள் முகவுரையானும், பிறவாற்றானும் பெறுதும்'. ஏழ்தெங்க நாடு, குறும்பனை நாடு கன்னியாகுமரி ஜில்லாவில் உள்ளன.

இவர் கூறும் முதற்சங்க வரலாறுகள் களவியல் உரையை ஒத்தே உள்ளன. இங்கு பஃறுளி யாற்றுக்கும் குமரியாற்றுக்கும் இடையே உள்ள நாடுகள் முதலாக வரும் செய்திகள் கருதத் தக்கன. ஒன்று கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த இறையனார் பொருளுரை. பொருளுரையாவது, பொருளதிகார உரை, அதாவது களவியல் உரை மற்றது உரையாசிரியர் ஆகிய இளம்பூரண அடிகள் முகவுரை என்பது.* இக்குறிப்பினால் இளம்பூரண அடிகளே உரையாசிரியர் எனப் பண்டை உரை களிற் சொல்லப்பட்டவர் எனத் திட்டமாய் அறிகிறோம். அவர் செய்த முகவுரை என்று சொல்லப்பட்டுள்ளது; இது இப்போது கிடைக்கவில்லை என்றுதான் சொல்லவேண்டும்.

இவ்விருவர் குறிப்புக்களையன்றி, ஐயரவர்கள் பிரதி செய்து சிலப்பதிகாரத்தில் வெளியிட்ட பழம் பாடலொன்று முச்சங்க வரலாறுகளையும் கூறுகிறது. இது அடியார்க்கு நல்லார் உரைச் செய்திகளோடு, கடைச்சங்கச் செய்திகள் பலவற்றையும் சேர்த்துக் கூறுகிறது. பிழைபட்ட செய்திகளும் பல இதனுள் உள்ளன.❖

### உரைக்கு மூல நூல்கள்

அடியார்க்கு நல்லார் உரை எழுதும் பாணியால், பிற்காலத் தாருக்குப் பேருபகாரம் செய்யவேண்டும் என்ற பெருநோக்கம் கொண்டே உரை எழுதினார் என்று தெரிகிறது. அன்றிலிருந்து இன்றுவரை உள்ள ஒரே முத்தமிழ் நூல் சிலப்பதிகாரம். அது கூறும் முத்தமிழ்ச் செய்திகளுக்கு எந்த ஆதரவும் இல்லை. பண்டை நூல்கள் யாவுமே இவர் காலத்தில் இறந்தன. இந்த

---

* முகவுரை என்பது கொண்டு, இது களவியல் உரைக்கு முகவுரை என்றும், இதனால் இறையனார் உரையைச் செய்தவர் இளம்பூரணர் ஆகவே இருக்கலாம் என்று மு. இராகவையங்கார் ஆராயத்தக்க ஒரு கருத்தைக் தெரிவித்திருந்தார். இதை ஆராய்ந்து இது பொருந்தாது என்பது, எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டில் விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.

❖ பெருந்தொகை 1384.

நிலையை இவரே சொல்கிறார்: 'இசைத்தமிழ் நூலாகிய பெரு நாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்ச பாரதீய முதலாகவுள்ள தொன்னூல்களும் இறந்தன. நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாகவுள்ள தொன்னூல் களுமிறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல், செயிற்றியம் என்பனவற்றுள்ளும், ஒருசார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணை யல்லது முதல் நடு இறுதி காணாமையின், அவையும் இறந்தன போலும், இறக்கவே வரும், பெருங்கலம் முதலிய பிறவுமாம்; இவற்றுட் பெருங்கலமாவது பேரியாழ்.'

இறந்தன என்று இங்கு இவர் சொல்வது நூல்கள் மட்டு மின்றி, பேரியாழும் ஆகும்; பேரியாழ் ஆயிரம் நரம்புகளை யுடையது என்று கூறி, இதற்கு ஆதாரமாக நூலையும் கதையையும் மேற்கோள் காட்டியிருக்கிறார். நூல் என்று இவர் காட்டுவது, மதிவாணர் நாடகத்தமிழ் நூல்; இவர் காலத்து இருந்து பின்னர் இறந்துபோனதாகும்; கதை என்பது இறந்துபோகும் நிலையை யடைந்து யமன் வாயிலிருந்து அரையும் குறையுமாக ஐயரவர்கள் மீட்டுத் தமிழுலகுக்களித்த பெருங்கதையாகும்.

பெருங்கதையைக் குறிப்பிடும்போது இவர், "கலியும் குருகும் வெண்டாளியும் முதலிய செய்யுளிலக்கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதை" என்பார்; இதனால் பெருங்கதையின் அருமை யும், அது இலக்கணம் மட்டுமின்றி இலக்கியமும் ஆராய்ந்து செய்த சிறப்புடைய காப்பியமென்பதும் நன்கு விளங்கும்.

இவ்வாறு பண்டைய நிலையைக் கூறியபிறகு, அடியார்க்கு நல்லார் தாம் உரை எழுதுவதற்குத் துணையாகக்கொண்ட இசைத் தமிழ் நாடகத்தமிழ் இலக்கண நூல்களைக் குறிப்பிடுகிறார்.

"இனித் தேவவிருடியாகிய குறுமுனிபாற் கேட்ட மாணாக்கர் பன்னிருவருட் சிகண்டி என்னும் அருந்தவமுனி, இடைச்சங் கத்து அநாகுலனென்னும் தெய்வப்பாண்டியன் தேரோடு விசும்பு செல்வோன் திலோத்தமையென்னுந் தெய்வமகளைக் கண்டு தேரிற்கூடினவிடத்துச் சனித்தானைத் தேவரும் முனிவரும் சரியா நிற்கத் தோன்றினமையிற் சாரகுமாரனென அப்பெயர் பெற்ற குமரன் இசையறிதற்குச் செய்த இசை நுணுக்கமும், பாரசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திரகாளியமும், அறிவனார் செய்த பஞ்சமரபும், ஆதிவாயிலார் செய்த பரதசேனாபதீயமும், கடைச்சங்கமிரீஇய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன்

**அடியார்க்கு நல்லார் உரையின் ஆதார நூல்கள்**

| எண் | நூற் பெயர் | பொருள் | யாப்பு | ஆசிரியர் | சிறப்புக்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | இசை நுணுக்கம் | இசைத்தமிழ் | வெண்பா | சிகண்டி | சாரகுமரன் இசையறிதற்கு; சிகண்டி, குறுமுனியின் மாணாக்கர் |
| 2 | இந்திரகாளியம் | இசைத்தமிழ் | நூற்பா | யாமளேந்திரர் | இவர் பாரசவ முனிவர்; இந்திரகாளியம் ஒரு பாட்டியல் நூலாகும் |
| 3 | பஞ்சமரபு | நாடகத்தமிழ் | வெண்பா | அறிவனார் | இந்நூலின் பகுதி வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் மூலம் கிடைத்தது |
| 4 | பரதசேனாபதீயம் | நாடகத்தமிழ் | வெண்பா | ஆதிவாயிலார் | - |
| 5 | மதிவாணர் நாடகத்தமிழ்நூல் | நாடகத்தமிழ் | நூற்பா | பாண்டியன் மதிவாணனார் | வசைக்கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க்கூத்து இயன்றது. |

மதிவாணனார் செய்த முதனூல்களிலுள்ள வசைக்கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க்கூத்தியன்ற மதிவாணர் நாடகத்தமிழ் நூலும் என இவ்வைந்தும், இந்நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களன்றேனும், ஒருபுடையொப்புமை கொண்டு முடித்தலைக் கருதிற்று இவ்வுரை யெனக்கொள்க".

அடியார்க்கு நல்லார் இங்கு கூறியுள்ள நூல்கள், ஆசிரியர், அந்நூற் சிறப்புக்கள் ஆகியவற்றை முன்னுள்ள அட்டவணையில் காணலாம்.

இந்நூல்களைக் குறித்துச் சிலப்பதிகாரத்திலிருந்து திரட்டப் பட்ட கருத்துக்களை இங்கு கூறுவோம்.

**இசை நுணுக்கம்**

இதன் வரலாறு முன்னரே சொல்லப்பட்டது; அன்றியும் உரையில் இசைநுணுக்கமுடைய சிகண்டியார் என்று இரண்டிடங்களிற் பெயர் சொல்லி நான்கு வெண்பாக்களைத் தருகிறார். முதல்இடம் அரங்கேற்றுக் காதையுரையில், பூதங்கள் உடம்பு நாடிகள் வாயுக்கள் என்பன கூறுமிடம்; இங்கு 12 வெண்பாக் களுக்கு மேல் நூற்பெயர் சொல்லாமல் உள்ளன. பொருள் ஒற்றுமையாலும் வெண்பா யாப்பமைதியாலும் இவை யாவுமே இசை நுணுக்கமென்று கருதலாம். மேலும் இதே இடத்தில், பாண்டி மன்னனை விளிப்பதாக, 'தார்பொலிந்து மன்னும் திருமார்ப வண்கூடற்கோமானே' என்றும், 'நண்ணிய மன்னர்க்கு மண்கொடுத்து மாற்றார்க்கு விண்கொடுத்த தென்னர் கோமானே' என்றும் இரண்டு பாடல்கள் அமைந்துள்ளன. இசைநுணுக்கம், சாரகுமாரன் என்ற பாண்டிய குமாரனுக்கு இசை அறிவுறுத்தற் பொருட்டுச் சிகண்டியாரால் செய்யப்பட்டது. ஆதலால், பாண்டியனை விளிக்கின்ற இப்பாடல்கள் அந்நூலுக்கு உரியன வாய் இருக்கலாம். அங்ஙனமாயின், இந்நூல் களப்பிரர் காலத் துக்கு (3ஆம் நூற்றாண்டுக்கு) முற்பட்டதென்று சொல்லத் தகும். இது இடைச்சங்கத்து நூலென்று சொல்லப்பட்டுள்ளது பொருத்தமாகலாம்.

**இந்திரகாளியம்**

இதுபற்றி உரைப்பாயிரத்துள் கூறப்பட்டதன்றி, வேறெந்தச் செய்தியும் சிலப்பதிகாரத்தில் சொல்லப்படவில்லை. இசைத் தமிழ் நூல் என்று கருதவேண்டியிருக்கிறது. ஆனால், பன்னிரு பாட்டியலாலும், வச்சணந்தி மாலையுரை நவநீதப் பாட்டி

யலுரைகளாலும், இந்திரகாளியம் ஒரு பாட்டியல் இலக்கண நூல் என்று அறிகிறோம். அன்றியும், அக்காலத்தில் (8-9 நூற்றாண்டுகளில்) பாட்டியல் நெறியானது அகத்தியர் வழி இந்திர காளியார் வழி என இரு நெறியாயிருந்தது என்றும், நவநீதப் பாட்டியல் சிதம்பரப் பாட்டியல் முதலாயின அகத்தியர் பாட்டியல் வழி என்றும், வச்சணந்திமாலை இந்திரகாளியவழி என்றும் அறிகிறோம். இந்நூலின் காலம் எட்டாம் நூற்றாண்டாயிருக்கலாம். இசைத்தமிழுக்குப் பாட்டியலும் வேண்டப் படுவது என்று உரைகளால் அறிகிறோம்.

### பஞ்சமரபு

கடலாடு காதையுரையில் ஒன்பது வகை இசைப்பாக்களை கூறும் ஒரு வெண்பாவையும் பஞ்ச மரபுடைய அறிவனார் என்னும் ஆசிரியர் என்று காட்டுகிறார். இவ்வெண்பா மகடூஉ முன்னிலையாயுள்ளது. வேறு செய்திகள் தெரியவில்லை.

### பரதசேனாபதீயம்

இதன் பாடல்களை நான்கிடத்தில் தருகிறார். அரங்கேற்றற் குரியானது வயது, பயிற்சியின் காலம், அரங்கமைக்கும் நிலத்தின் இலக்கணம் முதலான பொருள்களை இவை குறிப்பிடுகின்றன. இது நர்டகத்தமிழ் நூல். ஒரு பாடற்பகுதி, அகத்தியர் சாபத்தால் இந்திரன் மகன் சயந்தன் மூங்கிலான செய்தி கூறுகின்றது. பாடல் மகடூஉ முன்னிலையாயுமுள்ளது.

### மதிவாணனார் நாடகத்தமிழ் நூல்

மதிவாணனார் என்பவர் பாண்டிய மன்னர். நான்கிடங்களில் இந்நூற் பாடல்கள் வருகின்றன. நூல் நூற்பாவால் இயன்றது போலும்; வெண்பாவும் வருகிறது. 'தேவரை ஏத்திப் பூதரை மூவடி முக்கால் மொழிந்து' என்று ஒரு பாடல் சொல்வது கருதத்தக்கது. அன்றியும், நூல் என்றும் நூன்முகம் என்றும் அடியார்க்கு நல்லார் குறிப்பிடுவன, இந்நூலையும் இதன் நூன் முகத்தையும் குறிப்பனவாகும்.

அடியார்க்கு நல்லார் கூறுகின்ற பல நூல்களைப் பற்றித் தெரியவரும் செய்திகளையும் இங்கு கூறலாம்.

### பஞ்சபாரதீயம்

உரைப்பாயிரத்துள் இறந்துபோன தொன்னூல்கள் என்று இவரால் குறிக்கப்பெற்ற நூல்களில் இதுவும் ஒன்று. செம்பகை

ஆர்ப்பு கூடம் அதிர்வு என்ற நான்கு இசைக்குற்றங்களைக் கூறியவிடத்து இந்நான்கையும் குறிப்பிடும் ஓர் அறுசீர்விருத்தத்தைத் தந்து இது பஞ்சபாரதீயம் என்கிறார். இது தேவவிருடியாகிய நாரதன் செய்தது என்றும் சொன்னார். அறுசீர் விருத்தம் நூலிலே வருவது மிகவும் பிற்காலம். அப்பருடைய திருநேரிசை முழுமையும் (7நூ.) அறுசீர் விருத்தம்; திருமங்கையாழ்வார் செய்த திருக்குறுந்தாண்டகம் முழுமையும் (8 நூ.) அறுசீர் விருத்தம். இந்நூல் மிகவும் பழமையுடையதன்று; 8ஆம் நூற்றாண்டில் செய்யப்பெற்றிருக்கலாம் என்று கருதவேண்டும்.

## செயிற்றியம்

செயிற்றியனார் செய்தது செயிற்றியம். இதன் நூற்பாக்கள் ஆறு இவரால் தரப்பெற்றுள்ளன. பின்னும் பலவும் இங்கு இருத்தல் கூடும். இவை நாடகத்தமிழ் பற்றியன. உரைப்பாயிரத்துள், "செயிற்றியம் என்பவற்றுள்ளும், ஒருசார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தன போலும்" என்று எழுதுகிறார். பன்னிரு பாட்டியல் செயிற்றியனார் செய்த பாட்டியற் சூத்திரங்கள் பல தருகிறது. யாப்பருங்கல விருத்தியுரை முதலியவற்றால், செயிற்றியனார் ஒரு பாட்டியல் செய்ததல்லாமல், பொருளிலக்கணத்துள் வரும் கூற்று என்ற உறுப்பை விளக்கும் கூற்றியல் என்ற ஒரு நூலும் செய்திருந்தார் என்றும் அறிகிறோம். கூற்றியல் நாடகத் தமிழுக்கு உரியதென்று கொண்டாலும் இழுக்கில்லை. இவர் இந்நூல்கள் செய்த காலம் மிகப் பழங்காலமல்ல; 8ஆம் நூற்றாண்டாயிருக்கலாம்.

## இசைத்தமிழ் – பதினாறு படலம்

இப்பெயரை அடியார்க்கு நல்லார் சொல்லவில்லை, அரும்பதவுரைகாரரே சொல்கிறார்; கானல்வரியில், இசைக் கரண வகை எட்டு என்று கூறி விளக்குமிடத்து, தெருட்டல் என்ற கரணத்தை விரிக்கும் இலக்கணமாக, ஏழு அடி கொண்ட ஒரு நூற்பாவைத் தந்து - 'இவை இசைத்தமிழ்ப் பதினாறு படலத்துக் கரண வோத்துட் காண்க என்று எழுதுகிறார். கானல் வரிக்கு அடியார்க்கு நல்லார் உரை கிடைக்காமையால், இது பற்றி அவருடைய குறிப்பை அறிந்துகொள்ள முடியவில்லை. இசைத்தமிழ் பற்றிய ஓர் இலக்கண நூல் பதினாறு பிரிவுடையதாக இருந்தது என்றும் அதன்பிரிவு படலம் என்று பெயர்

பெற்றிருந்தது என்றும் இதிலிருந்து நாம் யூகிக்கலாம். புறப்பொருட் பன்னிருபடலம் என்ற நூல் புறப்பொருள் பன்னிரு பிரிவுகளையும் கூறுவதாய் அமைந்திருந்ததும் இங்கு நினைவு கூரத் தக்கது. இசைத்தமிழ்ப் பதினாறு படலமும் இதையொத்தது போலும் இதன் பிரிவுகள் படலம் என்றும், உட்பிரிவுகள் ஒத்து என்றும் பெயர் பெற்றிருக்கலாம். அப்பிரிவுகளில் ஒன்றையே அரும்பதவுரைகாரர் கரணவோத்து என்று இங்கு காட்டுகிறார். அடியார்க்கு நல்லார் தாளவகையோத்து என்ற ஒன்றைச் சொல்லுகிறார். அதுவும் இப்பதினாறு படலத்துள் ஒரு பிரிவாகலாம். ஓத்து என்ற பெயரை இலக்கணநூற் பிரிவின் பெயரால் அமைத்திருப்பதை யாப்பருங்கலத்தில் காணலாம்.

### அகத்தியம்

முத்தமிழின் இலக்கணத்தையும் கூறுவதான ஒரு பெரிய இலக்கண நூல். கடல்கொண்ட தென்மதுரையில் இருந்த பண்டை அகத்தியர் செய்தது. அடியார்க்கு நல்லார் காலத்திலேயே இறந்து போயிற்று.

### பரதம்

நாடகத் தமிழ் நூல்; இறந்துபோன நூலாகவே அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.

### குணநூல்

நாடகத் தமிழ்நூல், ஒரு வரியை மட்டும் அடியார்க்கு நல்லார் தருகிறார்.

### சயந்தம்

நாடகத் தமிழ்நூல், ஒரு வரியை மட்டும் இவர் தருகிறார்.

### முறுவல்

நாடகத் தமிழ்நூல்; எச்செய்தியும் தெரியவில்லை.

### கூத்த நூல்

நாடகத் தமிழ்நூல், கூலம் எண்வகை என்பதற்கு இதன் நூற்பாவை எடுத்துத் தருகிறார்.

### அணியியல்

இது அடியார்க்கு நல்லார் காட்டும் நூல்களுள் குறிப்பிடத் தக்க ஓர் இயற்றமிழ் இலக்கண நூலாகும்; இது அணியிலக்

கணத்தை உரைப்பது. இன்று நமக்குக் கிடைக்கும் அணியிலக்கண நூல்களுள் பழமையானது, 12ஆம் நூற்றாண்டில் தண்டி என்பவர் செய்த தண்டியலங்காரம் என்ற நூலாகும். (அலங்காரம் - அணியிலக்கணம்) இந்நூலின் பெயர் அணியதிகாரம் என்று அதன் உரை கூறுகிறது. இதற்கும் முன்னமே அணியியல் என்ற பெயருடைய ஓர் அணியிலக்கண நூல் இருந்ததென்று யாப்பருங்கல விருத்தியுரையால் நாம் அறிகிறோம். தொல்காப்பியவுரையும் நவநீதப் பாட்டியலுரையும் அணியியலைக் குறிப்பிடுகின்றன. அந்நூல் வழங்காது போகவே, அதிலிருந்து கிடைத்த சில நூற்பாக்களைத் தண்டியாசிரியர் தாம் புதிதாய்ச் செய்த நூலுள் எடுத்தமைத்துக் கொண்டார் என்று தெரிகிறது. அடியார்க்கு நல்லார் அணியியல் என்று பெயர் குறிப்பிட்டு இரண்டு இடங்களில் அணியிலக்கணச் சூத்திரங்களை மேற்கோள் காட்டுகிறார். அவையாவன: ‘உரையும் பாடையும் விரவியும் வருமே’ என்பது அணியியலாகலின் - உரைபெறு கட்டுரை இறுதி. ‘உதாரம் என்பது ஓதிய செய்யுளில், குறிப்பின் ஒரு பொருள் நெறிப்படத் தோன்றல்’ - மனையறம் படுத்த காதையுரை (26-27). இவ்விரு மேற்கோள்களும் தண்டியலங்காரத்துள் காணப்படுகின்றன. (பொதுவணியியல், 11, 21 நூற்பாக்கள்). அலங்காரத்துள் காணப்படாத மேற்கோள் நூற்பாக்களை அணியியல் என்று பெயர் குறிப்பிட்டுப் பிற உரைகள் தருகின்றன. தண்டியலங்காரம் அடியார்க்கு நல்லார் காலத்துக்குச் சில ஆண்டுகள் முன் இயற்றப்பட்டது என்பது உண்மை. எனினும், எத்தனையோ பண்டை நூல்களையும் இறந்த நூல்களையும் குறிப்பிடுகின்ற இவர், தண்டியலங்காரத்திலிருந்து மேற்கோளை எடுத்தார் என்று சொல்வதைவிட, தண்டிக்கும் முன்னிருந்த மூல அணியியலிலிருந்தே எடுத்துக்கொண்டார் என்று சொல்வதே பொருத்தமாகும். இவ்வணியியல் இன்று இல்லை. இது ஒரு தனி நூலா, அல்லது வேறொரு விரிந்த இலக்கணத்தின் ஒரு பகுதியா என்பதை அறிய வழியில்லை.

இந்நூல்கள் யாவுமே, ஒரு சிறுபகுதியும் எஞ்சாதபடி முழுமையும் இறந்தன.

### அரும்பதவுரை

இவருக்கு முக்கியமான மற்றொரு மூலநூல், அரும்பதவுரைகாரர் எழுதிய சிலப்பதிகாரக் குறிப்புரை. அடியார்க்கு நல்லார் இசை நாடகப் பகுதிகளுக்கு உரை எழுதும்போது,

ஒவ்வொரு தொடருக்கும் அரும்பதவுரைகாரர் கூறியதை எழுதியே மேற்சொல்லுகிறார்; காரணம், அதைவிடச் சிறப்பாகச் சொல்வதற்குச் சொற்கள் இல்லை என்பது ஒன்று; மற்றது, அரும்பதவுரைகாரர் காலத்தில் இருந்த மரபுகளும், கருத்துக் களும் அடுத்த நூற்றாண்டில் பின்னும் மறையத் தொடங்கின என்பன.* இனி அடியார்க்கு நல்லார் உரையால்தான் அரும்பத வுரையாசிரியர் என்ற பெயர்கூட ஆட்சிக்கு வந்திருக்கிறது. இந்திர விழவூரெடுத்த காதையுரையில் (157) ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் என்பதற்கு,

'ஐம்பெருங்குழு,

அமைச்சர் புரோகிதர் சேனா பதியர்
தவாத்தொழில் தூதுவர் சாரணர் என்றிவர்
பார்த்திபர்க் கைம்பெருங் குழுவெனப் படுமே.

எண்பேராயம்,

கரணத் தியலவர் கரும காரர்
கனகச் சுற்றம் கடைகாப் பாளர்
நகர மாந்தர் நளிபடைத் தலைவர்
யானை வீரர் இவுளி மறவர்
இனையர் எண்பே ராயம் என்ப.

எனுமிவர். இனி,

சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெய்
ஆய்ந்த இவரெண்மர் ஆயத்தார் – வேந்தர்க்கு
மாசனம் பார்ப்பார் நிமித்தரோ டமைச்சர்
ஆசில் அவைக்களத்தார் ஐந்து.

எனக் காட்டுவர் அரும்பதவுரையாசிரியர்' என்று இவரே பெயர் சொல்லிக் குறிப்பிட்டதனால் இதை நன்கறியலாம்.

### உரை எழுதிய பகுதி

1. புகார்க்காண்டம் - 10 காதைகள்: கானல் வரி தவிர ஏனைய பகுதிகள்.
2. மதுரைக்காண்டம் - 11-23 காதைகள்: உரை கிடைப்பது 19 ஊர் சூழ்வரி வரையில்; 20-23 காதைகளுக்கு இல்லை.
3. வஞ்சிக்காண்டம் - 24-30 காதைகள்: முழுமையும் உரை இல்லை.

---

* இது பற்றிய கருத்துக்களை எமது பதினொராம் நூற்றாண்டுத் தமிழிலக்கிய வரலாற்றில் விளங்கக் காணலாம்.

சிலப்பதிகாரத்தை இரண்டு உரைகளோடும் மூன்றுமுறை மிகவும் சிறப்பாக அச்சிட்ட ஐயரவர்கள், அடியார்க்கு நல்லார் உரையின் ஏனைய பகுதிகள் எங்கேனும் கிடைக்கலாம் என்று 42 இடங்களில் தேடிப்பார்த்தும் கிடைக்கவில்லை என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஆனால் அடியார்க்கு நல்லார் மதுரைக்காண்டம் முடியும் வரையில் உரை செய்திருந்தார் என்று அவர் கூற்றாலேயே தெரிய வருகின்றது. அரங்கேற்றுக்காதை என்ற மூன்றாம் காதையுரையில் (அடி 13), வரி எட்டு வகைப்படும் என்று கூறி விளக்கிய பிறகு, "அவற்றின் பகுதியெல்லாம் கானல் வரியிற் கூறுதும்" என்றும், (அடி 26) யாழின் உறுப்புக்களை விளக்குமிடத்து, "கானல் வரியில் குற்றம் நீங்கிய யாழ் என்பதன்கண் விரியக் கூறுதும்" என்றும் எழுதுகிறார். கானல்வரி ஏழாம் காதை; 19ஆம் காதை முடிய உரை கிடைத்துள்ளது: இடையில் ஏழாம் காதை மட்டும் உரை இருந்திராமற் போகாது. ஆனால் ஐயரவர்கள் பரிசோதித்த 14 உரைப் பிரதிகளிலும் இப்பகுதி காணப்படவில்லை என்பதைக் கருதும்போது, மூலஉரை ஏட்டிலிருந்து இப்பகுதியை யாது காரணத்துக்காகவோ மூலப் பிரதியுடையவர் உருவிவிட்டாரென்றும், அப்பகுதி இல்லாமலே பின்வந்த ஏடுகள் பிரதி செய்யப்பட்டிருந்தன என்றும் கருத வேண்டியுள்ளது.

மேலும், இதேகாதையில் (3, 107), நான்கு பூதங்களைப் பற்றிக் கூறிய இடத்து, "இப்பூத நான்கின் உண்டியும் அணியும் ஆடையும் மாலையும் சாந்தமும் பொழுதும் செயலும் முதலியவெல்லாம், அழற்படுகாதைக் கண்ணே விரித்துக்கூறுதும்" என்று எழுதுகிறார். பின்னும், "இவ்விழவின் முதலும் முடிவும் கடலாட்டும் புலவியும் புறப்பாடும் வதிச்செலவும் பொறையுயிர்த்திருப்பும் நிறைபதிப்புகலும் தீதுறுநாளும் ஊர் தீப்பாடும் முதனடுவிறுதியாகக் கட்டுரை காதையுள் விரியக் கூறுவாம்; அதனுட் கண்டுகொள்க" என்று வேனிற்காதையில் (வரி 45-71) கூறுகிறார். அழற்படுகாதையும் கட்டுரைகாதையும் முறையே மதுரைக் காண்டத்தின் இறுதி (22-23) இரு காதைகள். எனவே, முன்னே கூறிய கருத்தின்படி இவர் மதுரைக்காண்டம் முடிய உரை எழுதியிருந்தார் என்பது தெளிவு.

வேனிற்காதை 28ஆம் வரி உரையில், 'மாடகம் - வீக்கும் கருவி. அது முன்னர் ஆணி என்பதனுள் கூறினாம்' என்று எழுதுகிறார். ஆணி என்பது கானல்வரியின் மூன்றாம் அடியில் வரு

கிறது: 'பத்தரும் கோடும் ஆணியும் நரம்பும் என்று இத்திறத்துக் குற்றம் நீங்கிய யாழ்'. இதனால் அடியார்க்கு நல்லார் கானல் வரிக்கு உரை எழுதினார் என்பது திட்டமாகத் தெரிகிறது.

இனி, மற்றொரு கருத்தை இங்கு குறிப்பிடுவது பயனுடையது. சாத்தனார் வரலாற்றையும் மணிமேகலையையும், இளங்கோவடிகள் வரலாற்றையும் ஆராய்ந்தவர்கள், சிலப்பதிகார வஞ்சிக்காண்டம் இளங்கோவடிகள் செய்ததன்று, மணிமேகலை பாடிய சாத்தனார் இளங்கோவடிகள் காலத்தவர் அல்லர், இருவரும் ஒரே காலம் என்று சொல்லிப் பிற்காலத்தில் சிலப்பதிகாரத்தில் பதிகமும் வஞ்சிக்காண்டமும் இடைச் செருகலாகச் சேர்க்கப்பட்டன என்று சொல்லுவார்கள். இது எளிதில் ஒதுக்கக்கூடிய கருத்தன்று. நல்லார் உரையால் அவருக்குச் சில காலம் முன்னமே இவ்விடைச் செருகல் நேர்ந்து விட்டது என்று நாம் அறிகிறோம். இவர் பதிக முழுமைக்கும் உரை எழுதியிருக்கிறார். அங்கு இளங்கோவடிகள் அறனும் பொருளும் இன்பமும் கூறி; வீடு சிறிதாயினும் கூறாமைக்குக் காரணம், சாத்தனார் மணிமேகலை துறவாக மாதவியின் மகள் வரலாற்றை அறனும் வீடும் பயப்ப ஒரு காப்பியமாகச் செய்து அமைத்திருந்தமையால், அடிகள் இரண்டினையும் சேர்த்து ஒரு காப்பியமாக்கி நடாத்துவித்தார் என்று தமது காப்பிய உரைப் பாயிரத்துள் கூறுகின்றார். அன்றியும் உரைப்பாயிரத்தின் தொடக்கத்தில், 'குணவாயில்...... வாழ்வீரிங்கென்' என்று நூலின் தொடக்கச் சொல்லையும் இறுதியில் உள்ள வரந்தரு காதையின் இறுதிச் சொல்லையும் எல்லையாக வைத்து, நூல் முழுமையும் கருதி எழுதிக்கொண்டு போகிறார். அல்லாமலும், பதிக உரை இறுதியில் சிலப்பதிகாரம் முதல் மூன்று உறுதிப் பொருள்களைக் கூறி வீடாகிய முடிவை மணிமேகலையைக் கொண்டு முடிகிறது என்று 'மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம்' என்று நூலின் இறுதியில் உள்ள தொடரை வைத்து முடித்துக் காட்டுகிறார். பதிக உரையுள் முதல் கரு உரிப்பொருள் கூறுமிடத்து, வஞ்சிக் காண்டத்துப் பகுதிகளையும் கூறுகின்றார். ஆதலால், இவர் பதிகமும் வஞ்சிக் காண்டமும் இளங்கோவடிகள் செய்தன என்ற கருத்தை உடன்பட்டே உரை எழுதுகிறார். இதன் பொருளாவது, இவ்விரு பகுதிகளும் இடைச்செருகல் என்று நாம் கருதுவோமானால், இவ்விடைச்செருகல் அடியார்க்கு நல்லார் காலத்துக்கு நெடுநாள் முன்னமே நடந்திருக்க வேண்டும்.

எனினும், அடியார்க்கு நல்லார் கானல் வரியையும் மதுரைக் காண்டத்துப் பகுதிகளையும் குறிப்பிடுவதுபோல வஞ்சிக் காண்டத்துக்கு உரை செய்ததாக எங்கும் குறிப்பிடவில்லை. ஆதலால் அப்பகுதிக்கு இவர் உரை செய்தார் என்பது பெரிதும் ஐயத்துக்கு இடமானது.

அடியார்க்கு நல்லார் பிற பகுதிகளுக்கு எழுதிய உரையும் கிடைத்திருப்பின், எத்துணையோ அரிய செய்திகளை நாம் அறிந்திருக்கலாம். தமிழ்நாட்டின் நல்லூழின்மை, இப்பகுதிகள் இன்று இறந்தன போலும்.

நூலின் பகுதிகள் சில மற்றவற்றைப் போலக் காதை என்று பெயர்பெறாமல், பாடல் வரி குரவை மாலை என்று பெயர் பெற்றிருப்பதைக் குறிப்பிட்டு, அவற்றுக்கு விளக்கம் அவற்றின் முடிவில் கூறுதும் என்று எழுதுகிறார்; கூறுபவற்றுள் கானல் வரியும், வஞ்சினமாலையும், குன்றக்குரவையும் உள்ளன (பதிகம் 62-3). பின்னிரு பகுதிகளும் வஞ்சிக்காண்டத்தில் உள்ளன. இதனால் நாம் பெறுவது, வஞ்சிக்காண்டம் பிற்காலத்துச் சேர்க்கையானால், அது நல்லார் காலத்துக்கு முன்னமே சேர்க்கப்பட்டது; அப்பகுதிக்கும் இவர் உரை எழுத எண்ணியிருந்தார் - என்ற செய்திகளாகும்.

### காதை இறுதி வெண்பாக்கள்

சிலப்பதிகாரம் 30 காதைகளுள், 11 காதைகளின் இறுதியில் தனி வெண்பாக்கள் அமைந்துள்ளன. இவற்றைப் பின்வந்தோர் செய்தனரா அல்லது இளங்கோவடிகளே செய்தாரா என்பது திட்டமாய்ச் சொல்ல முடியவில்லை. இவ்வெண்பாக்கள் 2, 3, 6, 8, 9, 10, 16, 20, 21, 22, 23 ஆகிய காதைகளின் இறுதியில் உள்ளன. வஞ்சிக்காண்டக் காதைகளில் ஒன்றில்கூட இறுதி வெண்பா இல்லை. இவ்வெண்பாக்கள் பெரும்பான்மையும் அவ்வக்காதையின் கதைப்பொருளைத் தழுவியும் மாறாயும் வருகின்றன. வஞ்சிக்காண்டத்தில் கோவலன் கண்ணகி வரலாறு இன்மையால், தனி வெண்பாவும் எழவில்லை போலும்.

காதை 8 இறுதியில் 2 வெண்பா; காதை 6 இல், வெண்பா அடியார்க்கு நல்லாரின் காதை உரைக்குப் பின்னர் உள்ளது. காதை 20இல் 3 வெண்பா. ஆக வெண்பாக்கள் 14.* இவற்றுள்

* பின்னும் இரு வெண்பாக்களும் சுப்பராயச் செட்டியார் பதிப்பில் காணப் படுகின்றன. இக்கட்டுரை இறுதியில் பதிப்பு என்ற தலைப்பில் பார்க்க.

அரும்பதவுரைகாரர் 8 (2 வெண்பா), 9, 16, 20 (முதல் வெண்பா மட்டும்), 22, 23 ஆகிய காதை இறுதி வெண்பாக்களுக்கு உரை தந்திருக்கிறார்; ஆனால் இவர் உரை குறிப்புரையேயாதலால், சில சமயம் உரை எழுதாமலே விட்டிருக்கவும் கூடும். அடியார்க்கு நல்லார் உரை எழுதிய வெண்பாக்கள் மூன்றே: 8இல் இரண்டாவது வெண்பா, 9, 16 இறுதி வெண்பா 'நண்ணும் இரு வினையும்' என்பது; இதன் கருத்தைக்கூறி இளங்கோவடிகள் அருளிச் செய்தது என்று அரும்பதவுரைகாரரும், அடிகள் கூறினார் என்க என்று அடியார்க்கு நல்லாரும் எழுதியது காண்க. இது இளங்கோவடிகள் செய்தது என்பதே இருவருடைய கருத்தும். அன்றியும் 23-கட்டுரை காதைக்கு இவர் எழுதிய உரை கிடைக்காது போயினும், இதன் இறுதி வெண்பாவாகிய 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத் தெய்வம் தொழுந் தகைமை திண்ணமால்' என்று இவரே எடுத்து, 19ஆம் காதையுரையில் குறிப்பிடுகிறார். 'பெருந்தெய்வம் - தெய்வத்திலும் மேலான தெய்வம் என்னை? தெய்வந் தொழாள் கொழுநற் றொழுவாளைத் தெய்வம் தொழுந் தகைமை திண்ணமால் என்று கூறினமையின்' என்று எடுத்துக்காட்டுகிறது. இப்பாடல் இளங்கோவடிகள் வாக்கென்றே இவர் கருதுவது தெளிவு.

ஆனால் இப்படி எல்லாவற்றையும் சொல்ல முடியவில்லை. இவர் உரை எழுதிய பாடல்கள் இவருக்கு முன் இருந்தன. ஒருகால் இளங்கோவடிகளே செய்திருக்கலாம்: உரை செய்யாத வெண்பாக்கள் இவர் காலத்தில் இல்லை, பின்னால் செய்து சேர்க்கப்பட்டிருக்கலாம்: எல்லாவற்றுக்கும் உரை எழுதுவது இவர் இயல்பாகவே, இவ்வாறு எண்ணத் தோன்றுவதும் இயல்பு. ஆனால் வேறொரு நிலையும் உண்டு. அரும்பத உரைகாரர் இவருக்குமுன் உரை எழுதியவர். வேனிற்காதை இறுதியில், செந் தாமரை விரிய, ஊடினீர் எல்லாம் என்ற இருவெண்பாக்கள் உள்ளன. அரும்பதவுரைகாரர் இரண்டையும் குறிப்பிடுகிறார். அடியார்க்கு நல்லார் பிந்தியதை மட்டுமே கூறுகிறார். இது கொண்டு முதல்பாட்டு இவருக்குப் பிந்தித்தான் வந்தது என்று சொல்லமுடியாது என்பது தெளிவு. இப்பாடலை ஒருகால் நல்லார் பார்க்கவில்லைபோலும் என்றே கருதமுடியும்.

எல்லாப் பாடல்களையும் இளங்கோவடிகளே பாடி விட்டார் என்று கொண்டால், இந்தச் சிக்கல் எழாதே என்று எண்ணலாம். உண்மை, ஆனால் அடியார்க்கு நல்லார் எல்லாப்

பாடல்களுக்கும் உரை எழுதுபவர். பாடல் கிடைக்காமல் அல்லது தவறி ஒன்றை விட்டிருக்கலாமே ஒழிய, பல பாடல் களை விட்டார் என்று சொல்வது பொருந்தாது. ஒருகால், செந்தாமரை விரிய என்ற பாடல் இளங்கோவடிகள் பாடல் அல்ல என்று (அரும்பதவுரைகாரர் குறிப்பிட்டிருந்த போதிலும்) தெரிந்தே இவர் விட்டிருக்கலாம்.

இதனால் மற்றொரு குறிப்பும் நமக்குக் கிடைக்கிறது. வழக்குரை காதையின் இறுதியில் உள்ள மூன்று வெண்பாக் களில் முதலாவது 'அல்லவை செய்தார்க் கறங் கூற்றம்' என்பது. அரும்பதவுரைகாரர் இதற்குக் குறிப்பெழுதினார், மற்ற இரண் டுக்கும் எழுதவில்லை. ஆதலால் இப்பாடல் அவர் காலத்துக்கு முன் தோன்றியது என்பது தெளிவு; இளங்கோவடிகளே இதைச் செய்தாரா என்பது பொதுவான ஐயம். (அடியார்க்கு நல்லார் உரை வழக்குரை காதைக்குக் கிடைக்கவில்லை). மேற்காட்டிய பாடல்வரி, நான்மணிக்கடிகை 84ஆம் பாட்டிலிருந்து எடுத்தது. இக்காரணம் பற்றி, நான்மணிக்கடிகை சிலப்பதிகாரத்திற்கு முன்னே தோன்றியது என்று இதுகாறும் கொண்டிருந்த கருத் துச் சரிதானா என்று இப்போது மறுபடியும் நிதானிக்க வேண்டி யிருக்கிறது. இப்பாடலை இளங்கோ பாடவில்லை, பின்னால் சேர்க்கப்பட்டது என்று கருத வேண்டும்.

### சிலப்பதிகாரத்தின் தொடக்க வரி

இவ்வாராய்ச்சி உண்மையில் சிலப்பதிகார வரலாற்றிலேயே செய்தற்குரியது. இருப்பினும், அடியார்க்கு நல்லார் உரை என்ற பொருத்தத்தினால் இங்கு இதுபற்றிச் சில சொற்கள் கூறுகி றோம். பதிகம் அடியார்க்கு நல்லார் உரை செய்திருப்பினும், இளங்கோவடிகள் செய்ததாயிருக்க வியலாது என்று முன் கூறினோம். அடுத்தது உரைபெறு கட்டுரை என்ற சில வரிகள், அடியார்க்கு நல்லார் உரை கொண்டவை. சிலப்பதிகாரத்தில் காண்டந்தோறும் இறுதியில் கட்டுரையொன்று காணப்படு கிறது. இவற்றை ஆராய்ந்து இங்கு சிலசொற்கள் சொல்வது பொருத்தமுடையதாயிருக்கும்.

இத்தகைய கட்டுரைகள் மொத்தம் ஐந்துள்ளன.

### 1. உரைபெறு கட்டுரை

பதிகத்தின் இறுதியில், ஐயரவர்கள் ஏனைய நான்கையும், செய்யுளாகச் சீர்வரையறை அடிவரையறை செய்து பதிப்பித்

துள்ளார்; இதை அவ்வாறு பதிப்பிக்கவில்லை; 1 முதல் 4 வரை எண்ணிட்டு 4 பத்திகளாய் இதைப் பதிப்பித்திருக்கிறார். இவ் வுரைபெறு கட்டுரை, 'நித்தல் விழாவணி நிகழ்வித்தோனே, உரைபெறு கட்டுரை முற்றிற்று' என்று முடிகிறது. நல்லார் உரை கொண்டது. முற்றிற்று என்ற வாக்கியம் தனி வாக்கியம்; கட்டுரைக்குரியதன்று.

**2. புகார்க் காண்டத்திறுதி**

செய்யுளாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. 'தனிக்கோள் நிலைமையும் ஒரு பரிசா நோக்கிக் கிடந்த புகார்க்காண்டம் முற்றிற்று' என்று, முற்றிற்று என்பதுகூட, கட்டுரையின் பகுதி யாகவே வருகிறது.

**3. மதுரைக் காண்டத்திறுதி**

செய்யுளாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. 'பாண்டியன் நெடுஞ்செழியனோடொரு பரிசா நோக்கிக் கிடந்த மதுரைக் காண்டம் முற்றிற்று' என்பது முடிவு.

**4. வஞ்சிக் காண்டத்திறுதி**

செய்யுளாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. 'செங்குட்டுவனோ டொருபரிசா நோக்கிக் கிடந்த வஞ்சிக்காண்டம் முற்றிற்று' என்பது முடிவு.

**5. நூற்கட்டுரை**

நூலிறுதி, செய்யுளாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. 'மணி மேகலை மேலுரைப் பொருள் முற்றிற்று' என்பது முடிவு.

1, 2: அரும்பத உரையும் நல்லார் உரையும் உண்டு. 3, 4, 5: இருவர் உரையுமே இல்லை. (நல்லார் உரைப்பகுதி கிடைக்க வில்லை. அரும்பத உரைகாரர் ஒருகால் எழுதாமலே விட்டிருக் கலாம்) இவற்றைப் பார்க்கும்போது, உரைபெறு கட்டுரை பதி கத்தோடு சேர்ந்தது, நூலுக்குரியதன்று; பதிகம் பிற்சேர்க்கை என்றால், இதுவும் பிற்சேர்க்கையே; நூல் பதிகத்தோடு தொடங்க வில்லை என்றால், 'அன்று தொட்டுப் பாண்டிய நாடு மழை வறங்கூர்ந்து' என்று உரைபெறு கட்டுரையைக் கொண்டு தொடங்காது. ஆகவே, நூலின் தொடக்கவரி, 'திங்களைப் போற் றுதும் திங்களைப் போற்றுதும்' என்ற மங்கலவாழ்த்துப் பாட லின் தொடக்க வரியேயாகும் என்பது தெளிவு.

## உரையமைப்பு

சிலப்பதிகாரத்தில் முதல் காண்டத்தின் முதல் காதையாகிய மங்கலவாழ்த்துப் பாடலுக்கு முன்னும் பதிகம் என்ற பகுதி உள்ளது. பதிகமாவது பாயிரம். காப்பியங்களின் பதிகம் நூல் வரலாற்றையும், அதன் பகுதிகளையும் தொகுத்துக் கூறுவது. பதிகமுடைய முதல் காப்பியம் சிலப்பதிகாரமே. ஏனைய காப் பியங்கள் சிலவற்றுக்கும் பதிகம் அமைந்துள்ளது. பிற்காலத்தில் 16ஆம் நூற்றாண்டில் பல புராணங்களுக்குக் கூடப் பதிகம் பாடப் பெற்றுள்ளது. பதிகத்திலிருந்தே அடியார்க்கு நல்லார் உரை தொடங்குகிறார். உரைக்கு முன்னதாக, நூல் முழுமையும், 30 காதைகளையும், ஒரு தொகுப்பாக நோக்கிப் பாயிரம் எழுது கிறார். இங்கு முதலில் இடைச்சங்கத்துப் பாண்டியன் அவைக் களத்தில் தொல்காப்பியம் புலப்படுத்தப்பட்டது என்கிறார். காப்பியம் என்ற வடமொழிப் பெயர் முந்துநூல்களில் இல்லை என்கிறார். பின்னர் இசைத்தமிழ் நூல்கள், யாழ், மதிவாணர் நாடகத்தமிழ் நூல் முதலிய பொருள்களைக் கூறி, தமக்கு உரை எழுதத் துணைசெய்த ஐந்து நூல்களைக் குறிப்பிட்டு, சிலப்பதி காரம் மணிமேகலையைக் கொண்டு பொருள்முடிவு பெறு கிறது என்றுகூறி அவையடக்கமாகப் பின்வரும் பாட்டை எழுதி முடிக்கிறார்.

> **எழுத்தின் திறனறிந்தோ இன்சொற் பொருளின்**
> **அழுத்தம் தனிலொன்று அறிந்தோ – முழுத்தும்**
> **பழுதற்ற முத்தமிழின் பாடற் குரை, இன்று**
> **எழுதத் துணிவதே யான்.**

இதன் பிறகு பதிகஉரை, உரைபெறு கட்டுரையின் உரை. பின் காதை தோறும் உரை எழுதிக்கொண்டு போய், 19 ஊர் சூழ்வரி என்ற காதையோடு உரை நிற்கிறது. கானல்வரிக்கும் 19ஆம் காதைக்குப்பின் உள்ள காதைகளுக்கும் இவருடைய உரை கிடைக்கவில்லை என்பது முன் சொல்லப்பட்டது.

உரை எழுதும்போது மூலத்தைப் பொருள் தொடர் புள்ள பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு ஒவ்வொரு பகுதிக்கும் முதலில் பொழிப்புரை கூறி பின் இலக்கணக் குறிப்பு விளக்கம் விசேட உரை கூறுகிறார். விசேடக் குறிப்பில் மேற்கோள்களாய்க் கணக்கற்ற இலக்கிய இலக்கணங்களையும், இசைத்தமிழ் நாடகத்தமிழ் நூல்களையும் எடுத்துத் தருகிறார். ஒவ்வொரு காதையின் இறுதியிலும் அக்காதை இன்ன காரணத்தால் இன்ன

பாவாகும் என்று வரையறை செய்து குறிப்பிடுகின்றார். சில சமயம் உரையில் முன்னமே குறிப்பிட்ட கருத்தை மீண்டும் சொல்கிறார். அவ்வாறு சொல்வது குற்றம் ஆகாது என்னு மிடத்து, இவருடைய சுவைதேரும் தன்மை வெளிப்படக் காண்கிறோம். நூலைப் பகுதி பகுதியாக எல்லோரும் சுவைக்க வேண்டும் என்பது இவருடைய கருத்துப்போலும். பின்வரும் பகுதி சிறப்பாய்க் கருதத்தக்கது. 'இவையெல்லாம் முன்னம் அரங்கேற்றுக் காதை முதலியவற்றுள் விரித்துக் கூறினவாக லின், ஈண்டும் விரித்துக் கூறுதல் 'கூறியது கூறல்' என்னுங் குற்ற மாமெனின், ஒக்கும்; ஆண்டுக்கூறிய அடிகளே ஈண்டும் கூறுத லானும், இக்காதை ஒன்றனையுமே கற்றுணர்வார்க்குப் புலப்பட வேண்டுதலானும் ஈண்டும் விரித்துரைக்கப்பட்டன'. கதை தோறும் பகுதி பகுதியாகவும் முழுமையாகவும் வினை முடிபு களைத் தொகுத்துக் காட்டுகிறார்.

### உரைக்குரிய நோக்கம்

நூலாசிரியர் ஒரு நோக்கம் வைத்து நூலைச் செய்தார்:

> **அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉம்,**
> **உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்,**
> **ஊழ்வினை உருத்துவந் தூட்டும் என்பதூஉம்**
> **சூழ்வினைச் சிலம்பு காரண மாக–**
> **நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்.**

என்று அவரே கூறுகிறார். இம்மூன்றையும் அன்றி, வேறும் சில நோக்கம் வைத்தே நூலைச் செய்து வெற்றி கண்டிருக்கிறார். ஒன்று, முடிகெழு வேந்தர் மூவருக்கும் உரிய சிறப்புகளைப் போற்றியுரைத்தல். அவர் சேர மரபினராயிருந்தும், தம் நாட்டுச் சார்பு சிறிதும் இல்லாமல் பிறர் இருவரையும் போற்றியிருக் கிறார். மற்றொன்று, எல்லாத் தெய்வங்களையும் சிறப்பாகவும் சமமாகவும் போற்றுதல். சிவபிரானையும் திருமாலையும் அருக தேவனையும் கொற்றவையையும் சிறப்பாகவும் சமமாகவும் பக்திச்சுவை குன்றாமல் போற்றியுள்ளார். மூலநூலின் இத்தன்மை களுக்கு ஏற்ப அடியார்க்கு நல்லார் உரை எழுதினார் என்பது இவருக்கு உரிய பெருமை. அது மட்டும் அல்ல; தாமும் ஒரு நோக்கம் கொண்டார். அதுவே மறைந்துபோன இசைத்தமிழ் நாடகத்தமிழின் பகுதிகளை இயன்றவரைக்கும் பின்வருவோர் உணரும்படி விரித்துரைத்தல்; இவர் விரித்துரைத்ததனாலல்லவா

இன்று நாம் இப்பொருள்களைச் சிறிதேனும் அறிய முடிகிறது? 'இக்காலத்தில் வேறொரு வகையாலும் அறிதற்கியலாத இசை யிலக்கண வகை, நாடக இலக்கணம், பரத இலக்கணம், அவிநய வகைகள், நகர அமைப்பு, கோயிலமைப்பு முதலியன. ஐவகைத் திணையின் அமைதிகள், இன்ன இன்ன சாதியார் இன்ன இன்ன தொழில் செய்து வந்தனரென்பது, பலவகை நீதிகள், சமயக் கோட்பாடுகள், இராசபக்தி, ஆச்சிரம அமைதி, ஆசிரிய பக்தி, மாணாக்கரியல்பு, ஆபரண வகை, தானிய வகை, யாகவகை, ஊர்திவகை, கருவி வகை, மந்திர வகை, பூவகை, செடி வகை, கொடிவகை, மரவகை ஆகிய இவைகளும் இவை போல்வன பிறவும் இந்நூலால் அறியலாகும்' என்பது ஐயரவர்கள் முகவுரை.

## உரை இயல்பு

பருந்தும் நிழலும் என்ற பாடல், மிகவும் நன்றாக இவருடைய உரையின் தன்மையைச் சிறப்பிக்கிறது. இவர் எல்லாப் பொருளும் தெரிந்து, மூலநூலைப் பயில்வார்க்கு நல்லமுதம் பாலித்தார் என்று அதுகூறுவது முழுமையும் உண்மை. அவையடக்கமாக இவர் தம் பணிவைப் புலப்படுத்திய போதிலும், நூலுரை பெருமித வெற்றியுடையது என்று திட்ட மாய்ச் சொல்லலாம்.

இவருடைய உரைநடை சில இடங்களில் எதுகை மோனை பெற்று, இனிய சுவையுடையதாய்ச் செய்யுளோசையும் அமையப் பெற்றது. அடியார்க்கு நல்லார் சிறந்த ரசிகர், கவிச்சுவை தேரும் பண்பினர்; ஆதலால், நூலைச் சுவைப்பவர் முழு நூலைப் படித்துச் சுவையறிய வேண்டுவதில்லை, ஒவ்வொரு பகுதியே போதும் என்ற எண்ணமுடையவர்; தோள் கண்டார் தோளே கண்டார் என்பதுபோல; இதன் பொருட்டே ஒரு பகுதிக்கு விளக்கம் அவ்விடத்தேயே முழுமையும் அமைய வேண்டும் என்ற கருத்தில் முன்சொன்ன கருத்தையே மீண்டும் சொல்வார்; இதை அவரே குறிப்பிட்டும் இருக்கிறார். சொற்களுக்கும் தொடர் களுக்கும் பொருள் விளக்கம் சொல்லுகிறார். வடமொழிப் புலமை காரணமாக, எளிதாக வடசொற்களையும் பயன்படுத்தி விளக்குகிறார். பழமொழிகள், வழக்குகள் வரும்போதெல்லாம் தக்க விளக்கம் எழுதுகிறார். மேற்கோள் தந்தும், முன்னுள்ள உரை, பாடங்களைக் குறிப்பிட்டும் எழுதுகிறார். காதை, வரி, மாலை என்பனவாகிய நூற்பகுதியின் பெயர் வேறுபாட்டுக்குக்

*காரணம் கூறி, ஒவ்வொரு பகுதியும் என்ன பாடல் என்பதைத் தவறாது காதையின் இறுதியில் காரணத்தோடு குறிப்பிடுகிறார். அரும்பொருள் விளக்கங்கள் மிகவும் சிறப்பாய்த் தருகிறார். கதை நிகழ்ச்சியிலும், கருத்திலும், முன்பின் பொருத்தங்களைத் தொடர்புபடுத்திக் காட்டுகிறார். கதை நிகழ்ச்சி பற்றிய கால அளவுகளை ஆங்காங்கு கணக்கிட்டுக் காட்டுகிறார். இவை யனைத்திலும் மேலான பெருஞ்சிறப்பு, இவர் தரும் இசைத் தமிழ் நாடகத்தமிழ்ச் செய்திகள். நூலாசிரியரிடத்தும், நூற் பொருளிடத்தும், முத்தமிழினிடத்தும் தமிழ் மரபினிடத்தும் இவர் அளவற்ற பக்தியுடையவர். இந்தப் பக்தியினாலேயே இவர் உரை பெருஞ்சிறப்பு உடையதாக ஆகியிருக்கிறது.*

*இவ்வியல்புகளைப் பின்னே தக்க எடுத்துக்காட்டுக்களு டன் விளக்கிக் காட்டுகிறோம்.*

## செய்யுளோசை

*உரையைப் பல இடங்களிலும் எதுகை மோனை அமையச் செய்யுளோசை படும்படி எழுதுவது இவருக்கு ஓர் இயல்பு. கடலாடு காதை 44-5.*

வானோ ராகிய தேரில் நான்மறைக்
கடும்பரி பூட்டி நெடும்புற மறைத்து
வார்துகில் முடித்துக் கூர்முள் பிடித்துத்
தேர்முன் நின்ற திசைமுகன் காணும்படி.

*பாரதி வடிவாகிய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய பாண்டரங்கக் கூத்து. ஊர்காண் காதை 17.*

ஒழுக்கம் உடைய விழுக்குடிப் பிறந்தோர்
நாணுடை மகளிரொடு நீணெறிச் செல்லார்.

*முழுமையும் செய்யுளாகவே ஒரு நீண்ட பகுதி எழுதுகிறார். பதிகத்தின் முதலிரு வரிகளின் உரைக்கு எழுதும் தோற்று வாயைக் காண்க. 'அடிகள் என்றது துறத்தலான். அத்துறவின் வரலாறு யாதோ என்னில்,*

குமரியொடு வடஇமயத்து
ஒருமொழிவைத் துலகாண்ட
சேர லாதற்குத் திகழொளி ஞாயிற்று
ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் தன்மகள்
நற்சோணை ஈன்ற மக்கள் இருவருள்

முன்னோன் தன்னைப் பின்ன ரியற்றிப்
பின்னோன் தன்னையும் பெருநம்பி யாகென
அன்னவர் தம்மொடு தென்னர் செம்பியர்
தன்னடி போற்றத் தமனிய மண்டபத்துச்
சிங்கம் சுமந்த பொங்கணை மீமிசை
உவரித் திரையிற் கவரி யிரட்ட
வேந்தன் இருந்துழிச் சார்ந்த நிமித்திகன்
அடிமுதல் முடிவரை நெடிது நோக்கி
இன்தோள் கழியப் பொன்திகழ் உலகம்
சேர்தி நீயெனச் சேரலற் குரைத்தவன்
மைந்தரை நோக்கி நந்தாச் செங்கோல்
அந்தமில் இன்பத்து அரசாள் உரிமை
இளையோற் குண்டென உளைவனன் நனிவெகுண்டு
அழுக்காற் றொழுக்கத்து இழுக்கு நெஞ்சினன்
கண்ணெறி தவழ அண்ணலை நோக்கும்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட் டுவன்தன் செல்லல் நீங்கப்
பகல்செல் வாயிற் படியோர் தம்முன்
அகலிடப் பாரம் அகல நீக்கிச்
சிந்தை செல்லாச் சேண்நெடுந் தூரத்து
அந்தமில் இன்பத்து அரைசாள் வேந்து.

*ஆயினான் என்பது'. இப்பகுதியினுள், முதல் மூன்று வரிகள் 29ஆம் காதை - வாழ்த்துக்காதையின் தொடக்கமான உரைப் பாட்டு மடையின் முதலிலுள்ள வரிகள்; இறுதி வரிகள் ஆறும் வரந்தருகாதையில் 177-182 வரிகளாயுள்ளன; ஏனைய வரிகள் - இடையிலுள்ள 17-அடியார்க்கு நல்லார், இளங்கோவடிகள் துறவு பூண நேர்ந்த அச்சந்தர்ப்பத்தைத் தாமே விரித்துக் கூறும் பகுதியாகும்.*

## *சொல்லும் பொருளும்*

*விரிவான இவருடைய உரையில் எண்ணற்ற சொற்களுக்கும் தொடர்களுக்கும் சுவையான பொருளை உணர்த்திச் செல்லு கிறார். சிலவற்றை இங்கு காட்டுவோம். அத்திரி:* அத்திரி ஏற -*

---

* *இதுபற்றிய ஒரு சுவைமிக்க ஆராய்ச்சிக் குறிப்பை எமது 11ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் காணலாம்.*

கோவலன் இராசவாகனமாகிய அத்திரி ஏற; அத்திரி - கோவேறு கழுதை; இதன் நேர் வடமொழிபெயர்ப்பே இராசவாகனம்; இது அக்காலத்தில் தமிழ்நாட்டுக்குப் புதிது; ஆகவே மிக்க சிறப்பாய்க் கருதப்பட்டது போலும். இடம் பிடித்தல்; பெருநீர் போகும் இரியன் மாக்களோடு என்ற இடத்து, கடற்கரைக்கண் இடம் பிடிக்க விரைந்து செல்லும் மாக்களோடு என்கிறார். இடம் பிடித்தல் என்பது அக்காலத்திலும், விரைந்து செய்யத் தக்க ஒரு செயலாக இருந்தது என்று அறிகிறோம். உண்டல் - உறுதல். கழிபேராண்மைக் கடன் - தன்னைத் தானிடும் பலிக் கடன்; இந்த இருபதாம் நூற்றாண்டிலும் அரசியல் காரணங் களுக்காக நிகழக் காண்கிறோம்;

அடிக்கழுத்தி னுடன் சிரத்தை அரிவராலோ
அரிந்த சிரம் அணங்கின் கைக் கொடுப்ப ராலோ
கொடுத்த சிரம் கொற்றவையைத் துதிக்கு மாலோ
குறையுடலம் கும்பிட்டு நிற்கு மாலோ.

என்ற கலிங்கத்துப்பரணிச் செய்யுள் காணத்தக்கது. காமநூல் என்பது காமனுக்கு ஒரு வில்லென்று கூறுகிறார்; ‘காமநூல் - பூவிசேடம்; இதனை மன்மத தந்திரம் என்பர் வடநூலார்’ என்பது ஐயரவர்கள் குறிப்பு. இப்பூவானது இன்று மன்மத பாணம் என்ற பெயரில் உள்ளது. இப்பூ மல்லிகைக் குடும்பத் தைச் சேர்ந்தது; இரண்டங்குலம் நீண்ட இதழ்களையுடையது; மணம் குறைவு.

சாத்தன் (மகாசாஸ்தா, ஐயனார்) என்ற தெய்வத்தை, “இவற்றிற்கு முதலாயுள்ள சாத்திரங்களைப் பயின்றவனாத லின் மகாசாத்திரன் என்பது அவற்குப் பெயராயிற்று” என்பார். புனிதன் - புதியவன், புராணன் - பழையவன் (அருகன் பெயர்கள்), பண்ணை - தோட்டங்களும் ஓடைகளும், பொறை - மட்சிறு மலை. திசைமுகம் பசந்து - திக்காகிய முகம் பொன்னிறங் கொண்டு பசந்ததென்றார், மாலைக்காலத்துப் பரந்த பச்சை வெயிலை;...இக்காலத்து இதனைக் காடுகிழாள் வெயிலென்ப. மகிடாசுரன் - விக்கிரமாசுரன். முகவைப் பாட்டாவது பொலி பாடுதல்; முகக்கக் கொடுத்தலின் முகவையாயிற்று. மூழ்குதல் - அழுக்கறக் குளிரக் குளித்தல். ‘வச்சிரம் இருதலைச் சூலமாய் நடுவு பிடியாயிருத்தலான், அதனிடையை நுசுப்புக்கு உவமம் கூறுப;’ வேல் என்ற முருகன் ஆயுதம் இவ்வாறு இருதலைச்

சூலமாயிருக்கும் என்று சொல்வது இன்று வழக்கு. வெள்ளி யம்பலம்: மன்றப்பொதியிலில் வெள்ளியம்பலத்தென்றது பொன்னம்பலமுமுண்டாகலின்.

மாதவி என்ற சொல்லுக்கு இருபொருள் கூறி உரையையும் பொருத்திக் காட்டுவார்:

> காதற் கொழுநனைப் பிரிந்தல ரெய்தா
> மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னோடு.

மாதவி என்றது சிலேடை: காதலிக்கப்பட்ட தன் கொழுநனைப் பிரிந்து வேறுபட்டு அலருறாத அழகிய வளைந்த மகரக்குழையை யுடைய மாதவி என்றும், எல்லோரும் காதலிக்கும் கொழுவிய நனையாந்தன்மையை விட்டு முதிர்ந்து அலராகாத வளைந்த அழகிய தளிரையுடைய குருக்கத்தி என்றும் சொல்லுக. ஒரு தலையாகப் பொருள் கொள்ளாது பலரும் தத்தமக்குத் தோற்றியவாறே பொருள்கொள்ளக் கிடந்த போற்றி என்ற சொல்லை, இவர் இகர வீற்று வியங்கோளாகக் கொண்டு போற்றுவாயாக என்று பொருள் செய்திருக்கிறார். மாதவி தனக்கு எழுதிய ஓலையின் வாசகம் தன் பெற்றோருக்குத் தான் விடுத்தலுக்குப் பொருந்தும் என்றும் கோவலன் நினைத்து அனுப்புகிறான். எங்ஙனம் பொருந்துகிறது என்பதை அடியார்க்கு நல்லார் விளக்கிக்காட்டுகிறார்.

ஆறிய கற்பும் சீறிய கற்பும் என்ற தொடர் இன்று மேடைகளில் முழங்கும் தொடராகி உள்ளது. இத்தொடரை அமைத்துக் கொடுத்தவர் அடியார்க்கு நல்லார் ஆவர். பதிக உரையில் அரும்பதவுரைகாரர் ‘வீரபத்தினி - சீறிய கற்புடையாள்’ என்று மட்டும் எழுதினார். இதை விரித்து அடியார்க்கு நல்லார், ‘வீர பத்தினி - மறக்கற்புடையாள், கோப்பெருந்தேவி - அறக் கற்பு டையாள்; ஆக ஆறிய கற்பும் சீறிய கற்பும் எனக் கற்பு இரு வகை’ என்று கூறினார். மிக்க நயமான தொடர்கள்.

## வடமொழி

அடியார்க்கு நல்லார் வடமொழிப் புலமை மிக்கவர். கீரிப்பிள்ளையும் பார்ப்பனியும் என்ற கதையைக் கூறுமிடத்து, அரும்பதவுரைகாரர் கூறுகின்ற பஞ்சதந்திர வடமொழிச் சுலோகத்தை இவரும் எடுத்துக்காட்டுகிறார், வடமொழி இவருக்கு மிக எளிதாகக் கைவருதலால், தொட்டஇடமெல்

லாம் வடசொற்களைப் பெய்து உரைக்கிறார். இணையற்ற முத்தமிழ்ப் புலமைபடைத்த இவர் வடமொழியை எடுத்துத் தருவது, பொருள் விளக்கத்திலுள்ள எளிமையைக் கருதியே என்று நாம் எண்ணவேண்டும். இசை நாடகம் ஆகியவற்றில் பலசொற்கள் பொருளமைதி காரணமாகத் தமிழோடு கூட வடமொழியும் சேர்ந்து பயில்வது இயல்பு. எனினும் பல சமயம், தமிழை விளக்குமுகமாக இவர் வடமொழியைத் தருகிறார். அறிதுயில் - யோக நித்திரை. செம்மல்: விநாயகமூர்த்தி, நீரணி விழா - அபிடேக விழா. கருணை மறவா - கிருபா வீரனே. செவ்வி - மனோரதம். வாளாமை - ஆசௌசம். கண்கூடாவது - பிரிய தரிசனம், அஃதானது காட்சி. மீனரசு - சந்திரன், உடுபதி. வழுத்தல் - அபிமந்திரித்தல். பொற்குடம் - அபிடேக கலசம்.

சங்கரன் என்ற சொல்லை இளங்கோவடிகள் அருகன் பெயர்களுள் ஒன்றாகச் சொல்கிறார். இவர் அச்சொல்லுக்குச் சைவமரபில் சொல்லும் பொருளாகிய சுகத்தைப் பண்ணுகிறவன் என்று பொருள் கூறுவது அறியத்தக்கது.

வடசொற்களை இவ்வளவு அதிகம் ஆளுகின்ற இவர், அட்டாங்க யோகத்தைக் கூறுகின்ற போது (சமயம் என்ற தலைப்பும் பார்க்க) இயமம், நியமம், ஆசனம், வளிநிலை (பிராணாயாமம்), தொகைநிலை (பிரத்தியாகாரம்), பொறைநிலை (தாரணை), நினைதல் (தியானம்), சமாதி என்று, எட்டில் நாலுக்குத் தமிழ்ப்பெயர் கூறியிருக்கிறார். இவ்வாட்டாங்க யோகநெறி முற்காலத்தில் தமிழ்நாட்டுக்கு உரியதாகவே இருந்ததோ என்று நினைக்கலாம்.

## பழமொழியும் வழக்கும்

பழமொழிகளாகவும் வழக்குக்களாகவும் இவர் பல பொருள்களை உணர்த்திச் செல்கிறார். ‘விளையாட்டுப் பூசல் வினையாயிற்று’ என்னும் வழக்குப் பற்றி; ‘திருவாணைக்கு மேலாய ஆணை இல்லை’ என்பது வழக்கு; தெழித்தல் - பிரித்தலுமாம்; குடநாட்டார் வழக்கு; ‘கெட்டால் மதி தோன்றும்’ என்னும் வழக்கு - இவை பழமொழிகள். பனியென்பதொரு நோயுண்டு: அது குடநாட்டு வழக்கு என்கிறார்; திருஞானசம்பந்தர் தம் அடியாருடன் குடநாடு சென்றபோது குளிர்சுரம் தாக்கி வருந்தினர் என்று அவருடைய புராணம் கூறுவதும் இங்கு நினைவு கூரத்தக்கது. பணித்தல் - அருளிச் செய்தல்; திசைச்சொல்; பணி

விடை என்னும் வழக்குமது என்கிறார். 'சொன்னோம் சொன் னோம்' என்னும் வழக்கு - இது இன்றும் வழக்கில் உள்ளது. வழக்கினுள்ளும், 'இஃது ஒரு கதை' என்பவாகலின். பதியிலாரிற் குடிக்குற்றப்பட்டாரை, ஏழு செங்கற் சுமத்தி ஊர் சூழ்வித்துப் புறத்திடுதல் மரபு. அக்காலத்து முத்து நோக்குவார், முத்து ஒளிபெறுதல் நோக்கி, நீலவிதானம் விரித்து நோக்குப. நீயிரே இது செய்வீராயின் - என்பது ஒரு வழக்கு: இங்ஙனம் நேர்ந்தால் எனக்குக் கவலையில்லை என்பது குறிப்பு. துணிக்கடைகளில் வாசனைப்புகை போடும் இன்றைய வழக்கம் அன்றும் இருந்தது: 'புடைவை (துணி)க் கடைகளுக்கு வாசங் கொளுத்துதலின் நறுமடி என்றார்' என்பது காண்க. பட்டினி நோன்பு - இரண்டு உவாவும் அட்டமியும் பெரும்பாடும் பட்டினி விட்டுண்ணும் விரதம் என்ற வழக்கைக் குறிப்பிடுகிறார். நங்கை: நங்கையென்று புதல்வர் மனைவியரைக் கூறும் முறைப்பெயராதலின் நங்கை என்றாள் என்க... இஃது அக்கால வழக்கு. இடுவந்தி கூறுதல் என்ற வழக்கு: குற்றமில்லாதவன் மேல் குற்றத்தைச் சுமத்துதல்.

## மேற்கோள்

அடியார்க்கு நல்லாருடைய சிறப்புக்களில் ஒன்று, அவர் தாம் எடுத்துக்காட்டும் மேற்கோள் பாடல் எந்த நூலில் உள்ள தென்பதைப் பெரும்பான்மையும் சுட்டி எழுதுவதாகும். நூலை யும் அதன் பகுதியையும் பாடலையும் கூடக் குறிப்பிட்டுச் சொல் வது இவர் இயல்பு. இவ்வாறு சொல்வதனாலேயே இறந்து போன பல நூல்களின் பெயர்களேனும் தெரியவருகின்றன. சில இடங்களிலேயே இவர் நூலைப் பெயர்சுட்டாது காட்டிச் செல்வது. சிந்தாமணியை இவர் அதிகமாகக் காட்டுகிறார். அதனினும் அதிகமாக இவர் போற்றுவது பெருங்கதையை; கதை என்றும் உதயணன் கதை என்றும் பெருங்கதை என்றும் குறிப்பிடுவார். இவர் காட்டும் பல பகுதிகள், பெருங்கதையின் இறந்துபோன பகுதிகளில் உள்ளன போலும். இடைச்சங்கத்தார் பாடிய கலியும் குருகும் வெண்டாளியும் முதலிய செய்யுளிலக் கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதை என்பார்; இதனால் எட்டாம் நூற்றாண்டில் கொங்குவேளிர் செய்த பெருங்கதை, மேற்சொன்ன இடைச்சங்ககால இலக்கிய இலக்கணங்கள் இருந்து, அவற்றை ஆராய்ந்து செய்யப்பட்டது என்று தெரி கிறது; அடுத்த நான்கு நூற்றாண்டுகளில் அந்நூல்கள் யாவும் மறைந்துவிட்டன.

பிறநூல்களில் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கவை ஆசிரிய மாலை, பெரும்பொருள் விளக்கம், செயிற்றியம், கூத்தநூல், வளையாபதி: இவை இறந்துபோன நூல்கள், இப்போதுள்ள நூல்களில் கலிங்கத்துப்பரணி, கலித்தொகை, புறப்பொருள் வெண்பாமாலை, மணிமேகலை, சூளாமணி, இராமாயண உத்தரகாண்டம், திருக்குறள், திருக்கோவையார், திவாகரம், பிங்கலம், புறநானூறு என்பன குறிப்பிடத்தக்கவை. கனாநூல் பாட்டுக்கள் பல இவர் தருகிறார். இந்நூலுக்கு வேறு இலக்கிய ஆட்சி இல்லை; எத்துணையோ நூல்கள் இறந்து போயிருக்க, இந்நூல் மட்டும் இன்றும் இருக்கிறது.

பண்டைநூல் வரிகளையும் தொடர்களையும் பெயர் சுட்டாது உரைநடையாகவே எழுதிக்கொண்டு போகும் இடங்களும் உண்டு. கருவூர்த்தேவர் பாசுரத் தொடர் ஒன்றை - எங்கள் கண்முகப்பே என்பது - இவ்வாறு எழுதிக்கொண்டு போவது சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கது. இத்தொடர் திருமங்கை யாழ்வார் பாசுரத்திலும் உள்ளது.

அடியார்க்கு நல்லார், தாம்கொண்ட பாடத்தினும் வேறான பாடம் இருந்தமையும் குறிப்பிடுகிறார்; சில பாடங்களுக்குப் பொருளும் உரைக்கிறார். வேறு உரையையும் குறிப்பிடுகிறார். அரும்பதவுரையாசிரியர் என்று பெயர் சுட்டியே எழுதுகிறார். 'சொல்வாருமுளர்' என்று இவர் சொல்வதனாலேயே வேறு உரைகள் எழுதப்பெற்றிருந்தன என்பது பொருளன்று: வேறு விதமாக உரைசொல்லும் மரபு இருந்தது என்றே பொருள் கொள்ளவேண்டும். ஓரிடத்தில், நகைச்சுவைபட, இவ்வாறு 'பொருள் கூறலுமொன்று, இதனான் மிக்க பலமின்று. ஏற்கு மேற் கொள்க. இதுபோலி' என்று எழுதுவதும் காணத்தக்கது.

புகழுவமையலங்காரத்துக்கு எடுத்துக்காட்டாக, இவர் 'இறையோன் சடைமுடிமேல் எந்நாளும் தங்கும்' என்ற ஒரு பாடலைத் தருகிறார்; இது தண்டியலங்காரத்திலும் (பொருளணி. 5) காட்டப்பட்டது; எனினும் இது தண்டியினின்றும் எடுத்ததென்று சொல்லவியலாது; இது ஒரு பழம்பாடலாயிருந்து ஆசிரியர் இருவருமே எடுத்துக்காட்டுகிறார்கள் என்றுகொள்ளவேண்டும்.

பதிற்றுப்பத்து ஐந்தாம்பத்தின் இறுதியில் உள்ள 'வட வருட்கும்' என்ற பதிகத்தை இவர் குறிப்பிடுவதால், இவர் காலத்துக்கு முன்னேயே அப்பதிகம் இயற்றப்பட்டு ஆட்சிக்கு வந்திருந்தது என அறிகிறோம்.

இசை நாடகத் தமிழுக்கு இவர் தமக்கு ஆதாரமாக ஐந்து நூல்களைக் கொண்டமைபோல, இயற்றமிழுக்குத் தொல் காப்பியத்தையே ஆதாரநூலாகக் கொண்டிருக்கிறார். "இவ் வியலிசை நாடகப் பொருட்டொடர் நிலைச்செய்யுளை அடிகள் செய்கின்ற காலத்து இயற்றமிழ் நூல் தொல்காப்பியமாதலானும், பிறர்கூறிய நூல்கள் நிரம்பா இலக்கணத்தனவாகலானும், அந் நூலின் முடிபே இதற்கு முடிபென்றுணர்க" என்று உரைப் பாயிரம் தொடங்குவதால் இது நன்கு விளங்கும். தவிர, இவருக்கு முன் சிறப்பான வேறு இயற்றமிழ் இலக்கண நூல் ஆட்சியில் இருந்ததாகவும் தெரியவில்லை.

## நூற்பகுதிகளின் பெயர்

நூற்பகுதிகள் காதை என்றே பெயர் பெறத்தக்கன. ஆனால் சில அவ்வாறு பெயர் பெறவில்லை. இதை இவர் பதிகவுரையுள் விளக்கிக் கூறுகிறார்: 'இதனை மங்கலவாழ்த்துக் காதையும் என்னாது பாடலுமென்றது என்னையோவெனின், - இஃது ஆசிரியப்பாவால் வாராது கொச்சகக்கலியால் வருதலானும், கதையையுடையது காதை யாமாதலானும் அவ்வாறு இதிற் கதை நிகழ்ச்சியின்மையானும், வாழ்த்தும் உரையும் பாடலுமாய் வருதலானும் இங்ஙனம் பெயர் கொடுத்தாரென உணர்க. அஃது அற்றாக; மேலும் கானல்வரி, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, துன்பமாலை, ஊர்சூழ்வரி, வஞ்சினமாலை, குன்றக்குரவை இவையிற்றையும் காதையென்றிலராலெனின், - அவற்றைக் கூறாததும் சில வேறுபாடு கருதிப்போலும்'. ஆசிரியப்பாவால் இயன்ற பகுதிகள் காதை என்று பெயர் பெற்றன. ஏனைச் செந் தூக்கு, கலிப்பா, கலிவெண்பா முதலியன, இடம் நோக்கி வரி, குரவை, மாலை எனப் பெயர்பெற்றன; கனாத்திறமுரைத்த காதையொன்று மட்டும், கலிவெண்பாவால் பாடப்பெற்றிருப் பினும், காதை என்று பெயர் தரப்பெற்றிருக்கிறது - அதனுள் கதை நிகழ்தலான்.

ஒவ்வொரு காதை முடிவிலும் இது இன்ன காரணத்தால் இன்ன பாவாகும் என்று தவறாது கூறிமுடிக்கிறார்: இது எல்லா வடியும் தம்முளொத்து முடிதலின் (அல்லது நேரடியா வருதலின்) நிலைமண்டில ஆசிரியப்பா - என்பது போல. இவ்வாறு இவர் கூறியுள்ளவை: பதிகம் - குட்டச் செந்தூக்கு. ஏனைய 19 காதை களுள்ளும், (கானல் வரியில்லை) கலிவெண்பா-1; மயங்கிசைக்

கொச்சகக் கலிப்பா-2; அயல்மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா-1; நிலைமண்டில ஆசிரியப்பா-12; ஆய்ச்சியர் குரவை மட்டும் - இது கூத்தாற்பெற்ற பெயர் என்கிறார். கனாத்திறமுரைத்த காதை - இது.... முந்நான்கடியின் இறந்து வருதலால் நெடு வெண்பாட்டாகாது கலிவெண்பாட்டாதல் உணர்க.

**விளக்கங்கள்**

உரையெங்கும் பழந்தமிழ்ச் செய்திகளையும் மரபுகளையும் அறிவிக்கும் விளக்கங்கள் மலிந்து காணப்படும். இசை நாடகம் பற்றிய விளக்கங்கள் அவ்வத் தலைப்புக்களில் சொல்லப்பட்டன. ஊர்காண் காதையில், 'தொண்டியோர் இட்ட அகிலும் துகிலும் ஆரமும் வாசமும் தொகுகருப்பூரமும் சுமந்து' என்ற வரிகளின் உரையில், இந்த ஐவகைப் பொருள்களின் பெருக்கமும் சொல் கிறார்; அகில் - ஐந்து வகை சொல்லி, இவ்வகைத்தாகிய தொகுதி என்கிறார்; துகில் - கோசிகம் பீதகம் என்று தொடங்கி 37 வகை களைக்கூறி இத்தகைய பல்வகைத்தாகிய தொகுதி; ஆரம் - மலையாளம் முதலான 6 வகைக்கு மேலும் பல வகைத்தான தொகுதி; வாசம் - அம்பர் முதலான 15 வகைக்கு மேலும் பல வகைத்தான தொகுதி; கருப்பூரம் - மலைச்சரக்கு முதலான 14 வகைக்கு மேலும் பலவகைத்தாகிய தொகுதி - என்று தொகுத் தும் விரித்தும் பொருளுரைக்க என்கிறார். எல்லா வகைகளின் பெயரும் சொல்கிறார். கருப்பூரத்தில் சூடன் சீனச்சூடன் என்பன கூறியிருப்பது காணத்தக்கது. தொண்டியோர் சோழ குலத் தோர் என்றும் சொல்கிறார். இதனால், கீழ்க்கடற்கரையிலும் அக்காலத்தில் சோழருக்குரியதான தொண்டி என்ற பட்டினம் இருந்தது என்று தெரிகிறது.

இதே காதையில், ஒன்பது மணிகள், அவற்றின் வகைகள், குணம் குற்றம் என்பன விரித்துக் கூறுகிறார். கூறுமிடத்து, இவற்றுக்கு மேற்கோளாக நூற்பாக்கள் பலவற்றைத் தருகிறார். கூலம் பதினெண் வகைத்து எனக்கூறி மேற்கோள் தருகிறார். கடலாடுகாதையில், மாதவி தன்னை அலங்கரித்தமை கூறும் பகுதியில், அணிகலன் பற்றிய விளக்கம் அதிகமாகத் தருகிறார். இவற்றுக்கு மேற்கோளாகப் பல விருத்தப் பாடல்களையும்* காட்டுகிறார்.

---

* இவை வளையாபதிப் பாடல்கள் என்று கருதுதல் தகும்.

ஆய்ச்சியர் குரவை, முந்நீரினுள்புக்கு என்ற பாடற் பகுதியில், முந்நீர் என்பதற்கு உரை எழுதுமிடத்து, இவர் தர்க்க ரீதியாக எழுதுகின்ற பொருள் சுவைத்து இன்புறத்தக்கது. "முந்நீர்-கடல்; ஆகுபெயர்; ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீரென இவை என்பார்க்கு, அற்றன்று; ஆற்றுநீர் மேனீராகலானும் இவ்விரண்டு மில்வழி ஊற்றுநீரும் இன்றாமாகலானும், இவற்றை முந்நீர் என்றல் பொருந்தியதன்று; முதிய நீரெனின், நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் (குறள் 17) என்பதனால், அதுவும் மேனீரின்று அமை யாமையின் ஆகாது. ஆனால் முந்நீர்க்குப் பொருள் யாதோ வெனின், முச்செய்கையுடைய நீர் முந்நீர் என்பது. முச்செய்கை யாவன மண்ணைப் படைத்தலும் மண்ணையழித்தலும் மண் ணைக் காத்தலுமாம்."* ஆற்றுநீர் ஊற்று நீர் மேல்நீர் என்று எழு தியவர் புறநானூற்றுரைகாரர். ஆகவே அடியார்க்கு நல்லார் உரை அவர் கருத்துக்கு மறுப்பென்று கருதக்கூடும். முன்னீர் - நிலத்துக்கு முன்னாகிய நீர் என்ற கருத்தையும் அவரே குறிப்பிடுகிறார்.

பெரும்பான்மையும் இவர் ஒரு விளக்கம் அல்லது தொகை விரியைத் தந்து, பின்னர் அக்கருத்துக்கு ஆதாரமான மூலநூற் செய்யுளை எடுத்துத் தருவார்; முதலில் பாடலைச் சொல்லிப் பின் கருத்தை விளக்குமிடமும் உண்டு. பின்வரும் பகுதி காண்க (அரங்கினது அமைதி கூறுவது):

தந்திரத் தரங்குஇங்கு இயற்றுங் காலை
அறனழித் தியற்றா அழகுடைத் தாகி
நிறைகுழிப் பூழி குழிநிறை வாற்றி
நாற்றமும் சுவையும் மதுரமு மாய்க்கனந்
தோற்றிய திண்மைச் கவட துடைத்தாய்
என்புமி கூர்ங்கல் களிஉவர் ஈளை
துன்ப நீறு துகளிவை இன்றி
ஊரகத் தாகி உளைமான் பூண்ட
தேரகத் தோடும் தெருவுமுக நோக்கிக்
கோடல் வேண்டும் ஆடரங் கதுவே.

என்பது; தந்திர அரங்கு இவ்வுலகத்துச் செய்யுமிடத்து, தெய்வத் தானமும் பள்ளியும் அந்தணரிருக்கையும் கூபமும் குளனும் காவும் முதலாகவுடையன அழியாத இயல்பினையுடைத்தாய், நிறுக்கப்பட்ட குழிப்பூழி குழிக் கொத்துக் கல்லப்பட்ட மண்

* இவரைப் பின்பற்றி இதே கருத்தை நச்சினார்க்கினியர் பெரும் பாணாற்றுப்படையுரையிலும் சிந்தாமணியுரையிலும் எழுதுகிறார்.

நாற்றமும் மதுரநாறி இரதமும் மதுரமாகித் தானும் திண்ணிதாய் என்பும் உமியும் பரலுஞ் சேர்ந்த நிலம் களித்தரை உவர்த்தரை ஈளைத்தரை பொல்லாச் சாம்பற்றரை பொடித்தரை என்று சொல்லப்பட்டன ஒழிந்து, ஊரின் நடுவணதாகித் தேரோடும் வீதிகளெ திர்முகமாக்கிக் கொள்ளல் வேண்டுமென்க.'

அரங்கு என்பது, இன்று திறந்த வெளிமன்றம் என்ற நவீன பரிபாஷையில் சொல்வது போல்வது (கட்டடமன்று). அதற் கேற்ற இடம் இவ்வளவு சிறப்பாய்க் கூறியிருப்பது பெரிதும் சிந்திக்கத்தக்கது. இக்காலம் திரைப்படம், களியாட்டம், பொம்மலாட்டம் முதலானவற்றுக்குக் கொட்டகை போடுவ தென்றால், சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அதற்குச் சுகாதாரச் சான்றிதழ் கேட்கிறார்கள். இவ்வாறு விதித்தவர்கள் சட்டமியற்ற அடியார்க்கு நல்லாரிடம் கற்றுக்கொள்ள வேண்டுமென்று சொல்லத் தோன்றுகிறது. கோயில் கட்டுவதற்கு எவ்வாறு நிலம் தேர்ந்து கொள்ளவேண்டும் என்பதைக் கூறுமிடத்து, பூ பரீட்சை என்ற தலைப்பில் மண்பற்றிய குற்றங்களையும் இலக்கணங்களை யும் காமிகாகமம் முதலிய ஆகமங்கள் விரித்துக் கூறுகின்றன.

இவர் கூறிய விளக்கங்களுள் மிகவும் சிறப்பானது, பதிக வுரையில் பொருளாராய்ச்சியைக் கூறுவது. இங்கு சொல்வன: பொருளாராய்ச்சி எண்வகைய: திணை பால் செய்யுள் நிலம் காலம் வழு வழக்கு இடம் என்பன. திணை இரண்டு அகத்திணை புறத்திணை; பாடல் பதினான்கு, கைக்கிளை முதல் பெருந்திணை இறுவாய் ஏழும், வெட்சி முதல் பாடாண்திணை இறுவாய் ஏழும்; செய்யுள் அறுவகை, வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா பரிபாடற்பா மருட்பா; நிலம் நால்வகை, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்; காலம் பன்னிரண்டு, சிறுபொழு தாறும் பெரும்பொழுதாறும்; வழு பதினான்கு, அகத்திணை வழுவேழும் புறத்திணை வழுவேழும்; வழக்கு இருவகை நாடக வழக்கும் உலகியல் வழக்கும்; இடம் இருவகை வழக்கிடமும் செய்யுளிடமும். இச்சிறுகுறிப்பில் பொருளாராய்ச்சிக்குரிய பொருள்கள் அனைத்தையுமே அடக்கிவிட்டார். அடுத்து நான்கு திணைக்குமுரிய முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகியவற்றுக்குரிய இலக்கியத்தை இவர் சிலப்பதிகாரத்தில் இருந்தே எடுத்துக்காட்டுகிறார். இப்பகுதி இவரது அளவற்ற நினைவாற்றலையும் இலக்கணப் புலமையையும் உணர்த்துகிறது. இதன்பின் பாலைக்கும் இங்ஙனமே இலக்கியம் காட்டியுள்ளார்.

## பொருத்த விளக்கம்

உரையாசிரியர் நூலைச் சிறப்பு மிகும்படி நடத்திச் செல்வதில் விருப்பமுடையவர். அரசர் செங்கோல் நெறி திறம்பாதோர் என்று காட்டுவதில் பெரிதும் முயற்சி எடுக்கிறார். 'என், தாழ் பூங்கோதை தன்காற் சிலம்பு, கன்றியகள்வன் கையதாகில், கொன்று அச்சிலம்பு கொணர்க ஈங்கு எனக் காவலன் ஏவ' என்ற வரிகளுக்கு உரை எழுத வந்தவர், 'சிலம்பு அவன் கையகத்த தாயின் அவனைக் கொல்ல அச்சிலம்போடு ஈங்குக் கொணர்க எனக் கருதியவன், வினைவிளை காலமாதலானே, அவனைக் கொன்று அச்சிலம்பைக் கொணர்வீராக என்று சொல்ல என்க;... கொன்று - கொல்லவெனத் திரிப்பினும் அமையும். இனி, என் கோதை தன்காற் சிலம்பு அடிப்பட்ட கள்வன் கையதாகிற் கொன்று கொணர்க எனினும், தன்கட் கொடுங்கோன்மை யின்மையுணர்க' என்று எழுதியிருப்பது காணத்தக்கது. இதே இடத்து, பொற்கொல்லன் கள்வர் செயலைப் பற்றிய கதைகள் சொல்லப்புக்கபோது, 'ஒரு பொய்க்கரி கூறுகின்றான்' என்கிறார்.

முன்பின் நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்தி எழுதுவது பார்த்து மகிழத்தக்கது. கோவலன் பொருளில்லை என்று நாணுகின்றபோது, கண்ணகி, 'நலங்கேழ்முறுவல் நகைமுகங் காட்டிச் சிலம்புள கொண்ம்' என்கிறாள். 'சிலம்புள என்றாள், இவையொழிந்த கலனெல்லாம் தொலைதலால், இவை அணி யாதிருத்தலை அவன் அறியானாகக் கருதினும், அவன் தளர்ச்சி கூறுதலால் தான் இவை உண்மை நினைந்து கூறினாள் என்க. புலந்து கூறினாள் எனிற் கற்பின் தன்மையன்றாம்'. துன்ப மாலையில் 'கண்ணகி செங்கண் சிவப்ப அழுதாள்' என்பதை விளக்குமிடத்து, முன்னமே இந்திர விழவூரெடுத்த காதையில் 'கண்ணகி கருங்கண் என்றவர் ஈண்டு செங்கண் என்றார். காலையில் தண்ணளியால் பிறந்த செவ்வி தோன்ற' என்று எழுதுவது காண்க; இந்திரவிழவூரெடுத்த காதையில், கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும் - இருவர்க்கும், கூட்டமின்மை யும் உண்மையும் உணர்த்தற்கு என்று எழுதியிருக்கிறார்.

புறஞ்சேரியிறுத்த காதையில், பகற்பொழுது கழிந்து இராப்பொழுது வரவும், கண்ணகியின் நிலையைக் கண்டு பார் மகள் இரங்கிக்கூறி வருந்தி நெட்டுயிர்ப்புக் கொண்டு துயின் றாள் என்று கவிஞர் கூறுகிறார். அவருடைய கூற்றுக்களை,

'இத்துணையும் இவள் புணர்ச்சியின்பம் பெறாமை நோக்கிப் பார்மகள் இரங்கிக் கூறினாள்' என்று எழுதி, புணர்ச்சியில்லாத வாறு என்னை என்பதைப் பின்னர் விளக்குகிறார்; மாதவியோடு புலந்து போதுதலானும், மதுரைக்குச் சேறற்கு ஒருப்பட்ட நெஞ்சினன் ஆதலானும், மேற்கவுந்தியடிகளுடன் வழிச்சேர லானும், யாண்டும் மெய்யுறன் மாத்திரமல்லது புணர்ச்சியி லெனவுணர்க என்று இவர் பொருத்திக் காட்டுவது காணத்தக்கது.

மதுரைப் புறஞ்சேரியில் கண்ணகி அமுதமைத்து உண்பித் ததைக் கூறுமிடத்து, 'காதலன் அடிநீர் - சுடுமண் மண்டை யிற்றொழுதனள் மாற்றி' என்றவிடத்துக் கூறுகிறார்; 'மண்டை என்னாது சுடுமண் மண்டை என்றார், புதுக்கலமாதல் தோன்ற. இதனை மண்டை என இழித்துக் கூறினார். முன்னர்ப் பொன் வெள்ளி முதலியன வழங்குதலின்' என்று அமைதி கூறுவது காணத்தக்கது.

ஆய்ச்சியர் குரவையுள் உள்வரி வாழ்த்து என்ற தலைப்பில் மூன்று பாடல்கள் முறையே பாண்டியன் சோழன் சேரன் வாழ்த்தாக உள்ளன. 'இவற்றுள் சேரனை முற்கூறாது பாண்டி யனை முற்கூறியது என்னையெனின், இது மதுரைக்காண்ட மாதலானும், இக்காப்பியம் செய்தவர் விழைவு வெறுப்பற்ற சேர முனியாதலானும், முடிகெழு வேந்தர் மூவர்க்குமுரியது எனச் சாத்தனார் கூறினமையானும் என்க' என்று அடியார்க்கு நல்லார் இதற்கு ஒரு சமாதானம் கற்பிக்கிறார்.

இதே ஆய்ச்சியர் குரவைத் தொடக்க வரிகளில் 'கயலெழுதிய இமய நெற்றியில் - அயலெழுதிய புலியும் வில்லும்' என்ற வரி களின் பொருளை விளக்குவார், பின்வருமாறு எழுதுகிறார்: 'இமய நெற்றியில் தான் எழுதிய கயலுக்கு அயலெழுதிய புலியையும் வில்லையும் உடைய செம்பியன் சேரன் என்னும் மன்னரும்.... அயல் என்றது வடக்கும் மேற்கும்; அக்கயலைச் சேவிக்க அயலெழுதிய புலியும் வில்லுமென்க. ஒப்பாக எழுதிற் றிலர் என்பதாம்'.

## இயல் தமிழ்

அரங்கேற்றுக் காதையுரையில், கவிஞனது அமைதி என்ற ஒரு பகுதி சொல்கிறார். கவிஞன் மூன்று தமிழிலும் வல்லவனா யிருத்தல் வேண்டும். நாடக நூலை நன்குணர்ந்து, இசைப்புலவன் ஆளத்தி வைத்த பண்ணீர்மையைத் தன் கவியினிடத்தே தோன்ற

வைக்க வல்லவனாயிருத்தல் வேண்டும். வகையின் அளவறிந்து, அது தன் கவியினிடத்தே தோற்றாதபடி நூல் செய்ய வேண்டும்; இவ்வாறு செய்யாவிடில்:

இன்ன னல்லோன் செய்குவ னாயில்
தேற்றா மாந்தர் ஆரியம் போலக்
கேட்டார்க் கெல்லாம் பெருநகை தருமே.

என்று அரும்பதவுரைகாரரோடு ஒத்துச் சொல்கிறார். மொழித் திறமை இல்லாத மாந்தர் ஆரியம் பேசியதும் பாடியதும் அக் காலத்திலேயே பெருநகை தந்தது போலும்.

தமிழ் என்றது - வடவெழுத் தொரீஇ வந்த எழுத்தானே உறழ்ந்து கட்டப்பட்ட வாக்கியக் கூறுகளும் இயலிசை நாடக மென்ற மூவகைத் தமிழ்களும், 'பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொண்டபின், அந்நிலக் குறைக்குச் சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானாட்டுக் குண்டூர்க் கூற்றமும் என்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்டதென்னவன்' என்று கூறியிருப்பது புதிய செய்தி.

இவர் இயற்றமிழில் எல்லாப் பகுதியிலும் இணையற்ற புலமை பெற்றவர் என்பது விளக்கிக்கூற வேண்டுவதில்லை. அணியிலக்கணத்தைப் பல இடங்களிலும் போற்றி எடுத்துக் கூறுகிறார். எடுத்துக்காட்டாக,

அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ.

என்ற அடிகளுக்கு உரை எழுதுமிடத்து, 'காட்சியின் உயிர் மயக்குறுதலின் கொல்லியிற் பாவாயென்றும், அவ்வாறு அழியு முயிரை இமைப்பிற் றருதலின் ஆருயிர் மருந்தே என்றும் கூறி, மலையிடைப் பிறக்கும் மணிகுழையாமையின் அதிற் பிறவா மணியே யென்பேனோ! அலையிடைப் பிறக்கும் அமிர்திற்கு இவ்வடிவின்மையின் அதனிற் பிறவாத அமுதேயென்பேனோ! யாழ்கட்கு இன்னாதாகலின் அதனிடைப் பிறவாத இசையே யென்பேனோ! எனத் தெரிதரு தேற்றவுவமை யென்னும் அலங் காரமும், மலைகடலென விரோதமும், பின்வருநிலையென்னும்

அலங்காரமும் புலப்படுத்தினாரெனவுணர்க' என்ற பகுதி காணத் தக்கது. இங்கு, பாவை மருந்து என்றெல்லாம் கூறியதற்கு விளக்கம் காட்டியதோடு, அலங்காரங்களையும் குறிப்பிட்டிருப்பது சிறப்பு.

உரைப் பாயிரத்துள் காப்பியம் தொடர்நிலைச் செய்யுள் என்ற பெயர்களை ஆராய்ந்த பிறகு, காதை என்ற சொல்லை ஆராய்கிறார்: 'இதன் செய்யுள் காதையென்று வழங்குதலிற் கதையையுடையது காதையாமாகலின், ஆசிரியம் வெண்பா வெண்கலிப்பா என்னும் இவற்றோடு சிறுபான்மையான் ஒருசார் கொச்சகக்கலி மயங்கி வருதலானும், காண்டமெனக் குறிபெறு தலானும்' இதனைக் கதையென்றல் வலியுடைத் தென்பார்க்கு அற்றன்று; கதையென்பது பொய்ப்பொருள் புணர்த்துக் கூறுவது; என்னை? 'கதையெனக் கருதல் செய்யான் மெய்யெனத் தானுங்கொண்டான்' (சீவகசிந்தாமணி) என்றமையானும், வழக்கினுள்ளும் இஃது ஒரு கதையென்பவாகலானும், 'நாடகக் காப்பியம்' (மணிமேகலை) என்றலானும், கதையென்பது அல்லது. இனி அது நல்ல புலவராற் பொருளொடு புணராப் பொய்ம்மொழியால் நாட்டப்பட்டு வருவதாகலின், இஃது அவ்வாறன்றி யோனியென்னும் நாடகவுறுப்பும் நாடகமும் தழுவி உள்ளோன் தலைவனாக உள்ளதொரு பொருள்மேற் சித்தரிக்கப்படாது பட்டாங்கு கிளந்து பலவினப்பாட்டான் வருதலின், ஈது அன்னதன்றென்பார்க்குக் காப்பியமென்றலுமாம்.'

## இசைத்தமிழ்

இவர் உரை எழுதுவதற்கு, இசைத்தமிழ்ப் பகுதிக்கு, இசை நுணுக்கம் இந்திரகாளியம் என்ற நூல்களை மூலநூல்களாகக் கொண்டார் என்பதை முன்னே குறிப்பிட்டோம். இசை நுணுக்கம் இடைச்சங்கநூல் என்று இவரே எழுதியிருக்கிறார்; இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீயம் முதலா உள்ள தொன்னூல்களும் இறந்தன என்று எழுதி, பேரியாழும் இறந்தது என்று குறிப்பிட்டார்; பேரியாழ் ஆயிரம் நரம்புடையது என்பதை இரு நூற்பாக்களால் காட்டியும் உள்ளார் (பண்டை இலக்கிய வரலாறுகள் என்ற தலைப்புப் பார்க்க). 'ஆயிரம் நரம்பிற்று ஆதியாழாகும்' என்று மட்டும் பிங்கலநிகண்டு கூறுகிறது; இவர்காட்டும் ஏனைய இலக்கணங்களை அது சொல்லவில்லை. அதன் காலம் இரு நூற்றாண்டுகள் முன்னே.

பதிகவுரையில், ஐந்திணை முதல் உரி கருப்பொருளை விரிவாக எடுத்துக்காட்டிய இவர், இசை நாடகத் தமிழ் இவை போலப் பெருவழக்கில்லை என்று எழுதுகிறார்; இசை நாடகத் தமிழ் நூலது பகுதியும், இவை போலப் பெருவழக்கின்றதலானும், நிலத்தோடும் கலத்தோடும் கண்டத்தோடும் கருவியோடும் நிலையோடும் இயக்கத்தோடும் இருவகை பலவகை விலக்குறுப்புக் கைகால் வட்டணை பொருள் யோனி விருத்தி சந்தி சுவை சாதி குறிப்பு சத்துவம் அவிநயம் சொல் சொல்வகை வண்ணம் வரி சேதம் என்பனவற்றோடும் கதையோடும் பல கூத்துக் கூறுங்கால் உய்த்துணர்வில்லோர்க்குச் செவிச்சுவை பயக்குமாதலானும், ஈண்டு விரியாது விரித்தலைக் கருதிற்று இவ்வுரையெனக் கொள்க.

அரங்கேற்றுக் காதையுரையில் இசைத் தமிழுக்குரிய பல செய்திகளைக் கூறுகிறார். கீதாங்கம் - கீதத்துக்கு வாசிப்பது, நிருத்தாங்கம் - நிருத்தத்துக்கு வாசிப்பது, உபயாங்கம் இரண்டிற்கும் வாசிப்பது. எண்வகைப் பயனுமுடைய பாடல்; மாத்திரைப் பெயர்கள்; அவற்றின் தொழில்; தூக்கு; தாளங்கள்.

## இசையாசிரியன் அமைதி

நூல்வகை, யாழின் உறுப்புக்கள், குழல்; குழல் செய்வதை இவர் கூறுமிடத்து, அத்துறையின் முறை போகியவராகவே நின்று பேசுகிறார். இவ்வொரு பொருள் பற்றி இவர் கூறியிருப்பதை விரிவாக இங்குத் தருகிறோம். இதுபோலவே இவர் விளக்கியெழுதியுள்ள ஏனைய எல்லாப் பொருள்களும் என்று உணர்தல் வேண்டும்.

'குழல் வங்கியம்; அதற்கு மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி. கருங்காலி என ஐந்துமாம்; என்னை?

> ஓங்கிய மூங்கில் உயர்சந்து வெண்கலமே
> பாங்குறு செங்காலி கருங்காலி – பூங்குழலாய்!
> கண்ணன் உவந்த கழைக்கிவைகள் ஆமென்றார்
> பண்ணமைந்த நூல்வல்லோர் பார்த்து.

என்றாராகலின். இவற்றுள் மூங்கிலிற் செய்வது உத்தமம்; வெண்கலம் மத்திமம்; ஏனைய அதமமாம். மூங்கில் பொடிது செய்யும்; வெண்கலம் வலிது; மரம் எப்பொழுதும் ஒத்து நிற்கும்.

'இக்காலத்துக் கருங்காலி செங்காலி சந்தனம் இவற்றால் கொள்ளப்படும்; கருங்காலி வேண்டுமென்பது பெருவழக்கு. இவை கொள்ளுங்கால் ஒத்த நிலத்திற் பெருக வளர்ந்து நாலு காற்று மயங்கின் நாதமில்லையாமாதலான், மயங்கா நிலத்தின் கண் இளமையும் நெடும் பிராயமுமின்றி ஒரு புருடாயுப்புக்க பெரியமரத்தை வெட்டி ஒரு புருடாகாரமாகச் செய்து, அதனை நிழலிலே இட்டுவைத்துத் திருகுதல் பிளத்தல் போழ்ந்துபடுத லின்மையை யறிந்து, ஓர் யாண்டு சென்றபின் இலக்கண வகை யான் வங்கியஞ் செய்யப்படும்; என்னை?

உயர்ந்த சமதலத் தோங்கிக்கா னான்கின்,
மயங்காமை நின்ற மரத்தின் – மயங்காமே
முற்றிய மாமரந் தன்னை முதல்தடிந்து
குற்றமிலோ ராண்டிற் கொளல்.

என்றாராகலின்', இதன்பின் பிண்டியிலக்கணம், துளையள விலக்கணம், ஏழுவிரல், ஏழிசை, சீர் என்று சொல்லி, இதன் பகுதி யெல்லாம்.... தாளவகையோத்தினுட் கண்டுகொள்க என்கிறார். இதன் பிறகு பூதங்கள் ஐந்து, அவற்றின் குணம், அவை பரிண மித்து உடம்பாதல், அவற்றின் செயல், தசவாயுக்கள், நாடிகள், அவற்றின் செயல் - என்ற இப்பொருள்கள் இசைநுணுக்கத் திலிருந்து தரப்படுகின்றன. பின் இசைக்குப் பிறப்பிடமான ஆதாரம், ஆளத்திவகை (ஆலாபனம்), பண்ணென்ற பெயர், பண்பிறக்கும் தானம் எட்டு, கிரியை எட்டு - இவ்வளவும் மிடற்றுப் பாடல். பின் தண்ணுமை வகை 31; இவற்றுட் சில வற்றின் பெயர்ப்பொருள். (கரடி கத்தினாற் போன்றது கரடிகை; கரடி கத்துதல் - உற் டட்ட டட்ட என்பது என்று வேறிடத்தில் சொல்கிறார்) நோதிறமாவது புறநீர்மை, அது பாலைப்பண்ணின் திறம் ஐந்தனுள் ஒன்று என்று கூறி இவர் ஒரு வெண்பா மேற் கோள் தருகிறார். இவ்வெண்பா இசைநுணுக்கம் போலும்; இதனுள் 'ஐந்தும் பாலைத் திறமென்றார் - பூந்தார் அகத்தியனார் போந்து' என்று வருகின்றது. அகத்தியரொருவர் முத்தமிழுக்கும் நூல் செய்தார் என்ற கூற்றுக்கு இத்தொடர் ஆதரவு தருகிறது.

கடலாடு காதையில், தேவபாணி முத்தமிழ்க்கும் வராது, அது இயற்றமிழில் வருங்கால், சிறுதேவபாணி பெருந்தேவபாணி என இருவகையாய்க் கொச்சக ஒருபோகாய் வரும், இசைத் தமிழில் வருங்கால், முகநிலை கொச்சகம் முரி எனவும் அல்லது இசைப்பாவாகவும் வரும் என்று சொல்லி, இசைநுணுக்க

முடைய சிகண்டியார் பாட்டு என ஒரு வெண்பா மேற்கோள் தந்துள்ளார். நாடகத்தமிழில் வருங்கால், பெருந்தேவபாணி பல தேவரையும் சிறுதேவபாணி வருணப்பூதரையும் மூவடி முக்கால் வெண்பாவால் துதிக்கும் என்று கூறி, மதிவாணனார் நாடகத்தமிழ் நூல் நூற்பாவொன்றைத் தருகிறார்.

கானல்வரிக்கு இவர் உரை கிடைக்காமையால் இங்கு இருந்திருக்கக்கூடிய இசைத்தமிழின் விரிவு கிடைக்கவில்லை. வேனிற்காதையில் இசைக்குற்றங்கள், இவை மரக்குற்றத்தாலும் பிறக்கும் என்பது; மாதவி யாழ் வாசித்தாள் என்றவிடத்து, இசைச்செய்திகள் பல கூறப்படுகின்றன. பண் 103, அவை பண், பண்ணியல், திறம், திறத்திறம் என நால்வகைப்படும் என்பது முதலான இசைச் செய்திகள் புறஞ்சேரியிறுத்த காதையில் சொல்லப்படுகின்றன. ஆய்ச்சியர் குரவை உரையில் பாலை நான்குவகை என்று சொல்லி அவற்றுக்குரிய நரம்புகள், மாத் திரை முதலிய செய்திகளை மீண்டும் விரித்துரைக்கிறார். அன் றியும் குழலைக்குறித்த செய்திகளும் இவ்விடத்தில் சொல்லப் படுகின்றன.

இவருடைய இசைத்தமிழ் விளக்கமே, சுவாமி விபுலானந் தரை இதன் ஆராய்ச்சியில் ஈடுபடுத்தி யாழ்நூல் என ஒன்று புதிதாக எழுதி வெளியிடச் செய்தது.

**நாடகத்தமிழ்**

நாடகத் தமிழுக்கு இளங்கோவடிகள் மூலமாய்க் கொண்ட நூல்களையும், அவருக்கு முன்னே இறந்துபோன நூல்களையும் முன்னர்க் குறிப்பிட்டோம். நாடகத்தமிழ் நூல்களாக பரதம் அகத்தியம் இருந்தன, இறந்தன: பரதம் ஒரு தமிழ்நூல் என்பது இங்கு அறியத்தக்கது. முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றியம் என்பன முன் இருந்தன, அவற்றுள் சில சூத்திரங்கள் மட்டுமே அடியார்க்கு நல்லார் காலத்தில் வழங்கின, நூல்கள் இறந்து போயின. கூத்த நூல்* என ஒன்றும் இருந்து இறந்து போயிற்று. இவர் ஆதாரமாய்க் கொண்ட நூல்கள் அறிவனார் செய்த பஞ்ச மரபு, ஆதிவாயிலார் செய்த பரதசேனாபதீயம்*, பாண்டியன்

* இங்கு குறிப்பிட்ட கூத்த நூலும் பரத சேனாபதீயமும் வேறு, பின்னால் 1968இல் அரசு உதவியுடன் அச்சான 'சாத்தனார் செய்த கூத்த நூலும்.' ஐயரவர்கள் நூல்நிலைய வெளியீடான பரத சேனா பதீயமும் (1944) வேறு.

மதிவாணனார் செய்த நாடகத்தமிழ் நூல். இவர் காலத்தில் இருந்த இம்மூன்று நாடகத்தமிழ் நூல்களும் கூட, பின்னால் இறந்து போயின. இவர் காலத்துக்குப்பின் நாடகத்தமிழ் என்று காட்டுவதற்கு எந்த இலக்கணமும் இலக்கியமும் இல்லை.

அடியார்க்கு நல்லார் உரையில் சிறப்பான பகுதி, இசை நாடகம் பற்றியது: முந்தியது கானல் வரியுரையிலும் பிந்தியது அரங்கேற்றுக் காதையுரையிலும் காணத்தக்கது. முந்தியபகுதி உரை இறந்து போயிற்று. பிந்தியதால் நாம் அறிய வருகின்ற கூத்து பரதம் நாடகம் பற்றிய செய்திகள் கடல்போலப் பரந்து பட்டன. மூலத்துக்கு ஏற்ப நூற்பகுதிகளைக் கூத்தி, ஆடலாசிரியன், இசையாசிரியன், கவிஞன், தண்ணுமையோன், குழலோன், யாழாசிரியன், அரங்கு, தலைக்கோல், அரங்கிற் புகுந்து ஆடுகின்ற இயல்பு என்ற பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு, இவற்றுக்கான அமைதியை விரிவாக விளக்கி, பண்டைநூல் மேற்கோளும் காட்டி உரை எழுதுகிறார்.

**கூத்தி**: ஐயாண்டில் தண்டியம் பிடித்து ஏழாண்டு பயிற்றிப் பன்னீராண்டில் அரங்கேற்றம். ஆனைமுகன் பாதம் வணங்கித் தண்டியம் பிடிப்பித்தல்; கட்டளைய கீதக்குறிப்பும் அலங்கார மும் கிளர அரங்கேற்றுதல்.

**ஆடலாசிரியர்**: இருவகைக் கூத்துப் பலவகை, இவை விரிந்த நூல்களிற் காண்க என்கிறார். இங்கு சொல்லப்பட்ட பொருள்கள் சொக்கம் சுத்த நிருத்தம். அவிநயக்கூத்து கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபம் செய்யும் பல்வகைக் கூத்து. குரவை - பலர் கைபிணைந்தாடுவது. கலிநடம் - கழாய்க் கூத்து. கரணம் - படிந்த ஆடல். தோற்பாவைக் கூத்து; விதூடகக் கூத்து, விலக்குறுப்புப் பதினான்கு. பின் ஒன்பது வகைச் சுவை; இச்சுவைகளுக்குத் தத்துவமும் மிக நுணுக்க மாகக் கூறுகிறார்: அச்சுவைகளில் எண்ணம் வந்தால் தோற்றும் உடம்பில்: உடம்பின் மிகத் தோற்றும் முகத்து; முகத்தின் மிகத் தோற்றும் கண்ணில்; கண்ணின் மிகத் தோற்றும் கடையகத்தே என்றவாறு. பின் வரிக்கூத்து.

கவிஞனதமைதி, இயற்றமிழ் என்ற பிரிவில் சொல்லப்பட்டது. இசையாசிரியன், தண்ணுமையோன், யாழாசிரியன் அமைதிகள் முன் இசைத்தமிழ் என்ற பிரிவில் சொல்லப்பட்டன.

**அரங்கு**

அரங்குக்கு இடம் தேர்ந்தெடுக்கும் பகுதியை முன்பு காட்டினோம். அரங்குக்கேற்ற இடம். அளவு, உயரம், வாயில், பிற பகுதிகள், உருவு திரைகள், கட்டுத்திரை.

**தலைக்கோல்**

அதற்கேற்ற கோல், பூசித்து நடுதல், இதற்கேற்ற நல்ல நாள், வாழ்த்து.

**அரங்கிற் புகுந்து ஆடுதல்**

நாடகக் கணிகை வலக்கால் முன்வைத்து ஏறுதல். குழல் யாழ் தண்ணுமை முழவு ஒன்றின் வழி ஒன்று இயங்குதல், ஆடுதல் ஆகிய இத்தனைப் பொருள்களுக்கும் அவற்றுள் இங்கு சொல்லாத பல்வகைப் பிரிவுகளுக்கும் இவர் தவறாது மேற்கோள் சூத்திரமொன்றைத் தருகிறார்; இத்தனையும் திரட்டினால் இது தனி ஒரு இலக்கண நூலாதலும் கூடும். இங்கு காட்டியவற்றுள் பெரும்பகுதி ஆசிரியப்பா, சிறுபகுதி வெண்பா; இவை முறையே மதிவாணர் நாடகத் தமிழ்நூல், பஞ்சமரபு ஆகியவற்றின் பகுதிகளாயிருத்தல் கூடும்.

**வரிக்கூத்து**

'வரி என்பதனைப் பல்வரிக்கூத்து என்பாரும் உளர்' என்று கூறி, ஒரு நீண்ட கலிவெண்பாவால் நூறு வகையான கூத்துக்களைக் காட்டுகிறார். இவை தமிழுலகத்தில் வேறெங்கும் காணப்படாதன. இக்கூற்றுக்களின் ஆட்டமும் இவற்றுக்கான இலக்கணமும் அடியார்க்கு நல்லார் காலத்தில் ஆட்சியில் இருந்தன போலும். இன்று நமக்கு இவருடைய உரைக்குறிப்பைத் தவிர வேறொன்றும் இவைபற்றித் தெரியவில்லை. பொருளின் அருமை பற்றி இவர்காட்டும் கலிவெண்பா முழுதும் கீழே தருகிறோம்:

சிந்துப் பிழுக்கை யுடன்சந்தி யோர்முலை
கொந்தி கவுசி குடப்பிழுக்கை – கந்தன்பாட்டு
ஆலங்காட் டாண்டி படுமண னெல்லிச்சி
சூலந் தருநட்டந் தூண்டிலுடன் – சீலமிகும்
ஆண்டி அமண்புனவேடு ஆளத்தி கோப்பாளி
பாண்டிப் பிழுக்கையுடன் பாம்பாட்டி – மீண்ட
கடவுட் சடைவீர மாகேசங் காமன்
மகிழ்சிந்து வாமன ரூபம் – விகடநெடும்

பத்திரங் கொற்றி பலகைவாள் பப்பரப்பெண்டு
அத்தசம் பாரம் தகுணிச்சம் – கத்தும்
முறையீண் டிருஞ்சித்து முண்டிதம் மன்னப்
பறைபண் டிதன்புட்ப பாணம் – இறைபரவி
பத்தன் குரவையே பப்பறை சாவதன்
பித்தனொடு மாணி பெரும்பிழுக்கை – எத்துறையும்
ஏத்திவரும் கட்களி யாண்டு விளையாட்டுக்
கோத்த பறைக்குடும்பு கோற்கூத்து – மூத்த
கிழவன் கிழவியே கிள்ளுப் பிறாண்டி
அழகுடைய பண்ணிவிக டாங்கம் – திகழ்செம்பொன்
அம்மனை பந்து கழங்காடல் ஆலிக்கும்
விண்ணகக் காளி விறற்கொந்தி – அல்லாத
வாய்ந்த தனிவண்டு வாரிச்சி பிச்சியுடன்
சாந்த முடைய சடாதாரி – ஏய்ந்தவிடை
தக்கபிடார் நிர்த்தந் தனிப்பாட்டுச் சாதுரங்கம்
தொக்க தொழில்புனைந்த சோணாண்டு – மிக்க
மலையாளி வேதாளி வாணி குதிரை
சிலையாடு வேடு சிவப்புத் – தலையில்
திருவிளக்குப் பிச்சி திருக்குன் றயிற்பெண்டு
இருண்முகத்துப் பேதை இருளன் – பொருமுகத்துப்
பல்லாங் குழியே பகடி பகவதியாள்
நல்லார்தந் தோள்வீச்சு நற்சாழல் – அல்லாத
வந்தி அவலிடி ஊராளி யோகினிச்சி
குந்திவரும் பாரன் குணலைக்கூத்து – அந்தியம்போது
ஆடும் அணிசெய்யும் உள்ளிப்பூ ஐயனுக்குப்
பாடும்பாட் டாடும் படுபள்ளி – நாடறியும்
கும்பீடு நாட்டம் குணாட்டம் குணலையே
துஞ்சாத சும்மைப்பூச் சோனகம் – மஞ்சரி
ஏற்ற உழைமை பறைமைமுதல் என்றெண்ணிக்
கோத்தவரிக் கூத்தின் குலம்.

*இக்கூத்துக்கள் பற்றி இரண்டொரு சொற்கள் சொல்லலாம். இவற்றுள் அம்மனை உந்தி சாழல் தோள்வீச்சு (தோள்நோக்கம்) என்பன போன்ற சில திருவாசகத்தில் இலக்கிய ஆட்சி பெற்றிருப்பதை நாம் அறிவோம். கழங்கு, குணலை, குரவை, பகடி, பகவதி, பந்து, பறை, பாம்பாட்டி, பிடாரன் என்பன போன்ற பல பிற்காலத்தில் (15ஆம் நூற்றாண்டில்) தத்துவராயர்*

பாடுதுறையுள் இலக்கிய அமைப்புப் பெற்றிருப்பதையும் காண்கிறோம். ஆலங்காட்டாண்டி என்பது காரைக்காலம்மை யார் திருவாலங்காட்டில் திருக்கூத்தைத் தரிசித்த வரலாற்றோடு தொடர்புடையதாய் இருக்கலாம். சும்மைப் பூ என்பது சும்மேலோ சும்முலக்காய் என்ற பாட்டோடு குற்றுகின்ற தொழிலைக் குறிக்கும்; இது வள்ளைப்பாட்டு. இப்பாட்டு கலிங்கத்துப் பரணியில் வந்தபோதிலும்கூட, சும்மேலோ என்ற சொல்லாட்சி பின்னர் 13ஆம் நூற்றாண்டில் தோன்றிய இரணியவதைப் பரணி யில் காண்கிறோம். பல்லாங்குழி என்ற ஆட்டவகை இன்றும் பெண்கள் (இன்றைய உடற்பயிற்சித்துறைக் கல்வியாளர் பரிபாஷையில் சொன்னால்) வீட்டுக்குள்ளிருந்து ஆடும் விளை யாட்டு வகைகளில் ஒன்று. ஆடும் படுபள்ளி என்பது ஒருகால் பிற்காலத்துச் சிறப்பான பள்ளு என்ற பிரபந்த வகையாக வளர்ச்சி பெற்றிருக்கலாம். அவலிடி என்பதும் வள்ளைப்பாட்டுப் போன்றதே. திருவிளக்குப் பிச்சன் என்பது சோழர் கல்வெட்டுக் களிற் காணும் தொடர்; திருவிளக்குப் போடும் பணி செய்வோன்; திருவிளக்குப் பிச்சி என்பது அதன் பெண்பால். பிழுக்கை சிந்து என்ற பல்வகை விளையாட்டுக்களும் இங்கு வருகின்றன. பிற கூத்து வகைகளைக் குறித்து எந்த விளக்கமும் நமக்குத் தெரிய வில்லை. அடியார்க்கு நல்லார் இக்கலிவெண்பாவில் காட்டும் கூத்தும் அவற்றின் விளக்கமும் அவற்றிற்குரிய இலக்கியமும் வளர்ச்சியும் தனியான ஓர் ஆராய்ச்சிக்குரிய பொருளாகும். இக்கலிவெண்பா எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய கூத்த நூல் அல்லது ஒரு கூத்தியல் நூலின் பகுதியாயிருத்தல் கூடும்.

பின்னர், கடையம் அயிராணி முதலான பதினோராடல். பின்னர் இசைச்செய்திகள் சொல்லப்படுகின்றன. பின்னர் தாளங்கள் முத்திரை வகைகள்.

கடலாடுகாதையில் பதினோராடலின் விளக்கம். வேனிற் காதையில், ஓவிய நூலுள் இருப்பு என்பது நிற்றல் இதை விரித்து ஒன்பதினுள் அடக்கினார் என்று கூறுகிறார். மாதவியின் ஓலை யைக் கோவலன் வாங்க மறுத்தான் என்றவிடத்து, கண்கூடு வரி முதலான எண்வகை வரிகளையும் விளக்கியுரைக்கிறார். எண்ணெண் கலையோர் இருபெரும் வீதியும் என்ற இடத்து ஊர்காண்காதையில் வரிக்கூத்துக்களும், தாளங்கள், தூக்குக் கள், போர்க்கருவிகள், தலைக்கோல் அரிவை முதலிய கூத்தியர் ஆகிய செய்திகளை விரித்துரைக்கிறார்.

*முத்திரை*

*கை என்ற பெயரில் இவர்கூறும் கருத்துக்கள் யாவும், இன்று முத்திரை என்ற பெயரில் சிவ பூசையிலும் பரத நாட்டியத்திலும் வரும் கை அமைப்புக்களுக்கு முழுமையும் பொருந்தி வருவன. இருத்தல் கிடத்தல் இயங்குதல் எனப் பல விகற்பங்கள் என்று கூறிப்பின் நாடக நூலுள் இவ்விருப்பு ஐம்பதென ஒத்திருப்பது கண்டு மகிழத்தக்கது. 'கைதான் இரண்டு வகைப்படும்; அவைதான் இணையாவினைக்கையும் இணைக் கையும் என இவை ஒற்றைக்கை இரட்டைக்கை என்றும் வழங்கப்படும். இணையாவிணைக்கை 33 வகை, இணைக்கை 15 வகை என்று குறிப்பிட்டு, ஒவ்வொன்றையும் விளக்கியுரைத்து, அதைச்சொல்லும் சூத்திரமொன்றையும் தருகிறார். எடுத்துக் காட்டாக இரண்டை மட்டும் இங்கு குறிப்பிடுவோம்.*

*'மான் தலையாவது - பெருவிரலும் சிறுவிரலுமொழிந்த மூன்றும் தம்மின் ஒத்து ஒன்றி முன்னே இறைஞ்சி நிற்பது என்னை?*

மான்தலை என்பது வகுக்குங் காலை
மூன்றிடை விரலும் நிமிர்ந்தக மிறைஞ்சிப்
பெருவிரல் சிறுவிரல் என்றிவை நிமிர்ந்து
வருவ தென்ப வழக்கறிந் தோரே.

*இதுவே இன்று மிருக முத்திரை.*

*மகரம் என்றது - கபோதமிரண்டு கையும் அகம்புறம் ஒன்ற வைப்பது; என்னை?*

மகரம் என்பது வாய்மையின் உரைப்பின்,
கபோத மிரண்டு கையும் அகம்புறம்
ஒன்ற வைப்பதென்று உரைத்தனர் புலவர்.

*உச்சித்தம் என்பதும் இதனது பெயர்; இதுவே மகர முத்திரை. என இத்தனைப் பொருள்களும் வல்லவனே ஆடலாசிரியன்.*

*கால அமைதி*

*அடியார்க்கு நல்லாரிடத்துப் பிறதுறைப் புலமை போலவே, கால அறிவாகிய வானநூற் புலமையும் சிறப்பாக இருந்தது. கோவலன், கண்ணகி இருவரும் மணம் முடிந்து சிலகாலம் சென்று நெடுந்தூரம் வழிநடந்து மதுரை அடைகிறார்கள். இந்நிகழ்ச்சிகளில் சில இடங்களில் இவர் காலத்தைக் கணக்*

கிட்டுக் காட்டுகிறார். இந்திரவிழவூர் எடுத்த காதையுள், சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென என்ற இடத்து, இவர் உரையில் அரும்பதவுரையைத் தழுவி, 'சித்திரை மாதத்துச் சித்திரை நாளிலே நிறைமதி சேர்ந்ததாக' என்று காட்டுகிறார். இந்திரவிழா நிகழ்ந்தபோது கோவலன் மாதவியைப் பிரிந்து கண்ணகியிடம் வருகிறான். பின்னர் அவளை உடன்கொண்டு புகாரிலிருந்து முப்பது காவதம் உள்ள மதுரைக்குச் செல்கிறான். இந்நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்திப் பொருள் கூறுகிறார். இங்கு தாம் காலஅளவை முறைப்படுத்திக் கூறுவதாக வேனிற் காதையுரையில் கூறுகிறார். 'இனி இவ்விழாவின் முதலும் முடிவும் கடலாட்டும் புலவியும் புறப்பாடும் வதிச்செலவும் பொறையுயிர்த்திருப்பும் நிறை பதிப்புகலும் தீதுறு நாளும் ஊர் தீப்பாடும் முதனடு விறுதியாகக் கட்டுரைகாதையுள் விரியக் கூறுவாம்': இக்கட்டுரை காதை இல்லாத போதிலுங்கூட வேறு இடங்களில் ஓரளவு காலவரையறை தருகிறார்:

வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிருள் நின்ற கடைநாட் கங்குல்.

என்ற வரிகளுக்கு உரைஎழுதும் இடத்து, 'என்பது அந்தச் சித்திரைத் திங்கட் புகுதிநாள் - சோதி, திதி - மூன்றாம் பக்கம், வாரம் - ஞாயிறு. இத்திங்களிருபத் தெட்டிற் சித்திரையும் பூரணையுங் கூடிய சனி .வாரத்திற் கொடியேற்றி, 'நாலேழ் நாளினும்' (மணிமேகலை 1:8) என்பதனால் இருபத்தெட்டு நாளும் விழா நடந்து கொடியிறக்கி வைகாசி இருபத்தெட்டினிற் பூருவ பக்கத்தின் பதின்மூன்றாம் பக்கமும் சோமவாரமும் பெற்ற அனுடத்தில் நாட்கடலாடி ஊடுதலின், வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாய்க்கிழமையும் கேட்டையும் பெற்ற நாசயோகத்து நிறைமதிப் பதினாலாம் பக்கத்து வைகறைப் பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தரத்திருளிலே யென்றவாறு. அது பூருவ பக்கமென்பது தோன்றக் 'காரிருணின்ற கடைநாட் கங்குல்' என்றார். இந்த இடத்து நாள் திதி வாரம் முதலியன இவர் கணக்கிட்டுக் காட்டுவது இவருடைய சிறப்பான வான நூற் புலமையைக் காட்டுகிறது.

முன்னமே வேனிற்காதை 58ஆம் அடியில் 'திங்கட் செல்வன் என்ற தொடரைப் பிறை என்று கொண்டால், அது நாடுகாண் காதையுள்,

வைகறை யாமத்து,
மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிருள் நின்ற கடைநாட் கங்குல்
ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப...
நெடுங்கடை கழிந்து. (10:1–8)

என்பதனாற் பூருவ பக்கத்துப் பதினாலாம் பக்கமாதலான் அதனோடும்,

ஆடித் திங்கட் பேரிருட் பக்கத்து
அழல் சேர்குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண,
உரைசால் மதுரையோடு அரைசு கேடுறுமெனும்
உரையுமுண்டு. (23:132–6)

என்பதனோடும் பிறவற்றோடும் மாறுகொள்ளுமாதலான், அவ்வாறு கூறுதல் பொருந்தாதெனவுணர்க' என்று காட்டுகிறார்.

**உரை நயங்கள்**

இவர் உரை முழுமையுமே தமிழ்ப் பண்பாட்டின் நயங்கள் பெருக்கத் தோன்றும். உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலைக் கூறுவது இந்நூலின் கருத்தாதலால் மங்கல வாழ்த்துப் பாடலில், முதலில் கண்ணகியைக் கூறிப் பின்னரே கோவலனைக் கூறுகிறார்: 'கண்ணகியை முற்கூறினார், பத்தினியை ஏத்துதல் உட்கோளாகலான்' என்கிறார் அடியார்க்குநல்லார். இதே இடத்தில், 'மடவார் தம் பண் தேய்த்த மொழியினார் ஆயத்து' என்ற தொடரில், மடவார் என்பதற்குப் பூமாதும் கலைமாதும் செயமாதும் புகழ்மாதும் புவிமாதும் என்றுகூறி, 'இவர் அழகிற்கும் அறிவிற்கும் ஆண்மைக்கும் புகழுக்கும் பொறைக்கும் இவன் என்று உட்கொண்டு ஏத்தும் கிழமையான் எனினும் அமையும்' என்ற சிறப்புரை நோக்கத்தக்கது. காட்டின் வழி கோவலனை மயக்கவந்த இயக்கி அவனுடைய மந்திரத்தைக் கண்டு, அஞ்சி, தன்னை வெளிப்படுத்தி, இந்நிகழ்ச்சியை உடன் வரும் தன் மனைவிக்கும் கவுந்தியடிகளுக்கும் கூறவேண்டா' என்னும் போது, 'புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கும் என் திறம் உரையாதே' என்கிறாள். இங்கு, கவுந்தியாகிய தவ முதியோளை முதலிற் குறிப்பிடாது, கண்ணகியை முதலில் குறிப்பிட்டதை விளக்குகிறார்; தவத்தினும் கற்புச் சிறந்ததாதலின் முற்கூறினார். 'வளமனை மகளிரும் மைந்தரும் விரும்பி' -

மகளிரை முற்கூறினார், இன்பத்திற்கு முதல்வராகலின். 'பாசிலை என்றார், இளவேனிற்கட் செந்தளிரானது முதுவேனிற்கு முற்றிப் பாசிலையாயிற்றென்பது தோன்ற.' தன்தெறல் வாழ்க்கை - தனது என்னும் தன்மையில்லாத வாழ்க்கை. மடந்தை பருவமன்று, பெண்பாற் பெயர். ஐயை கண்ணகிக்கு அடிசில் ஆக்கக் கலங்களைத் தந்தபோது, அமைந்த கலமென்றாள், தாங்கள் ஆளும் கலமன்றி மேன்மக்கள் ஆளும் மடைக்கலங்களை. ஆடித் திங்கள் என்பது தோன்றக் குடக்காற்றுக் கூறினார்; ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு மேற்பட்டும், இன்றும் அதே காவிரி நாட்டில் ஆனி ஆடி மாதங்களில் குடக்காற்று பெருக்க அடிப்பது அறிந்து இன்புறத்தக்கது.

புகாரிலிருந்து வந்த கோசிகன் கொடுத்த மாதவியின் கடிதத்தைக் கோவலன் பிரித்து வாசிக்கும்போது அவள் வணக்கம் கூறித் தொடங்கும் பகுதியை 'இஃது ஓலை முகப் பாசுரம்' என்று கூறி, இனி அக்காரிகைப் பாசுரம் என்கிறார்.

ஊர்காண் காதையில், கவுந்தியடிகள் கூற்றாக,

பிரிதற் றுன்பமும் புணர்தற் றுன்பமும்
உருவி லாளன் ஒறுக்குந் துன்பமும்.

மணந்தவருக்கு உண்டு என்று கூறுகிறார். 'உருவிலாளன் என்பதைக் காமன் மேலும் கட்புலனாகா வறுமை மேலும் ஏற்றுக' என்பது அடியார்க்கு நல்லார் குறிப்பு; வறுமையால் வருந்துன்பத்தை நன்குணர்ந்து கூறுகிறார் போலும். இவ்வாறு துன்புற்றோர் பலர் என்று சொல்லி, 'அப்பலருள் தேவரிற் சிறந்தோனொருவனையும் மக்களுட் சிறந்தோனொருவனையும் எடுத்துக் காட்டுவார்' என்கிறார்; இராமன் கதையும் நளன் கதையும் இளங்கோவடிகளால் சுட்டப்பட்டுள்ளன. 'இராமன் சீதை பொருட்டாக வில்லேற்றல் முதலிய புணர்தற்றுன்பமும், பின்னர் அவள் பிரிதலான் வரும் துன்பமும், தசரதன் தனக்கு முடிசூட்டத் தொடங்கிய பொருள் புணர்தற்பொருட்டு வருந்துன்பமும், பின்னர் கைகேசி அதனை விலக்க அப்பொருள் பிரிதலான் வருந்துன்பமும் முன்பு வந்தவாறு உணர்க. இது தேவரிற் சிறந்தோனொருவனைக் காட்டியது... இதனுள் நளன் தமயந்தியை வதுவை செய்து புணர்தற்பொருட்டு வருந்துன்பமும், பிரிதற்பொருட்டு வருந்துன்பமும், சூதாடுகின்றுழி அச்சூது

வென்று பொருள்புணர்தற் பொருட்டு வருந்துன்பமும், மண்ணும் அரசுமாகிய பொருள்கள் பிரிதலான் வருந்துன்பமும் ஈண்டு வந்தவாறு உணர்க. இது மக்களிற் சிறந்தோனொருவனைக் காட்டியது - என்ற இவர் விளக்கம் அறியத்தகுந்தது.

சோமகுலத் தென்னர் என்னாது தென்னர்குலச் சோமனென் றார், அவன் அளியினொத்து வலியினும் தெறலினும் ஒவ்வாமை யானும், குறைவும் நிறைவும் மறுவுமுடைமையானும், இவர்க்கு அவை இன்மையானும் உயர்ச்சி நோக்கி.

## முடிவுரை

அடியார்க்கு நல்லார் உரையானது கடைச்சங்க காலத்துக்கு முன்னும் பின்னும் அக்காலத்திலும் இருந்த முத்தமிழ் இலக்கிய இலக்கணத்தைத் தெளிவுபெற உணர்த்துகின்ற ஓர் ஆதார நூல். உரைப்பாயிரத்துள் இடைச்சங்க கால நிலையையும் வேனிற் காதையுரைத் தொடக்கத்தில் தலைச்சங்ககால நிலையையும் கூறுகிறார். இளங்கோவடிகள் நூல் செய்தகாலத்து, இலக்கணம் தொல்காப்பியமே, ஏனையவை நிரம்பா இலக்கணம் என்று கூறுகிறார். அரங்கேற்றுக் காதையுரையிலும் பிற இடங்களிலும் இவர் எடுத்துக் காட்டியுள்ள இசை நாடகச் செய்திகளை உணர் வதற்கே இன்று அத்துறைகளில் தேர்ச்சிபெற்ற அறிவுடைய மக்கள் இலர். தமக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்இருந்த சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட இசை நாடக இலக்கணங்களில் இவர் எப்படித்தான் இத்தகையதொரு பெற்றகரிய புலமை பெற் றாரோ என்று எண்ணியெண்ணி வியக்க வேண்டியிருக்கிறது. தமிழ் மட்டுமல்ல: வாழ்க்கையின் பலதுறை வளங்களையும் தழுவியதாகவே இவர் உரை அமைந்திருக்கிறது.

## பதிப்பு

1880ஆம் ஆண்டு (விக்கிரம வருடம் சித்திரை மாதம்) மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் மாணாக்கராகிய சோடசாவதானம் சுப்பராய செட்டியார், 'சேரர் குலத் துதித்த இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம் புகார் காண்டம்' மட்டும் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து, தாம் புதிதாய் இயற்றிய கானல்வரி உரையோடும் சென்னை மிமோரியல் அச் சுக் கூடத்தில் பதிப்பித்தார். இதன் முகவுரையாகிய அறிவிக்கை என்ற பகுதியில் சில செய்திகள் குறிப்பிடத்தக்கன. ஒன்று

இவரிடம் புகார்க்காண்டம் மதுரைக்காண்டம் இரண்டும் உரையோடு கிடைத்தன, வஞ்சிக்காண்டம் கிடைக்கவில்லை என்பது; மதுரைக் காண்டம் எதுவரையில் உரை கிடைத்தது என்பது குறிப்பிடவில்லை. புகார்க்காண்டம் ஒன்றுமே அச்சிட்டார் (விலை ரூ. ஒன்று அணா பன்னிரண்டு); மதுரைக் காண்டம் அச்சிடவில்லை. அடியார்க்கு நல்லார் உரை விரிந்திருந்ததனால் சுருக்கியே அச்சிட்டார். கலிப்பாவாகிய மங்கலவாழ்த்துப் பாடலையும், கானல் வரியையும், கலிவெண்பாவாகிய கனாத்திற முரைத்த காதையையும் மட்டும் பாட்டாக அச்சிட்டார். ஏனைய காதைகளைத் தொடர்ந்த உரைநடைபோல, அடிகளுக் கிடையில் ஒரு சிறு கோடிட்டு அச்சிட்டார். ஐயரவர்கள் பதிப்பில் இல்லாது, இவர் பதிப்பில் இந்திர விழவூரெடுத்த காதை, கானல் வரி இறுதியில் இரு வெண்பாக்கள் காணப்படுகின்றன:

வார முடையதிறல் வானவர்கோ னுக்கெனவே
ஓரம் உடையோர் உயிர்இழப்ப – வீர
முழவெடுத்த பேரொலியால் மூவுலகோ ரேத்த
விழவெடுத்தான் பூம்புகார் வேந்து.

சேவலொடு துயில் மணிவண்டு காலைக்
களிநிறவண் டாதுதிர்ப்பத் தோன்றிற்றே காமர்
தெளிநிற வெங்கதிரோன் தேர்.

இப்பாடல்களை நோக்கும்போது இவை இளங்கோவடிகள் செய்தனவாகத் தெரியவில்லை. உரையும் இங்கு காணப்படு கிறது; செட்டியாரே செய்தார் போலும். இப்பதிப்பு 176 பக்கம் மிகவும் நெருக்கி அடுக்கின எழுத்துக்களையுடையது. முதலில் நூல் வெளியிடுவோருக்குள்ள சிரமம் செட்டியாருக்கு இருந் திருக்கிறது. பொருள் விளக்கமில்லாமலே, பெரும்புலவரான அவர் ஆராய்ந்து வெளியிட வேண்டியிருந்தது; அவிநயம் என்ற சொல்லை அறியாமல் வினயம் என்றே அச்சிட்டிருக்கிறார். கானல்வரி உரை கிடைக்காமல் இருந்தும், தாமே ஓர் உரை எழுதிய அவருடைய முயற்சியைப் பாராட்ட வேண்டும்.

ஐயர் அவர்களுடைய முதல் பதிப்பு 1892ஆம் ஆண்டு வெளி வந்தது. இதன்சிறப்பு, பெறுதற்கரிய மாணிக்கம் போன்ற அரும்பதவுரை கிடைத்து, அதையும் அடியார்க்கு நல்லார் உரை யோடு சேர்த்து இவர் அச்சிட்டிருப்பது. நல்லார் உரையானது

இரண்டாம் காண்டத்து ஊர்சூழ் வரியோடு முடிகிறது. ஐயர் அவர்கள் காலத்தில் 1920-1927இல் இரண்டாவது மூன்றாவது பதிப்புகள் அச்சாயின. பண்டைத் தமிழ் நூல்களை அழகுபெறச் செம்மை செய்து அச்சிட்டுப் பரப்புவதற்கென்றே அவதரித்தவர் ஐயர் என்று மூன்றாம் பதிப்பும் பின்னுள்ள 150 பக்கம் கொண்ட அகராதிகளும் நன்கு உணர்த்தும். நூற்குறிப்பு அகராதி என்பது ஐயர் அவர்கள் தோற்றுவித்த ஓர் அரிய பதிப்புக்கலை. இன்று வரை சிலப்பதிகாரம், ஐயர் அவர்கள் காலத்தில் பின் அவர் புதல்வராலும், பேரராலும் எட்டாம் பதிப்பு வரை அச்சிடப் பட்டுள்ளன. ஐயர் அவர்களின் நூற்பதிப்புக்கள் 1930ஆம் ஆண்டின் பின் மிக்க விரிவுபெற்றன. இவ்விரிவை அவருடைய பத்துப்பாட்டு, குறுந்தொகை முதலிய பதிப்புக்களில் காணலாம். சிலப்பதிகாரத்தை இவர் 1927இன் பின் பதிப்பிக்கவில்லை; பதிப்பித்திருந்தால் நூல் இன்னும் எவ்வளவோ சிறப்படைந் திருக்கும். ஆராய்ச்சியாளருக்கு இவருடைய பதிப்பைப்போலப் பயன்படத்தக்க ஒரு பதிப்பைப் படைக்கும் ஆற்றல் உடையவர் இனித்தான் பிறக்க வேண்டும்.

ஐயரவர்கள் பதிப்பில் எல்லாப் பாடல்களையும் ஒன்று போல, ஆசிரியப்பாப் போல, அடிகளைத் தொடர்பாக அச்சிட்டுள்ளார். இடையே யாப்பு விகற்பம் காட்டும் குறிப்பு இல்லை, உரைகாரர் வேறுபாடு கூறியிருந்துங்கூட, இவர் பதிப்பில் அப்படி காட்டவில்லை. செட்டியார் பதிப்பில் மங்கல வாழ்த்துப் பாடல், கானல்வரி, கனாத்திறமுரைத்த காதை என்ற மூன்றையும் முறையே மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா பல வகையான சொச்சகப்பா, கலிவெண்பா என்ற முறையில் பிரித்து அச்சிட்டிருக்கிறார். முதல்பாட்டில் போற்றுதும் என்ற நான் கையும் சிந்தியல் வெண்பா என்று தலைப்பில் காட்டிய பின், மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்று தொடங்கி, தரவு, தனிச்சொல், நான்கடித்தாழிசை மூன்று, இருசீரோரடி எட்டம் போதரங்கம், தாழிசை மூன்று, அராகம் ஆறு, சுரிதகம் என்பன வாக அமைத்துக் காட்டியிருக்கிறார். ஐயரவர்கள் ஏன் இந்த அமைப்பையும் பின்னால் தெளிவான கலிவெண்பா முறையை யும் கைக்கொள்ளவில்லை என்பது விளங்கவில்லை.

○○○

அத்தியாயம் 6

# இலக்கிய உரை – 2

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில், பிற ஆசிரியர்களைப் போல, இலக்கிய உயைாசிரியர்களும் கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டு வரையில் ஆறு நூற்றாண்டுக் காலம் சிறப்பான இடம் பெறுகிறார்கள்.

முதல் இலக்கிய உரையாக இன்று கிடைப்பது. திருக்குறளுக்கு மணக்குடவர் செய்த உரையாகும்; இதற்கு முன் எந்த இலக்கியத்துக்கும் உரை கிடைக்கவில்லை. உரை செய்யப்பெற்றதாக வரலாறும் இல்லை.

15ஆம் நூற்றாண்டு வரையில் எழுந்த இலக்கிய உரைகளையும், இலக்கண உரைகளையும் காலமுறைப்படி காட்டும் அட்டவணையொன்றை முன் அத்தியாயத்தில் கொடுத்திருக்கிறோம்.

12ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றைப் பார்க்கும் போது, இங்கு மூன்று இலக்கிய உரைகளைக் காண்கிறோம். முதலாவது, புறநானூற்றுக்குப் பெயர் தெரியாத ஓராசிரியர் செய்த பழையஉரை. இரண்டாவது சிலப்பதிகாரத்துக்கு அடியார்க்கு நல்லார் செய்த மிகவும் சிறப்பமைந்த உரை; இது இதன் பெருந்தகுதி பற்றித் தனியே முந்திய அத்தியாயத்தில் ஆராயப்பெற்றது; இது காலத்தால் புறநானூற்றுக்குப் பிற்பட்டது. மூன்றாவது பேராசிரியருக்கு முன்னிருந்த ஓராசிரியர் திருக்கோவையாருக்குச் செய்த பழைய உரை. இம்மூன்றிலும் காலத்தால் முற்பட்டது புறநானூற்றுரை. அதை இங்கு ஆராய்வோம்.

## புறநானூற்று உரையாசிரியர்

### ஆசிரியர்

எட்டுத் தொகையுள் நற்றிணை தவிர்ந்த ஏனை ஏழு நூல்களுக்கும், குறிப்புரையோ, பதவுரையோ, விரிவுரையோ ஏதோ ஒரு வகையான பண்டைய உரை கிடைத்து அச்சிடப்பட்டுள்ளது.* புறநானூற்றுக்குத் திணை, துறை வகுப்பு சரியன்று என்று நச்சினார்க்கினியர் கூறுவர். காரணம் இவை தொல்காப்பியத்தை ஒட்டி வகுக்கப்பெறவில்லை. புறப்பொருள் வெண்பா மாலையை ஒட்டி எழுதப் பெற்றதாகும் என்பார். புறநானூற்று உரைகாரரும் புறப்பொருள் வெண்பாமாலையை ஒட்டியே துறைக் குறிப்பு விளக்கம் சொல்கிறார்; சில கொளுக்களையும் எடுத்துக்காட்டுகிறார்.

புறநானூற்றுக்கு மிகவும் சிறப்பான ஓர் உரை செய்யப் பெற்றுள்ளது. அதன் ஆசிரியர் பெயரோ வேறெந்த வரலாறோ விளங்கவில்லை. இவரைக் குறித்து அறியப்படுவதெல்லாம் இவரது உரையைக் கொண்டுதான். 'வைத்து' என்ற சொல்லை இடையே பெய்து இவர் உரைநடை எழுதிச் செல்வதால், இவர் தென்பாண்டி நாட்டினராயிருக்கலாமென்று கருத இடமுண்டு. இவர் வைதிக சமயத்தவர் என்பதில் தடையில்லை. 'தென்புல வாழ்நர்க்கு அருங்கட னிறுத்தல்' என்ற தொடரின் உரையில் (பாட்டு 9) பிண்டோதகக் கிரியை என்று இவர் சொல்வதால் இது நன்கு விளங்கும். சிவபிரானைக் குறிப்பிட்டு எழுதும்போது, திருமுடி, திருமிடறு, திருநுதல், திருச்சடை, திருநயனம், திரு மார்பு என்றே தவறாது எழுதுவார். பலதேவர் நிறத்தைக் கங்கை யொக்கும் திருநிறம் என்பார். திருமால் மேனியை நீலமணி போலும் மேனி என்பார். முருகனைப் பிள்ளையார் என்பார். இவர் சிறந்த சைவர் என்று தெரிகிறது; எனினும், சமயப்பொறை மிக்கவர் என்பதை இவர் எழுதும் ஓர் உரையால் நன்கு தெளிய லாம். 198ஆம் பாடலுரையில் 'ஆலமர் கடவுளன்ன நின்செல்வம்' என்றவிடத்து, பொதுவாக ஆலின்கீழ் அமர்ந்துள்ள தென்முகக் கடவுள் என்றே யாரும் உரை எழுதுதல் இயல்பு. இவர் 'ஆலிலை யின்கண் மேவிய திருமால்போலும் நின்னுடைய செல்வம்' என்று எழுதி, பின்னர் 'ஆலின் கீழமர்ந்த முக்கட் செல்வனாகிய

* இவ்வுரைகளின் விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு, 13ஆம் நூற்றாண்டில் காண்க.

கடவுளையொப்ப என்று உரைப்பினும் அமையும்' என்று எழுதுவது காணத்தக்கது. பலதேவரைக் குறிப்பிடும்போது நம்பி மூத்தபிரான் என்று எழுதுவதும் காணத்தக்கது.

இவர் இசையும் வல்லவர். மூவேழ் துறையும் (152) என்றவிடத்து 'வலிவு, மெலிவு, சமம் என்று மூன்று தானத்தினும் ஒவ்வொன்றில் ஏழுதானம் முடித்துப் பாடும் பாடற்றுறையை; அன்றி இருபத்தொரு நரம்பாற் றொடுக்கப்படும் பேரியாழ்"* எனினும் அமையும்' என்று எழுதி இருப்பதாலும் பிற குறிப்புக்களாலும் அறியலாம்.

## புறநானூற்றுரை

இவ்வுரையானது நூல் முழுமைக்கும் கிடைக்கவில்லை. மூலத்தை உரையோடு பலமுறை ஐயரவர்கள் அச்சிட்டார்கள். அவர்களுக்குக் கிடைத்த மூல ஏடுகள் 8; உரைப்பிரதிகள் 13. உரைப்பிரதி ஒன்று மட்டும் 266 பாடலுக்கு உரை உடையது. ஏனையவை யாவும் குறைவான பாடல்களே கொண்டவை. புறநானூறு 400 பாடலுடைய நூலாயிருந்தும், அதன் 267-8 பாடல்கள் எப்பிரதிகளிலும் கிடைக்கவில்லை.❖ உரை 266ஆம் பாடலோடு நின்று விடுகிறது.✞ ஏனைய பகுதிகளுக்கு உரை இல்லை.

10-10-1952 இல், வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் வெளியிட்டுள்ள ஒரு கட்டுரையில், புறநானூற்றின் பாடல்கள் 55ஐயும் அவற்றின் பழைய உரையையும் தொகுத்துத் தனியே எழுதிவைத்த 'புறத்துரை' என்ற பெயருள்ள ஓர் ஏட்டுப் பிரதி உள்ளதென்றும், அப்பழையவுரை ஐயரவர்கள் பதிப்பித்த உரையேதான் என்றும், அப்பதிப்புக்கு மேலாக, புறம் 286, 300, 301, 305, 315 ஆகிய ஐந்து பாடல்களின் உரை அங்கு காணப்படுகிறதென்றும் குறிப்பிட்டு அவ்வுரையையும் வெளியிட்டிருக்கிறார். இதனால் அப்பழையவுரை நூல் முழுமைக்கும் இருந்திருக்கக் கூடுமென்றும், பிற்காலத்தில் 266க்கும் மேலுள்ள

---

* ஆயிரம் நரம்புடையது பேரியாழ் என்பது அடியார்க்கு நல்லார் விளக்கம்; பேரியாழ் மறைந்துவிட்டது என்று அவரே கூறுகிறார்.

❖ அவ்வையார் என்ற 4ஆம் அத்தியாயத்தில் புறநானூற்றின் 268ஆம் பாடல் என்று கருதத்தக்க ஒரு பாடலைப் பற்றிய குறிப்பு உள்ளது.

✞ யாம் பரிசோதித்த ஓர் உரைப் பிரதியானது 256ஆம் பாடலின் தொடக்க வரிகளோடு அபூர்த்தியாய் இருந்தது.

உரைப்பகுதி எக்காரணத்தாலோ இறந்துபோய்விட்டதென்றும் தெளிவாய்த் தெரிகிறது.

இவ்வாசிரியருடைய உரையின் இயல்பை ஐயரவர்கள் நன்கு ஆய்ந்து மூன்றாம் பதிப்பில் பதினைந்து பக்கம் விளங்கக் கூறியிருக்கிறார்கள். உரையையும் அக்குறிப்பையும் ஆதாரமாகக் கொண்டு பின்வரும் செய்திகள் சொல்லப்பெறுகின்றன. 'இவருடைய உரைநடையின் அமைதியும் உரைநயமும் இலக்கணம் கூறும் திறமும் பிறவும், இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் முதலியவர்களுடன் ஒப்பக்கருதும் அறிவுடையராக இவரைப் புலப்படுத்துகின்றன. தமிழ்நாட்டின் பண்டைக்கால வரலாறுகளையும் தமிழர் ஒழுக்கம் முதலியவற்றையும் அறிவிக்கும் கருவூலமாகிய இந் நூலுக்கு உரை வகுக்கப் புகுந்ததொன்றே இவர் பேராற்றலுடையாரென்பதைப் புலப்படுத்தும்' - ஐயரவர்கள் முகவுரையின் பகுதி.

இவருடைய உரையானது எளிய நயம் மிக்க பொழிப்புரையாக உள்ளது. மூலத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் விடாது தெளிவாக விளக்கித் தொடர்புபடுத்தி உரை எழுதுகிறார். ஆற்றொழுக்காகச் செய்யுளிற் சொற்கள் அமைந்தவாறே இவர் பொருள்கூறிச் செல்வதால் மூலத்தை நன்கு வரையறை செய்யவும் முடிகிறது.* உரை எளிமையாய் இருப்பினும், இவர் ஆழ்ந்த புலமை உடையவர் என்பதை இவர் கூறும் பல உரை

---

* இந்த இயல்பானது, யாம் புறநானூற்று உரையொன்றை ஆராய்ந்த போது, 22ஆம் பாடலில் 31-32 அடிகளில் ஓசை நயமும் எதுகை நயமும் அமையும்படி 'வயங்கு செந்நா' என்றும், 'பிற் பிறரிசை நுவலாமை' என்றும் உண்மைப்பாடம் கண்டுகொள்ள உதவிற்று. இதன் வரலாற்றைச் சைவசித்தாந்த மகா சமாஜத்தின் சங்க இலக்கியப் பதிப்பு முகவுரையில் காணலாம். மற்றுமோரிடம் குறிப்பிடத்தக்கது.

'யாதும் ஊரே' என்ற மிகவும் நன்கு தெரிந்த பாட்டில் (192), 'சாதலும் புதுவதன்றே, வாழ்தல் (இனிதென மகிழ்ந்தன்று மிலமே)' என்பது அச்சில் உள்ளபடி நான்காம் அடி. உரை, 'சாதலும் கருவிற் றோன்றிய நாளே தொடங்கி உள்ளது; வாழ்தலை இனிதென்று உவந்தது மிலம்' என்பது அச்சில் இக்கருத்துக்கு உரிய மூலம் இல்லை. இவ்வுரைகாரர் மூலத்தை ஒட்டியே உரை எழுதுபவர்; சொற்களைப் பெய்துரைத்தால், பெய்துரைக்கப்பட்டது, வருவித்துரைக்கப்பட்டது என்று தவறாது எழுதுவார். இங்கு அவ்வாறு குறிப்பிடவில்லை. மேலும் யாம் பரிசோதித்த ஏட்டில், 'சாதலும் புதுவதன்றே, உளது; வாழ்தல்' என்று காணப்பட்டது. ஆதலால் உரைக்குப் பொருந்த இதுவே பாடமாதல் வேண்டும்; உளது என ஒருசொல் இருந்தால் அதை விரித்துப் பொருள் செய்து கொள்ளலாம்.

களால் நன்கறியலாம். பல இடங்களில் பாடபேதங் காட்டு கிறார். என்பதும் பாடம், என்று பாடமோதுவாரும் உளர் என்று அனேகர் பாடல்களில் காட்டுகிறார். இவ்வாறு கூறுவாரும் உளர், உரைப்பாரும் உளர் என்றும், இவ்வாறு கூறினும் அமை யும் என்றும், தவறாது பாடல்தோறும் பொருள் எழுதிச்செல்வது இவருடைய புலமைக்குச் சான்று. இவருக்கு முன், புறநானூற் றுக்கு உரை இருந்ததாகத் தெரியாவிட்டாலும், உரை சொல் லும் மரபு இருந்து வந்திருக்கிறது. அதையே இவர் சுட்டுகிறார். எனினும், பிறரை மறுத்துரைப்பதோ கண்டிப்பதோ இல்லை. தாம் உடன்படாத இடத்து 'இவ்வாறு உரைப்பாரும் உளர், அது பொருந்துமேல் கொள்க' என்பார். தவறாது வினைமுடிபு காட்டி இலக்கணக் குறிப்புக்களையும் குறைவறத் தந்து, துறை விளக்கங்கூறி முடிப்பார். இவர் உரையின் அமைப்பு பதவுரை போன்றது. சொற்களை மாற்றிப் பொருள் கொள்ளாமல் சொற் கள் அமைந்தவாறே பொருள்கூறிச் செல்லுதல் இவருடைய சிறந்த இயல்பு. எங்கேனும் ஒருசொல் சேர்க்க நேர்ந்தாலும், ஒருசொல் தரப்பட்டது, ஒருசொல் வருவிக்க, ஒருசொல் கூட்டிப் பொருளுரைக்க என்று கூறுவார்.

இவருடைய உரையில் வட சொல்லாட்சி மிகவும் குறை வாகவே காணப்படும். 'பிண்டோதகக் கிரியை' என்னும் தொடர் முன்னமே காட்டப்பட்டது; அத்தியயனம், பரிகாரம் பரிகரித்தல் என்பன பின்னும் சில. மேற்கோளாக இவர் எடுத்துக்காட்டும் நூல்கள் தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, தமிழ்நெறி விளக்கம், பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகை, கலித்தொகை, சிந்தாமணி என்பன. நூற்பெயரைச் சொல்வது இவர் வழக்கமன்று; நாலடி, குறள் வரிகளைத் தம் உரைநடை யாகவே எழுதியும் செல்வார்.

## உரை இயல்பு

இவர் உரையின் இயல்புகளில் சிறப்பான சிலவற்றை இங்கு கூறுவோம். மூலத்தை ஒட்டியே உரைகூறி வருகின்ற இவர் இன்றியமையாத இடங்களில் கருத்தை வேறு சொற்களைப் பெய்து விளக்குகிறார். 'அக்கறை - மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே' என்ற இடத்து 'அக்கறுப்புத்தான் மறுவாயும், வானோரை உய்யக் கொண்டமையின் வேதத்தைப் பயிலும் அந்தணராற் புகழவும் படும்' என்பர். இவ்வாறு பெய்துரைப் பதன் காரணத்தைச் சிலசமயம் பின்னே விளக்கிக் கூறுவார்.

'முடிவுத் தோளோச்சித் தண்ணென வீசியோயே' என்ற இடத்து, சாமரத்தாற் குளிர வீசினாய் என்று எழுதிவிட்டு, முழவுத் தோளோச்சி எனவும், தண்ணென வீசியோய் எனவும் கூறிய வற்றால் சாமரை என்பது பெற்றாம் என்று எழுதுகிறார்.

மாறிக் கூட்டுதல் இவர் உரையில் மிகவும் குறைவு. வைத்து என்ற சொல்லைப் பெய்து எழுதுவதுபோல, பரிசு என்ற சொல் லையும் பெய்து எழுதுவார்.

மூலச்செய்யுளில் வரும் சொற்களின் கருத்து தம்முள் பொருந்தாமல் இருப்பதாகத் தோன்றின், அப்பொருத்தமின் மையை எவ்வாறு பொருத்துவது என்று நன்கு விளக்கிக் காட்டு வார்: 2ஆம் பாட்டில் குணங்களுக்கு உவமையாக ஐம்பெரும் பூதங்கள் கூறியவிடத்து அவை நிலன், விசும்பு, வளி, தீ, நீர் என்ற முறையில் கூறப்பட்டுள்ளன. இக்கூற்று, பூதங்களுடைய தோற்ற முறையாகவேனும், ஒடுக்க முறையாகவேனும் இல்லை. இம்மாறு பாட்டை இவர், போற்றார்ப் பொறுத்தல் முதலாகிய குணங் களை அரசியலடைவாற் கூறுகின்றாராதலின் பூதங்களின் அடைவு கூறாராயினர் என்று தெளிய வைக்கின்றார். 'ஆரைச் சாகாட்டாழ்ச்சி போக்கும் உரனுடை நோன் பகட்டன்ன வெங்கோன்' என்றவிடத்து, உயர்ந்த தலைவனுக்கு இழிந்த பகட்டை உவமை கூறுவது குற்றமாகுமோ என்னும் மயக்கத்தை 'இராச்சிய பாரத்தைப் பொறுத்து நடத்துமாறு நோக்கி நோன்பகட்டோடு உவமித்தமையின் இறப்ப இழிந்த ஆனந்த உவமை அன்றாயிற்று' என்பதனால் நீக்குகின்றனர்.

இவர் காலத்து அணியிலக்கணம் பெரிதும் ஆட்சிக்கு வரவில்லைபோலும்; சில அணிகளையே சொல்லுகிறார். சில வற்றைப் பெயர் சொல்லவில்லை; ஓரணி கருதி நின்றது சில அணி தோன்ற நின்றன என்று மட்டுமே சொல்கிறார்.

பொருளுடைய விளக்கங்கள் பல சொல்லுகிறார், எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து என்கிறார்; எந்தச் சொல்லையும் எந்தப் பொருளையும் குறிக்க வழங்கும் தவறான இன்றைய தமிழ் ஆசிரியர் மரபில், இவ்வாறு இவர் செய்து காட்டும் பொருள் வரையறை சிறப்புடையது. வண்டு - மறவருள் ஒருசாதி என்பார். கானயானை தந்த விறகு என்றது, இவன் தவம் மிகுதியால் அதுவும் ஏவல் செய்தல் - நல்ல விளக்கம். நெடுமொழி மறந்த சிறு பேராளர் நெடுமொழி மொழிதலாற் பேராண்மையும் பின் அதனை மறுத்தலாற் சிறுமையும். படை

மடம் என்றது வீரரல்லாதோர் மேலும், முதுகிட்டார் மேலும் புண்பட்டார் மேலும் மூத்தோர் இளையோர் மேலும் செல்லுதல். மீன் கணற்று அதன் சுனையே (109) என்றது, சுனையினது பன்மையும் தெளிவும் சிறுமையும். வாணிகப் பரிசிலன் அல்லேன் (208): யான் தரங்கெடப் பொருள் கொடுபோமவன் அல்லேன்; அவனாயின் இதுவும் கொடுபோவன்; நீ எனக்குத் தரமறிந்து தரவேண்டும் என்பதாம். அருளாவது ஒன்றின் துயர் கண்டாற் காரணமின்றித் தோன்றும் இரக்கம்; அன்பாவது தன்னாற் புரக்கப்படுவார் மேலுளதாகிய காதல் (5) வழிபடுவோரை வல்லறிதி (10), என்பது, அறிந்து அவர்களுக்கு அருள் செய்வை என்பதாம். அருள் அன்பு பொருள் வேறுபாடு இவர் உரையைத் தழுவியே பேராசிரியர் எழுதுகிறார். அருளாவது அன்பு காரணத்தால் தோன்றும் அருள். அன்பாவது மனைவியர் கண்ணும் தாய் தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின் கண்ணும் மனநெகிழ்ச்சி நிகழ்த்திப் பிணைக்கும் நேயம். மன்னிய வேள்வி (26) என்றது, களவேள்வி யொழிந்த வேள்விகளை. 63ஆம் பாடலில் துறையை விளக்குமிடத்து இது பொறுத்தற்கரிய பிழையைப் பொறுத்த குணவென்றியான், அரசவாகையாயிற்று என்பார். பரணன் 'பாடினன்' என்ற இடத்து (99) இன்றும் பரணன் பாடினன் என்றது, அவனும் தன் பெருமையாற் பாடினான், பிறராற் பாடப்படுதல் அரிது என்பதாம். திங்களை மாதமென்பாரும் உளர் என்கிறார். இக்காலத்தில்தான் போலும் மாதம் என்பது அதிக ஆட்சிக்கு வருகிறது.

கோவதை முதலாயின வாக்காலும் சொல்லப்படாமையின் ஆன் முலையறுத்த எனவும், மகளிர் கருச் சிதைத்த எனவும், பார்ப்பார்த் தப்பிய எனவும் மறைத்துக் கூறப்பட்டன (34); இறந்த என்று சொல்லுதல் இன்னாமையால், போகிய என்றார் - என்பன இவர் கருதும் இடக்கரடக்கலுக்குக் காட்டுக்கள்.

சில வழக்குகள்: கொண்டைமேற் காற்றடிக்க - என்பதொரு வழக்குப் பற்றி நின்றது (33). 'கிளி... குரலனையன் என்றது, கிளி யீடு வாய்த்தாற் போல்வனென்னும் வழக்கைப் பற்றி நின்றது (138). இங்கு 'கீழ்ச்செய் தவத்தால் கிளியீடு நேர்பட்டு' என்ற திருவாசகத் தொடர் ஒப்புநோக்கத்தக்கது. தேவர்களும் அசுரர்களும் பொருவழிப் பகலும் இராப்போல இயங்கித் தாம் போர் செய்தற் பொருட்டு அசுரர் ஞாயிற்றைக் கரந்தார்கள்; ஞாலம் அதனால் உள்ள பருவரல் தீரத் திருமால் அதைக் கொண்டு வந்து விட்டதொரு கதை - என்கிறார். மோரியராவார் விச்சாதர

சக்கரவர்த்திகள்; விச்சாதரும் நாகரும் என்ப (175) என்று எழுது மிடத்து, அக்காலத்துப் புவியியல் (உலகத்துள்ள நாடுகள் மக்கள் பற்றிய) அறிவு குறைவாதலால், அயல் நாடுகளிலிருந்து வந்தோர் யாராயினும், விச்சாதரர், நாகர் என்று கூறும் மரபு இருந்தமை பெறுகிறோம்.

69ஆம் பாடல் உரையுள், ஒரு நாளுள் முதல் பத்து நாழிகையும் அறத்தின் வழியொழுகிப் பின் பத்து நாழிகையும் இறையின் முறைமை கேட்டுச் செய்த பொருளைப் பரிசிலர்க்குக் கொடுத்து மகிழ்ந்திருத்தல் என்று இவர் உரை எழுதியிருப்பது, இறையனார் அகப்பொருளுரையைத் தழுவியது: 'தலைமக னால் தலைநின்று ஒழுகப்படுவன தருமார்த்த காமமென்பன; அம்மூன்றினையும் ஒரு பகலை மூன்று கூறிட்டு முதற்கட் பத்து நாழிகையும் அறத்தொடுபட்டுச் செல்லும்; இடையன பத்து நாழிகையும் அருத்தத்தொடு பட்டுச் செல்லும்; கடையன பத்து நாழிகையும் காமத்தோடு பட்டுச் செல்லும்; ஆதலால் தலைமகன் நாழிகையளந்து கொண்டு தருமத்தொடு படுவான், தலைமகளும் வேண்டவே தானும் வேண்டப் போந்து அத்தாணி புகுந்து அறங் கேட்பதும் அறத்தொடு பட்டுச் செல்வதும் செய் யும்: நாழிகை யளந்து இடையன பத்து நாழிகையும் இறையும் முறையும் கேட்டு அருத்தத்தினொடு பட்டு வாழ்வானும் இறை.

## காலம்

இவ்வுரைகாரர் காலத்தை அறிவதற்குச் சில குறிப்புக்கள் கிடைக்கின்றன. ஒன்று தமிழ்நெறி விளக்கம் என்ற பண்டைய அகப்பொருள் இலக்கண நூலுள் வரும் 'நிரையிர் செல்லுமோ என்றோர்ந்து' என்ற பாடலின் மூன்றாம் அடியை இவர் மூன்றிடங்களில் எடுத்துக் காட்டுகிறார். 'ஏவல் இளையர் தாய் வயிறு கரிப்ப' என்பது இவ்வடி. இப்பாடல் தமிழ் நெறி விளக்க ஆசிரியரே செய்தது. இந்நூலின் காலம் 9ஆம் நூற்றாண்டு. அன்றியும் இவர் சிந்தாமணி, புறப்பொருள் வெண்பாமாலை என்ற இலக்கிய இலக்கணங்களையும் எடுத்துக்காட்டுகிறார். இவற்றின் காலமும் ஒன்பதாம் நூற்றாண்டு.* ஆதலால் புற நானூற்றுரை இவற்றின் பின்னர் எழுந்தது என்பது தெளிவு.

இனி 8ஆம் பாடலுரையில் இவ்வாசிரியர் 'பகல் விளங் கலை என்னும் பாடத்திற்குத் திங்கள் மண்டிலமாக்கி, மாறி

---

* எமது ஒன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் இம் மூன்று நூல்களின் காலமும் வரையறை செய்யப்பெற்றுள்ளது.

வருதி என்பதற்குத் தேய்ந்தும் வளர்ந்தும் வருதி எனவும் பிற வும் அதற்கேற்ப உரைப்ப' என்று எழுதுகிறார். 'உரைப்பவர் இளம்பூரணர்' என்பது ஐயரவர்கள் அடிக்குறிப்பு. இளம்பூரணர் தொல்காப்பியம் பொருளதிகாரம் 306ஆம் சூத்திரமாகிய 'ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே' என்பதற்கு உரை எழுது மிடத்து, 'இதுவும் உவமைக்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று. உவமையை உவமிக்கப்படும் பொருளின் நீக்கிக் கூறலும் மருவிய இயல்பு என்றவாறு' என்றெழுதி புறம் 8ஆம் பாடலின் முதல் நான்கடி நீக்கி ஏனைய அடிகளை எடுத்துக் காட்டாகத் தந்துள்ளார். காட்டிய பகுதி பின்வருவது;

**கடந்தடு தானைச் சேர லாதனை**
**யாங்ஙனம் ஒத்தியோ, வீங்குசெலல் மண்டிலம்?**
**பொழுதென வரைதி, புறக்கொடுத் திறத்தி,**
**மாறி வருதி, மலைமறைந் தொளித்தி,**
**அகலிரு விசும்பி னானும்**
**பகல்விளங் குதியால் பல்கதிர் விரித்தே.**

இப்பகுதி ஐயரவர்கள் புறநானூற்றுப் பதிப்பிலுள்ளது போலவே இளம்பூரணத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. அங்ஙன மாயின், ஒன்று: 'பகல் விளங்கலையால்' என்று புறநானூற்றுரை காரர் காட்டிய வேறுபாடம் இங்கு இல்லை; இரண்டு: இளம் பூரணர் கூறியபடி 'உவமையை உவமிக்கப்படும் பொருளின் நீக்கிக் கூறல்' என்ற கருத்து இதில் இல்லை. 'பகல் விளங்கலை யால்' என்றால்தான் இளம்பூரணர் கருத்துக்கு இப்பாடல் உவமையாகும்; இல்லையானால் இது உவமையாகாது. ஆதலால் பாடலின் இறுதி வரி, 'பகல் விளங்கலையால் பல்கதிர் விரித்தே' என்று இருத்தற்குரியது. பகல் விளங்காமையால் புறநானூற் றுரைகாரர் இது திங்கள் மண்டிலமென்றும் (பகல் விளங்கும் சூரிய மண்டிலமல்ல) திங்கள் இயல்புக்குப் பொருந்தத் தேய்ந் தும், வளர்ந்தும் வருதி என்றும் உரைப்பர் என்று பொருத்தி விளக்கிக் காட்டியிருக்கிறார். உரைக்குத் தொல்காப்பியச் சூத்திரத்தோடுள்ள பொருத்தத்தாலும், புறநானூற்றுரைகாரர் விளக்கத்தாலும், ஐயரவர்கள் கருத்தாலும் 'பகல் விளங்கலை என்பதே பாடம் என்று உறுதியாய் ஏற்படுகிறது.*

---

* தொல்காப்பியம் பொருளதிகார உரையில் (307) பேராசிரியர் இப் பாடல் முழுமையும் எடுத்துத் தந்து, 'பகல் விளங்கலை' என்ற பாடமே காட்டுகிறார். காட்டிய விடத்துப் பாடலையும் விளக்கி யுரைக்கிறார்; அடுத்த சூத்திர உரையும் பார்க்க.

இங்கு நமது நோக்கம் திருத்தமான பாடம் காண்பதன்று; இளம்பூரணர் உரையைப் புறநானூற்றுரைகாரர் சுட்டிப் பேசு கிறார் என்பதே. இளம்பூரணர் காலம் கி.பி. 1070-1090 என்று வரையறை செய்திருக்கிறோம்.* இது கொண்டு புறநானூற்றுரை காரர் காலத்தால் இதற்குப் பிற்பட்டவர் என்பது தெளியலாம்.

அன்றியும், புறநானூறு 9ஆம் பாட்டு உரையில் 'முந்நீர் விழவின் நெடியோன்' என்னுமிடத்து முந்நீர் என்ற சொல்லுக்கு இவர் எழுதும் பொருளை அடியார்க்கு நல்லார் மறுக்கிறார். இது அடியார்க்கு நல்லார் வரலாற்றில் விளக்கப்பட்டுள்ளது. முந்நீர்க் கடற்றெய்வத்திற் கெடுத்த விழாவினையுடைய நெடி யோன் என்று உரைகூறி, 'முந்நீர் யாற்றுநீரும், ஊற்று நீரும், மழைநீரும் அன்றி முன்னீர் என்று ஓதி, நிலத்துக்கு முன்னாகிய நீர் என்றும் உரைப்ப' என்ற கருத்தை அடியார்க்கு நல்லார் மறுக்கிறார்; 'முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பது; முச் செய்கையாவன மண்ணைப் படைத்தலும், மண்ணையழித்த லும், மண்ணைக் காத்தலும்'. இக்கருத்தையே பெரும் பாணாற் றுப்படை உரையிலும், சீவகசிந்தாமணி உரையிலும் நச்சினார்க் கினியர் கூறுகிறார். அடியார்க்கு நல்லார் காலம் 12ஆம் நூற் றாண்டின் இறுதிப்பகுதியும் நச்சினார்க்கினியர் காலம் 14ஆம் நூற்றாண்டும் ஆகும். எனவே அடியார்க்கு நல்லாரால் மறுக் கப்பட்ட புறநானூற்றுரைகாரர், 12ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்கு முற்பட்டவராகிறார்.

162ஆம் பாடலுரையில், 'யாம்பிணித்த என்னும் பன்மை பெருமிதந்தோன்ற நின்றது' என்கிறார். சிலப்பதிகார அரும்பத வுரைகாரர் (20:13), 'யாம் என்றாள் தம்பிராட்டியாதலால் தன் பெருமிதந் தோன்ற' என்று எழுதுகிறார். இதுபோன்ற மற்றொரு குறிப்பும் உண்டு. 'நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்' - இடையாமத்தும் நண்பகலும் துயிலானாய்; .... பகலை ஒரு மாத்திரை என்றும் .... உரைப்பாரும் உளர் என்கிறார் இவ்வுரை யாசிரியர் (புறம் 189). இவ்வாறு உரைப்பவர் சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர்.

அரையிருள் யாமத்துப் பகலுந்துஞ்சார்❖ (சிலம்பு. 4 - 81) 'பகுக்கப்படுதலின் பகல். மதுரைக் காஞ்சியில் மற்றையாமம்

---

* எமது 11ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு காண்க.

❖ செந்தமிழ் தொகுதி 32, பகுதி 11.

பகலுறக்கழிப்பி என்பதுமது. பகலுந் துஞ்சான் - எல்லாருந் துஞ்சும் அரையிருள் யாமத்தும் ஒரு மாத்திரைப் பொழுதுந் துஞ்சாமல்' என்றார் அரும்பத வுரையாசிரியர். 'அரையிருளினும் ஓர் யாமத்தினும் ஒரு கணப்பொழுதும் துஞ்சாராம்படி நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்' என்றார் புறத்தினும். 'அரையிருள் - இரண்டாம் யாமம். யாமம் ஓர் யாமம்; அரையிருள் யாமம் - உம்மைத்தொகை; இருபெயர்க்கண் வந்தது. பகல் அரை யாமம். மற்றையாமம் பகலுறக் கழிப்பி என்றார் மதுரைக் காஞ்சியுள் ளும். பகுத்தலிற் பகலாயிற்று' - அடியார்க்கு நல்லார்.

பகலென்பதற்கு ஒரு மாத்திரை எனப் பொருள் கண்டவர் சிலப்பதிகாரத்து அரும்பதவுரையாசிரியர். அவரைத் தழுவி இவர் எழுதினாரென்று கொண்டால், இவர் காலம் அவர் காலமாகிய கி.பி. 1025க்கு* இவர் பிற்பட்டவர் என்பது தெளிவு.

இவற்றால் நாம்பெறுவது, புறநானூற்றுரையாசிரியர் காலம் 11ஆம் நூற்றாண்டிற்குப் பின்னும், 12ஆம் நூற்றாண்டின் இறுதிக்கு முன்னும் என்று தெரியும்போது, இதை 1100-1125 என்று முடிவு செய்வதும் பொருத்தமாகத் தெரிகிறது.

## திருக்கோவை - பழைய உரையாசிரியர்

'திருக்கோவையார் பழையவுரை' என ஓர் உரை தஞ்சைச் சரசுவதி மஹால் வெளியீடாக 1951இல் வெளிவந்து, பின் காசி மடத்துப் பதிப்பாக 1960இல் பேராசிரியருரையோடு சேர்த்து வெளியிடப்பட்டுள்ளது. இவ்வுரையாசிரியர் பெயர் முதலிய வரலாறு எதுவும் புலப்படவில்லை. எனினும், இவ்வுரை மிகவும் பழமையானதோருரையென்று மட்டும் தெரிகிறது. பேராசிரியர், பிறர் இவ்வாறு உரை கூறுவர் என்றும், பிறர் பாடம் கொள்வர் என்றும் குறிப்பிட்ட இடங்களில் முப்பது இடங்களுக்கு மேல் இவ்வுரையுட் காணப்படுகின்றன. ஆதலால் இவ்வுரையின் காலம் பேராசிரியருக்கு முந்தியது என்று மட்டும் கூறலாம். அவர் உரை சுமார் 1275. எனவே இவ்வுரை 12ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்று கொள்வது பிழையாகாது (சுமார் 1150).

இவர் சிறந்த சைவர் என்பது சொல்ல வேண்டியதில்லை. தில்லையைக் குறிப்பிடுமிடங்களில் பலவும் தெற்குத் திருப்பதி என்றும் திருச்சிற்றம்பலமென்றும், பெருமானை எங்கள் சுவாமி

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு நூல் காண்க.

அம்பலநாதன், திருச்சிற்றம்பலநாதன் என்றும் குறிப்பிடுகிறார். சிவபெருமானை முதலியார் என்றே பல இடங்களிலும் குறிப் பிடுகின்றார். இது அபூர்வமான ஒரு சொல்லாட்சி. தில்லை யுலாவில் மட்டும் காணப்படுகிறது. அந்நூலாசிரியர் பெயரும் தெரியவில்லை. ஒருகால் இரு நூல்களும் ஒருவரே செய்ததாக லாம் அல்லது ஒரே சூழலில் வாழ்ந்தவராகலாம். சேய் என்று வருமிடங்களில் சுப்பிரமணியன் என்றும், உமைபங்கன் என்று உமை பெயர் குறிப்பிடுமிடங்களில் ஈசுவரி, பரமேசுவரி, சங்கரி என்றும் குறிப்பிடுவார். திருமாலை நயம்படப் புருடோத்தமன் என்று கூறுவார்.

இவ்வுரையைப் பயின்றே பேராசிரியர் தம் உரை எழுதி னார் என்பதைப் பல குறிப்புகளால் அறிகிறோம். 141ஆம் பாடல் இத்திருக்கணி என்ற இடத்து, 'இந்தத் திருவாகிய கணி, திரு என்பது சாதிப் பெயர்; கணி என்பது தொழிற்பெயர்; அந்தச் சோதிடம் சொல்லும் சாதியிலே பிறந்து அந்தச் சோதிடம் தப்பாமே சொல்லி வருகின்றவர் என்று அதற்கு இழிவு சொன்ன படி' என்பது பழைய உரை. 'இத்திருவாகிய கணி: திரு - சாதிப் பெயர், கணி - தொழிற்பெயர். நல்ல கணி என்று இழித்துக் கூறினாராக உரைப்பாருமுளர்' என்ற பேராசிரியர் கூற்றுக் காண்க. இப்படியே, 173 - சோத்தம் - இழிந்தார் செய்யும் அஞ் சலி, அது சோத்தெனக் கடைக்குறைந்து நின்றது; 183 - கிழி - கிழிச்சீலை; கிழிதம் என்று கிழிக்கும் பெயராக உரைப்பினும் அமையும்; 193 - மிளகுக்கொடி இன்பம் செய்யாதாயினும் கண்ணினுக்கு அழகியதாய்த் தோன்றினாற் போல - என்பன போன்ற இடங்கள் எடுத்துக்காட்டு. பாடல் 400 காண்க. 85ஆம் பாடல் சிலேடையாக உள்ளது. இரு பொருள்களையும் பழைய உரைகாரர் தனித்தனியாக எழுதியுள்ளார். இதைத் தழுவியே பேராசிரியரும் தனித்தனியாக எழுதியிருப்பதும் காண்க. இவற் றால் பேராசிரியர் முந்திய உரையை அறிந்தமை நன்கு புலப்படும்.

இவ்வாசிரியர், பிண்டப் பொழிப்பாகவும், பலசமயம் நேரே சொற்பொருள் விளக்கும் பதவுரையாகவும் எழுதிச் செல்வார். சிலவிடங்களில் தனியே விசேடவுரையும் எழுதுகிறார். அவ் விடங்கள் நயமாகவே இருக்கும். சில இடங்கள் சாமானியப் பேச்சுநடை போலவே எழுதியிருப்பார். 'சுவாமியே! நீ இவ்விடத்தில் தாழ்க்கத் தயாரானவரும் குரோதம் பண்ணுவார்கள்; எங்கள் ஐயன்மார்கள் மிகவும் மூர்க்கராய் இருப்பார்கள்; இவ்விடந்

தான் இயங்குவாரில்லாத இடமாகையினாலே இப்போதே தணிக்கும் சுவாமி.' இதுபோல்வன பல. கிளவித் தலைவனை விளிக்கும்போது சுவாமி என்றே தலைவி பாங்கி முதலியோர் கூற்றாக இவர் உரைக்கிறார். பொதுவாக இவர் உரையில் பேராசிரியர் போல அகப்பொருட் கருத்தை விளக்கியுரைக்கும் நோக்கம் காணப்படவில்லை.

இவர் திருவாசகத்தைக் குறிப்பிடவில்லையாயினும், மாணிக்கவாசகரே திருக்கோவை செய்தார் என்ற கருத்துடையவர் என்பதில் ஐயமில்லை. திருச்சிற்றம்பலம், அம்பலநாதன் என்னும் தொடர்கள் இதை உணர்த்துவதோடு வேறொரு குறிப்பும் கிடைக்கிறது. 279ஆம் பாடல் உரையில் 'சுரந்த தன் அருளால் பரிந்து எனையாண்ட சிற்றம்பலத்தான்' என்ற தொடருக்கு உரை எழுதும்போது, 'தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது மாணாக்கருக்குச் சுரந்த பெரிய கருணை பொறுக்க மாட்டாமையினாலே தானாளும் வாய்மை மறித்து என்னை அடிமை கொண்ட திருச்சிற்றம்பலநாதன்' என்று எழுதுகிறார். இது, முற்பிறவியில் உத்தரகோச மங்கையுள் குருவாய் வந்த பெருமான் ஆயினும் மாணாக்கருள் இவரை மட்டும் தில்லையுள் வா என்று சொல்லி நீத்த மற்ற அனைவரையும் அழைத்துச் சென்றார் என்ற மாணிக்கவாசகர் வரலாற்றுச் செய்தியைக் குறிப்பதாயுள்ளது.

இவர் மேற்கோள் காட்டியது தொல்காப்பியம் ஒன்றே. ஆ ஆ என்பது திருவாசகத்துள் பலமுறை பயிலும் தொடர்; கோவையிலும் வருகிறது. ஐயோ, ஐயோ என்று இவர் இரக்கக் குறிப்பாகப் பொருள் எழுதுகின்றார் (211, 355). சிந்தாமணி என்ற சொல் வரும் இரண்டிடங்களிலும் சிந்தாமணி என்ற வள்ளல் (112, 400) என்றே எழுதுவார். இவர் காலத்தில் ஒருகால் இப்பெயர் கொண்ட ஒரு சிறந்த வள்ளல் இருந்து அந்த நினைவால் இவர் இப்படி எழுதியிருப்பார் போலும். சுழியல் 377 - திருவலஞ்சுழி என்பார்.

இவர் கொளுவுக்கும் உரை எழுதியிருக்கிறார். பாலைக்கு நிலமில்லை யாதலால் நானிலம் என்பார் (191). சில சொற்கள்: தமியம் - தனிச்சி; பாணன் - பாணிச்சி.

இங்ஙனம், இவ்வுரை பேராசிரியர் உரை போன்ற பெருஞ் சிறப்புடையதல்லவாயினும், தன்னளவிலே சிற்சில நயங்களைப் பெற்றிருக்கிறது.

*அத்தியாயம் 7*

# இலக்கணம்

## *முன்னுரை*

தமிழ் இலக்கிய வரலாற்றில் இலக்கண நூல்களும் சிறப்பான இடம் பெற்றிருக்கின்றன. தொல்காப்பியம் ஓர் இலக்கண நூல் என்று கூறினும், பின்விளைந்த இலக்கிய வளத்துக்கே ஒரு வரம்பு கோலித்தந்தது என்றால் உண்மையாகும். இங்ஙனமே பின்வந்த இலக்கண நூல்களையும் நாம் கருதவேண்டும். காலம் தோறும் சிறப்புடைய இலக்கண நூல்கள் செய்யப்பெற்று வந்திருக்கின்றன. ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வகை இலக்கியத் தேவை தோன்றியது போலும்: இலக்கண நூல்களும் அத்தேவையை யொட்டியே தோன்றியிருக்கின்றன.

பன்னிரண்டாம் நூற்றாண்டைத் தனியே நாம் கருதுவோமானால், சிறப்புமிக்க இலக்கண ஆசிரியர் இருவர் வாழ்ந்து நூல் செய்தமை காண்கிறோம். யாப்பருங்கலம், காரிகை முதலான யாப்பிலக்கணப் புலவர் முந்திய நூற்றாண்டில் தோன்றியிருக்க, அணியிலக்கணம் அப்போது தோன்றவில்லை தண்டியாசிரியர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்து இக்குறையை நிரப்பி, இன்றும் தமிழ் மக்கள் போற்றி வருகிற தண்டியலங்காரம் செய்தார். செய்த காலம் முதல் அத்துறையில் தனக்கு இணையில்லாத சிறப்புடைய நூலாக இது பயிலப்பட்டு வருகிறது.

குணவீர பண்டிதர் என்ற சைன முனிவர் இக்காலத்து வாழ்ந்து இருவேறு இலக்கண நூல்கள் செய்தார். ஒன்று ஐந்திலக்கணத்துள் எழுத்தும் சொல்லும் கூறுகிற நேமிநாதம்; இது முந்திய நூற்றாண்டில் தோன்றிய வீரசோழியம் போன்றது; அது கலித்துறை, இது வெண்பா, மற்றது, பன்னிரு பாட்டியல் முதலான பாட்டியல் நூல்கள்போல, பாட்டியல் கூறும் வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியல்.

மேற்குறித்த இலக்கண நூல்கள் யாவுமே பழைய உரையுடையன. இவற்றுள் தண்டியலங்காரம் நூற்பா; ஏனைய நேமிநாதமும் வச்சணந்தி மாலையும் வெண்பா. ஆசிரியர்களுள் முன்னவரான தண்டி சைவ சமயத்தவர்; பின்னவர் சைன சமயத்தவர்.

## *தண்டியாசிரியர்*

### அணியிலக்கணம்

'எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப் புலமை' என்று குமரகுருபரர் பாடுகிறார். தமிழில் நான்கிலக்கணத்தைப் பற்றிய குறிப்பு முதன்முதலில் இறையனார் களவியலில் வருகிறது. புத்தமித்திரனார் என்ற பௌத்த சமயத்தினரான ஆசிரியர் 11ஆம் நூற்றாண்டில் வீரராசேந்திர சோழனுடைய ஆதரவில் வாழ்ந்து, அவன் பெயரால் செய்த வீரசோழியம் என்ற இலக்கணநூல் ஐந்திலக்கணமும் கூறுவது; 'எழுத்துச் சொல் நற்பொருள் யாப்பு அலங்காரமென்னும் பாமேவு பஞ்ச அதிகாரமாம் பரப்பைச் சுருக்கித்' தாம் சொல்வதாக அவர் எழுதுகிறார். அலங்காரப் பகுதிக்கு அவர் வைத்துள்ள பெயர் (அலங்கார அதிகாரம்) என்பது. அடுத்து, 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய பாட்டியல் இலக்கணமாகிய வச்சணந்திமாலை என்பது, ஆசுகவிக்கு இலக்கணம் கூறுமிடத்து, ஐந்திலக்கணங்களையும், அவற்றுள் இறுதியாக அலங்காரத்தையும் குறிப்பிடுகிறது:

> பேரெழுத்தில் சொல்லில் பொருளில் பெருங்கவியில்
> சீர்அலங்கா ரத்தில் தெரிந்தொருவன் – நேர்கொடுத்த
> உள்ளுரைக் கப்போ துரைப்பதனை ஆசென்றார்,
> எள்ளாத நூலோர் எடுத்து.

நன்னூலின் சிறப்புப்பாயிரம், அரும்பொருள் ஐந்து என இவ்வைந்திலக்கணங்களையும் குறிப்பிடுகிறது:

> குணகடல் குமரி குடகம் வேங்கடம்
> எனும்நான் கெல்லையின் இருந்தமிழ்க் கடலுள்
> அரும்பொருள் ஐந்தையும் யாவரும் உணரத்
> தொகைவகை விரியில் தருக என.

என்பது காண்க. ஆனால் இன்றுள்ள இலக்கண நூல்களில் முற்பட்ட இலக்கணமாகிய தொல்காப்பியம், எழுத்து சொல் பொருள் என்ற மூன்று அதிகாரங்களே உடையது.

எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி.

என்ற பனம்பாரனாரது தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தால் எழுத்து சொல் பொருள் என்ற மூவகைப் பாகுபாடே முந்து நூலாகிய அகத்தியத்திலும் இருந்தது என நாம் கருதவேண்டும். தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்துள் பொருள் என்ற அதிகாரத்துள் யாப்பு, அணி என்ற பிற இரு அதிகாரங்களும் அடங்கியுள்ளன. அணியை வடநூலார் அலங்கார சாஸ்திரம் என வழங்குவர். பொருளை விளக்குவது உவமையாகலான், தொல்காப்பியர் பொருளதிகாரத்துள் உவமஇயலைச் சேர்த்தார். அகத்திணையியலினுள் உவமத்தை உள்ளுறை உவமம் ஏனை உவமம் என இரு கூறாக்கிச் சுருக்கிக் கூறியபின், உவமவியலுள் அவற்றை விரித்துக் கூறினார். அவர் கூறும் உவமக் கூறுபாடுகள் தொழில் பயன் வடிவு வண்ணம் என நான்கு. பின்வந்த நூலாசிரியர் இவற்றைப் பல அலங்காரங்களாக்கி வேறு பல அலங்காரங்களும் சேர்த்து அணியிலக்கணம் செய்வாராயினர். தொல்காப்பியர் கொண்ட அணி, உவமம் ஒன்றே. உவமத்தின் வழியாகப் பொருளணிகள் பல தோன்றும் என்ற கருத்து, பிற்காலத்தில் அப்பைய தீக்ஷிதர் வடமொழியில் செய்த சித்திர மீமாம்சையில் சொல்லப்பட்டுள்ளது என்று ஆசிரியர் பலர் பின்வரும் வரிகளால் அவர் கருத்தை எடுத்துக்காட்டுவர்.*

உவமை என்னும் தவலரும் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து,
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி,
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்பநடிக் கும்மே.

அலங்கார சாஸ்திரமாக நமக்கு இன்று கிடைக்கும் பழைய இலக்கண நூல் தண்டியலங்காரம் என்பது. இதைச் செய்த ஆசிரியர் தண்டியாசிரியர் எனப்படுகிறார்.

---

* தக்கயாகப் பரணி 12ஆம் தாழிசையில், சொல் பொருள் அலங்காரம் என்ற இலக்கணப்பகுதிகளைத் தொனியால் குறிப்பிட்டிருப்பதையும் காண்க: வெல்லும் பொருளதிகாரம் அலங்காரம் விளங்கச் சொல்லும் பொருள் செருகுங் குழல் மடவீர் கடைதிறமின்.

## தமிழில் அணியிலக்கணம்

தமிழில் அணியிலக்கண வரலாற்றை மட்டும் இங்கு சிறிது கூற எண்ணுகிறோம்; அதன் பொருளைச் சொல்லவில்லை. கி.பி. எட்டாம் நூற்றாண்டில் செய்யப்பெற்றது என்று கருதத் தக்க நக்கீரர் களவியல் உரையானது எழுத்ததிகாரம் சொல்லதி காரம் யாப்பதிகாரம் பொருளதிகாரம் என்று மட்டும் குறிப் பிடுகிறது; அணியதிகாரம் என்று பெயர் எதுவும் சொல்ல வில்லை. எனினும், அதே நூற்றாண்டில் அணியிலக்கணம் தோன்றிவிட்டது என்று தெரிகிறது. பிற்காலத்தில் யாப்பருங் கல விருத்தியுரை முதலியன அணியியல்* என்ற பெயரால் ஓர் அணியிலக்கண நூலைக் குறிப்பிடுகின்றன. இந்நூல் எட்டாம் நூற்றாண்டில் தோன்றியது என்று சொல்லக்கூடும். இது நூற்பா வால் ஆனது. இதுவே தமிழில் முதன்முதல் தோன்றிய அணி யிலக்கண நூலாகும். இந்த நூல் இன்று இல்லை.

வீரசோழிய அலங்காரப் படலத்தில் உதாரதை என்று தொடங்குகிற அணி முதல் மடக்கு என்ற சொல்லணி வரையில் அணிக்கு விளக்கமாக 105 நூற்பாக்களும் எடுத்துக்காட்டாகப் பல வெண்பாக்களும் தரப்பட்டுள்ளன. இந்நூற்பாக்கள் மற்றோர் அணியிலக்கண நூலிலிருந்து உரையாசிரியர் எடுத்துக்காட்டு கிறார். இவை அணியியல் சூத்திரங்களாயிருக்கலாம். இவ் அணியியலானது தனியே தமிழ் மரபில் அணியிலக்கணங் களைக் கூறுவதென்று கருதவேண்டும். இது தருகின்ற பெயர்கள் யாவும் தமிழ்ப் பெயர்களாகவே உள்ளன.

பின்னால் வடமொழித் தண்டியாசிரியர் தொடர்பு ஏற்பட்டுத் தமிழில் அலங்கார நூல்கள் எழலாயின. அலங்கார நூல் என்ற மாத்திரத்தில் எல்லோருக்கும் முதலில் தண்டியாசி ரியரின் அலங்காரமே நினைவுக்கு வருகின்றது. இவர் காலம் கி.பி. 1133-1150 ஆக இருக்கலாம். ஆனால், இவருக்கு முன்னதாக கி.பி. 1060-1090இல் வாழ்ந்தார் எனக் கருதத்தக்க புத்தமித்திரனார் என்ற பௌத்தசமய ஆசிரியர் செய்த ஐந்திலக்கணம் கூறும் வீரசோழியம் என்னும் பெயருடைய இலக்கணமே முதலாவ தாக அணியிலக்கணத்தை விரித்துரைக்கின்றது. இந்நூலின் முதல் நான்கு பகுதிகளுக்கும் எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் யாப்பதிகாரம் என்று பெயர் வைத்தார். இதன்

* இதுபற்றிய ஒரு குறிப்பு, 5ஆம் அத்தியாயத்தில் காணப்படும்.

ஐந்தாம் பகுதியை அலங்காரப் படலம் என்றே பெயர் வைத்திருக் கிறார். இப்பகுதி 39 கட்டளைக் கலித்துறைகள் கொண்டது. மிகவும் விரிவானது என்பதில் ஐயமில்லை. புத்தமித்திரனார் தம் நூலை வடமொழித் தண்டி நூலின் வழியே செய்வதாக முதல் பாடலில் கூறுகின்றார். 'செய்யுட்களாம் தரை மலி மானிடர் தண்டி சொன்ன, கரை மலி நூலின்படியே உரைப்பன்' (143) என்றும், 'உரைத்தார் பண்டு தண்டிகளே' என்றும் (149), 'தண்டி சொன்ன வாக்கு மலி அலங்காரம் (153), 'தண்டி சீரும் பொலிவும் மலியும் தன் நூலினிற் செப்பியதே (160) என்றும் இவர் தம் நூலினுள் கூறியிருப்பது காணத்தக்கது. இந்நூல் முழுமையும் இன்று உள்ளது.

பின்னால் 12ஆம் நூற்றாண்டில் தண்டியாசிரியர் விரிவான அலங்கார நூல் செய்தார். இவருடைய இயற்பெயர் மறைந்து போய், வடமொழி ஆசிரியருடைய பெயரே இவருக்கு வழங்கு கிறது. இங்ஙனமாக வடமொழி நூலைப் பின்பற்றியும் மொழி பெயர்த்தும் வீரசோழிய ஆசிரியரும் தண்டியாசிரியரும் நூல் செய்தார்கள் என்று அறிகிறோம். வடமொழித் தண்டியார் கூறுகின்ற வைதருப்பநெறி கௌடநெறி என்ற இரண்டையும், இவ்விரு அலங்காரங்களும், தமிழாட்சி இல்லாதபோதுங் கூட, உரைக்கின்றன. இரண்டும் சிறப்பான உரைகள் உடையன. வீர சோழிய உரை தண்டிக்குக் காலத்தால் முற்பட்டது. தண்டி யலங்கார உரை காலத்தால் மிகவும் பிற்பட்டது.

இன்னும் பிற்காலத்தில், திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவர் நம்மாழ்வார் புகழைக் கூறுமுகமாக* மாறனலங்காரம் என்ற பெயரில் முழுமையும் தண்டியடிகள் நூலையே தழுவிப் பின்னும் பெருக்கிப் புதிதாக ஓர் அணி யிலக்கண நூல் செய்தார். (காலம் 16ஆம் நூற்றாண்டு). இதற்கு அவருடைய மாணாக்கரான திருமேனி ரத்தினக் கவிராயர் உரை எழுதியிருக்கிறார். இது விரிவான நூல்.

### வடமொழித் தண்டியாசிரியர்

தமிழ்த்தண்டியைக் குறித்துப் பேசும் போது, இவருடைய நூலுக்கு மூலமான வடமொழி அலங்காரம் செய்த வடமொழித்

* இங்ஙனமே வடமொழியிலும் பாடல்தோறும் பிரதாப ருத்திரன் என்ற அரசனைச் சிறப்பித்துப் பாடப்பட்ட இலக்கணநூல் பிரதாப ருத்திரீயம் என்பது.

தண்டியைக் குறித்தும் சில அறிவது பயனுடையதாகும். இவர் காஞ்சியில் பல்லவ மன்னர்களால் ஆதரிக்கப் பெற்று வாழ்ந்தவர். இவருடைய தந்தை தாமோதரன், தாய் கௌரி. ஏழு வயதில் தாய் இறந்தாள், பின் தந்தையும் இறந்தார். அக்காலம் சாளுக்கியர் - பல்லவர் போர் மலிந்தகாலம். இவர் சிறுபிள்ளையாயிருந்த காலத்தில் ஆதரிப்பாரின்றிப் பல இடங்கள் சுற்றித் துன்பமான வாழ்க்கை நடத்தினார். இவருடைய புலமையைக் கண்டு, பல்லவ மன்னன் (ஏழாம் நூற்றாண்டு) இவருக்கு மிக்க ஆதரவளித்து அவைப்புலவராக்கினான். அவ்வாறு சிறப்புப்பெற்ற காலத்தில் இவர் மூன்று நூல்கள் எழுதினார். முழுமையும் உள்ளது. இந்தக் காவ்யாதர்சம் (கவிதைக் கண்ணாடி) என்ற அலங்கார சாஸ்திரம். இது இவருக்கு வடநூற்புலவர் வரிசையில் மிகவும் உன்னத மான ஓர் இடத்தைத் தந்தது. தமிழ்நாடு மட்டுமல்ல, தென்னாடு முழுமைக்குமே, இலக்கிய விமரிசனத்துக்கு இவர் நூலே மூலநூல் என்று வடமொழிவாணர் சொல்வர். இவர் செய்த மற்றொரு நூல், அவந்தி சுந்தரி என்ற வசன காவியம்; இதன் தொடக்கமும் இறுதியும் இல்லாமல், இடைப்பகுதி மட்டும் தசகுமார சரிதம் என்ற பெயரில் வழங்கி வருகிறது. மூன்றாவது நூல், சில மேற்கோள் பாடல்கள் அறியவருவதேயன்றி முழுமை யும் மறைந்து போயிற்று.

இங்கு நாம் அறியவேண்டியது, மிகச் சிறந்த வடமொழி அணியிலக்கணம் செய்த தண்டியாசிரியர் தமிழ்நாட்டார் என்பது. தமிழ் ஆராய்ச்சியாளர் இதை நன்கு உணர்ந்ததாகத் தெரியவில்லை. வடமொழித் தண்டி தமிழ்நூலில் இருபெரும் இலக்கிய நெறிகளைக் குறிப்பிடுகிறார்: இவை கீழ்த்திசை நெறி யும் தென்திசை நெறியும் ஆகும்; முந்தியது புலமைக்கு அதிக இடங்கொடுப்பது, பிந்தியது உணர்வுக்கும் பாவத்துக்கும் அதிக இடங்கொடுப்பது. இரண்டிலும் அவர் சிறப்பாய்க் கொண்டது, பிந்திய நெறியே. இவ்விரு நெறிகளும் வைதர்ப்பநெறி எனவும் கௌடநெறி எனவும் பெயர்பெறும்; இரண்டும் விதர்ப்பதேசம் கௌட தேசம் என்ற நாடுகளின் வழக்கைத் தழுவியது என்பர்.

வடமொழித் தண்டியின் நூலைத் தழுவியே பிற்காலத்தில் தென்னிந்திய மொழிகளில் அலங்கார சாத்திரங்கள் செய்யப் பட்டன - தமிழில் வீரசோழிய அலங்காரப் படலமும், தண்டியலங் காரமும்; கன்னடத்தில் கவிராசமாணிக்கமும்; சிங்களத்தில் சீய

பாஸ்லகாரமும் இதைத் தழுவிச் செய்யப்பட்டது என்பர். இப் பொருள் பின்னும் பேராராய்ச்சிக்கு உரிய பொருளாகும்.

### அணியியல்

தண்டியலங்காரத்துக்கு முன்னும் தமிழில் அணியிலக்கணம் கூறும் நூல்கள் இருந்தன என்று பண்டைய உரைகளால் அறி கிறோம். காலத்தால் தண்டியலங்காரத்துக்கு முற்பட்டவரான யாப்பருங்கல விருத்தியுரைகாரர், அணியியல் என்ற நூலை ஐந்திடங்களில் குறிப்பிட்டு மேற்கோளும் தருகிறார். இவை தண்டியலங்காரத்துள் இல்லை; யாப்பருங்கலத்தின் காலப் பழமை நோக்க, பிந்திய தண்டியின் பகுதியாக இவை இருக்கவும் முடியாது. இவ்வாறு காட்டப்பட்ட இடங்கள் பின்வருவன: அகவல் என்பது இன்னிசை வெண்பா: என்னை?

**அகவல் வெண்பா அடிநிலை பெற்றுச்**
**சீர்நிலை தோறும் தொடைநிலை திரியாது**
**நடைவயின் ஓரடி நேய முடைத்தாய்ப்**
**பொருளொடு புணர்ந்து எழுத்தறி யாதே.**

என்றாராகலின்; வரலாறு:

**வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்**
**வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்**
**வைகலும் வைகல்தம் வாழ்நாள்மேல் வைகுதல்**
**வைகலை வைத்துணரா தார்.**

இஃது அகவல் வெண்பாவென்று அணியியலுடையார் காட்டிய பாட்டு' (செய்யுளியல் சூ. 4 உரை மேற்கோள்).

இனி ஒழிபியல் - மாலை மாற்றே சக்கரம் சுழி குளம் என்னும் சூத்திரவுரையில், 'உருவகமும் உவமையும் வழிமொழி யும் மடக்கும் தீபகமும் வேற்றுமை நிலையும் வெளிப்படை நிலையும் நோக்கும் உட்கோளும் தொகைமொழியும் மிகை மொழியும் வார்த்தையும் தன்மையும் பிறபொருள் வைப்பும் சிறப்பு மொழியும் சிலேடையும் மறுமொழியும் உடனிலைக் கூட்டமும் நுவலா நுவற்சியும் உயர்மொழியும் நிதரிசனமும் மாறாட்டும் ஒருங்கியன் மொழியும் ஐயமும் உயர்வும் விரவிய லும் வாழ்த்தும் என்றோதப்பட்ட அலங்காரங்களும் என்றவாறு: 'அவை அணியியலுட் காண்க' என்று கூறுகிறது. 'இனிச் செய் யுளாவன:

செய்யுள் தாமே மெய்பெற விரிப்பிற்
றனிநிலைச் செய்யுள் தொடர்நிலைச் செய்யுள்
அடிபல தொடுத்த தனிப்பாச் செய்யுள்
உரையிடை மிடைந்த பாட்டுடைச் செய்யுள்
இசைநுவன் மரபி னியன்ற செய்யுள்
நயநிலை மருங்கிற் சாதியொடு தொகைஇ
யவையென மொழிப வறிந்திசி னோரே.

*என்றோதப்பட்டவெல்லாம் அணியியலிலுட் காண்க' என்று மற்றோரிடத்தே அதே சூத்திரவுரையில் கூறுகிறார். பின்னும் அடியோத்து 1ஆம் சூத்திரவுரை, அணியியலுடையாரும்,*

இயன்ற செய்யுட் கியைந்த பொருளை
உயர்ந்த நடையால் உணரக் கூறலும்
அருங்கல மொழியால் அரில்தபக் காட்டலும்
ஒருங்கிரண் டென்ப உயர்நடைப் பொருளே.

*என்னும் சூத்திரத்துள், ஒருங்கிரண்டு என்புழி ஆற்றலாற் பொருளை என்ப என்னும் முற்றுச்சொல்லோடு புலவர் என்னும் பெயர்கூட்டிப் பொருள் உரைத்தாராகலின் என்கிறது. இங்கு பொருள் உரைத்தார் என்றமையால், இவ்வணியியல் உரையோடு கூடிய நூல் என்றும் நாம் கருதுகிறோம். மற்றுமோரிடமும் இங்கு கருதத்தக்கது.*

காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனில் என்றாங்கு
இருமூ வகைய பருவம்; அவைதாம்,
ஆவணி முதலா இவ்விரண் டாக
மேவின திங்கள் எண்ணினர் கொளலே.

*இந்த இருது வருணனை அணியியலுட் காண்க' (யாப்பருங்கல விருத்தி, சித்திரக்கவி மாலை கூறும் மாலைமாற்றே என்னும் சூத்திர உரை மேற்கோள்).*

*இனி, நேமிநாத உரையாசிரியரும் இவ்வணியியலைக் குறிப்பிடுகிறார். (எழுத்து 4, 20ஆம் செய்யுட்களின் உரை: இரு சூத்திரங்களை இரு இடங்களிலும் குறிப்பிடுகிறார்). அவையும் தண்டியலங்காரத்துள் காணப்பெறவில்லை; அவை பின்வருவன:*

புனையறு செய்யுட் பொருளை யொருவழி
வினைநின் று விளக்கினது விளக்கெனப்படுமே.

முதலிடை கடையென மூவகை யான.

இவ்வாறு கிடைக்கும் மேற்கோள்களால் சில செய்திகள் விளக்க மாகின்றன. பண்டை அணியியல் என்பது, செய்யுள் வகை களையும் ஆராய்ந்த அணியிலக்கண நூல்; 27 அணிகளை அந்நூல் விளக்கிற்றுப் போலும்; இருது வருணனை கூறியமை யால் காப்பிய இலக்கணமும் அதனுள் சொல்லப்பட்டது போலும்; அன்றியும் அதற்கோர் உரை இருந்தது என்ற செய்தி கள் அறியக்கிடக்கின்றன. யாப்பருங்கல விருத்தியுரைகாரர் செய்யுளியலுடையாளர் என வேறொரு செய்யுளியல் நூலைப் பலமுறை குறிப்பிடுவதும் இங்கு அறியத்தக்கது.

தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் 108ஆம் சூத்திரவுரையில் பேராசிரியர், 'கூறியது கூறல்' என்னும் குற்றம் வர நூல் செய்ததற்கு உதாரணமாக மூன்று அணி இலக்கணச் சூத்திரங்களைக் காட்டி, அவற்றுள் இக்குற்றம் வந்தமையைக் குறிப்பிடுகிறார். நூற்பெயர் கூறவில்லை. இச்சூத்திரங்கள் முற் கூறிய அணியியலில் உள்ளனவா வேறா என்பது விளங்கவில்லை. அவர் கூறும் பகுதி பின்வருவது,

தன்மை உவமை உருவகம் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப் பொருள் வைப்பு வேற்றுமை எனாஅ.

எனவும்,

உருவகம் உவமை வழிநிலை மடக்கே
விரிசுடர் விளக்கென மரீஇ வருவன.

எனவும் சில சூத்திரங்களை முதல் நிறீஇப் பின்னரும் அவ்வாய் பாட்டானே,

தன்மை உவமை உருவகம் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப் பொருள் வைப்பு வேற்றுமை என்றாங்கு
எண்வகை யியல செய்யுட் கணியென
மையறு புலவர் வகுத்துரைத் தனரே.

என்றாற் போலப் பின்னரும் அவ்வாறே சூத்திரம் செய்தல் கூறியது கூறலாய்ப் பயன்படாதாயிற்று'.

சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார், உரைப்பாட்டு மடையின் இறுதியிலும் மனையறம் படுத்த காதை 27ஆம்

அடியின் உரையில் உதாரம் என்னும் அலங்காரத்துக்கு ஆதார மாகவும், இரண்டு சூத்திரங்களைக் காட்டி; என்பது அணியிய லாகலான்' என்று எழுதுகிறார். இது முன்னர் விரிவாக ஆராயப் பட்டது அச்சூத்திரங்கள் பின்வருவன:

உரையும் பாடையும் விரவும் வருமே.

உதாரம் என்பது ஓதிய செய்யுளிற்
குறிப்பின் ஒருபொருள் நெறிப்படத் தோன்றல்.

இவ்விரண்டும் தண்டியலங்காரப் பொதுவணியியலுட் காணப் பட்ட போதிலும், இவை அணியியலிலிருந்து தண்டி எடுத்துக் கொண்டார் என்ற கருத்து அங்கு சொல்லப்பட்டது.

கிடைத்த அணியியற் சூத்திரங்களை ஆராயும்போது, அணியியலானது அணியிலக்கணம் கூறியதோடு, ஒருபுடை யாப்பையும் காப்பிய இலக்கணம் கூறும் பாட்டியல் பகுதியை யும் அடக்கியிருந்தது என்று அறிகிறோம்.*

**தண்டியலங்காரம்**

அலங்காரம் என்பது வடசொல்; தமிழில் இன்று இச்சொல் அழகு என்ற பொருளில் வழங்குகிறது. பாட்டில் காணப்படும் அழகை அணியென்கிறோம். இலக்கணங்கள் அணி, அலங்காரம் என்ற இரு சொற்களையும் ஒரே பொருளில் வழங்கும். தண்டி யலங்காரம் என்பது தண்டி என்பவர் செய்த அணி இலக்கணம் என்று பொருள்படும். இது அணியிலக்கணம் ஒன்றையே சொல் வதற்கெழுந்த பண்டைய நூல். வடமொழியில் தண்டி என்ற ஆசிரியர் செய்த காவியாதரிசம் என்ற அலங்கார சாஸ்திரத்தின் வழி நூலாகும். வடமொழி நூல் மிகவும் சிறப்புடையது. வடநூல் ஆசிரியர் ஆசிரிய தண்டி என்று சிறப்பித்துக் கூறப்பெறுவார். அதற்கு 13 உரைகள் உள்ளன என்றும், இரண்டு உரைகள் தமிழரால் செய்யப்பட்டன என்றும், இவர்கள் உரையில் தமிழ்த் தொகைநூல்கள் உதாரணமாய்க் காட்டப்பட்டுள்ளன என்றும் சொல்வர். வீரசோழியத்தில் ஐந்தாம் அதிகாரமாகிய அலங்காரப் படலம் காவியாதர்சத்தின் மொழிபெயர்ப்பே என்றும் ஆராய்ச் சியாளர் கூறுவர்.

* இவ்வணியியல் எட்டாம் நூற்றாண்டில் தோன்றியிருக்கலாம் என்று தெரிகிறது.

அணியிலக்கணம் கூறுவதற்கென்றே எழுந்து இன்று கிடைக்கும் நூல்களில் தண்டியலங்காரமே பழமையானது. பிற நூல்கள் மாறனலங்காரம், குவலயானந்தம் என்பன. இறந்துபோன அணியியல் 24 அணிகளைக் கொண்டிருக்கலாம் என்று குறிப்பிட்டோம். தண்டி கூறுபவை 35; மாறனலங்காரம் 64; குவலயானந்தம் 100. அணிகளைப் பெருக்கிக்கொண்டு போவது மட்டுமே சிறப்பாகாது. முந்தையோர் அணிகளைச் சுருக்கிச் சிலவற்றிலேயே அடக்கிக் கொண்டனர்.

அணியிலக்கணம் கூறும் பொருள் பொதுவாக, சொல்லணி பொருளணி என இருவகை. தொல்லாசிரியர் நூல்களை ஆராயின் அவர்கள் சொல்லணியைச் சிறப்பாகக் கருதவில்லை என்பது புலனாகும். அங்கு சொல்லணி சிறிதே காணலாம். திருஞான சம்பந்தர் தேவாரத்துள் வரும் மாலைமாற்று, ஏகபாதம், மடக்கு, எழு கூற்றிருக்கை முதலாயின சொல்லணிக்கு இலக்கியங்களாம். பொருளணிகளைத் தழுவி வடநூலையும் தழுவித் தண்டியலங்காரம் செய்யப்பெற்றது என்று கருதவேண்டும்.

தண்டியலங்காரத்துக்கு அணியியல் எனப்பெயர் வழங்கி இருக்கலாம்.* இந்நூலுக்கு ஆசிரியர் வைத்த பெயர், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்பன போல, அணியதிகாரம் என்பதே: 'இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின் அணியிலக்கணம் உணர்த்தினமையின் அணியதிகாரம் என்னும் பெயர்த்து' தற்சிறப்புப் பாயிரத்தையடுத்த உரைப்பகுதி.

தண்டியலங்காரம் மொழிபெயர்ப்பு நூல் என்று குறிப்பிட்டோம். மொழிபெயர்ப்பின் சிறப்பு எத்தகையது என்றும், இது எவ்வாறு பிரயோக விவேகமுடையாரால் போற்றப்பெற்றதென்றும் வை.மு. சடகோபராமானுசாசாரிய சுவாமிகள் தமது தண்டியலங்காரப் பதிப்பில் அழகாக எடுத்துக் கூறுகிறார்:

'ஒரு மொழியினின்றும் மற்றொரு மொழிக்கு ஒன்றை மொழிபெயர்த்துக் கொண்டு போகும்போது, முதனூலிலுள்ள செறிவும் பொலிவும் அழகும் நயமும் பெயர்ப்பாகிய வழிநூலிற் குறைவுபடுதல் உலகத்திற் பெரும்பான்மை, இந்நூலின் மொழிபெயர்ப்பு அக்குறைபாட்டுக்குச் சிறிதும் இடமில்லாத

* மாறனலங்கார ஆசிரியர் பாயிரவுரையுள் 'குணந்தொழில் சாதி' என்ற தண்டியலங்காரச் சூத்திரத்தைத் தந்து (39) என்பது அணியியலாகலின் என்றெழுதுவது காணத்தக்கது.

படி அமைந்து வேறொரு தனிநூல் போலவே விளங்குதல், இம் மொழி பெயர்ப்பாசிரியரது வியக்கத்தக்க திறத்தை நன்கு விளக்கும். இத்தன்மை, இருமொழியும் வல்லுநராய் இந்நூலை முதனூலோடு ஒப்பிட்டு நோக்குவார்க்குத் தானே விளங்கும். வடமொழிக் காவ்யாதர்ச நூலின் பெருமையும், ஆசார்ய தண்டி யென்று பலராலுங் கொண்டாடப்படுகின்ற அந்நூலாசிரியரது சிறப்பும் லோகப் பிரசித்தமானவை; அம்முதனூலின் மாட்சிக் குத் தக்கவாறே இவ்வழிநூல் அமைந்திருத்தலால், இவ்வழி நூலா சிரியரும் முதனூலாசிரியர் போலவே மிகவும் நன்கு மதிக்கத் தக்கவரென்பதற்குச் சிறிதுந் தடையில்லை.

'பிரயோக விவேக நூலார் 'தண்டியாசிரியரும் சிந்தாமணி யாரும் வடமொழியிற் பிறந்த வண்ணமே 'யுக்தமும் அயுக்தமும்', 'ராசமாபுரி', 'ரவிகுல திலகன்' என முறையே கூறுதல் காண்க' என்றும், 'நாலடியாரும் தண்டியாசிரியரும் சிந்தாமணியாரும் வடமொழியிற் பிறந்த வண்ணம் முறையே 'யோசனையோர் கேட்பர்', 'யுக்தமும் அயுக்தமும், 'ரவிகுல திலகன்' எனத் தற் சமமாகக் கூறினாற்போல, யாமும் உருவபேத மென்னாமலே ரூபபேத மென்றாம்' என்றும் இந்நூலாசிரியரைச் சிந்தாமணி நூலாசிரியரோடும் ஒப்ப நிறுத்தி மேற்கோளாகக் காட்டியிருத் தலும், இந்நூலாசிரியர் பெருமையை நன்கு விளக்கும்.'*

தண்டியலங்காரம் பொதுவணியியல் பொருளணியியல் சொல்லணியியல் என்ற மூன்று இயல்களையும்❖ 125 நூற்பாக் களையும் உடையது. முதல் இயலானது, பொதுவியல், செய்யுள் நெறியியல், செய்யுள் அணியியல் என்றும் பெயர் பெறுவதுண்டு. முதல் இரு இயல்களின் தொடக்கத்தில் கலைமகள் துதியாகக் காப்புச் செய்யுள் அமைக்கப்பெற்றுள்ளது. முந்தியது நூற்பா,

---

* தண்டியலங்காரப் பதிப்பு 1956, முகவுரை பக்கம் 3-4.

❖ தண்டியலங்காரத்தை முதனூலாகக் கொண்டு வேறோர் அணியிலக் கணம் செய்த மாறனலங்கார ஆசிரியர், பொதுவியல், பொருளணி யியல், சொல்லணியியல், எச்சவியல் என்ற நான்கியல்களாகச் செய்தார். அவர், கலைமலைவு என்ற இடத்தில், தண்டியாசிரியர் மேற்கோள் காட்டிய 'ஐந்தாநரம்பிற் பகைவிரவாதாறாகி' என்ற வெண்பாவைத் தந்து, 'எனத் தெண்டி எச்சவியலிற் கூறியதனால் அறிக' என்று எழுது கிறார் (323). சொல்லணியியலின் இறுதியில் வழுக்கள், மலைவு என்ற பொருள்கள் சொல்லப்படுவதை இவர் இவ்வாறு ஒழிபியலான எச்சவியலாய்க் கருதிச் சொல்கிறார் போலும். தண்டியில் எச்ச இயல் என்ற பிரிவு இல்லை.

பிந்தியது மட்டும் வெண்பா. மூன்றாம் இயலின் தொடக்கத்தில் ஒரு காப்புச் செய்யுள் இருந்திருக்கும் போலும்; அன்றி ஆசிரியர் விரிவான வேறுபாயிரம் செய்யவில்லை; தமக்கு மூலநூலையும் குறிப்பிடவில்லை.

நூலில் அணிக்கு எடுத்துக்காட்டாக 350க்கு மேற்பட்ட செய்யுட்கள் தரப்பட்டுள்ளன. இவை யாவுமே வெண்பாப் பாடல்கள். உதாரணச் செய்யுட்களைத் தண்டியாசிரியரே செய் தார் என்பது ஆன்றோர் கருத்து. 'தண்டியாசிரியர் மூலோதாரண மும் காட்டினாற்போல யாமும் உரை எழுதியதல்லது. மூலோதாரணமும் காட்டினாம்' என்று பிரயோக விவேகம் எழுதிய சுப்பிரமணிய தீக்கிதர் பிற்காலத்தில் எழுதுகிறார். இவ்வாறு உதாரணம் காட்டப்பெற்ற செய்யுட்களில் சுமார் 90 செய்யுட்கள் வீரசோழியத்துள்ளும் காட்டப்பட்டுள்ளன. வீர சோழியத்தின் காலம் வீரராசேந்திரன் காலம், கி.பி. 1063-1070, தண்டியலங்காரத்தின் காலம் இரண்டாம் குலோத்துங்கன் கால மாகிய கி.பி. 1133-1150 என்று பின்னே வரையறை செய்கிறோம். எனவே, வீரசோழியம் காட்டிய செய்யுட்களைத் தண்டியாசிரியர் தாமும் எடுத்தமைத்துக் கொண்டார் என்று கருதவேண்டும். வீரசோழிய ஆசிரியரான புத்தமித்திரனார் தாமே உதாரணச் செய்யுட்களைச் செய்து கொண்டார் என்று வரலாறு இல்லை. தமிழை ஆதரித்த மன்னனாகிய வீரராசேந்திரனைப் போற்றும் பாடல்கள் சில மட்டுமே அவர் செய்தார். ஆகவே ஏனைய பாடல்கள் யாவும் அவர்காலத்து வழங்கிய பழம் பாடல்கள் என்றே கருதத்தக்கவை. பழம்பாடல்கள் ஆதலினாலே தண்டி யாசிரியரும் அவற்றைத் தாமும் எடுத்துக்காட்டுகிறார் என்று கருதவேண்டும்.*

---

* வீரசோழிய உரையாசிரியர் காட்டும் மேற்கோட் பாடல்கள் தண்டி யிலும் காணப்படுவதால், தண்டியிலிருந்து வீரசோழிய உரையார் பாடல்களை எடுத்துக் கொண்டாரென்று சோமசுந்தர தேசிகர் எழுதியிருக்கிறார் - செந்தமிழ் தொகுதி 36, பக்கம் 389-393. மேலே காட்டிய விளக்கத்தால் இது பொருந்தாது என்பது வெளிப்படை. இரண்டாம் குலோத்துங்கனுக்கு முன் ஆண்ட (தந்தை) விக்கிரமனை யும் தண்டி குறிப்பிடுகிறார். ஆதலால் இவன் தேசிகர் குறிப்பிடுவது போல இராசேந்திர சோழனாக இருக்கவியலாது என்பது தெளிவு. (இராசேந்திர சோழன் விக்கிரமன் தந்தையான முதற்குலோத்துங்க னுக்குப் பாட்டன்; இவன் காலத்தில் தண்டி வாழ்ந்தால் விக்கிரமனைக் குறித்த பாடலை இவர் காட்டவியலாது.) கலிங்கப் போரைத் தண்டி யாசிரியர் குறிப்பிடுவது, பாட்டன் வெற்றியை மரபு பற்றிப் போற்றிய தாகும்; கலிங்கம் வென்ற இராசேந்திரன் என்று பொருள்படாது.

இவர் செய்துள்ள மேற்கோட் பாடல்கள் எல்லா வகை யான சிறப்பும் பெற்றுள்ளன. அகத்துறைப் பாடல்கள் அதிகம்; மிகப் பெரும்பான்மையான பாடல்கள் தலைவன் தலைவி உருவ வருணனை கூறுவனவாகவே உள்ளன. தலைவன் பெயர் குறித்த பாடல்கள் பெரும்பான்மை சோழ அரசரைப் புகழ்வன. இராசராசன், முதற்குலோத்துங்கன், விக்கிரமன், அனபாயன் என்போர் போற்றப்பெற்றுள்ளனர். அகத்தியர், மனுநீதிச் சோழர், காவிரி, தமிழ், காஞ்சி நகர் பாடல்கள் குறிப்பிடத்தக்கவை. வஞ்சி என்பது கருவூர்; இது சோழருக்கு உரியது என்பர்.

பல பாடல்கள் பாரத வெண்பா என்ற கருதத்தக்கன. இன்று கிடையாமல் இறந்து போன பாரத வெண்பா நூற் பகுதியில் இவை இருந்தன போலும். இவர் காட்டும் பிறநூற் பாடல்கள்; குறள், பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பட்டினப்பாலை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு, நாலடி, நான்மணி, திரிகடுகம், முத்தொள்ளாயிரம், கண்ட னலங்காரம், பொய்கையாழ்வார் அந்தாதி, சம்பந்தர் தேவாரம் முதலாயின. பொய்கையாழ்வார் அந்தாதிப் பாடல்களோடு கூட, திருமழிசையாழ்வாரின் சீடரான கணிகண்ணன் பாடிய தென்று வழங்கும் ‘ஆடவர்களெவ்வாறு அகல்வர் அணி வெஃகாவும்’ என்ற பாடலையும்* இவர் தருகிறார்.

தமிழினிடத்து இவர் அளவற்ற ஈடுபாடுடையவர் என்பது சொல்லாமலே அமையும். முந்தைய அணியியல் அலங்கார சாஸ்திரம் தமிழில் இறந்துபோனமையுணர்ந்து இவர் புதிதாய் வடமொழிக் கலையைப் பயின்று, தமிழுக்கு ஓர் அலங்கார சாஸ்திரம் செய்ய முனைந்தது, இவருடைய புலமையை மட்டு மல்ல, தமிழ்ப் பற்றின் மிகுதியையும் நன்குணர்த்தவல்லது. உல கத்தில் இருளகற்றுபவை சூரியனும் தமிழும் என்று இவர் பாடிய பாடல் நன்கறிந்தது:

ஓங்க லிடைவந்து, உயர்ந்தோர் தொழவிளங்கி,
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் : — ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன்று, ஏனையது
தன்னே ரிலாத தமிழ்.

இதுபோலவே நன்கறிந்த மற்றொரு பாடல், ‘மூவாத் தமிழ் பயந்த’ என்பது பின்னே காலம் என்ற தலைப்பில் காட்டப்

---

* இது யாப்பருங்கல விருத்தியுரையிலும் காட்டப்பட்டுள்ளது.

பட்டுள்ளது. தமிழ் முத்தரையர் கோவையின் பெயர் குறிப்பிடு கிறார்: இந்நூல் இப்போது இல்லை.

பழமொழிபோல் இவர் கூறும் சில வெண்பா இறுதித் தொடர்கள் மிகவும் அழகாயுள்ளன. காதற்குளதோ கரை, தண்ணளிக்கும் உண்டோ தரம், இறவாது வாழ்கின்றார் யார், பொருள் பொழிவார் மேற்றே புகழ், கொடியார்க்கும் உண்டோ குணம், எவ்வுயிரும் காத்தளிக்கையன்றோ கடன் என்பன சில. பெருங்காப்பிய இலக்கணம் இதனுட் கூறப்பெற்றிருப்பது சிறப்பு.

எத்தனையோ அணியிலக்கண நூல்கள் தோன்றினும், தண்டியலங்காரம் யாவற்றினும் மேலான சிறப்புடையதாய்த் திகழ்கிறது, தண்டியின் காலத்துக்குச் சற்றே அடுத்து வந்த அடியார்க்கு நல்லார் அணியியல் என்று அணியிலக்கண நூலைக் குறிப்பிடுவதோடு, தண்டிக்குச் சற்று முன்வந்த வீரசோழியம் கூறுகின்றபடி அணிகளின் பெயரைக் குறிப்பிடாமல், தண்டியலங்காரத்தில் வரும் தெரிதருதேற்ற உவமை, பின்வருநிலை, பரியாயம் முதலான அணிகளின் பெயர்களையே தம் சிலப்பதிகார உரையுள் குறிப்பிடுகிறார்; இதே பெயர்கள் முன்னிருந்த அணியியலுள் இருந்தனவா என்பது தெரியவில்லை. இப்பெயர்களைப் பார்க்கும்போது, பெயர்களை நல்லார் இவர் நூலில் இருந்து எடுத்திருக்கலாம் என்றும் கூறத் தோன்றுகிறது.

பின்வந்த பரிமேலழகர், தண்டியைப் பெயர்கூறாது காட்டு கிறார். சமாசோக்தி என்ற வடநூல் தண்டியலங்காரத்தைப் பிறிதுமொழிதல் என்று கூறி, 'இது பிறிது மொழிதலென்னும் அலங்காரம்; இதனை நுவலா நுவற்சி என்பாரும் ஒட்டென் பாரும் உளர்' என்று எழுதுகிறார். இவ்விரு பெயர்களுள் ஒட்டு என்பது தண்டியலங்காரம் சமாசோக்திக்குக் கூறியுள்ள பெயராகும்.

அணியிலக்கணம் செய்வதற்கு, மிகச்சிறந்த புலமை வேண்டும் என்பது சொல்லாமலே அமையும். இவ்வாசிரியரிடத்து, அவ்வாற்றல் குறைவற நிரம்பியிருந்தது என்பதை, இதனினும் சிறந்த அலங்கார நூல் வேறு எழவில்லை என்பதால் உணரலாம். இவ்விலக்கணப் புலமையோடு, இவரிடத்துச் சிறந்த கவிப் பண்பும் அமைந்திருந்தமை இவர் செய்தமைத்துள்ள உதாரணச் செய்யுட்களில் ஒவ்வொன்றாலும் உணரலாம். கவிச்சுவை தேர்வதில் சிறந்த ரசிகத் தன்மையுடையவர். பின்வரும் பாடல் சிறந்த எடுத்துக்காட்டு:

செந்திருவும் திங்களும் பூவும் தலைசிறப்பச்
சந்தத் தொடையோ டணிதழுவிச் – செந்தமிழ்நூல்
கற்றார் புனையும் கவிபோல் மனங்கவரும்
முற்றா முலையாள் முகம்.

*உலகைப் படைத்த பிரமன் தலையிழந்ததையும் கொலை செய்த சண்டேசர் குற்றம் நீங்கியமையும் ஒப்பிட்டு, வினையின் விபரீதப் பயனைச் சுவைபட ஒப்பிட்டுக் காட்டுகிறார்:*

தலையிழந்தான் எவ்வுயிரும் தந்தான், பிதாவைக்
கொலைபுரிந்தான் குற்றம் கடிந்தான்; – உலகில்
தனிமுதன்மை பூண்டுயர்ந்தோர் வேண்டுவரேல் தப்பாம்
வினையும் விபரீத மாம்.

*தில்லையைப் போற்றுகின்ற பாடல்கள் பல. அவற்றுள் ஒன்று:*

காலையும் மாலையும் கைகூப்பிக் கால்தொழுதால்
மேலை வினையெல்லாம் கீழவாம் – கோலக்
கருமான்தோல் வெண்ணீற்றுச் செம்மேனிப் பைந்தார்ப்
பெருமானைச் சிற்றம் பலத்து.

*இவருடைய கவிதைப் பண்புக்குச் சில எடுத்துக்காட்டுக்கள் இங்கு தருவது பொருத்தமாயிருக்கும். இவருடைய நோக்கம், கவிதையல்ல.... ஒரு காவியமோ நூலோ செய்வதல்ல: எடுத்துக் கொண்ட ஓர் அணியைப் பாடலில் அமைத்துக்காட்டுவது. இவ்வாறு கொண்ட வரம்புக்குள் இவர் பாடலில் கவிச்சுவை சிறப்பாகப் பொருந்தியிருப்பதே இவருடைய புலமைக்குப் புகழ்.*

மலையிற் பயிலா மடமஞ்ஞை, வாரி
அலையிற் பிறவா அமுதம், – விலையிட்டு
அளவாத நித்திலம், ஆராத தேறல்:
வளவாள் மதர்நெடுங்கண் மான்.

*(இவ்வெண்பா, ஓர் உலாவின் பகுதியோ என்று கூட எண்ணும்படி உள்ளது.) எடுத்துக்காட்டாகத் தரப்பட்ட பல பாடல்கள் அகத்துறை என்று சொன்னோம். நீதி பற்றியனவும் சில உள்ளன.*

துறவுளவாச் சான்றோர் இளிவரவும், தூய
பிறவுளவா ஊன்துறவா ஊணும் – பறைகறங்கக்
கொண்டான் இருப்பக் கொடுங்குழையாள் தெய்வமும்ஒன்று
உண்டாக வைக்கற்பாற் றன்று.

*ஆசிரியர்*

*ஆசிரியர் பெயர் தண்டி என்று வழங்கப்பெறுகிறதேயன்றி, இவர் வரலாறு சிறிதும் விளக்கமாக இல்லை, தண்டி என்ற சொற்பொருளும் விளங்கவில்லை. 63 நாயன்மார்களுள் குருடரான தண்டியடிகள் என்பவரும் ஒருவர். சண்டேச நாயனார் தண்டி எனவும் வழங்கப்படுகிறார். 'நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்' என்பது திருவாசகம்; தண்டித்தல் - ஒறுத்தல். ஆனால் இவர் பெயர் வடமொழித் தண்டியின் பெயரை அப்படியே இட்டது போலும்; இது இவரது இயற்பெயரா யிருந்திராது. மாறனலங்காரவுரையாசிரியர், இவரைப் பல இடங்களில் 'முதனூல் செய்த தெண்டியாசிரியர்' என்று குறிப்பிடுகிறார். நம்பியாண்டார் நம்பியைத் தமிழ் வியாசர் என்று சொல்வது போல, இவரைத் தமிழ்த்தண்டி என்று போற்றியிருப்பார்கள். இயற்பெயர் மறைந்தே போய்விட்டது. தண்டியலங்காரம், மாறனலங்காரத்துக்கு முதல் நூல். ஏடுகளிற் காணப்படும் இதன் சிறப்புப்பாயிரச் செய்யுள் பின்வருவதாகும்:*

வடதிசை யிருந்து தென்மலைக் கேகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை
இருந்தவன் தன்பால் அருந்தமிழ் உணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
அணிபெறும் இலக்கணம் அரிதினில் தெரிந்து,
வடநூல் வழிமுறை மரபினில் வழாது
ஈரிரண் டெல்லையின் இகவா மும்மைப்
பாரத விலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடிச் செம்பியன் அவையத்து
அரும்பொருள் விளங்க யாப்பின் வகுத்தனன்:
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்,
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரியல் அம்பி காபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டி என் பவனே.

*இப்பாடல் செய்தார் யார் என்று தெரியவில்லை; உடன்காலமா பிற்காலமா என்பதும் தெரியவில்லை. எனினும் தண்டியின் நாடு, தந்தை முதலியன கூறுவதால், உடன்காலம் என்றே கொள்ள*

வேண்டும். இதனால் பின்வரும் செய்திகள் புலனாகின்றன. அகத்திய முனிவரின் மாணாக்கர் பன்னிருவருள் முதல் மாணாக்கராகிய தொல்காப்பியர் செய்த நூலின் வழியே வடமொழி மரபையும் தழுவி, தண்டி என்பவர், ராக தாள பாவம் என்ற மும்மைப் பரத இலக்கணமும் தழுவி, தமிழில் இந்த அணியிலக்கண நூல் செய்தார்; இவர் செம்பியன் அவையத்தில் இதை அரங்கேற்றினார்; இவர் காவிரி நாட்டு அம்பிகாபதி என்பவரது புதல்வர்; வடமொழி நாடகநூல் உணர்ந்த தமிழ்ப்புலவர். தில்லை மன்றத்து நாடகம் நவிற்றுபவர். செம்பியன் ஆன சோழன் இன்னார் என்று பாடல் தெளிவாய்க் குறிப்பிடவில்லை.

இங்கு குறித்த செய்திகள் யாவும் பொருந்துவனவே. இவர் அம்பிகாபதியின் புதல்வர் என்பது ஏற்கத்தக்கதே. அவர் சோழ நாட்டில் வாழ்ந்தார், அம்பிகாபதி கோவை என்ற நூல் செய்தார் என்பதை அவர் வரலாற்றில் பார்க்கலாம்.

திரிபங்கி என்ற சித்திரக் கவி வகைக்கு எடுத்துக்காட்டாக இவர் செய்துள்ள ஒரு பாடலில் அம்பிகாபதி என்ற பெயர் சிவ பெருமானைத் துதிக்கும் பெயர்களுள் ஒன்றாக வருகிறது. தம்முடைய தந்தை பெயரை இவர் இவ்வாறு அமைத்துப் பாடியிருத்தல் பொருத்தமுடையதே. இப்பாடல் கட்டளைக் கலித்துறையாயினும், வரிதோறும் மூன்றாகப் பிரிபட்டு, மூன்று பகுதிகளும் வரிதோறும் எதுகையுடையனவாய், மூன்று தனிச்செய்யுட்களாய்ப் பிரிபட்டுத் தனியே பொருள்தந்து நிற்பனவாதலால் திரிபங்கியாயிற்று:

ஆதரந்தீர் அன்னைபோ லினியாய், அம்பிகா பதியே,
மாதுபங்கா, வன்னிசேர் சடையாய், வம்புநீண் முடியாய்,
ஏதமுய்ந்தார் இன்னல் சூழ்வினைதீர், எம்பிரான் இனியார்
ஓதுமொன்றே, உன்னுவா ரமுதே, உம்பர் நாயகனே.

தண்டியலங்காரத்துள் சமநிலை என்ற வைதருப்ப நெறியின் குணத்துக்கு எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ள இரு செய்யுட்களும் - சோகம் எவன்கொல், இடர்த் திறத்தைத் துற - அம்பிகாபதி கோவைக்குரியன என்பது பின்னே பிரபந்த இலக்கியம் என்ற அத்தியாயத்துள் சொல்லப்படும். எனவே, இங்கு இவர் தம் தந்தை செய்த நூலை எடுத்துக்காட்டுகிறார் என்று கொள்வது பொருத்தமாகும்.

*மிக அதிகமான பாடல்கள் தில்லைக் கூத்தப் பெருமானைப் புகழ்ந்து பாடுவதால், இவர் தில்லையில் நாடகம் நவிற்றும் புலவர் என்ற கூற்று கொள்ளத்தக்கதே, தண்டி, சோழ மன்னனின் அவைக்களத்தில் நூலை அரங்கேற்றியிருத்தல் இயல்பே, இச்சோழன் இரண்டாம் குலோத்துங்கன் என்பதைப் பின்னே காண்போம். எல்லையில்லாத தமிழ் இலக்கியம் பெருகியது இம்மன்னன் காலத்தில்; இதை இவ்வரலாற்று நூல் எங்கும் விளங்கக்காணலாம். இக்காலத்தில் தண்டியும் வாழ்ந்தார் என்பது பொருந்தக் கூடியதே. மாறனலங்காரச் சிறப்புப் பாயிரமும் தண்டியாசிரியரைப் பாராட்டிக் கூறும்:*

பரத கண்டத்துப் பழம்பதி எனப்புகும்
விண்தொட நிவந்த பொழில்வட வேங்கடம்
தெண்டிரை கறங்குதென் குமரிஎன் றாயிடை
அமிழ்தினும் வான்சுவைத் தாகிய மும்மைத்
தமிழ்தெரி புலமைச் சான்றோர் மதிக்கும்
முதுமொழித் தெண்டி முதனூ லணியொடும்
புதுமொழிப் புலவர் புணர்த்திய அணியையும்
தனாதுநுண் ணுணர்வால் தருபல அணியையும்
மனாதுறத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்.

*என்ற பகுதி காண்க. மாறனலங்காரம் 16ஆம் நூற்றாண்டில் செய்யப்பட்டது.*

*இனி, இச்சிறப்புப் பாயிரச் செய்யுளானது, மூலநூலையோ மொழிபெயர்ப்பு என்பதையோ குறிப்பிடவில்லை. தெண்டி என்ற பெயரே இயற்பெயர் என்பதுபோல இப்பாடல் கூறுகிறது. இவரது இயற்பெயர் மறைந்து மூலநூலின் சிறப்பினால் அதன் ஆசிரியர் பெயரால் இவர் தமிழ்த்தண்டி எனவும், தண்டி எனவும் வழங்கப்பெற்றார் என்று கொள்ளவேண்டும்.*

ஆடக மன்றத்து நாடகம் நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்.

*என்ற வரிகளைக் கொண்டு, மு. இராகவையங்கார், 'தண்டியலங்கார ஆசிரியரும் ஆடல் வல்லோருள் ஒருவராய்க் கனக சபையில் இவ்விருத்தியை மேற்கொண்டு நடத்தி வந்தவர். இத்தகைய விருத்தி கொண்டோருக்கு அலங்கார சாஸ்திரப் பயிற்சி இன்றியமையாததாம்' என்பர். 15ஆம் நூற்றாண்டில் நவநீதப் பாட்டியல் செய்தவரான நவநீத நடனாரும் ஆடல்*

வல்லார் மரபினர் என்பதும் இங்கு அறியத்தக்கது. ஆடல் வல்லவர் நாடகத்தமிழ் வல்லார்; அவரே இசைத்தமிழும் வல் லாராயிருத்தல் வேண்டும்; அடியார்க்கு நல்லார் உரையால் இது நன்கு விளங்கும். தண்டியும் இசைநூல் வல்லவர் என்பதை ஒரு பாடலால் அறிகிறோம். கலைமலைவு:

ஐந்தாம் நரம்பாம் பகைவிரவா தாறாக
வந்த கிளைசொன்ன நான்காய – முந்தை
இணைகொண்ட யாழியற்றும் ஏந்திழைதன் னாவித்
துணைவன் புகழே தொடுத்து.

ஐந்தாம் நரம்பு கிளை, ஆறு பகை, நான்கு நட்பேயன்றி எட்டா வதாகிய இணை என்றது - பிழை; ஆகவே கலைமலைவு. இச் செய்திகளை அறிந்து உதாரணத்துக்காகப் பாடலில் வைத்துக் காட்டியவர் இசைவல்லவர் என்பதில் ஐயமில்லை.

திசைகளைக் குறித்து இவர் கூறும் இரு பாடல்கள் குறிப் பிடத்தக்கன. ஒன்று நால்திசையும் திசைப்பாலகரையும் குறிப் பிடும் 'தெற்குக் குடக்கு' என்ற பாட்டு.* மற்றது பின்வருவது:

குடபால் வடபால் குணபால்தென் பாலென்று
அடைவே திசைநான் கவற்றுள் – இடையிரண்டு
நன்மைபுரி வோர்பயந்து நோக்குப; ஏனைய
வன்மை புரிவோர்க்கே யாம்.

வடக்கும் கிழக்கும் நன்மைக்காக நோக்கும் திசைகள், மற்றை இரண்டும் வேறு என்று இவர் கூறுவது இன்றும் வழக்கில் உள்ளது. அரங்கில் கூத்தியற்றுபவரே திக்குப்பாலகரைத் தொழு வதும் திசைகளைக் கருதுவதும் இலக்கியங்களிற் சொல்லப் பட்டிருப்பதுடன், இன்றும் நாட்டிய மரபாகவும் உள்ளது. எனவே, இவற்றைத் தெரிந்து குறிப்பிடுகின்ற ஆசிரியர் நாடகம் நவிற்றும் மரபினர் என்பது பொருத்தமுடையதே.

வடமொழி நூலாசிரியர் தம்மை யாதரித்த பல்லவ மன்னனைப் புகழ்ந்து எடுத்துக்காட்டுக்கள் இயற்றிச் சேர்த்த இடங்களில், இவர் தம்மை யாதரித்த அனபாயச் சோழனைப் புகழ்ந்து பாடல் இயற்றியுள்ளார் என்பர். இது இயல்பே. உதாரணச் செய்யுட்கள் பல. வடநூற் பாடல்களின் மொழி

* இங்கு இவர் இந்திரனைத் திக்குப் பாலகனாகக் கூறாது சூரியனைக் கூறியிருப்பது பிழையென்று தோற்றுகிறது. ஒருகால் அத்தகைய மரபும் இருந்திருக்கலாம்.

பெயர்ப்பாக அமைந்தவை. பாடல்களின் அமைப்பைப் பார்க்கும் போது, இம்மொழிபெயர்ப்பு அமைப்புத் தெளிவாய்ப் புலப் படும். சில கருத்தில் வேறுபாடு இருப்பினும், பண்டைய நூல் களிலிருந்து எடுத்து அமைத்தவை.

தண்டியாசிரியர் எடுத்துக்காட்டாகக் கூறும் பாடல்களுள் ஒன்று இங்கு கருதத்தக்கது:

> **சென்று செவியளக்கும் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே**
> **நின்றளவில் இன்பம் நிறைப்பவற்றுள், – ஒன்று**
> **மலர்இவரும் கூந்தலால் மாதர்நோக்கு, ஒன்று**
> **மலரிவரும் கூத்தன்தன் வாக்கு.**

'மலரி எனப்பட்ட ஊரில் உண்டாகிய கூத்தன் என்னும் இயற் பெயரையும் சக்கரவர்த்தி என்னும் சிறப்புப்பெயரையும் உடை யானது கவி; மலரி என்பது ஓர் ஊர்' என்பர் உரைகாரர். இக் கவிச்சக்கரவர்த்தி கூத்தனே. ஒட்டக்கூத்தர் எனப் புகழ் வாய்ந்த கவிஞர்.* இவர் பிறந்த ஊர் மலரி போலும்; இம்மலரி திரு வெறும்பியூர் என்ற தேவாரத் தலமென்பர். கூத்தரைத் தண்டி இவ்வாறு போற்றுகின்றமையால், இவர் அவர்தம் மாணாக்கரு மாகலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுவர்.❖

## நூற்பொருள்

முதல் பகுதியாகிய பொதுவணி இயலில் ஆசிரியர், நாமகளை வணங்கி, செய்யுள் வகையையும் செய்யுள் நெறியையும் சொல் லுகிறார். செய்யுள் வகையாவது, முத்தகம் குளகம், தொகை நிலைச் செய்யுள், தொடர்நிலைச் செய்யுள், பெருங்காப்பியம், சிறுகாப்பியம், சொற்றொடர்நிலை என்ற பொருள்கள் கூறு கிறது. செய்யுள் என்ற பகுதி, வைதருப்பநெறி கௌடநெறி என்ற இரண்டையும் கூறி, செறிவு முதல் சமாதி ஈறாகவுள்ள பத்துக் குணங்களையும் கூறுகிறது.

---

* இந்நூல் அத்தியாயம் 3 பார்க்க.

❖ இந்நூலாசிரியரான தண்டியார் நாடக நவிற்றுந் தொழிலுடைய ராதலால் தம்மைக் கூத்தன் என்றார்; மேலே காட்டிய செய்யுளால் இவரது ஊர் மலரி என்று ஒருவாறு துணிதல் தவறாகாது என்று சோமசுந்தர தேசிகர் எழுதியிருக்கிறார் - செந்தமிழ் தொகுதி 36, பக்கம் 387. இது பொருந்தாது. உரையானது கவிச்சக்கரவர்த்தி கூத்தர் என்று தெளிவாகக் கூறுகிறது; அவர் ஒட்டக்கூத்தர் அன்றி, தண்டியார் தம்மையே இப்படிப் புகழ்ந்து ஒரு செய்யுள் செய்து மேற்கோள் காட்டினார் என்பது இன்னும் பொருந்தாது.

இரண்டாம் பகுதியாகிய பொருளணியியலே அணியிலக்கத்துள் சிறப்பான பகுதி. நாமகளை வணங்கி ஆசிரியர், ஏற்ற செய்யுட்கணி ஏழைந்து என்று கூறுகிறார். அவை தன்மையணி தொடங்கிப் பாவிக அணி இறுதியாகவுள்ள முப்பத்தைந்து. இதன்கண், உவம உருபுகளாகப் போல முதல் செத்து வரையிலுள்ள முப்பத்தைந்தும், நிகண்டு கூறும் பொருள் போல அமைந்திருப்பது நோக்கத்தக்கது. இவ்வணிகளுக்கு எடுத்துக் காட்டுத் தருமிடத்து, உரிய இடங்களில் இவற்றை விரித்தும் சொல்லுகிறார். தன்மை 4, உவமை மூவகை, அதன் விரிவு 24, அவ்வுவமை வேறு 8 அணிகளோடு கூடிவருதல், வேறுபாடுகள், உருபுகள், உருவகம் 15, அது 6 அணிகளோடு கூடிவருதல், புறனடை, பின்னும் உவமைகள் 6, தீவகம் 10, பிற அணிகளோடு கூடிவருதல், பின்வருநிலை 4, முன்னவிலக்கின் வகைகள் முதலான எல்லா அணிகளுக்கும் பொருள் வகைகள், வேறுபாடுகள், புறனடை ஆகிய பொருள்களை மிகவும் விரிவாய்க் கூறுகிறது. முன் குறிப்பிட்டது போல ஒவ்வோர் அணி வகைக்கும் ஆசிரியர் உதாரணச் செய்யுள் அமைத்திருக்கிறார். இவ்வணிகள் பலவற்றுக்கும் பெயர் சிலசமயம் தமிழாகவும் சிலசமயம் வடமொழியாகவும் அமைந்துள்ளது. ஆசிரியர் வடநூலைத் தமிழ் செய்தார் ஆகையால் வட சொல்லையே அமைத்துக் கொள்வது எளிதாயிற்று. இப்பகுதியுள் அவர் சொல்லியுள்ள அணிகள் 35 ஆயினும், அவற்றின் வகைகளும் சேர்ந்து 225 ஆகும். சுவையணி என்றவிடத்து, சாந்தம் என்பது நீக்கி எண்வகைச் சுவைகளே சொல்கிறார்; கருணை என்பது இங்கு காமம் என்றே உள்ளது.

அடுத்தது சொல்லணி இயல் என்பது 35 நூற்பாக்களை உடையது. இது முதற்பகுதி மடக்கு, சித்திரக்கவி என்ற இரு பகுதிகளையும் பிறகு ஒழிபியல் என்று சொலத்தக்க வழுவியல், மலைவியல் ஆகிய இரு பகுதிகளையும் கொண்டது. மடக்குக்கள் பொதுவாக யாப்புக்குரிய பொருளாகும். அவை 315. அவற்றுள் இங்கு உதாரணம் காட்டப்பட்டவை 56 மடக்கு வகை. இவற்றுடன்கூட, இவர் இவற்றுக்கெல்லாம் தாமே உதாரணம் செய்தமைத்திருக்கிறார்.

இதன் பின்னர் சித்திரகவி. 12 மிறைக்கவிகள் இங்கு கூறுகிறார். மாலைமாற்றுக்கு மூன்று குறள் வெண்பாக்கள் தந்திருக்கிறார். வினா உத்தரம் என்பது சுவையாக உள்ளது.

**பூமகள் யார்? போவானை யேவுவான் ஏதுரைக்கும்?**
**நாமம் பொருசரத்திற்கு ஏதென்பார்? – தாமழகின்**
**பேரென்? பிறைசூடும் பெம்மான் உவந்துறையும்**
**சேர்வென்? – திரு வேகம் பம்.**

*முயலாமை யகல், சோதி தேறு என்ற பொருள் தருகின்ற 'நல் வினை நாற்கால் விலங்கு' என்ற பாடல் பின்னர்க் காட்டப்படும். அப்படியே, 'நித்தொழிந்த' என்ற பாடலில், நிலையாமை கடைப் பிடி, புண்ணியம் செய் என்பது விடையாக வருகிறது:*

**நீத்தொழிந்த ஆறைந் தடக்கிப்பின் நிச்சயமே**
**வாய்த்தமைந்த வாயில் பெண்ணானையே – கூர்த்தகு**
**வாளேறோடு ஓசை விளைநிலம் இவ்வல்லாற்**
**கேளாய் உடன்வருவ தில்.**

*இவ்விரண்டினாலும், ஆசிரியருடைய உயர்ந்த மனப்பண்பு புலனாகின்றது. அடுத்த பாடல் சம்பந்தர் பாடலை உள்ளடக்கிய காதை கரப்பு. பின்னர் படம் வரைந்து எழுத்துக்களை அடக்கு வதாயுள்ள நான்காரை, ஆறாரை, எட்டாரைச் சக்கரங்கள் முதலியன. மூலத்தில் அக்கரச்சுதகம் என்ற சித்திரக்கவியோடு 12 என்ற எண் முடிகிறது. பின்னும் எண்வகையான சித்திரக்கவி இலக்கணங்கள், விளக்கத்தோடு காணப்படுகின்றன. இவற்றில் உதாரணச் செய்யுள் மட்டும் ஆசிரியரே செய்தார் போலும். நிரோட்டகம் என்ற பாடல் வகை இங்கு சொல்லப்பட்டுள்ளது. சித்திரக் கவிகள், புலமையை மட்டும் விரும்பிச் சொல்லணி, நாடும் பழம் புலவர்களுக்குப் பெருவிருந்து என்பதில் ஐயமில்லை.*

*இறுதிப் பகுதிகள் முன் சொன்னவாறு வழுவும் மலைவும். இப்பகுதியையே மாறனலங்கார ஆசிரியர் எச்சவியல் என்று கொண்டார்.*

*நிரோட்டகத்துக்கு, 'என்னை சூத்திரம்' என்றாற்கு என்று சொல்லி உரையில் ஒரு குறட்பா இலக்கணச் சூத்திரம் மேற் கோள் காட்டப்பட்டது. இவருக்கும் முற்பட்ட காலத்தில் (எட்டாம் நூற்றாண்டு) கல்லாடரே குறட்பாவில் பாட்டியல் நூல் செய்தார்.* ஒருகால் இவர் காட்டும் நூற்பா அதற்கு உரிய தாய் இருந்திருக்கலாம்.*

---

* பன்னிரு பாட்டியல் பார்க்க.

அடுத்துக்காட்டும் ஒரு வெண்பா, கங்கைகொண்ட சோழ புரமாகிய கங்காபுர மாளிகையைக் குறிப்பிடுகிறது.

பொருளணியியலின் இறுதியில் இவர் காட்டும் மூன்று வரிகள்:

பிறனில் விழைவோர் கிளையொடும் கெடுப
பொறையிற் சிறந்த கவச மில்லை
வாய்மையிற் கடியதோர் வாளியில்லை.

இவை கொன்றைவேந்தன் அடிகளைப் போன்ற அமைப்புக் கொண்டிருக்கின்றன.

**சமயம்**

தண்டியாசிரியர் சைவ சமயத்தவர் என்பது தெளிவு. இவர் தந்தையான அம்பிகாபதி பெயராலேயே சைவ சமயத்தவர் என்பதை நாம் அறிகிறோம். அலங்காரத்து மேற்கோள் காட்டிய பாடல்களுள் நாற்பதுக்கு மேற்பட்டவை சிவபிரானைக் குறிப்பவை. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல்களைக் குறிப்பிடலாம்.

வாய்த்த பொருள் விளைத்த தொன்றில்லை, மாதவமே
ஆர்த்த அறிவில்லை, அம்பலத்துக் – கூத்துடையான்
சீலம் சிறிதேயும் சிந்தியேன், சென்றொழிந்தேன்:
காலம் வறிதே கழித்து.

வினாவுத்தரம் என்ற தலைப்பில் காட்டிய ஒரு சித்திரக்கவி சிவ பிரானைப் போற்றுவது:

நல்வினை நாற்கால் விலங்கு; நவை சேரும்
கொல்வினை யஞ்சி; குயக்கலம்; – மெல்ல
உறுதியும் அல்லவும் நாட்பேர்; மரப்பேர்
இறுதியே இன்ப நெறி.

இவை முறையே முயல், ஆமை, அகல், சோதி (சுவாதி), தேறு (தேற்றா) எனப் பொருள்பட்டு, முயலாமை அகல், சோதி (சிவ பிரான்) தேறு என்ற இரு பேருண்மைகளைப் போதிக்கின்றன.

இவர் சைவ சமயத்தவர் என்பதற்கேற்ப, விநாயகர் (3 பாடல்) முருகன் (1) கொற்றவை (2) பற்றியும் பாடியிருக்கிறார்.

அன்றியும், இவர் சம்பந்தர் தேவாரத்துள் ஒரு பாடலை எடுத்துச் சித்திரக்கவியுள் அமைத்து வைத்திருப்பது கண்டு

மகிழத்தக்கது. மூன்றாம் திருமுறையுள் திருவேகம்பம் திரு விருக்குக் குறள் முதல் பாட்டு பின்வருவது:

கருவார் கச்சித்
திருவேகம் பத்து
ஒருவா என்ன
மருவா வினையே.

என்பது தேவாரம். கடை இருவரிகளையும் 'ஒருவா என்னீ - மருவா நோயே' என்ற பாடபேதத்தோடு* இவர் காதை கரப் பாகப் பின்வரும் பாடலுள் அமைத்துச் சேர்த்திருக்கிறார்.

தாயேயா நோவவா வீரு வெமதுநீ
பின்னை வெருவா வருவதொ ரத்தப
வெம்புகல் வேறிருத்தி வைத்திசி னிச்சைகவர்
தாவா வருங்கல நீயே.

காதை கரப்பு என்ற சித்திரக் கவிக்குக் கூறிய இலக்கணமும் இங்கு கருதுதல் தகும். 'காதை கரப்பு என்பது ஒரு செய்யுள் முடிய எழுதி அதன் ஈற்று மொழிக்கு முதலெழுத்துத் தொடங்கி ஒவ்வோர் எழுத்து இடையிட்டு வாசிக்கப் பிறிதொரு செய்யுட் போதுவது.... வருங்கல நீயே என்பதில் லகரம் மொழிக்கு முத லாகாமையின், அதனை நீக்கிக் 'க'வை முதலாகக் கொள்க. இதில் வேறொரு செய்யுளின் சொற்கள் மறைந்து நிற்றலால், இது காதை கரப்பு எனப்பட்டது. காதை - சொல்; கரப்பு - மறைவு'.❖

---

* சம்பந்தர் பாடலில் வினையே என்ற சொல்லைவிட நோயே என்ற சொல்லே யாப்பமைதிக்குப் பொருத்தமாயிருக்குமென்று தெரிகிறது. ஒவ்வொரு வரியிலுமுள்ள சீர்கள் புளிமா தேமா என்ற வாய்ப்பாட்டுக் குரியனவாய் அமைந்துள்ளன. கடைசி அடியில் வினையே என்று பாடங் கொண்டால் புளிமா என்றாகி முன் வரிகளிலிருந்து மாறுபடு கிறது. ஆதலால் தேமா ஆகிய 'நோயே' என்பதுதான் உரிய பாடமா யிருந்திருக்க வேண்டும்; நோய் என்பது பிறவி நோய் என்று பொருள் படும். பதிகத்தின் 11 பாடல்களில் 5 வினையே என்று முடிகின்றன. 3 காணே, தொழுமே, புகழே என்று புளிமா; 3 தான் வாரோ, தானே, லோமே என்று தேமா. அன்றியும் ஒரு தேவாரப் பாடலை எடுத்து இலக்கணத்துக்காக ஒரு எழுத்து மாறுதல் செய்தார் என்று கொள் வதும் இழுக்காகாது.

❖ காதை கரப்பு - கரந்துறை பாட்டு என்ற இருவகைச் சித்திரக்கவி யிலக்கணங்களும், யாப்பருங்கல விருத்தியிலும் தண்டியலங்காரத் தினும் ஒன்றுக்கொன்று மாறிக் காணப்படுகின்றன.

மானமருங் கண்ணாள் மணிவயிற்றில் வந்து தித்தான்;
தானவரை என்றும் தலையழித்தான்; – யானைமுகன்
ஓட்டினான் வெங்கலியை; உள்ளத் தினிதமர்ந்து
வீட்டினான் நம்மேல் வினை.

*என்பது விநாயகரைக் குறித்த பாடல்களில் ஒன்று.*

*கலைமகள் துதியாகப் பொருளணியியலின் காப்புச் செய் யுள் அமைந்துள்ளது: இது சிறப்புடைய பாடல்.*

என்னை யுடையாள் கலைமடந்தை எவ்வுயிர்க்கும்
அன்னை யுடைய அடித்தளிர்கள் – இன்னளி சூழ்
மென்மலர்க்கே கன்றும் எனஉ ரைப்பர்: மெய்யிலா
வன்மனத்தே தங்குமோ வந்து?

*பின்னும் இரு பாடல்கள் கலைமகளைப் போற்றுவன. ஒன்று இங்கே கருதுதல் தகும்.*

இமையவர்கண் மோலி இணைமலர்த்தாள் சூடச்
சமையந் தொறும் நின்ற தையல், – இமைய
மலைமடந்தை, வாச மலர்மடந்தை, எண்ணெண்
கலைமடந்தை, நாவலோர் கண்.

*மிகவும் நயம் பொருந்திய இப்பாடல்கள் தண்டியாசிரியருக்குக் கலைமகளிடமுள்ள ஈடுபாட்டை நன்கு புலப்படுத்தும். ஒட்டக் கூத்தரின் மாணாக்கர் தண்டி என்ற கருத்துடையவர்கள், அவர் கலைமகளை வழிபட்டவராதலால், இவரும் சிறப்பாகக் கலைமகளை வழிபடுவது பொருத்தமே என்பர்.*

*இவர் சைவரான போதிலும் சமயக் காழ்ப்பில்லாதவர். திருமால் குறித்தும் அழகாகப் பாடியுள்ளமையால் இது புலனாகும். திருமால் பற்றிய பாடல்கள் பல, சொற்சுவை பொருட்சுவை சிறந்து விளங்கக் காணலாம்.*

வானாகி மண்ணாய் மறிகடலாய் மாருதமாய்த்
தேனாகிப் பாலாந் திருமாலே! – ஆனாயா!
வெண்ணெய் விழுங்க நிறையுமோ, மேலொருநாள்
மண்ணை உமிழ்ந்த வயிறு?

*பொய்கையாழ்வார் அந்தாதியிலிருந்து 'வையம் தகளியா' 'பாலன் தனதுருவாய்' என்ற இரு பாடல்களையும் தந்திருப்பது குறிப்பிடத்தக்கது. பின்னும் இவரால் குறிப்பிடப் பெற்றோர் இந்திரனும் சண்டேசரும்.*

**காலம்**

இராசசிம்மவர்ம பல்லவன் (666-705) காலத்தவராகிய வடநாட்டுத் தண்டியாசிரியர் காவியாதர்சம் செய்தார்; தமிழ் அலங்காரம் செய்தவர், மிகவும் பிற்பட்டவர் என்பது, நூலமைதியால் நன்கு விளங்கும். வடநூலையும் தமிழ்நூலையும் செய்தவர் ஒருவரே என்று கூறுவோர் கருத்து கொள்ளத்தக்கதன்று. தமிழ்நூல் செய்தாருக்கு, வடநூல் ஆசிரியர் பெயர் இடப்பட்டிருந்தது என்றே கொள்ளவேண்டும். இப்பெயர் இயற்பெயராயுமிருக்கலாம், அல்லது நூலின் அருமை நோக்கிப் பிற்காலச் சான்றோர் மூலநூலாசிரியர் பெயரால் இவரை வழங்கியுமிருக்கலாம். மேற்கோள் செய்யுட்களில் இவர் 45 பாடல்களில் சோழ மன்னரைப் புகழ்கிறார். அபயன் என்ற பெயருடைய முதலாம் இராசராச சோழனையும், கலிங்கப்போர் வென்ற குலோத்துங்கனையும், அகளங்கனாகிய விக்கிரமனையும் இவர் பலபாடல்களில் குறிப்பிட்டபோதிலும், அனபாயனைக் குறிப்பிடுவது தனிச் சிறப்புடையதாயிருக்கிறது. 8 பாடல்களில் இவ்வரசனைக் குறிப்பிடுகிறார். அனபாயனாவான் இரண்டாம் குலோத்துங்கன். இவர் கூறுகின்ற எடுத்துக்காட்டான முதற்பாடலே அனபாயனைப் புகழ்கிறது. இரண்டு பாடல்களில் அவ்வரசனை முன்னிலைப்படுத்திப் பேசுகிறார்.

அன்னைபோல் எவ்வுயிரும் தாங்கும் அனபாயா!
நின்னையார் ஒப்பார் நிலவேந்தர்? – அன்னதே,
வாரி புடைசூழ்ந்த வையகத்திற் கில்லையால்
சூரியனே போலுஞ் சுடர்.

பூதலத்துள் எல்லாப் பொருளும் வறியராய்க்
காதலித்தார் தாமே கவர்தலால், – நீதி
அடுத்துயர்ந்த சீர்த்தி அனபாயா! யார்க்கும்
கொடுத்தியெனக் கொள்கின்றி லேம்.

இவை அவனுடைய செங்கோலையும் கொடைத்திறத்தையும் கூறுவன. முன்னிலையாகவுள்ள காரணத்தினால் அவ்வரசன் காலத்திலேயே இவர் பாடல் பாடினார் என்று கருதுகிறோம். மேலும், தண்கவிகையால் உலகம் தாங்கும் அனபாயன், எம்மாவி அன்னவனை ஆழி அனபாயனை (தம்மாற் பயன் தூக்காது என்ற பாடல்), இகல் மதமால் யானை அனபாயன் எங்கோன் - என்ற பாடல் தொடர்கள் புலவருக்கும் அரசனுக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பு இருந்ததென்பதையும் எவ்வளவு அருமை

யாக இவர் அவனைப் போற்றுகிறார் என்பதையும் உணர்த்து கின்றன. வாழ்த்துஅணிக்கு எடுத்துக்காட்டாக இவர் கூறுகின்ற அனைவரும் அறிந்த பின்வரும் பாடல், அவனையும் மழையை யும் சேர்த்து வாழ்த்துகிறது:

மூவாத் தமிழ்பயந்த முந்நூல் முனிவாழி,
ஆவாழி, வாழி அருமறையோர், – காவிரிநாட்டு
அண்ணல் அனபாயன் வாழி, அவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை.

(வாழ்க அந்தணர், ஆனினம், வீழ்க தண்புனல், வேந்தனும் ஓங்குக என்ற பொருள்களை இது உள்ளடக்கியிருக்கிறது) எனவே, இக் குறிப்புக்களால் தண்டியாசிரியர் அனபாயனால் (இரண்டாம் குலோத்துங்கனால்) பெரிதும் போற்றப் பெற்ற புலவர் என்று நாம் நன்கு உணர்கிறோம். அவன்காலம் 1133-1150; எனவே தண்டியின் காலமும் இதுவேயாகும்; 12ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இவர் வாழ்ந்தவராகிறார்.

**உரை**

இந்நூலுக்குப் பழைய உரையொன்று உண்டு, முன் குறிப் பிட்டவாறு, நூலாசிரியரே உதாரணச் செய்யுட்களை மேற்கோள் காட்டியும் தாமே எழுதிச் சேர்த்தும் தந்துள்ளார்; உரை யாசிரியர் உதாரணப் பாடல் சேர்க்கவில்லை. ஆனால் இவர் சூத்திரங்களுக்கு உரையும் உதாரணப் பாடல்களுக்கு உரை யும் விளக்கமும் எழுதியுள்ளார். எனினும் இவர் அணியைப் பொருத்திக் காட்டவில்லை.

இவ்வுரை மூல சூத்திரப்பொருளை நன்கு விளக்குகிறது. அதுகூறும் பல்வகை அணிகளின் இலக்கணத்தையும் சுருக்கமாக எடுத்துக்காட்டுகிறது. உதாரணச் செய்யுட் பொருளையும் சில இடங்களில் நன்கு விளக்குகிறது. எங்கும் முதனூற் கருத்தைத் தழுவியுரைக்கிறது. சில இடங்களில் தடை விடைகளையும் கொண்டது. இவர் பெயர் சுப்பிரமணிய தேசிகர் என்று முதல் பதிப்பில் எழுதப் பெற்றுள்ளது. பின்வந்தோர் பழைய உரை என்று குறிப்பிட்டனர். ஆசிரியருக்குச் சிறிது காலம் பிற்பட்டுத் தோன்றியதென்றே இவ்வுரை கருதத்தக்கது. அங்ஙனமாயின் 16ஆம் நூற்றாண்டின் தொடக்கம் இவ்வுரையின் காலமாகலாம். அக்காலத்து, தேசிகர் என்ற சொல் வழக்கத்துக்கு வரவில்லை. சென்ற நூற்றாண்டில், ஒரு புத்தகத்தை அச்சிட விரும்பிய அச்சுக்கூடத்தார், 'ஆறுமுக சுவாமிகள் பார்வையிட்டது' அல்லது

'கருணாநந்த சுவாமிகள் அருளிச் செய்த உரை' என்று அச்சிட்டு வைப்பது ஒரு வழக்கம்; அவ்விதமே இச்சுப்பிரமணிய தேசிகர் என்ற பெயரும் அச்சிட்டோரால் தெரிந்தோ தெரியாமலோ அமைத்துக் கொள்ளப்பட்டது போலும். திருவாவடுதுறை யாதீனத்துச் சுப்பிரமணிய தேசிகர் என்று குறிப்பிடுவதும் பிழை; உரை தோன்றிய காலத்தில் எந்த ஆதீனமும் தோன்றியதில்லை.* எனவே இவ்வுரை, ஆசிரியர் பெயர் தெரியாத பழைய உரை என்று மட்டுமே கூறத்தக்கது.

இவ்வுரையை ஆசிரியர் எங்கும் ஒரே நெறியாக எழுத வில்லை. சுருக்கவுரையாகவும், சில இடத்து இலக்கணக் குறிப் பாகவும், அணிகளுக்கும் பாடலுக்கும் உள்ள பொருத்தத்தை மட்டும் காட்டுவதாகவும் அணிகளுக்கிடையேயுள்ள வேற்று மையை மட்டும் காட்டுவதாகவும் உரை அமைந்துள்ளது. பல இடங்களில் நயமாகவும் உள்ளது. தமக்கு முன்னரும் உரைகள் இருந்தன என்பதை இவர், என உரைப்பாருமுளர், என்று உரைப் பாருமுளர் ஒருசார் தொல்லாசிரியர் (65), ஒருசார் ஆசிரியர் வேறுபடுத்திக் கூறினார், ஒருசார் ஆசிரியர் இதன்பாற் பகுத்துக் கூறினார் (83) என்று குறிப்பிடுபவற்றால் அறிகிறோம்.

**பதிப்பு**

1. தில்லையம்பூர் சந்திரசேகர கவிராச பண்டிதர் பதிப்பு 1857.
2. மற்றொரு பழைய பதிப்பு, முந்தியதையொட்டிய காலம், விவரம் தெரியவில்லை.
3. வை.மு. சடகோபராமானுசாசாரியர் பதிப்பு 1901; இதில் பொதுவணியியலும் பொருளணியியலும் உள்ளன; பின்னர் இதன் இரண்டாம் பதிப்பில், சொல்லணியியல் (ஜகந்நாத சாரியர் குறிப்புரையுடன்) சேர்க்கப்பட்டது. 1956, 1962.
4. யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் குமாரசாமிப்புலவர் புத்துரை 1903.
5. செம்பூர் வித்துவான் வீ. ஆறுமுகம் சேர்வை 1920: இதுவே அனைவர் கையிலும் வழங்கிய பதிப்பு.
6. சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகப்பதிப்பு, கொ. இராமலிங் கத்தம்பிரான் குறிப்புரை கொண்டது, 1938; பின் பலமுறை.

---

* பொதுவாக, தொண்டை மண்டல சதகம் பாடினவரும் கொங்கு மண்டல சதகம் பாடினவரும், எந்த ஊரும் எந்தப் புலவரும் தங்கள் மண்டலம் என்று நிறுவுவதில் வல்லவர்கள்; பவணந்தி முனிவர் ஊராகிய சனகை தங்கள் மண்டலம் என்று இருவரும் சொல்வது காண்க.

7. திருப்பனந்தாள் சுந்தரமூர்த்தி பதிப்பு, 1967; முன்னுரை குறிப்புரை கொண்டது.

8. சென்னையில் ஆசிரியராயிருந்த தி.ஈ. ஸ்ரீநிவாச ராகவாசாரியர் என்பவர், வடமொழித் தண்டி நூலைச் சுருக்கித் தமிழில் தண்டியலங்காரசாரம் என்ற ஒரு நூல் செய்தார். (1877). அதன் பொருளணியியற் பகுதி 1899இல் அச்சாயிற்று. இவர், உரைநடையால் தம் இலக்கணத்தைச் செய்தார்; தண்டியலங் கார மேற்கோள் பாடல்களும் வேறு பிற்கால இலக்கியப் பாடல்களும் இவரே செய்த பாடல்களும் இங்கு காணப்படும்.

உள்ள பதிப்புக்களில் சடகோபராமானுசாசாரியர் பதிப்பே, அவருக்குரிய வழக்கம்போல, எடுத்த பொருளை நன்கு விளக்குவதாயிருக்கிறது. கற்றோருக்குப் பயன்படும் ஆராய்ச்சிப் பதிப்பு இனித்தான் வெளிவர வேண்டும். கழகப்பதிப்பில் சிறப்புப் பாயிரத்தையும் எடுத்துவிட்டார்கள். ஐயரவர்கள் ஒரு பதிப்பு வெளியிடவில்லையே என்ற வருத்தம் தோன்றுகிறது.

### சிறப்புப் பாயிரவரி (8–9)

'மும்மைப் - பாரத இலக்கணம் பண்புறத்தழீஇ' என்பது: மும்மைப் பாரத இலக்கணம் - மூன்றாகிய பாவராக தாளம் என்ற பரதம் ஆகிய மூன்றிலக்கணம் என்று அனைவரும் பொருள் செய்துள்ளனர். ஆனால், சடகோப இராமானுசா சாரியர் பதிப்பில் பாகத இலக்கணம் என்று பாடம் கொள்ளப் பட்டிருக்கிறது; இது அச்சுப்பிழையா என்பது தெரியவில்லை. இது பாடபேதமாகவே இருக்குமாயின், தண்டியாசிரியர் வடமொழியும் தமிழ்மொழியும் ஆராய்ந்ததோடன்றி, பிராகிருத மொழியும் (பாகதம்) ஆராய்ந்தே தாம் இலக்கணம் செய்தனர் என்று பொருளாகிறது.

## குணவீர பண்டிதர்

### ஆசிரியர்

குணவீர பண்டிதர் என்ற ஆசிரியர் சமண மதத்தினர். இவர் செய்த நேமிநாதம், வச்சணந்தி மாலை என்ற சிறப்பான இலக்கண நூல்களால் இவர் பெயர் தமிழ் இலக்கிய வரலாற்றில் நிரந்தரமான இடம் பெற்றுள்ளது.

இவர் தொண்டை நாட்டிலுள்ள களத்தூரில் பிறந்தார் என்று தொண்டை மண்டல சதகம் (82) கூறும்:

தன்னூர்ச் சனகையிற் சன்மதி மாமுனி தந்தமைந்தன்
நன்னூல் உரைத்த பவணந்தி மாமுனி நற்பதியும்
சின்னூல் உரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னூ புரத்திரு அன்னமின் னேதொண்டை மண்டலமே.

(களந்தை - களத்தூர் என்பதன் மரூஉ மொழி). இவர் அவ்வூரி லிருந்த பேரருளாளராகிய வச்சணந்தி என்ற பெயருடைய சமண முனிவருடைய மாணாக்கர். நேமிநாத உரைப்பாயிரத்தில், 'இந்நூல் செய்தார் யாரோ எனின்,

உளமலி பேரருள் உயிர்மிசை வைத்த
வளமலி களந்தை வச்சணந்தி முனிவரன்
கொள்கையின் வழாஅக் குணவீர பண்டிதன்.'

என்று கூறுவதனாலும்,

கற்றவர் புகழுங் களந்தையென் பெரும்பதிக்
குற்றமில் வாய்மைக் குணவீர பண்டிதன்.

என்று வெண்பாப் பாட்டியல் உரைப்பாயிரத்துள் வருவதனா லும், இவர் ஊர் களந்தை என்றும், இவர் குணச் சிறப்பால் மேம்பட்டவர் என்றும் அறிகிறோம். அன்றியும் இங்கு காட்டிய 'களந்தை வச்சணந்தி முனிவரன்' என்ற தொடர் இவர் களந்தை யில் வாழ்ந்த வச்சணந்தி முனிவருடைய மாணாக்கர் என்றும், அவர்பால் பேரன்புடையவர் என்றும் உணர்த்துகிறது. வச்சணந்தி, வஜ்ரநந்தி என்பதன் மரூஉமொழி. குணவீர பண்டிதர் தெய்வத் திடத்தும் தம் ஆசிரியரிடத்தும் பேரன்புடையவர் என்று, தாம் செய்த நூல்களுக்கு நேமிநாத தீர்த்தங்கரர் பெயரையும், தம் குரு வின் பெயரையும் வைத்தமையால் அறிகிறோம். தென்களந்தை என்று இங்கு குறிப்பிட்டமையால், இது தொண்டை நாட்டுக் களந்தையா, வேறு தென்னாட்டுக் களந்தையா என்று ஐயுறு வதற்கு இடமாயுள்ளது. சதகம் சொல்லியதனாலேயே களந்தை தொண்டை நாடாகாது.

### காலம்

இவர் 1178-1218 ஆண்டுகளில் ஆட்சிபுரிந்த சோழ மன்ன னாகிய திரிபுவனதேவன் என்ற சிறப்புப்பெயருடைய மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தவர் என்று அறிகிறோம். 'இந்நூல் யார் காலத்துச் செய்ததோவெனின்,

குருத்தவா மணிமுடிக் கொற்றவர் கோமான்
திருத்தகு மணிமுடித் திரிபுவன தேவன்.

*என்னும் அரசர் காலத்தில் செய்ததென்றுணர்க' என்று வச்சணந்தி மாலை உரைப்பாயிரம் இதைக் கூறுகின்றது. இச்சோழ மன்னனுடைய ஆட்சித் தொடக்கத்தில் இவர் இந்நூலைச் செய்தார் என்று கொண்டு, நாம் குணவீர பண்டிதர் காலம் 12ஆம் நூற்றாண்டின் இறுதி என்று முடிவு செய்கிறோம்.*

*முதல் மொழி இயலில் ஆசிரியர் குரு வணக்கமாக ஒரு பாடல் கூறுகிறார்:*

திருமங்கை நின்றகலாள் தெவ்வுநோய் நீங்கும்;
தருமங்கள் நீங்கலாச் சார்வார்; – இரு நிலத்து
மன்னருள்ளார் தாழுந்தாள் வச்சணந்தி மாமுனிவன்
இன்னருளால் நோக்கும் இடம்.

*இரு நிலத்து மன்னருள்ளார் தாழுந்தாள் வச்சணந்தி என்று ஆசிரியர் பாடியிருப்பது, திரிபுவன தேவனது சபையில் இந்நூல் அரங்கேற்றப்பெற்றது என்று கூறியதற்கேற்ப, இவர் குருவாகிய வச்சணந்தி முனிவர் அரசனால் பெரிதும் போற்றப் பெற்றவர் என்று கொள்ளக் கிடக்கிறது, மதுரகவிக்கு எடுத்துக்காட்டுத் தருமிடத்து, வச்சணந்தி மாலையின் உரையாசிரியர் வச்சணந்தியைப் புகழும் வெண்பாவொன்றைத் தருகிறார்:*

பூமகளும் நல்வாழ்வு பெற்றாள்;புரைதீர்ந்த
நாமகளும் பல்கலையும் நண்ணினாள், – தோமகல்சீர்
வையம்புகழ் களந்தை வச்சணந்தி மாமுனிவன்
செய்ய பதகமலஞ் சேர்ந்து.

*வஜ்ரநந்தி என்ற வடமொழிப் பெயர் வச்சணந்தியாயிற்று; இது பிராகிருத வடிவம்; தமிழில் அப்படியே சொல்லப் பெற்றிருக்கிறது. நந்தி என்பது அக்காலத்தில் சைனத் துறவிகள் தரித்த ஒரு பொதுப்பெயரென்று தெரிகிறது; பவணந்தி என்ற பெயரை ஒப்பு நோக்குக; 'கனக நந்தியும் புட்ப நந்தியும் பவண நந்தியும் குமணமா - சுனக நந்தியும் குனக நந்தியும் திவண நந்தியும் மொழிகொளா - அனக நந்தியர்' என்று சம்பந்தர் திருவால வாயில் மங்கையர்க்கரசியாருக்குக் கூறும் தேவாரத்தையும் காண்க (3.39.6). நந்தி என்ற பெயர் நந்தி கணத்தைச் சார்ந்த துறவியருக்கு உரியதென்றும் சொல்வர். வச்சிரநந்தி என்ற பெயர் சாசனத்துள்ளும் காணப்படுகிறது.*

நேமிநாதர் என்பவர் ஒட்டக்கூத்தரின் காலத்தவராய் வாழ்ந்தார் என்று தமிழ் நாவலர் சரிதையால் அறிகிறோம். 'பேராசிரியர் நேமிநாதர் பட்டோலை பிடிக்க ஒட்டக்கூத்தர் பாடியது' என்ற தலைப்புடன் 'செங்கோல் மடவன்னம்' என்ற தொடக்கமுடைய பாடல்* அங்கு காணப்படுகிறது. இது அகளங்கனைப் புகழ்வது. அகளங்கன் - விக்கிரமசோழன் (1118-1135). 'பேராசிரியர் நேமிநாதர்' தொல்காப்பிய உரைகாரரான பேராசிரியர் போலும் என்று மு. இராகவையங்கார் எழுதியிருக்கிறார். (பெருந்தொகை 821 குறிப்பு.) இது இரண்டு காரணங்களால் பொருந்தாது. ஒன்று, உரைகாரர் பேராசிரியர், சுமார் 1272இல்; குணவீர பண்டிதருக்கு 70 ஆண்டுகள் பிற்பட்டவர்; மற்றது அவர் சிறந்த சைவர்; நேமிநாதர் என்பது சைனப்பெயர்.

குணவீர பண்டிதர் நேமிநாத தீர்த்தங்கரர் பெயரால் நேமிநாதம் பாடினார். இது பற்றி இவர் பெயர் நேமிநாதர் என்று வழங்கியதும் உண்டு. இவர் (பேராசிரியர் நேமிநாதர் என்று குறிப்பிடப்பட்டவர்) விக்கிரமசோழன் காலத்தில் இளம்பிள்ளையாய் ஒட்டக்கூத்தரிடம் கல்வி பயின்று பெரும்புலவராகிப் பேராசிரியர் என்ற பட்டத்துக்குத் தகுதியுடையவராய் வாழ்ந்து, பின்னர் திரிபுவன தேவனாகிய மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் வயது முதிர்ந்தவராய் நேமிநாதம் பாடி அரங்கேற்றியிருக்கலாம். அப்படியானால் அக்காலம் அவருக்கு வயது எண்பதுக்கு மேல் ஆகியிருக்க வேண்டும்.

(குறிப்பு. முதலாம் இராசராச சோழனுடைய 21ஆம் ஆட்சியாண்டில் கி.பி. 1006 ஒரு குணவீர மாமுனிவர் இருந்தார். அவரும் சைனர், வட ஆற்காடு ஜில்லா போளூருக்கு அருகிலுள்ள வைகாவூர்த் திருமலை என்ற ஊரில் பிரசித்தி பெற்ற ஜினாலயம் ஒன்று உள்ளது. அவ்வூர் ஏரி மதகில் உள்ள ஒரு சாசனப் பாடல், இம்முனிவர் முன்குறித்த ஆண்டில் இந்த ஏரியில் வைகை மலைக்கு இருமருங்கிலும் நெல்விளையும் படியாகக் கலிங்கு கட்டினார் என்ற செய்தியைக் கூறுகிறது:

அலைபுரியும் புனற்பொன்னி யாறுடைய சோழன்
　　அருண்மொழிக்கு யாண்டிருபத் தொன்றாவதென்றும்
கலைபுரியும் மதிநிபுணன் வெண்கிழான் கணிச்சைக்
　　காமருபொற் சூரியன்தன் நாமத்தால் வாம.

---

* இப்பாடலையும் குறிப்பையும் பற்றிய விளக்கத்தை முன் 262-63 பக்கங்களில் காண்க.

நிலைநிற்குங் கலிங்கிட்டு நிமிர்வைகை மலைக்கு
நீடூழி இருமருங்கும் நெல்விளையக் கண்டோன்
கொலைபுரியும் படையரசர் கொண்டாடும் பாதன்
குணவீர மாமுனிவன் குளிர்வைகைக் கோவே.

என்ற பாடல், இராசராசனுக்குரிய 'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்ற மெய்க்கீர்த்தியின் பின் காணப்படுகிறது. இப்பாடலால் இவரும் குணவீரமா முனிவர் என்று அறிகிறோம். காலம் முன்னே குணவீர பண்டிதருக்குக் கூறிய காலமாகிய கி.பி. 1200க்கு இருநூறு ஆண்டுகள் முற்பட்ட காலம். ஆதலால் இக்குணவீர மாமுனிவர், இலக்கண நூல் செய்த குணவீர மாமுனிவருக்கு முன்னோராயிருத்தல் கூடும்.

### நேமிநாதம்

இச்சிறிய இலக்கண நூல் எழுத்தும் சொல்லுமாகிய ஈரதிகாரங்களை மட்டும் உடையது. வெண்பாவால் இயன்று 97 வெண்பாக் கொண்டது. வேறாக இருசிறப்புப் பாயிரங்களும் உடையது. தொல்காப்பியம்போல விரிவின்றி, அதாவது எழுத்து சொல் பொருள் என்ற மூன்று பகுப்பு இன்றி, இரண்டே கொண்டு சுருங்க அமைந்தமையால் இதற்குச் **சின்னூல்** என்ற பெயரும் உண்டு. நேமிநாதம் சின்னூல் என்ற பெயரால் வழங்கும் என்பதைத் தொடக்கத்தில் காட்டிய தொண்டை மண்டல சதகப்பாடலால் அறியலாம்; அளவில் சிறிதானமையால் இப் பெயரமைந்தது எனினும் ஒக்கும். பதிற்றுப்பத்தின் உரைகாரரும், 76ஆம் பாடலுரையில், சில்லேரானர் என்ற தொடருக்கு உரை எழுதும் போது, "சின்மையைச் சின்னூலென்றது போல, ஈண்டுச் சிறுமையாகக் கொள்க" என்று எழுதுவது காண்க. சில தலை முறைகளுக்கு முன்வரையில் இலக்கணம் கற்போர் நேமிநாதம் பயின்ற பின்னரே தொல்காப்பியம் பயில்வது மரபு என்பர்.

சைனப் பெரியார் ஆகிய தீர்த்தங்கரர் இருபத்து நால்வரில் இருபத்திரண்டாம் தீர்த்தங்கரராகிய நேமிநாதர் பெயரால் குணவீர பண்டிதர் இந்நூலை அமைத்தார்:

எய்திய சிறப்பின் எழுத்தையும் சொல்லையும்
மெய்தெரி வகையின் விளங்க நாடி
தேன்நிமிர் பைம்பொழில் தென்மயி லாபுரி
நீல்நிறக் கடவுள் நேமி நாதர்.

தம் திருப்பெயராற் செய்தமையின் நேமிநாதம் என்னும் பெயர்த்து" என்று உரைப்பாயிரம் கூறும். இதுபற்றி ஆசிரியருடைய இயற்பெயரை மறந்து, நேமிநாதர் செய்தார் என்று தவறாகச் சிலர் கூறியதும் உண்டு.

குணவீர பண்டிதர், தொல்காப்பியச் சொல்லதிகாரப் பிரிவுகளாகிய ஒன்பது இயல்களின் பெயர்களையே தம் சொல்லதிகாரப் பிரிவுகளுக்கும் பெயராகச் சிறிது மாறுதலுடன் அமைத்துக் கொண்டிருக்கிறார். இயல் என்று அவர் வைத்த நூற்பிரிவை இவர் மரபு என்று கொள்கிறார்; மற்றும் கிளவி - மொழி, வேற்றுமை - உருபு என்பனவே இவர் செய்து கொண்ட மாறுதல்கள். முதல் அதிகாரமாகிய எழுத்தியல் அதிகாரத்தில் இவர் இயல் பாகுபாடு எதுவும் செய்யவில்லை. உரிச்சொல் மரபு என இவர் ஓர் இயல் செய்திருக்கிறார். முன்னோர் மரபையொட்டி இவர் செய்தாரே அன்றி, செய்ததில் பொருள் எதுவும் இல்லை.

நன்னூலும் இக்குலோத்துங்க சோழன் காலத்திலேயே தோன்றிற்றெனினும், நாற்பது ஆண்டுக்காலம் ஆட்சிபுரிந்த குலோத்துங்க சோழன் ஆட்சியின் இறுதியிலேயே அந்நூல் தோன்றிற்று. அதாவது அடுத்த நூற்றாண்டில், அந்நூல் தோன்றுவதற்கு முன் இதுவே புலவர் விரும்பிக்கற்ற நூலாய் இருந்தது போலும். சிறப்புப் பாயிரப் பாடலொன்று இதன் பெருமையை நன்குணர்த்தும்:

**தொல்காப்பியக் கடலிற் சொற்றீபச் சுற்றளக்கப்**
**பல்காற் கொண்டோட்டும் படகென்ப – பல்கோட்டுக்**
**கோமிகா மற்புலனை வெல்லும் குணவீரன்**
**நேமிநா தத்தின் நெறி.**

கோயிற்புராணத்தின் பழையவுரைகாரர் நேமிநாதத்தை எடுத்து ஆள்வது கருதத்தக்கது. இருப்பினும், தமிழ் உலகத்தில் இந்நூலுக்கு ஆட்சி இல்லை.

இந்நூலுக்குப் பழமையான சிறப்புமிக்க உரையொன்று உண்டு. (அது பற்றிய வரலாற்றை எமது 15ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் பரக்க காணலாம்) அவ்வுரை வயிரமேக விருத்தி என்று வழங்கும்போலும்.

## பதிப்பு

மதுரைத் தமிழ்ச்சங்கம் ரா. இராகவையங்கார் பதிப்பு. 2. சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் கா. ர. கோவிந்தராஜ முதலியார் பதிப்பு 1945. இரண்டிலும் பழைய உரை அச்சிடப் பட்டுள்ளது.

## வச்சணந்தி மாலை

பாட்டியல் என்ற இலக்கண நூற்பகுதி பொதுவாகப் பிரபந்த இலக்கணம் கூறுவது; பிற்காலத்தில் மிகவும் விரிந்து வளர்ந்திருக்கிறது. தொல்காப்பியர் கூறுகின்ற தமிழ் இலக் கணத்துள் மூன்றாம் பகுதி, பொருளதிகாரம் என்றும் பெயர் பெறும். அதன் பிரிவுகள், பின்னர் தனித்தனி இலக்கண நூல் களாக விரிவுபெற்றன. செய்யுளியல் என்ற பிரிவின் ஒரு பகுதி. பாட்டியலாக வளர்ந்தது. பழமையான பாட்டியல் நூல் பன்னிரு பாட்டியல் என்பது;* அது அகத்தியரும், அவர் மாணாக்கர் பன்னிருவரும் பாடிய பாட்டியல் நூல்களிலிருந்து தொகுத்த சூத்திரங்கள் அடங்கியது என்று வரலாறு கூறும். பன்னிரு பாட்டியலில் பின்வரும் ஆசிரியர் பெயரால் பாட்டியல் நூல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன - அகத்தியர், பொய்கையார், பரணர், இந்திரகாளியார், அவிநயனார், கல்லாடனார், கபிலர், சேந்தம் பூதனார், நத்தத்தனார், செயிற்றியனார், கோவூர்கிழார், மாபூத னார், சீத்தலையார், பல்காயனார், பெருங்குன்றூர் கிழார் செய்த பாட்டியல்கள். இவையன்றி பாட்டியல் மரபுடையாரை யாப்பருங்கல விருத்தியும் மாமூலர் பாட்டியலை இலக்கண விளக்கவுரையும் குறிப்பிடுகின்றன. மேலும், பழைய நவநீதப் பாட்டியல் உரை அகத்தியர், இந்திரகாளியார், கல்லாடர், தொல்காப்பியர் பாட்டியல், பரணர், பொய்கையார், மாமூலர் ஆகிய பாட்டியல்களைக் குறிப்பிடுகின்றது. பாட்டியல் கலாவியல் என்று பெயர் பெற்றிருந்தது என்றும் அவ்வுரையால் அறிகின் றோம். வாக்கியாப்பியல், தத்தாத்திரேயப் பாட்டியல், பண்டாரப் பாட்டியல் போன்ற நூல்களும் இருந்தன என்றும் அறிகிறோம். பிரபந்தங்களின் இலக்கணத்தை மட்டும் கூறுகின்ற பிரபந்த மரபியல் பிரபந்ததீபிகை முதலான பலநூல்களும் இருந்தன. இந்திரகாளியார் அவிநயனார் ஆகியோர் தம்பெயரால் சிறப்

* இது பற்றிய விரிவான ஆராய்ச்சி, எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டில் காண்க.

பான பாட்டியல் மரபுகள் தோற்றுவித்திருந்தனர் போலும். ஆயினும் இந்நூல்களோ பிற செய்திகளோ எவையும் இன்று புலப்படவில்லை.

பன்னிரு பாட்டியலின் பின்னர்த் தோன்றிய சிறப்பான ஒரு பாட்டியல் நூல் குணவீரபண்டிதர் செய்த வச்சணந்தி மாலை. இது வெண்பா யாப்பினால் செய்யப் பெற்றமையால் வெண்பாப் பாட்டியல் என்று பெயர்பெறும். இவ்வாசிரியர் தம் குருவாகிய வச்சணந்தி தேவர் என்னும் முனிவர் பெயரால் அவர் கட்டளையின்படி இந்நூல் செய்தார். அவையடக்கப் பாடல் இதைக் கூறுகிறது:

> **என்களங்கம் யாவையும் நீக்கி இனிதருளி**
> **நன்களந்தை நூலோடு நாட்டுவரால் – தென்களந்தை**
> **மன்பெயரான் வண்புகழான் வச்சணந்தி மாமுனிவன்**
> **தன்பெயரால் நாட்டுந் தமிழ்.**

வச்சணந்திமாலை என்று இந்நூல் வழங்கலாயிற்று. இந்தநூல், முதல் மொழிஇயல், செய்யுளியல், பொதுவியல் என்ற மூன்று இயலையும், முறையே 23, 48, 31 ஆக 102 வெண்பாக்களையும் உடையது.

முதல் இயலானது அருகன் வணக்கமாகிய பாயிரப் பாடலோடு தொடங்கும். பாட்டுடைத் தலைவன் பெயரோடு பொருந்தத்தக்க முதல்மொழிக்கு அமைய வேண்டிய பத்துப் பொருத்தங்களையும் உரைக்கின்றது. அப்பத்தாவன மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உணா, வருணம், நாள், கதி, கணம் என்பன.

இரண்டாவதாகிய செய்யுளியல் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளின் இலக்கணங்களைக் கூறி, பின்னர்ப் பிரபந்தங்களின் இலக்கணங்களைக் கூறும். தமிழ்ப் பிரபந்தங்கள் 96 என்பது மிகவும் பிற்கால வழக்கு. பன்னிரு பாட்டியலே முதன்முதல் பிரபந்த இலக்கணம் கூறு கிறது. பின்வந்த இந்நூல் 56 பிரபந்தங்களுக்கே இலக்கணங் கூறும். முடிவில் அகலக்கவி, கமகன், வாதி, வாக்கி, வெள்ளைக்கவி முதலியோர் இலக்கணம் கூறுகிறது.

மூன்றாவதான பொதுவியலானது, நால்வகைப் பாக்கள், அவற்றின் சாதி, நிறம், இடம், நாள், இராசி, தேவதை, முதலி

யனவும், பாடும் விதம், உறுப்பு, செய்யுள், அகலக்கவி புகல்வோர், அவையின் இயல்பு, அந்தணர், மன்னர், பூவைசியர், தனவைசியர், சூத்திரர் ஆகியோர் இயல்பு, சிறப்பு, பொதுப்பாயிரங்கள், அகலக்கவி கேட்பிக்கும் முறை என்ற பொருள்களைக் கூறுகிறது.

இப்பாட்டியற் பாடல்கள் முழுமையும் அந்தாதியாக அமைந்துள்ளன. மாணாக்கரும் தமிழ்ப் புலவர்களும் பண்டைக் காலத்தில் இப்பாட்டியலை மனப்பாடம் செய்து நினைவில் வைத்திருந்தார்கள். இன்றுங்கூட, பலர் இப்பாடல்களை நினைவில் கொண்டுள்ளார்கள். உதாரணமாக, கலம்பகத்தின் உறுப்புக்கள் என்ற மாத்திரத்தில் கற்றோருக்கு,

வைக்கும் புயந்தவம் வண்டம்மனை பாணமதங்கு
கைக்கிளை சித்தூசல் களிமடக்கூர் – மிக்கமறம்
காலம் தழைஇரங்கல் சம்பிரதம் கார்தூது
கோலுங் கலம்பகத்தின் கூறு.

என்ற பாடல் நிச்சயம் நினைவுக்கு வரும். பன்னிரு பாட்டியல் பண்டைக் காலத்தில் கற்றோர் சிலரிடமேனும் ஆட்சியிலிருந்ததா என்பது ஐயம். ஆனால் வச்சணந்திமாலை இந்நூற்றாண்டின் தொடக்கம் வரையில் சாமானிய தமிழறிவு உடையோராலுங் கூட விரும்பிப் பயிலப்பட்டு வந்திருக்கிறது.

செய்யுளியற் பகுதியில் இவர் 10 பிரபந்தங்களைக் கூறுகிறார். பிறரைப் போலவே இவரும் கலம்பக உறுப்புக்கள், பெண்களின் பருவம், பரணி பற்றிய விரிவு என்பன கூறுகிறார். காப்பியம் புராணம் என்ற பிரபந்த வகைகளையும் சொல்கிறார்; புராணம், குலவரவு காரிகை யாப்பில் என்பது இந்நூல்; இந்த அமைப்பில் செய்யப்பட்ட நூலே இல்லை. 'அகப்பொருள் மேலன்றிக் கவிகள் வாரா, - தொகப் பெறா வஞ்சி தொடர்ந்து' என்று இவர் கூறியபடியே இவ்விருபாக்களும் வருவதில்லை என்பது உண்மை. அன்றியும் வஞ்சி தொடர்ந்த பாட்டாக என்றுமே வந்ததில்லை. கலியும் வஞ்சியும் வழக்கு வீழ்ந்து, ஆசிரியமும் வெண்பாவுமே அதிக ஆட்சி பெற்றிருக்கின்றன. நால்வகைப் புன்கவிகளைக் குறிப்பிட்டு இவர் பாடுவது சிறப்பு:

ஆரொருவன் பாக்களை யாங்கொருவ னுக்களிப்பான்,
சோரகவி; சார்த்தொலியிற் சொல்லுமவன்; – சீரிலாப்
பிள்ளைக்கவி சிறந்த பின்மொழிக்காம்; புன்மொழிக்காம்
வெள்ளைக் கவியதனின் வேறு.

ஒருவன் பாட்டை மற்றொருவனுக்குக் கொடுப்போன் கள்ளக் கவியாம். ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுட் புணர்ப் போன் சார்த்துகவியாம். தனக்கென வொன்றின்றி முன்னோர் மொழிந்த சொன்னடை பொருணடை கண்டு கவிபாடுவோன் பிள்ளைக்கவியாம். புன்மொழிகளால் கவிபாடுவோன் வெள் ளைக்கவியாம்.

நல்அவை நிறைஅவை, தீயஅவை என்பவற்றுக்கு இவர் முதல் முதல் இலக்கணம் செய்கிறார். இவற்றை யாப்பருங்கல விருத்திகாரரும் விரித்துரைக்கிறார் என்பது காணத்தக்கது. பின்னும், வைசியரைப் பற்றி இவருடைய கூற்றும் உரையும் கவனிக்கத்தக்கன. வைசியரியல்பு என இவர் இரு வெண்பாக் களைச் சொல்கிறார். முதல் வெண்பாவில் ஏர் உழுதல், ஈதல், அழல் வளர்த்தல், நிரை ஓம்புதல் என்பவை வணிகர் குணம் என்றார். இரண்டாவது வெண்பாவில் ஆக்காத்தல் நிதிக்கோனை வணங்கல், வாணிகத்தால் ஈட்டல் எறிவேட்டல் படைத்தோர் வணிகர் என்கிறார். உரை செய்தவர் இவர்கள் முறையே பூவை சியரும், தனவைசியரும் என்றார். உரைகாரர் காலம் 15ஆம் நூற்றாண்டு. இக்காலத்தில் சாதி உணர்வு கொண்ட ஒரு சூழ் நிலையில் இவர் வாழ்ந்திருந்தார் போலும். 7ஆம் நூற்றாண்டில் சம்பந்தர் வேளாளர் என்பவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்கும் தாளாளர் என்று பாடியிருக்க, இவர் இவ்வாறு புதிய பாகுபாடு சொல்வதற்கு இதுவே காரணம் ஆகவேண்டும்.

**உரை**

இப்பாட்டியலுக்குச் சிறப்பான உரை உண்டு. செய்தார் யார் என்பது தெரியவில்லை. நூலாசிரியர் மாணாக்கராக அடுத்த 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரோ என்று கருதத் தோன்றுகிறது.

இவ்வுரையானது மிகவும் தெளிவாக எழுதப்பட்ட அரிய விளக்கவுரை. இந்திரகாளியம் என்னும் பாட்டியல் மரபின் வழியாக இவ்வாசிரியர் நூல் செய்தார் என்று இதனால் அறி கிறோம். 'இந்நூல் என்ன பெயர்த்தோ எனின்,

எய்திய மணிப்பூண் இலங்குமணி நெடுந்தேர்
வேந்தர் ஆடும் விரைகெழு மலர்த்தாள்
வணங்கெழில் மாடத்துக் களந்தைஎம் பெருமான்
வளர்ந்த கீர்த்தி வச்சணந்தி தேவன்.

என்னும் மாமுனி செய்வித் ததனால்,
வச்சணந்தி மாலை என்னும் பெயர்த்து.

*வச்சணந்தி முனிவர் இந்நூலைச் செய்வித்தார். இந்நூல் ஆய்ந்தவர்,*

சிங்கா வண்புகழ் செறிபொழில் திருமலை
பங்கய மலர்த்தாள் பண்டிதர் எனும்...

*முனிவர்; இதன் சிறப்புப் பாயிரம்*

பண்பார் கவிஞர் வியந்தேத்தப் பாட்டியலாம்
வெண்பா அந்தாதி விளம்பினான் – நண்பாரும்
கோடாத கீர்த்திக் குணவீர பண்டிதனாம்
பீடார் களந்தைப் பிரான்.

*என்ற பாடல்; பரந்த பாட்டியல் மரபுகளிற் கரந்து கிடந்த பொருளையெல்லாம் ஒரு கோவைப்படுத்தல் நூல் செய்த காரணம் என்பது முதலான பல செய்திகள் இவ்வுரையினால் விளங்குகின்றன. பாட்டியல் நூல், பாட்டியல் மரபு என்று பெயர் வழங்குமென்றும் இதற்கு முன்னர்ப் பலபாட்டியல் நூல்கள் இருந்தனவென்றும், இதனால் அறிகிறோம். ஆகவே பன்னிரு பாட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள நூல்கள் உண்மையாகவே வழங்கினவென்பதும் பெறப்படுகிறது. இவை எவையும் இன்று கிடைக்கவில்லை.*

**பதிப்புக்கள்**

1. *சந்திரசேகர கவிராச பண்டிதர் 1860.*
2. *சென்ன கேசவலு நாயுடு 1908.*
3. *சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் - கொ, இராமலிங்கத் தம்பிரான் 1936. இப்பதிப்பில் இவருடைய சொந்த உரைக் குறிப்புக்களும் சேர்க்கப்பட்டுள்ளன; பழைய உரை எது, புதுச்சேர்க்கை எது என்று காண்பதரிது.*

○○○

*அத்தியாயம் 8*

# இலக்கண உரையாசிரியர்

## *முன்னுரை*

தமிழ்நாட்டில் சில நூற்றாண்டுகள் வரை இலக்கண உரைகள் தொடர்பாக எழுந்துள்ளன என்று இப்போது சொல்ல முடியும். கிடைக்கிற உரைகளில் முதலில் தோன்றிய உரை யாகிய இறையனார் களவியலுரை எட்டாம் நூற்றாண்டில் செய்யப்பட்டதென்றும், சுமார் பத்தாம் நூற்றாண்டில்தான் ஏட்டில் எழுதி வைக்கப்பட்டதென்றும் ஆராய்ச்சியாளர் கருதுவர். அக்காலம் முதல் பதினைந்தாம் நூற்றாண்டு வரை, நூற்றாண்டு தோறும் சிறப்பான இலக்கண உரைகளைப் பெரும்புலவர் எழுதியிருக்கிறார்கள். தொல்காப்பிய உரைகள் பல, யாப்பருங்கலம் காரிகை உரைகள், நன்னூல் உரை, புறப் பொருள் வெண்பாமாலை, நேமிநாதம் (இன்றில்லாதுபோன அவிநயம்) உரைகள் என்பன குறிப்பிடத்தக்கன. இந்த வரிசை யில் வீரசோழியத்துக்குப் பெருந்தேவனார் செய்த உரையும் குறிப்பிடத்தக்க சிறப்பு மிக்க ஓர் உரையாகும்.

வீரசோழியம் என்ற மூல நூலுக்குச் சில தனித்தன்மைகள் இருப்பது போலவே, அதன் உரைக்கும் சில சிறப்புக்கள் உள்ளன. ஒன்று, இது ஐந்திலக்கணம் கூறும் நூலுக்கான உரையாகும். வேறு தமிழில் ஐந்திலக்கண நூலுரை (பழமையானது) எதுவும் இல்லை. இரண்டாவது, நூல் சோழமன்னர் ஆதரவு கொண்டு இயற்றப்பட்டது போலவே, உரையாசிரியரும் சோழமன்னர் ஆதரவோடு வாழ்ந்தவர் என்று தெரிகிறது. மூன்றாவது, இது வடமொழியிலக்கணம் தழுவிய தமிழிலக்கணவுரையாகும்.

மற்றொரு தன்மை பின்னும் சிறப்புடையது. வீரசோழியத் தைச் செய்தவர் பௌத்த சமயத்தார். ஆனால் அதற்கு உரை

செய்த பெருந்தேவனார் சைவ சமயத்தார். இதில் வியப்புக்கு இடமில்லை. உரை செய்யப் புகுகின்ற ஆசிரியர் யாரும், மூல நூலின் ஆசிரியர் எம்மதத்தினராயிருப்பினும், தாம் ஒருபொது நெறியில் நின்று சமயக்காழ்ப்பு இல்லாதபடி உரைசெய்து வந்திருக்கிறார்கள்.

அரும்பதவுரைகாரர், அடியார்க்கு நல்லார், நச்சினார்க் கினியர் போன்ற சைவர்களும் யாப்பருங்கல விருத்திகாரர் இளம்பூரணர் போன்ற சைனர்களும் இந்த நிலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாவர்.

இவர்கள் வரிசையில் எண்ணத்தக்கவர் பெருந்தேவனார். இவர் சைவராயிருந்தும், மூலநூலின் சிறப்பு நன்கு விளங்கும்படி பௌத்த சமய மேற்கோள்களையே அதிகமாக அமைத்துக் காட் டுவது இவருடைய விரிந்த மனப்பான்மையைக் காட்டுகிறது.

பொதுவாக, இன்று சமயத்துறையில் பலரிடம் ஒரு தவறான கருத்துக் காணப்படுகிறது. பண்டைய நாளில் கற்றறிந்த மக்கள் சமயத்துறையில் வெறியும் சகிப்பின்மையும் கொண்டே வாழ்ந் தார்கள் என்பது இன்று பலரிடம் காணப்படும் கருத்து. இது பிழை என்பது நாம் மேற்குறித்த உரையாசிரியர்கள் வரலாற்றால் நன்கு விளங்கும். சமயக்காழ்ப்பு சமீப காலத்தில்தான் மிகவும் வெளிப்பட்டிருக்கிறதென்று அறிகிறோம்.

அறுபது ஆண்டுகளுக்குமுன் அனைவரும் நன்கு அறிந்திருந்த ஒரு செய்தியைக் குறிப்பிடுவோம். மயிலை வித்து வான் சைவ - சண்முகம் பிள்ளையவர்கள் ஒரு வீர வைணவப் பெரும்புலவரிடம் கம்பராமாயணம் பாடம் கேட்கச் சென்று தம் பெயரையும் மறைத்து, நெற்றிக்குறியையும் மாற்றி இட்டுக் கொண்டார். ஆயினும் ஒரு சமயம் அவ்வைணவப் புலவர் செய்த சிவநிந்தை பொறுக்க முடியாமல், அதை மறுத்துத் தம் உண்மை நிலையையும் வெளிப்படுத்தி, அதனால் தம் மாணாக் கர் நிலையையும் இழந்து மீண்டு வந்துவிட்டார் என்பது இன்று பலர் அறிந்த உண்மை வரலாறு. இது நடந்தது சென்ற நூற் றாண்டின் இறுதிப்பகுதி. இவ்வாறிருக்க, சைவரான பெருந் தேவனார் பௌத்தர் செய்த நூலுக்கு உரைசெய்ய அக்காலம் புகுந்தது, அப்போது நிலவிய சமயப் பொறையுணர்வை நன்கு புலப்படுத்துகிறது.

## பெருந்தேவனார் - வீரசோழியவுரை

பெருந்தேவனார் என்ற பெயரோடு தமிழ்நாட்டில் பெரும் புலவர் பலர் இருந்திருக்கிறார்கள். சிறப்பாகத் தெரிந்தவர் மூவர்.

முதலாமவர் சங்கப் புலவருள் ஒருவர்: அகநானூறு - பாலை 51, குறுந்தொகை - குறிஞ்சி 225, நற்றிணை - பாலை 83: ஆகிய மூன்று பாடல்களைப் பாடியவர். காலம் சங்ககாலம் - கி.பி. 2ஆம் நூற்றாண்டுக்குமுன்.

இரண்டாமவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று வழங்கப்பெறுகிறார். ஒரு பாண்டியன் மகாபாரதம் தமிழ்ப் படுத்தினான் என்று சின்னமனூர்ச் சாசனம் கூறும். இதன் காலம் ஏழாம் நூற்றாண்டு. இந்தப் பாரதம் இன்று இல்லை. ஆனால் மூன்றாம் நந்திவர்ம பல்லவ மன்னன் காலத்தில் 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு பெருந்தேவனார் ஒரு பாரதம் செய்தார். இது பாரத வெண்பா* என வழங்கும். வெண்பாவால் ஆன இந்த நூலுள் சில அகவற்பாக்களும் விருத்தப்பாக்களும் உரைநடையும் உள்ளன. 800 பாக்கள் கொண்ட சிறுபகுதியே இன்று கிடைத்துள்ளது. எட்டுத்தொகையுள் ஐந்து நூல்களுக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடிச் சேர்த்தார் என்ற ஒரு வரலாறு உண்டு. இவ்வாறு இவரது கடவுள் வாழ்த்துப்பாடல் பெற்றவை அகநானூறு குறுந்தொகை நற்றிணை ஐங்குறுநூறு புறநானூறு என்பன. அன்றி திருவள்ளுவ மாலையில் 'எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுற' என்ற 30ஆம் பாடல் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது எனப் புத்தகங்களில் அச்சிடப் பெற்றிருக்கக் காண்கிறோம். திருவள்ளுவ மாலை❖ ஓர் இலக்கியப் போலி; மிகவும் பிற்பட்ட காலத்தில் ஒரு புலவர் பல பாடல்களைப் பாடி அவற்றுக்குச் சங்கப்புலவர் என்று தாம் கருதிய பலர் பெயரையும் சூட்டித் திருவள்ளுவ மாலை என்று வழக்கில் விட்டார் என்றே சொல்ல வேண்டும். ஆதலால் இப்பாடல் இங்கு கருதத்தக்கதன்று. (இரண்டாமவர் என்று கூறிய இப்பத்தியிலேயே மூவர் பெருந்தேவனார் வருகின்றனர். மூவரும் வெவ்வேறானவர் என்றே சொல்ல வேண்டும்).

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 9ஆம் நூற்றாண்டு பார்க்க.

❖ எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு நூல் காண்க.

மூன்றாவது தெரிந்த பெருந்தேவனாரே வீரசோழியம் என்ற இலக்கண நூலுக்கு விரிவுரை எழுதிய பெருந்தேவனார். வீர சோழிய காலம் சரித்திரச் சான்றுகளால் தெளிவாய்த் தெரிந்தது. இவ்வுரையாசிரியரையே இவ்வத்தியாயத்துள் கருதுகிறோம்.

**ஆசிரியர்**

உரையிறுதியில் காணப்படும் பாடல், உரைச் சிறப்புப் பாயிரமாகும். ஆசிரியர் பெயர், உரைசெய்த காரணம் என்ற பொருள்களை இது திட்டமாய் உரைக்கிறது:

தடமார் தருபொழிற் பொன்பற்றி காவலன் தான்மொழிந்த
படிவீர சோழியக் காரிகை நூற்றெண் பஃதொடொன்றின்
திடமார் பொழிப்புரை யைப்பெருந் தேவன் செகம்பழிச்சக்
கடனாக வேநவின் றான், தமிழ் காதலிற் கற்பவர்க்கே.

இதுகூறும் பொருள்கள் பின்வருவன: பொன்பற்றி காவலன் வீரசோழியம் செய்தான்; இது 181 காரிகையுடையது: இதற்குப் பொழிப்புரை செய்தார் பெருந்தேவனார்; இதை, விரும்பித் தமிழ் கற்பவருக்கு உதவும் பொருட்டு, தமது கடமையாகவே கருதி அவர் செய்தார். இவைபற்றிச் சில சொற்கள் சொல்லலாம்.

வீரசோழியம் செய்தார் பொன்பற்றி - புத்தமித்திரன் என்பவர். பொன்பற்றி என்ற ஊர் தஞ்சை ஜில்லா அறந்தாங்கி தாலுக்காவில் பொன்பேத்தி என்ற பெயரோடு இன்று வழக்கில் உள்ளது. புத்தமித்திரரும் அவர் முன்னோரும் இங்கு தலைவர் களாய் வாழ்ந்தார்கள் - ஆசிரியரின் பாயிரச்செய்யுள் (வீரசோழி யம் 1), 'தமிழுரைக்கப் புக்கவன் பைம்பொழிற் பொன்பற்றிமன் புத்தமித்திரனே' என்று கூறும். பாயிரம் 3ஆம் பாடல், நூற்பெயர், பொருள், காலம், களன் முதலியனவெல்லாம் கூறுகிறது:

நாமே வெழுத்துச்சொல் நற்பொருள் யாப்பலங் காரமென்னும்
பாமேவு பஞ்ச அதிகார மாம்பரப் பைச்சுருக்கித்
தேமே வியதொங்கல் தேர்வீர சோழன் திருப்பெயராற்
பூமே லுரைப்பன், வடநூன் மரபும் புகன்றுகொண்டே.

புத்தமித்திரனார், எழுத்து சொல் பொருள் யாப்பு அலங்காரம் என்னும் பஞ்ச அதிகாரத்தை (இலக்கணத்தை)ச் சுருக்கி, வட நூல் மரபும் தழுவி, வீரசோழன் பெயரால் தமிழில் செய்தார்.*

* வீரசோழியம் பற்றிய ஆராய்ச்சியையும் வீரராசேந்திரன் பற்றிய குறிப்பையும் எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு காண்க.

வீரசோழனாவான் வீரராசேந்திரன் (1063-1070); இவன் கங்கை கொண்ட சோழன் என்னும் முதல் இராசேந்திர சோழனுடைய மூன்றாம் புதல்வன். இவன் பெயரால் நூல் செய்ததாவது, வீரசோழியம் என்ற நூல். இது ஐந்திலக்கணமும் கூறுவது.* பாயிரத்துளன்றியும், ஏழாம் காரிகையில் புத்தமித்திரர், வீர சோழனை 'எல்லாவுலகும் மேவிய வெண்குடைச் செம்பியன் வீரராசேந்திரன் தன் நாவியல் செந்தமிழ்' என்று நூலுள்குறிப் பிடுகிறார். இதனால் அரசன் பெயர் மிகவும் திட்டமாய்த் தெரிகிறது.

'வீரசோழியம் தமிழ்நாட்டிலே பெரிதும் பயிலப்படவில்லை. ஆனால், இலங்கைத்தீவிலே சிங்களர்களால் இது பயிலப்பட்ட தாகத் தெரிகிறது. வீரசோழியம் பௌத்தரால் இயற்றப்பட்ட படியால், பௌத்தரான சிங்களவர் இந்நூலைப் போற்றினார் கள் போலும். சித்தசங்கக (சித்தாந்த சங்கிரகம்) என்றும் பெயருள்ள சிங்கள இலக்கண நூலில் வீரசோழிய இலக்கண விதியிலிருந்து சிலவற்றை எடுத்து எழுதியதாக அந்நூலாசிரியர் கூறுகிறார். இந்தச் சிங்கள இலக்கணநூல் கி.பி. 13ஆம் நூற் றாண்டில் இயற்றப்பட்டது.'❖

வீரசோழியம் ஐந்ததிகாரத்திலும் 181 காரிகை (காரிகை - கட்டளைக் கலித்துறை) என்று சொன்னபோதிலும், 84, 85 சூத்திரங்கள் இரண்டும் வெண்பா (சொல்லதிகார இறுதி); ஏனைய 179 மட்டுமே காரிகை, இதற்குப் பெருந்தேவனார், உலகம் புகழும்படியாக, பொழிப்புரை செய்தார்; கடனாகவே செய்தார் என்று சொல்லப்பட்டமையால், இவர் நூலுக்கு உரை செயற்பாலார் மாணாக்கருமாவார் என்ற இலக்கண மரபு பற்றித் தாம் உரை எழுதினார்; இவர் புத்தமித்திரருடைய மாணாக்கர் என்று கருதவேண்டும்.

மாணாக்கராயிருந்ததோடு, வீரராசேந்திரன் காலத்திலும் வாழ்ந்து அவனுடைய சிறப்புக்களையும் நன்கு உணர்ந்திருக் கிறார். முன் கூறிய எட்டாரைச் சக்கரத்துக்கான கலிவெண்பா பெருந்தேவனாரே செய்தது போலும். இதில் வீரன் திருநாமம்

---

* ஒரு விளக்கமான ஐந்திலக்கண நூல் அட்டவணையை அதேநூல் பக்கம் 106-107இல் காணலாம்.

❖ மயிலை - சீனி வேங்கடசாமி, தமிழும் சமண பௌத்த மதங்களும் என்ற கட்டுரை.

என்று இவனைக் குறிப்பிடுகிறார். விளக்கத்தில் இவன் முழுப் பெயரையும் குறிப்பிட்டதையும் முன்னமே காட்டினோம். இதன்பின், வீரசோழன் பெயரைக் கொண்ட ஒரு கூட சதுக்கப் பாடலைக் காட்டுகிறார். பின்னர் நான்கு வெண்பாக்களைத் தருகிறார், நான்கும் வீரராசேந்திரனைப் புகழ்வனவே,

வீரத்தால் விண்ணாதல் மெய்த்தவத்தால் வீடாதல்
ஆரத்தால் ஆள்வதெவர் தாடேறச் – சீரொத்த
மின்னார் படைத்தடக்கை வீரரா சேந்திரனுக்கு
ஒன்னாராய் வாழ்வ துறின்.

விண்கூ டலசங்க மத்துடைந்த வேல்வடுகர்
எண்கூ டலறு மிருங்கானில் – கண்கூடப்
பண்ணினான் தன்னுடைய பாதம் பணியாமைக்
கெண்ணினார் சேரு மிடம்.

ஈண்டுநூல் கண்டா னெழில்மிழலைக் கூற்றத்துப்
பூண்டபுகழ்ப் பொன்பற்றி காவலனே – மூண்டவரை
வெல்லும் படைத்தடக்கை வெற்றிபுனை வீரன்தன்
சொல்லின் படியே தொகுத்து.

மின்னார் வடிவேற்கை வீரரா சேந்திரன்தன்
பொன்னார் பதயுகளம் போற்றாது – கன்னாடர்
புன்கூ டலசங்க மத்தினொடும் போருடைந்தார்
நன்கூ டலசங்க மத்து.

இவற்றுள் 2, 4 பாடல்கள் வீரராசேந்திரனுடைய கூடலசங்கமப் போரைக் குறிப்பிட்டுப் பாடுகின்றன. முதற்பாடல் அவனுடைய வீரத்தைக் குறித்துப் புகழ்கிறது. மூன்றாம் பாடல் வீர (ராசேந்திர)ன் சொல்லின்படி பொன்பற்றி காவலன் நூல் கண்டான் என்று கூறுகிறது. இப்பாடல்களை உரையாசிரியரே செய்து தாம்காட்டும் சித்திரக் கவியமைப்புக்குப் பொருத்திக் காட்டினார் போலும்.

இப்படியே 179ஆம் காரிகையுரையில் சித்திரக்கவிகளைக் குறிப்பிடும் அதே இடத்தில் எழுத்து வருத்தனை என்பதை ஒரு வெண்பாவால் உரைக்கிறார்; இவ்வெண்பாவிலும் வீரரா சேந்திரன் பெயரை அமைத்திருப்பது, இவருக்கு அவன் காலத் தொடர்புண்மையை நன்கு புலப்படுத்தும்.

மரத்தினை ஒரெழுத்துச் சொல்லும்; மற் றொன்று
நிரப்பிட நீரிற்பூ வொன்றாம்; – நிரப்பிய
வேறோ ரெழுத்துய்க்க வீரரா சேந்திரனாட்டு
ஆறாம் எனஉரைக்க லாம்.

*(பொருள்: காவிரி)*

*இவையன்றி மற்றொரு பாடலில், புத்தமித்திரனுடைய முன்னோன் ஒருவன், சேந்தன் என்பவன், தொண்டைமானது சேனாபதியையும் சிங்களத்தரையனையும் வில்லவனையும் வெற்றி கொண்டதைச் சிறப்பித்துக் கூறுகிறார். அது மிக நீண்ட ஒரு வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா; அதன் சுரிதகப் பகுதியை மட்டும் கீழே தருகிறோம்:*

அலகி லாநின் அடியிணை பரவுதும்
வெல்படைத் தொண்டைமான் விறற்சே னாபதி
சிங்களத் தரையன் வெண்குடை யதனொடு
பொங்குபுகழ் வில்லவன் புறக்கொடை கண்டு
பொலிதரு சேந்தன் பொன்பற்றி காவலன்
மலிதரு பார்மிசை மன்னுக எனவே.

*இப்பாடல் ஒருகால் இவரே பாடியதாயிருக்கலாம். அங்ஙனமாயின், இது இவருடைய குருபக்திச் சிறப்பைக் காட்டுகிறது. சேந்தனைப் புகழும் மற்றொரு பாடலையும் தருகிறார்:*

எழில்தரு ஞாயிற் றெழில்போல் நிறைந்து
பொழில்தரு வான்திங்களே போல – முழுவுலகுந்
தன்புகழி னால்நிறைந்த தார்வேந்தன் சேந்தன்மாட்
டென்புகழ் கலாவ தினி.

*வீரராசேந்திரன் ஆதரவில் செய்யப்பட்ட வீரசோழியத்தின் ஆசிரியர் பொன்பற்றி என்ற ஊரினர்; இது சோழநாட்டு ஊர். இவரும் இவர் மாணாக்கரான பெருந்தேவனாரும் சோழ நாட்டினரே எனத் தடையில்லை. நூலகத்தும் இதற்குப் பல ஆதரவுகளுள்ளன. இவர் தரும் மேற்கோள் பாடல்களில் வரும் ஊர்களில் காஞ்சி தவிர, ஏனையவை பெரும்பான்மையும், சோழநாட்டு ஊர்களே. நாட்டார் வாய்க்கால், ஆயிரத்தளியர் வாசல் என்ற தொடர்களைக் கூறுகிறார். அப்பெயருடைய வாய்க்கால் இன்றும் குடந்தைக்குத் தெற்காக ஓடுகிறது. ஆயிரத்தளி என்பது பழையாறே. ஆயிரந்தளி கூடினவிடம்*

ஆயிரத்தளி என்று மற்றோரிடத்திலும் கூறுகிறார். இருப்பைப் பாலாற் செய்யப்பட்ட நெய் இருப்பைநெய் என்கிறார்; இருப்பை விதையிலிருந்து நெய்யாட்டுதல் அதிகமும் சோழ நாட்டில் தான் இன்றும் வழக்கமாயுள்ளது.

சுந்தரசோழன், இராசராசன், இராசேந்திரன் (பல பாடல் களில் அனுபமன், பண்டித சோழன் என்கிறார்), வீரராசேந்திரன் என்போரைக் குறித்த பாடல்களை இவர் காட்டுகிறார். இந்த அளவு பிற முடிமன்னர் எவரையும் இவர் குறிப்பிடவில்லை. இதனாலும் இவர் சோழநாட்டினர் என்பது நன்கு தெளியப் படும். (வீரராசேந்திரனை ஓரிடத்தில் வீரசோழ மகாராசா என்று குறிப்பிடுகிறார்).

சொற்கள் கடை குறைந்தமைக்கு எடுத்துக்காட்டாக இவர், நாகப்பட்டினம், தஞ்சாவூர், உறையூர் என்பன கடைகுறைந்து நாகை தஞ்சை உறந்தை என ஐகாரத்தான் முடியும் என்று காட்டுகிறார். இம்மூன்றும் சோழநாட்டு நகரங்கள் என்பதும் இங்கு கருதத்தக்கது. மேலும் இங்கு சோழநாட்டுப் பெயர்களே பாடல்களில் அதிகமாய் வருகின்றன. தலப்பெயர்களை முன் னமே காட்டினோம். பிற பெயர்கள் ஆவன; உறந்தை, பழையாறை, புகார், குடந்தை, நாகை; புனனாடன், சென்னி; புனனீர்நாடு, சோணாடு; பொன்னி, காவேரி - என்ற பெயர்கள் காண்க. இப்பெயர்களும் இவ்வுரையாசிரியர் சோழநாட்டினர் என்ற முடிவை வலியுறுத்தும்.

இவர் பாடல்களில் காஞ்சி வருவதில் ஒரு பொருத்தம் உண்டு. வடநூல் தண்டியாசிரியர், காஞ்சி பல்லவருடைய அவைப் புலவராய் வாழ்ந்து காவ்யாதர்சம் (கவிதைக் கண்ணாடி என்ற அலங்கார சாத்திரம்) பாடினார். தமிழ்த்தண்டி அவர்தம் நூலில் பல்லவரையும் காஞ்சியையும் மிகவும் சிறப்பித்திருக்கிறார். அவர் நூலையும் உதாரணச் செய்யுள்களையும் மொழிபெயர்த்த இந்த நூலிலும் காஞ்சி போற்றப்பெறுதல் இயல்பே.

### பௌத்த சமயச் சார்பு

நூலாசிரியர் பௌத்தரானமையால், அவருடைய மாணாக் கர் உரை செய்யும் போது அதனுள் பௌத்தசமயச் சார்பு புலப்படுதல் இயல்பே. மாணாக்கர் தம்மாசிரியரிடமே நூலைப் பாடங் கேட்டிருப்பார். அப்போது அவர் தமக்குக் கற்பித்த உதாரணச்செய்யுள் முதலியவற்றை இவரும் அப்படியே தம் உரை

யுள் எழுதுதல் முறை. இந்த நினைவோடு இவ்வுரையை நாம் பார்க்கும்போது இதனுள் அதிகமான புத்தசமயப் பாடல்கள் இருக்கக் காண்கிறோம்.

அசைகளுக்கு உதாரணமாக, 'போதிவேந்தன் சரணலால் அரண்புகேம்' என்ற தொடரைக் காட்டுகிறார். காரணக்கருத்தா வுக்கு இவர் காட்டும் உதாரணங்களில், 'புத்தன் கண்ணனை உய்வித்தான்' என்பதும் ஒன்று. பிரத்தியயத்தால் வரும் முதல் விருத்திக்கு எடுத்துக்காட்டாக இவர்காட்டும் பலவற்றுள் 'புத்தனைத் தெய்வமாக உடையான் பௌத்தன்' என்பதும் ஒன்று.

யாப்பதிகாரத்துள் இவர்காட்டும் செய்யுள் விகற்ப உதாரணங்கள் அனேகம் பௌத்த சமயப் பாடல்கள். இருசீர், முச்சீர், ஐஞ்சீர், எழுசீர், எட்டு, ஒன்பது, பத்து, பதினொரு சீர் விருத்தங்களுக்கு, எடுத்துக்காட்டுகளைக் காண்க. எல்லாப் பாடல்களும் பொதுவாக, பிறவுயிர்களின் துயரைக் களைய புத்தன் முற்பிறவிகளில் தன் உயிரையே கொடுத்துதவிய அருமை யைப் போற்றுவன. பொருளதிகாரத்தில், மேன்மை, துறவு என்ப வற்றுக்கு எடுத்துக்காட்டாக இவர்தரும் பின்வரும் இரண்டு பாடல்களும், நன்கறியப்பட்டவை, சுவை மிகுந்தவை:

புனிற்றுப் பசியுழந்த புலிப்பிணவு தனாஅது
முலைமறாஅக் குழவி வாங்கி வாய்மடுத்து
இரையெனக் கவர்ந்தது நோக்கி யாங்க
வேரிளங் குழவிமுன் சென்று தானக்
கூருகிர் வயமான் புலவுவேட்டுத் தொடங்கிய
வாளெயிற்றுக் கொள்ளையிற் றங்கினன் கதுவப்
பாசிலைப் போதி மேவிய பெருந்தகை
ஆருயிர் காவல் பூண்ட
பேரருட் புணர்ச்சிப் பெருமை தானே.

வாடாப் போதி மரகதப் பாசடை
மரநிழ லமர்ந்தோன் நெஞ்சம் யார்க்கும்
அருளின் தீந்தேன் நிறைந்துநனி நெகிழ்ந்து
மலரினும் மெல்லி தென்ப: அதனைக்
காமர் செவ்வி மாரன் மகளிர்
நெடுமா மழைக்கண் விலங்கிநிமிர்ந் தெடுத்த
வாளும் போழ்ந்தில வாயின:
யாதோ மற்றது மெல்லிய வாறே.

இங்ஙனம் உரைகாரர் காட்டும் பாடல்கள் யாவும் சுவையும் கனிவும் மிக்கவையாயுள்ளன. துடிதபுரம் (துக்ஷிதலோகம் அல்லது இப்பெயரே அமைந்த ஓர் ஊர்போலும்) போற்றும் ஒரு பாடலும் காணப்படுகிறது. இவர் குண்டலகேசியின் கடவுள் வாழ்த்துப் பாடலையும், போர்த்தல் உடைநீக்குதல், வேரிக்கமழ் தார் என்ற பாடல்களையும் குறிப்பிடுகிறார். பின்னும் இவர் குறிப்பிடும் பல பாடல்கள் குண்டலகேசி என்று ஊகிக்கத் தக்கன: எடுத்துக்காட்டு; பேய்மையாக்கும், நன்மை மேவுவார், பொலங்கலக்குரியவாம், முதலாயின.

இவ்வாறு பெருந்தேவனார், தாம் ஆசிரியரிடம் கற்றனவாயும் நேரே ஆராய்ந்தறிந்தனவாயும் உள்ள பல பௌத்த சமயப் பாடல்களைத் தம் உரையுள் குறிப்பிடுகிறார். பௌத்த சமய இலக்கியமாக மணிமேகலை ஒன்றே இன்று கிடைக்கும் தனி இலக்கியம். மற்று அச்சமயப் பாடல்கள் பல நாம் அறியவருவது. பெருந்தேவனார் உரை ஒன்றினால்தான் (அபூர்வமாய்ச் சில பாடல்களை நீலகேசியுரையும் தருகிறது.)

**சமயம்**

முன்னமே காட்டிய பௌத்தசமயச் சார்புகளால் இவர் பௌத்தர் என்றும், வீரசோழிய ஆசிரியர் பௌத்தரானமையால் இவரும் அச்சமயத்தினர் என்பது பொருத்தமே என்றும் எண்ணுதல் கூடும். இது உண்மையன்று. இவர் சைவர் என்று காட்ட எண்ணற்ற குறிப்புக்கள் நூலகத்தே காண்கின்றன. சிலவற்றை மட்டும் இங்கு குறிப்பிடுவோம். இவர்பெயரே இவர் சைவர் என்பதைக் காட்டும். பெருந்தேவனார் - மகாதேவர் என்ற பெயரின் மொழிபெயர்ப்பு; இது சிவபெருமான் பெயராகும். இலக்கிய இலக்கணவுரைகளில் உரையாசிரியர் யாரும் பொதுவாக, திருமுறைகளைக் குறிப்பிடுவதில்லை.* ஆனால் பெருந்தேவனார், இரு திருமுறைப் பாடல்களைக் குறிப்பிடுகிறார். ஒன்று அப்பர் சுவாமிகள் தேவாரம் நாலாந்திருமுறையின் இறுதிப்பதிகம் (4.113.4):

முருகார் நறுமலர் இண்டை புனைந்து வண்டேமுரலும்
பெருகார் சடைமுடிக் கற்றையினாய்பிணி யான்மிடைய

* இளம்பூரணர் உரையில் மூத்த நாயனார் திருவிரட்டை மணி மாலைப் பாடலொன்று காணப்படுவதைக் குறிப்பிட்டிருக்கிறோம். எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு காண்க.

இருகாற் குரம்பை இதுதான் உடையன், இதுபிரிந்தால்
தருவாய் எனக்குன் திருவடிக் கீழோர் தலைமறைவே.*

*திலகம் என்பதற்கு இலக்கியமாக இதைத் தந்து, 'இவையிற்றைக் கலித்துறை என்பாருமுளர்' என்கிறார் (28ஆம் சூத்திர உரை) இக்காலத்து இதைக் கட்டளைக் கலித்துறை என்று வழங்கு கிறோம்.❖ (தேவாரத்துள் இது திருவிருத்தம் என்று சொல்லப் பட்டுள்ளது).*

*மற்றொரு பாடல் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த இளம் பெருமானடிகள் பாடிய சிவபெருமான் திருமும்மணிக் கோவையில் ஐந்தாம் பாடல், இது பதினொராந் திருமுறையுள் 24ஆம் பிரபந்தம்:*

வேலை முகடும் விசும்பகடும் கைகலந்த
காலைநீ எங்கே கரந்ததுசொல்? – மாலைப்
பிறைக்கீறா, கண்ணுதலே, பெண்பாகா, ஐயா,
இறைக்கீறா எங்கட் கிது.✞

*இது வெண்பாவின் பொதுஇலக்கணத்துக்கு மேற்கோளாய்க் காட்டப்பட்டுள்ளது. இவ்விரண்டு திருமுறைப் பாடல்களையும் காட்டும் ஆசிரியர் சைவர் என்று கொள்ளத் தடையில்லை.*

*விநாயகரைக் குறிப்பிடும் பாடலொன்றை இயைபில் உரு வகத்துக்கு எடுத்துக்காட்டாய்த் தருகிறார்:*

தேனக்கலர் கொன்றை பொன்னாகச் செஞ்சடையே
கூனற் பவளக் கொடியாகத் – தான
மழையாகக் கோடு மதியாகத் தோன்றும்,
புழையார் தடக்கைப் பொருப்பு.

*விநாயகரைக் குறித்த பாடல்களைப் பண்டைய உரைகளுள் காண்பது அருமை.*

*சொல்லதிகாரத்தில், 'முன்பு சில பெயர் நின்று பின்பு தாது பெற்றும் பிரத்தியயங்களான் முடியுமாறு' என்று காட்டும்*

---

* *பாடபேதங்களைத் தேவாரத்துடன் ஒப்புநோக்கிக் கொள்க.*

❖ *இது பற்றிய ஒரு விளக்கக் குறிப்பைப் பக்கம் 138இல் காண்க.*

✞ *பாடபேதங்களைத் திருமுறையை நோக்கிக்காண்க. திருமுறையுள், நீர், ஐயோ என்று அச்சிட்டிருப்பது பிழை.*

*உதாரணங்களுள், கூத்தாடி நீறணிந்தார் அம்பலத்தார் என்பன* முதல் மூன்று தொடர்கள். இவை சிவபிரானைக் குறிப்பன. (புத்தனைத் தெய்வமாகவுடையான் பௌத்தன்) சிவனைத் தெய்வமாக உடையான் சைவன், பசுபதியைத் தெய்வமாக உடையான் பாசுபதன் - என்றெழுதுவதும் காண்க (53-4 உரை). பின்வரும் மேற்கோள் பாடல்களையும் கருதுக:*

கறைமிடற்றர், கையிற் கபாலத்தர், வெள்ளைப்
பிறைமுடியர், பின்தாழ் சடையர் – பொறிவிரவு
நாகத்தர், சூலத்தர், நன்னுதலாள் தானிருந்த
பாகத்தர் – என்றே பரசு.

*(அர்த்தநாரீசுவர வடிவத்தைப் போற்றும் 'பாடகஞ் சேர் காலொருபால்' என்ற பாடலையும் யாப்பருங்கல விருத்தியில் இலிருந்து எடுத்துத் தருகிறார்.❖)*

கானத்தண் கொன்றை மாலைதா
மானத்தின்றென் கொம்பு வாடுமால்
வானத்திங் கட்கு மாறுகொல்
நானித்தாற் றிலன்நாரி பாகனே.

*தில்லைத் தலம் பற்றி அகத்துறையிலமைந்த ஒரு பாடலையும் தருகிறார் (சகல உருவகத்துக்கு எடுத்துக்காட்டு):*

பெண்ணைப் பறவைக் குரன்முழக் காய்ப்பிறை வாளுருவி
வண்ணக் கருங்கடல் வட்டத்தை ஏந்தி மதிபுலியூர்
அண்ணற் சிவன்கொன்றை யந்தார் நினைந்தஎன் ஆருயிரை
உண்ணத் திரிதரு மந்திஎன்னாநின்ற யோகினியே.

*திருவெண்காட்டைக் குறித்த ஒரு பாடல் மிக்க சிறப்புடையது: சவலை விருத்தத்தைக் காட்டும் பாடல் (130 காரிகை உரை.):*

சங்குமுள பறையுமுள தாநல்ல கவரியுள
எங்குமுள துரவுகிண றெறியுமறி கொடியுமுள
பொங்குபுனல் வந்தலைப்பப் புள்ளினங்க ளார்ப்பப்
பொருகயலோ டினவாளை புறக்கணித்து நோக்கத்
தெங்குபழம் வீழ்ந்தொழுகும் காவிரியின் தென்பால்
திருவெண்காட் டையவெனில்தீ வினைகள் கெடுமே.

---

* *புகழேந்தி என்ற தொடரையும் இங்கு கூறுவது குறிப்பிடத்தக்கது.*

❖ *அல்லது இப்பாடல் போன்றவை அடங்கிய மூலநூல்கள் இவர் காலத்திலும் கிடைத்தன என்று கருதவேண்டும்.*

*குரங்குகள் ஆடப்பட்ட துறை யாதொரூரில் உண்டு அவ்வூர் குரங்காடுதுறை எனவும், மயில்கள் ஆடப்பட்ட துறை யாதொரூரில் உண்டு அவ்வூர் மயிலாடுதுறை எனவும் சொல்வது, பன்மொழியைத் தொகுத்தலால் பன்மொழித் தொகை என எழுதுகிறார். வேறு இவர் பாடல்களில் குறிப்பிடும் தலங்கள் நாகை, இலந்தை, குடந்தை, மருதூர் என்பன; கயிலை, பார்வதி, செஞ்சடைப்பரன் என்ற குறிப்புக்களும் மேற்கோள் பாடலில் வருகின்றன.*

*இவையனைத்தையும் ஒரு தொகுப்பாக நோக்கும்போது, இவர் சிறந்தசைவர் எனக்கொள்வதில் மாறுபாடு இருக்க முடியாது. கடனாகவே நவின்றான் என்றது போல, ஆசிரியரிடத்துள்ள ஈடுபாட்டால் உரை செய்தார்; சமய வேறுபாடு இதற்கு இடையூறாக இல்லை. ஆனால் இவர் சமயக்காழ்ப்புடையவரல்லர். பௌத்தசமயப் பாடல்கள் இருபதுக்கு மேல் இவர் மேற்கோள் தருகிறார். அப்படியே திருமால் துதியான பாடல்கள் பலவும் தருகிறார். எழுவாய் வேற்றுமைக்கு எடுத்துக்காட்டும் உதாரணம் மார்கழித் திங்கள்; ஆண்டாள் திருப்பாவையின் தொடக்கம்.*

மீனாமை காரேனம் வென்றியரி என்றிவைமுன்
ஆனான் நினைப்பதற் கன்பர்கண் டீர்நம்மை யாள்பவரே.

*என்ற சிந்துப்போலி என இவர்காட்டும் பாடல் காண்க.*

புரவுதரு குடியாகிப் புயல்வண்ணன் விரும்பியதூஉம்
பொழில்சூழ் காஞ்சி
கரியசுடர் வீதிதொறும் உலாப்போந்து கவர்வதூஉம்
கலைசூழ் காஞ்சி
நிரைவளையிவ் வுலகுய்ய நின்றுதவம் செய்வதூஉம்
நிழல்சூழ் காஞ்சி
சுரமகளிர் பாடுவதும் பயில்வதூஉம் சொன்மாலை
தொடுத்த காஞ்சி.

அன்றயனை உந்தியின் அளித்தபரன் மேவுவதும்
அத்தி கிரியே
சென்றுகரி கவ்வுமுத லைக்கணிற மேவுவதும்
அத்தி கிரியே
வென்றவன் வணக்குவது மேலில கெயிற்றரிய
தானவ ரையே
தன்தொழில் முருக்குவது தானில கெயிற்றரிய
தானவ ரையே.

இவை திருமால் பதிகளைப் போற்றுவது போலவே, புத்தபரமாக, அடிகளின் இறுதிச் சீர்கள் மடங்கி வருமாறு இவர்காட்டும் பாடலும் இங்கு அறியத்தக்கது.

மருளறுத்த பெரும்போதி மாதவரைக் கண்டிலமால்
– என்செய்கோம்யாம்
அருளிருந்த திருமொழியால் அறவழக்கம் கேட்டிலமால்
– என்செய்கோம்யாம்
பொருளறியும் அருந்தவத்துப் புரவலரைக் கண்டிலமால்
– என்செய்கோம்யாம்.

இப்பாடலும் இதையொத்த மற்றொரு பாடலும் யாப்பருங் கலக்காரிகையுரையிலும் உள்ளன.

சுவையுடைய பல செய்திகளை இவர் உரையுள் காணும் போது ஒரு கருத்தைச் சொல்லத் தோன்றுகிறது. எங்குமே உழவுத்தொழில் அதன் பயன் ஆகியவை சிறப்பித்து சொல்கிறார். கரும்பென்றும் சோறு என்றும் அடிக்கடி சொல்கிறார்; செய்க்கு நீர் பாய்ச்சினான்; சோறு தேவதத்தனால் அடப்பட்டது; நீர்க்கே விழுந்தான்; எள்ளில் எண்ணெய் உண்டு; வீட்டின்கண் எலி புகுந்தது; இரப்பானுக்குச் சோறு இட்டான்; கரும்பின் பொருட்டு வேலி இட்டான்; ஆலின் கீழ் பசுக் கிடந்தன; மரத்தில் பனைநன்று; மாச்சோறு உண்கின்ற சிறுக்கன் அதன்கண் வீழ்ந்த தூளினைத் தின்றான்; பசுவினைப் பாலைக் கறந்தான்; தயிரினாற் குழைத்த சோறு; இருப்பைப் பாலாற் கொள்ளப்பட்ட நெய் என்பனபோல உள்ள பல எடுத்துக்காட்டுத் தொடர்களும், இவர் வேளாளர் மரபினர் என்று நமக்குத் தெரிவிக்கின்றன. கொம்மட்டி மாதுளை, மாங்காய், பலாப்பழம் என்பனவும் காண்க. எடுத்துக்காட்டுக்கள் இவர் காட்டுவனவற்றுள் பாதிக்குமேல், வேளாளர் வாழ்வுக்கு உரிய பொருள்கள். ஆதலால் வேளாளர் என்ற கருத்து மிக்க வலியுடையது.

இவர் மருத்துவத் தொழிலும் கற்றிருந்தார் போலும்; மருந்துகளால் ஆட்டப்பட்ட எண்ணெய் மருந்தெண்ணெய்; எண்ணெய் மஞ்சள் வெற்றிலை, கடுநெல்லி தான்றி, சுக்கு மிளகு திப்பிலி போன்ற எடுத்துக்காட்டுக்கள் காண்க. வேதியரிடம் மிக்க மதிப்புக் கொண்டவர்; வேதியன் பூப்பறித்தான், அருந்தவர்க்கு ஊண் கொடுத்தான், தேவர்க்குப் பூப்பறித்தான், அந்தணர்க்குப் பொன் கொடுத்தான், தாதன் என்பன காண்க.

## மொழியறிவு

வீரசோழியத்துக்கு உரை எழுத வந்தவருக்கு வடமொழிப் புலமை இல்லாவிடில் எடுத்தகாரியம் நிறைவேறாது. ஆகவே இவருக்கு இப்புலமை இருந்ததென்பது சொல்லாமலே அமையும். இவர் உரையைப் பயின்றால் எண்ணற்ற வடமொழி இலக்கணச் செய்திகளும் மரபுகளும் சொல்லாட்சிகளும் தெரிய வரும். நதீ குமரீ என்ற வடசொற்கள் தமிழில் வரும்போது, நதி குமரி எனக் கடை குறுகிவரும் எனவும், ஆகாராந்த பெண்பால் குறித்த சொற்களான வனிதா தாரை உமா மாலா சாலா தேவதா கலா சீதா என்பன வனிதை தாரை உமை மாலை சாலை தேவதை கலை சீதை எனவரும் எனவும் குறிப்பிடுகிறார் 'தமிழ்ச் சொல்லிலக்கணத்துக்கு எல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின் றமையின், அங்குள்ள வழக்கெல்லாம் தமிழுக்கும் பெறும்' என் கிறார். இவர் கூறுகின்ற தௌவாரிகன் கௌங்குமம் முதலான சிலசொற்கள் தமிழில் வழங்கவில்லை பொருளதிகாரத்திலும் அலங்காரப் படலத்திலும் பல பொருள்களின் வடமொழிப் பெயர்களை விரிவாக உணர்த்துகிறார். இவற்றுள் பெரும் பாலான வேறு இலக்கணங்களில் சொல்லப்பெறாதவை.

ஆரியம், வடுகு, சாவகம், தெலுங்கு, சோனகம், சிங்களம், பப்பரம் இவை முதலாகிய பிறதேசச் சொற்களைத் தமிழாக்குவது எப்படி என்று காட்டுகிறார். சிங்களவன் பேசுவது சிங்களம், வடுகன் பேசுவது வடுகு, துளுவன் பேசுவது துளு - என்பார். வட்டா என்னும் ஆரியதேயச் சொல்லு வட்டை என்று வந்த வாறும், முருங்கா என்னும் சிங்களச் சொல்லு முருங்கை என வந்தவாறும் கொள்க என்பார். இவற்றால் சிங்களம் முதலான பிறமொழிகள் இவர் ஓரளவு அறிந்திருந்தார் என்று கருதலாம். இலங்கையைக் குறிப்பிடுகின்றார்.

## உரையியல்பு – இலக்கணச் செய்திகள்

ஐந்திலக்கணங்களையும் ஐந்து பாகுபாடாகச் சொல்லும் பண்டைய இலக்கணநூல் வீரசோழியம் ஒன்றே. பெருந் தேவனார் உரை இன்றேல் இதன் பல பகுதிகள் இன்று சிறிதும் விளங்கமாட்டா. சில சித்திரக்கவிகளுக்கு இவர் காட்டிய பாடல்கள் ஏடு விளங்காமையாலும், சித்திரம் அமைக்கும் ஆற்றலுடையார் இன்று அருகிவிட்டமையாலும், அக்கவிகளின் வடிவமே இன்று புலப்படாமல் இருக்கிறது. இதுகொண்டு இவ்வுரை எத்துணை முக்கியமானது என்று யூகிக்கமுடியும்.

உரைகாரர், மூலத்தைத் தம் உரையாலும் தாம் தரும் எண்ணற்ற இலக்கண இலக்கிய மேற்கோளாலும் விளக்குகிறார். பல மேற்கோள் பாடல்கள் பண்டைய நூல்களிலிருந்து எடுத்தவை. எனினும், பல இவ்வுரைகாரர் தாமே இயற்றிக் கொண்டவை என்று தோன்றுகிறது. உரைகாரர் எங்கும் தமிழ் மரபைப் போற்றி எழுதுவது பாராட்டற்பாலது.

ஐந்திணை ஒழுக்கம், இவர் கூறியிருப்பது சிறப்புடையது (92-96), 'நடையாவது ஒழுக்கம் இப்பாட்டு எந்நடை பற்றி வந்தது என்றால் இந்நிலத்துள் ஒழுக்கம் பற்றி வந்தது என்றறிவது' என்று கூறி, இதன்பின் குறிஞ்சி நடையியல், நெய்தல், பாலை, மருதம், முல்லை நடையியல் என்று ஒவ்வொரு திணையையும் மிக நீண்ட அகவற்பாவால் துறைகள் கூறி விளக்குகிறார். இவை முறையே 14, 29, 33, 39, 37 அடிகள் கொண்டவை. திணைகளின் முறைவைப்பு மாறுபட்டிருப்பதும் நோக்கத்தக்கது. அடுத்து இங்ஙனமே விளக்கி வரும்போது மெய்ப்பாட்டை 64 அடிகளில் விளக்கி இருக்கிறார். உவமை 80 அடி. இது 21 சூத்திரங்களின் தொகுதி. பின்னும் பல.

இனி, சிந்து என்பதன் இலக்கணம் விளக்க இவர் குறிப்பிடும் இரு பாடல்களும் சிறுவர் விளையாட்டைக் கூறுவது நயமாக உள்ளது.

**வீசின பம்பரம் ஒய்வதன் முன்நான்**
**ஆசை யறவிளை யாடித் திரிவனே.**

**எடுத்த மாடம் இடிவதன் முன்நான்**
**அடுத்த வண்ணம் விளையாடித் திரிவனே.**

சோதிட நூலொன்றும் பயில்கிறது (154).

பல பொருள்களை நன்கு நயம்பட விளக்குகிறார்.·கவிக்குச் சொற்குற்றம், பொருட்குற்றம் வரக்கூடாது என்பதை உரைக்கு மிடங்கள் காண்க.

'உறுப்புக் குற்றங் காரணமாக யாப்புக்களைப் பழிக்கப் படாவோ எனின், யாப்புக்களின் வேறு சிறப்புடைய பயனுள வாகில் அப்பயனோக்கிக் கொண்டாடப்படும். ஆயினும் குற்றம் குற்றமே என்பது. அவைகள் அன்றுள்ளானொரு குரிசிலைப் புகழ்ந்து செய்யுங் கவியுள் மறந்தேயும் வரப்பெறா எனக்கொள்க. ஆகாமைக்குக் காரணம் யாதெனின் தச்சநூலில் இப்படிப்

பட்ட மனைதனை எடுக்கிற் குடிபுகல் இன்ன நன்மை தரும் இன்ன தீமை தரும் என்று சொல்லும் என்பது. மற்றும் இப்படிப் பட்ட யானை குதிரை ஆயுதம் உடையானுக்குப் பொல்லாங்கைத் தரும் நன்மையைத் தரும் என்று நூலுண்மையான் என்பது. ஆகிற் பகைவராய் உள்ளாரைச் சாவவுங் கெடவும் பாடல் ஆகாதோ வெனின், அற்றன்று. பாடின் கவி பாட்டுண்டான் கொள்ளின் அல்லது பயன்கொடாது என்பது. என்போலவோ எனின், குதிரை இலக்கணமறிவான் குதிரை கொள்ளுமிடத்து இக்குதிரை கொள்ளில் எனக்குப் பொல்லாதென்று தவிரும். மற்றும் இவ் வியானை கொள்ளிற் பொல்லாது, இவ்வீட்டில் இருக்கிற் பொல்லாது என்னும் இலக்கணம் அறியான் பயன்கொள்ளான்.

'உயிருக்குச் சிறப்பாவது வலியுடைமை. வலியில்லானை ஆவி இல்லாதான் என்பரெனக் கொள்க. சொற் குற்றத்தாற் பாட்டுண்ட தலைமகன் உடலுக்கு ஊனம், பொருட் குற்றத்தால் உயிர்க்கு ஊனம் என்பதனாற் பொருட்குற்றம் தவிர்தல் சிறப் புடைத்தென்பது.'

செய்யுளுக்கு ஓசை என்பது பற்றி இவர் சிறந்த கருத்துக் களை எழுதியிருக்கிறார். 'நாலு பாக்களுக்கு நால் ஓசை என்று கூறுபடுத்து, வெண்பாக்களுக்குச் செப்பளோசை என்றாக்கி, அதனை அலகிட்டு ஓசையூட்டுக என்று இலக்கணஞ் சொன் னார். ஓசையாவது செவிப்புலனே கருவியாக அறிவது என்பது எல்லார்க்கும் உடம்பாடு ஆதலால்' மேலும் இவ்விடத்து, வெண்பாவின் ஓசை வேறு உதாரண வாய்பாடு காட்டினால், அது உதாரணத்தினோசையே யன்றி, வெண்பாவின் ஓசையாகாது என்று நன்கு விளக்கிக் காட்டுகிறார். ஓசை, செய்யுளைச் சீர் வரையறை செய்யுங்காலத்து, எவ்வளவு முக்கியமானது என்பது, பழம் பாடல்களாய் ஒரே தொடர்பாக ஏடுகளில் எழுதப் பெற் றிருந்தவற்றைச் சீர்அடி வரையறை செய்து ஆசிரியப்பாவாக்கி அச்சிட்டிருப்பதைக் காணும் போதுதான் நன்கு புலப்படும். அன்றியும், சீவகசிந்தாமணி ஐயரவர்கள் பல பதிப்புக்கள் சீர் பிரிக்காமலே அச்சிட்டார்கள். காரணம், அதன் முதல்பாட லான 'மூவா முதலா உலகம் ஒருமூன்றுமேத்த' என்பது முதலான காப்பியக் கலித்துறைப் பாடல்களை அன்று எளிதாகச் சீர் பிரிக்க முடியாதிருந்தமை. சமாஜச் சிந்தாமணி மூலப்பதிப்பில் தான் (1941) முதன்முதல் இச்செய்யுட்கள் யாவும் சீர்பிரித்து அச்சிடப்பெற்றன; அச்சிட்டவர் வையாபுரிப்பிள்ளை. அவர்

ஓசை ஒன்றே கொண்டு - பெருந்தேவனார் கூறியபடி செவிப் புலன் ஒன்றே கருவியாகக் கொண்டு - சீர் பிரித்தார். பிரித்து அச்சிட்ட பிறகு இன்று பார்ப்போருக்கு எளிதாகத் தோற்றலாம்; ஆனால் அன்று அது எவ்வளவு அரிய ஒரு செயலாயிருந்தது என்பதை உடனிருந்து பதிப்பித்த எம்போல்வாரே உணர்வார். இதை உணரும்போது, பெருந்தேவனார் ஓசையை வலியுறுத்திச் சொல்வது எவ்வளவு அரியபொருள் என்பதை நன்கு உணரலாம்.

இவர் மேலும் சொல்லுகிறார்; 'வடநூற் புலவர்க்கு ஓசை யூட்டுக என்பதில்லை எனக்கொள்க. மேலும், அவர் பயில் வார்க்கரிதாக நூலைப் பெருக்குவதும் செய்து, அப்பெருமை யின் வாய்ப்புக்களை அடக்கமாட்டாதே மிக்கும் குறைந்தும் வரினும் ஒருபுடை ஒப்புமை நோக்கி ஒழிந்தவுங் கொளல் என்று சூத்திரம் செய்தமையால் அடங்கவும் செய்திற்றிலர், பயில்வார்க்கு எளிதாகச் சுருங்கவும் செய்திற்றிலர், யாப்பதிகா ரத்தினால் பயனும் செய்யுளுக்கு ஒரு ஏதுவே யாதலால் குற்ற மென்க.' இதனால் இவர் வடநூல் இலக்கணத்திலும் தமிழிலக் கணம் செம்மை பெற்றது என்று கருதுவது தெளிவு.

ழ, ள, ற,ச என்று எழுத்துக்களைச் சில இடத்து மக்கள் பிழையாக உச்சரிக்கிறார்கள் என்று காட்டவந்தபோது, அறி வில்லாதார் தமிழைப் பிழைக்க வழங்குவர் என்று கூறி, கருநிலம் சுற்றின தேசம் (கருநடம்), காவிரி பாய்ந்த நிலம், பாலாறு பாய்ந்த நிலம் என்று இவர் குறிப்பிடுகிறார். (தம் நிலமாகிய காவிரி பாய்ந்த நிலத்தையும் இவர் விட்டுவைக்கவில்லை). எடுத்துக் காட்டுக்கள் அதிகமான நகைச்சுவை விளைப்பன. வழு ஏழு என்று காட்டுமிடத்து, ஒரு குறட்பா மேற்கோள் தருகிறார்:

> திணைபால் மரபுவினாச் செப்புக் காலம்
> இடனொடே ழாகும் இழுக்கு-

144ஆம் காரிகையுரையில், வழக்கதிகாரத்தோடும் பொருந்தித் தமிழினோடும் கூடி வடவெழுத்தைத் தவிர்ந்து பெரிதும் இன்பந் தந்து, பெரியோராற் செய்யப்பட்ட செய்யுட்களினும் வந்து....' என்று இவர் எழுதுகிறார். இறையனாரகப் பொருளுரையில் யாப்பதிகாரம் என்று குறிப்பிடப் பெறுகிறது. 13ஆம் நூற் றாண்டில் எழுதிய பேராசிரியர், 'மற்றிதனை யாப்பதிகாரமென வேறோரதிகாரமாக்கி உரைப்பாருமுளர். அங்ஙனம் கூறின், வழக்கதிகாரமெனவும் வேறு வேண்டுமென மறுக்க' என

எழுதுகிறார். வழக்கு என்று இவர் நினைத்துச் சொல்வது, மரபியலை; அவ்விதமே மரபியலை மரபதிகாரம் என்று சொல்ல வேண்டுபவர் வழக்கதிகாரம் என்று சொல்வது, பெருந்தேவனார் உரையைப் பார்த்தமையால் தான் என்று கருதத் தோன்றுகிறது.

39வது காரிகையுரையில் 'இந்திரன் தாமரையைக் கரத்தால் கொய்து' என்று ஒரு பாடலின் மூன்று வரியைக் காட்டுகிறார். என்றார் பிறரும் என்கிறார். முன் ஒருவர் செய்ததுபோலும். அடிதோறும் முற்றுமோனைக்கு இவர் பாடல் காட்டுவது கருதத்தக்கது:

துனைவருநீர் துடைப்பவராய்த் துவள்கின்றேன் துணைவிழிசேர்
துயிலை நீக்கி
இனவளைபோல் இளநலம்சோர்ந் திடருழப்ப இகழ்ந்தவர்நாட்
டில்லை போலும்
தனியவர்கள் தளர்வெய்தத் தடங்கமலம் தளையவிழ்க்கும்
தருண வேனில்
பனிமலரின் பசுந்தாது பைம்பொழிலிற் பரப்பிவரும்
பருவத் தென்றல்.

(இது அறுசீர் ஆசிரிய விருத்தம் என்று இன்று கருதுவோம். முதல் நான்கு சீர்களும் காய், இறுதி இரண்டும் மாச்சீர்; ஆனால் இவர் மோனையமைப்பின்படி பார்த்தால், இரண்டாம் மாச்சீரில் மோனை அமையாமையால், இரண்டையும் ஒரு சீராகவே கொண்டிருக்கிறார் என்று தெரிகிறது.)

**கலித்துறை**

கலித்துறையானது தமிழ் இலக்கியப் பரப்பில் சங்ககாலத்தில் இல்லாமல் இடைக்காலத்தில் பெரிதும் ஆட்சிக்கு வந்த ஒரு யாப்பு விகற்பம். பிற்காலத்தில் இது பிரபந்தங்களில் தான் இடம் பெற்றிருக்கிறது. மாலை அந்தாதி, கலித்துறையால் செய்யப் பெறுதல் உண்டு; வேறு தனி நூல்கள் செய்யப் பெற்றிருக்கவில்லை. கலித்துறையானது காப்பியக் கலித்துறை கட்டளைக் கலித்துறை என இரு வகைப்படும். இவ்விரண்டினுள் காப்பியக் கலித்துறையே சிந்தாமணி சூளாமணி முதலிய நூல்கள் எழுந்த காலத்தில் அதிகமாக ஆட்சியில் இருந்தது. அதனுடைய யாப்பமைதி விளங்காமல் இடர்ப்பட்ட காலமும் உண்டு. சிந்தாமணி பழைய பதிப்புக்களைப் பார்த்தால் இது நன்கு விளங்கும்.

*அங்கு நூலின் முதற்பாட்டு இக்கலித்துறையில் ஆனது. காப்பியக் கலித்துறைக்கு அடிக்கு ஐந்து சீர்; இவை மா, மா, கனி, மா, மா என்ற வாய்பாடு உடையன. அடி நேர் அசையில் தொடங்கினால் 14 எழுத்தும் நிரையசையில் தொடங்கினால் 15 எழுத்தும் உடையது. சிந்தாமணியின் முதல் 31 பாடல்கள் இந்த யாப்பு. முதல் பாட்டைக் கீழே தருகிறோம்.*

**மூவா முதலா வுலகம்மொரு மூன்றும் ஏத்தத்**
**தாவாத இன்பந் தலையாயது தன்னின் எய்தி**
**ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வன் என்ப**
**தேவாதி தேவன் அவன்சேவடி சேர்து மன்றே.**

*பயிற்சி இல்லாதவர்களுக்கு இதில் வருகின்ற கனிச்சீரும் வெண்டளையும் சீர் பிரிப்பதில் இடர் விளைவித்துள்ளன. (இறுதிச் சீர்களில் வெண்டளையில்லை. இருப்பினும், மா, மா, மா, புளிமாங்காய், தேமா என்று பிரித்து வெண்டளை பிழை யாததாகக் கொள்ளவும் கூடும்) பிற்காலத்தில் பெரிய புராணத் திலும் இதைக் காணலாம். காப்பியக் கலித்துறை வழக்கு வீழ்ந்த ஒரு யாப்பு விகற்பமாயிருந்துங் கூட, இன்னும் பிற்காலத்தில், இந்த யாப்பைப் புராணத்தில் அமைப்பது அவசியம் என்று கருதி, கந்தபுராண ஆசிரியர் முதலிய புராணமுடையார் பலரும் இந்த யாப்பில் சில பாடலேனும் பாடியிருக்கிறார்கள்.*

*கட்டளைக் கலித்துறை என்பது இதுபோலவே ஐந்துசீர் உடையதாய் அடியின் தொடக்கத்தில் நேர் வந்தால் 16 எழுத்தும், நிரை வந்தால் 17 எழுத்தும் பெற்று வரிதோறும் வெண்டளை பிழையாமல் வருவது. இங்கு 5ஆம் சீர் மட்டும் காய்ச்சீரா யிருக்கும். பண்டைக்காலத்தில் அப்பர் சுவாமிகள் திரு விருத் தமும், நம்மாழ்வார் பாடிய திருவிருத்தமும், கட்டளைக் கலித் துறை யாப்பில் அமைந்தன. விருத்தம் என்று இன்று நாம் சொல்வது வேறு. உதாரணமாக அப்பருடைய திருநேரிசையும் திருமங்கையாழ்வாருடைய திருக்குறுந்தாண்டகமும் இன்று உள்ளபடி அறுசீர் விருத்தங்கள்.*

*கட்டளைக் கலித்துறையானது வீரசோழியத்தில் இரண் டாகப் பிரித்துச் சொல்லப்பட்டுள்ளது. ஒன்று கோவைக் கலித்துறை, மற்றொன்று திலதக் கலித்துறை. இரண்டுக்கும் கட்டளைக் கலித்துறை இலக்கணம் முழுதும் பொருந்திய போதிலும், கடைசி அடியில் மூன்றாம் சீர்ச்சொல் பக்குவிட்டு*

முற்சீரோடு ஒன்றி ஒழுகிய ஓசைத்தாய் வந்தால்தான் அது கோவைக் கலித்துறை என்றும், அங்ஙனம் வராவிட்டால் திலதக் கலித்துறை என்றும் பழைய வீரசோழியப் பதிப்பில் ஒரு குறிப்பு எழுதப்பட்டுள்ளது. வேறுபாடு கடைசிஅடியில் மட்டுமே. இதற்கு உதாரணம் (வீரசோழியம் 164) கடிகமழ் கோதைக் கயனெடுங் கண்ணி, கலித்துறையே என்ற அடி இங்கு மூன்றாஞ் சீர் 'கயனெடுங்' என்றே உள்ளது. இது பக்குவிட்டு இசைக் காமையால், இது திலதக் கலித்துறையே அன்றி, கோவைக் கலித்துறையாகாது என்பது அப்பதிப்பாளர் குறிப்பு. இவ்வடி 'கடிகமழ் கோதைநல் லாய்பன்னு கோவைக் கலித்துறையே' என்று இருந்தால்தான் கோவைக் கலித்துறையாகும் என்று அவர் எழுதியுள்ளார்; பின்னும் ஓரடியின் பிற சீர்களும் அவ்வாறு ஒழுகினால்தான் மிக்க சிறப்புடையது என்று கூறி, 'நீரணங் கோநெஞ்ச மேதனி யேயிங்கு நின்றவரே' என்று வரும் தஞ்சை வாணன் கோவை இரண்டாம் பாடலையும் உதாரணம் காட்டு கிறார். (இலக்கண விளக்கத்துக்கு இது பொருந்தலாம். ஆனால் இலக்கிய உணர்வில் இதை நாம் ஏற்பது எளிதன்று. இவ்வாறு சீர் பிரிப்பதை வகையுளி என்போம். வகையுளி இல்லாது வரு வதே கவிதையில் சிறப்பு; வகையுளி இருப்பது கவிதைக்கே இழுக்கு).

### இலக்கியச் செய்திகள்

சுவை பொருந்திய பாடல்கள் உரையெங்கும் காணமுடியும். கழிந்த இளமைக்கு இரங்குவதாகிய பாடல்:

> செய்த தவமில்லை, தேடிய மாடில்லை,
> எய்திய நூலோ டியையில்லை, – மெய்யன்பு
> மேயநண்பர் தாமில்லை, மேதினியின் மெல்லவே
> போயிற் றிளமை புலர்ந்து.

'இது அனுசயத் தடைமொழி; கையறவு எனினும் அமையும்' என்பது உரைக்குறிப்பு. பாடலில் 'மெய்யன்பு மேய நண்பர் தாமில்லை' என்பது கையறவின் உச்ச அவலநிலை. வினைப் பயனைக் கடப்பவர் யாவரும் இல்லை என்ற ஒருபாடல்:

> விண்ணவரின் மிக்கு, விளங்கொளியான் மேம்பட்டு,
> மண்ணவர்க்குக் கண்ணாய வான்கதிர்கள், – கண்ணெதிரே
> பந்தித் திருளடையும் பாரில்என்றால், ஆனவினைப்
> பந்தத்தை யார்கடப் பார்?

*கடுஞ்சொல்லின் கொடுமையைக் குறித்த ஒரு பாடல்:*

கல்லாதார் வாயிற் கடுஞ்சொல்லாங் காரரவு
நல்லாரைச் சென்று நனிகடிக்கும் – சொல்லாவோர்
மந்திரமு மில்லை, மகிதலத்தே மற்றுமொரு
தந்திரமு மில்லையதன் சால்பு.

*இராசராச மன்னனுக்கு இராச கண்டீரவன் இராசேந்திர சிங்கன் என்ற பெயர்கள் வழங்கின; இப்பெயர்களை அமைத்த தனிப் பாடல்களும் இவ்வுரையுள் சில உள்ளன. அகத்துறையில் அமைந்த பின்வரும் பாடல் கவிச்சுவை நிரம்பியது:*

குடைநின் றதுசெம்மை; கோலொடு சென்றது கோ; மனுவின்
நடை நின் றதுகலி; ஞாலம் நடந்தது நன்மை; அன்றி
இடைநின்ற தொன்றுண்டு, யாதெனின், இராசகண் டீரவ, நின்
தொடைநின்ற தார்புனை வார்மட வார்படுந் துன்புறவே.

*பாடாண்வகை, புகழ்ச்சி பரவல் குறிப்பு கொடிநிலை கந்தழி வள்ளி என ஆறுவகை என்ற காரிகையை (106) விளக்கியுரைத்த பிறகு, 'செப்பாதனவும் தேந்தறிதல்' என்று சொல்லப்பட்டமை யால் ஒரு சாரார் கூற்று என்று உரையாசிரியர் அகப்பொருள் புறப்பொருள் அகப்புறப் பொருள் என்ற மூன்றைக் கூறுகிறார். மூன்றில் அகப்புறப் பொருளைக் கூறும்போது,*

அறனும் வாட்கையும் ஒருதலைக் காமமும்
பொதுவியல் பாடாண் நயநிலைப் படலமென்று
இவைகள் அனைத்தும் அகப்புற மாகும்.

*என்ற ஒரு சூத்திரம் தந்து, அறன் என்பதை மனையறம் துறவறம் என இரண்டு என்று பின்வரும் சூத்திரங்களால் விளக்குகிறார்:*

கொடுத்தலும் அளித்தலும் கோடலும் இன்மையும்
ஒழுக்கத்தொடு புணர்தலும் புணர்ந்தோர்ப் பேணலும்
வழுக்கில் பிறவும் மனையற வகையே.

துறவும் அடக்கமும் தூய்மையும் தவமும்
அறவினை யோம்பலும் மறத்தினை மறத்தலும்
மனையின் நீங்கிய முனைவர்தம் அறமே.

*பின்னர் வாழ்க்கை ஒருதலைக் காமம் பொதுவியல் பாடாண் என்பவற்றை விளங்கக் கூறி, இறுதியில் நயநிலைப்படலம் என்ற பகுதியை விரித்துரைக்கிறார். 'நயநிலைப் படலமாவது நாடகம்:*

கூத்தமார்க்கம் என்பதும் இது' என்றெழுதி, இதை 25 உறுப்புக்களாகப் பெருக்கியுரைக்கிறார். இறுதியில், ஒன்பது சுவைகளையும் 'சுவையாவன சிங்காரம் முதலாயுள்ளன என்றும், அவையிற்றை வீரக்குறிப்பு பயக்குறிப்பு உக்கிரக்குறிப்பு சிங்காரக் குறிப்பு காருணியக்குறிப்பு அற்புதக்குறிப்பு புகழ்க்குறிப்பு நகைக்குறிப்பு இழிப்புக்குறிப்பு என்று ஒன்பதாகவும் கூறுவர். வீரக்குறிப்பு வெகுளி முதலாயினவாம், நகைக்குறிப்பு மென்மை முதலாயினவாம்' என்று முடிக்கிறார். சாந்தம் என்ற சுவையை இங்கு புகழ்க்குறிப்பு என்று குறிப்பிடுகிறார் போலும்,

புறப்பொருள் வெண்பாமாலையின் 173ஆம் பாடல் உரையில் அவைய முல்லைக்கு உதாரணமாக அவையத்தார் இயல்பு எட்டைக்கூறும் ஒரு பாடல் காட்டப்பட்டுள்ளது:

குடிப்பிறப்புக் கல்வி குணம் வாய்மை தூய்மை
நடுச்சொல்லு நல்லணி ஆக்கம் – கெடுக்கும்
அழுக்காறு அவாவின்மை அவ்விரண்டொ டெட்டும்
இழுக்கா அவையின்கண் எட்டு.

'குடிப்பிறப் புடுத்து பனுவல் சூடி' என்ற ஆசிரிய மாலைப் பாடலும் (புறத்திரட்டு 827) இவ்வெட்டையும் கூறுகிறது:

குடிப்பிறப் புடுத்துப் பனுவல்சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையின்
காதலின் பத்துட் டங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை யவாவின்மை யென்றாங்கு
இருபெரு நிதியமும் ஒருதா மீட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை.

வாகை வகை கூறும் 104ஆம் பாடலுரையில் பெருந்தேவனார் இவ்வெட்டியல்புகளை ஒரு பாடலால் கூறுகிறார். பாடல் இவரே செய்தது போலும். 'எட்டியல் சான்றோர் உட்படு பக்கமும் கண்டுகொள்க; எட்டியலாவன:

அழுக்கா றிலாமை அவாவின்மை தூய்மை
ஒழுக்கம் குடிப்பிறப்பு வாய்மை – இழுக்காத
நற்புலமை யோடு நடுவு நிலைமையே
கற்புடைய எட்டுறுப்புக் காண்.

*179ஆம் காரிகையுரையின் முடிவில், மூலத்தில் சொல்லாத பல பொருள்களை இவர் வருவித்து எழுதுகிறார். அவற்றுள் ஒன்று மணம் எட்டு என்பது. இது இறையனார் களவியலுரை, இளம்பூரணருரை, நச்சினார்க்கினியருரை ஆகிய பொருளிலக் கணவுரைகளிலும் யாப்பருங்கல விருத்தியுரையிலும் சொல் லப்பட்ட பொருள். பெருந்தேவனார், யாப்பருங்கல விருத்திப் பாடல்களை அப்படியே தந்திருக்கிறர்; தெய்வமணம் கந்தர்வ மணம் என்ற இரண்டுக்கு மட்டும் இவர் தரும் பாடல்கள் விருத்தி யுரையிலும் வேறானவை; இவ்விரண்டையும் கீழே காண்க.*

தெய்வந் தொழுதுபெற்ற சேயிழையை ஒப்புமையால்
நெய்வந்த தீமுன்னா நேர்வதூஉம் – கைவந்த
வேள்வி யகத்து வினையான் விழைபொருளா
யாள்வதூஉம் தெய்வமண மாம்.

முன்னை வினையான் முறையாற் களவியலாற்
கன்னியைக் கண்டுடன் காதலித்துப் – பின்னர்
உளநிக ழார்வ முரைக்கொத் துறுதல்
வளமிகுகாந் தர்ப்ப மணம்.

*பொருளதிகாரத்தில், நடையியல் என்று ஐந்திணை நடை யையும் குறித்து விளக்கம் கூறிய பிறகு, பொருள்கோள் முதலிய பல பொருள்களைச் சூத்திர மூலமாக விளக்குகிறார். இவர் சொல்வன யாவும் புதுமையாக உள்ளன. 'பொருள்கோளாவது,*

கொழுங்கொடி வள்ளி செழுங்குலை வாழை
தீங்கரும் பேமலர் திகழ்தரு பலவே
தேங்கமழ் அசோகு செருவிற் பூட்டே
பூம்புனல் ஆறெனப் பொருள்கோள் ஏழே.

*அவற்றுள்,*

கொழுங்கொடி வள்ளி கூறுமுற் பொருளே;
செழுங்குலை வாழையின் சொற்பொரு ளீறே;
இன்தீங் கரும்பில் இடையது பொருளே;
வன்றாட் பலவுக்கு முதலிடை பொருளே;
நற்பூ அசோகுக்கு நடுவது பொருளே;
விற்பூட்டு மேலுங் கீழும் பொருளே;
இரும்புன லாற்றினுக் கெங்கும் பொருளே.

*என்றபடி இன்ன பொருள்கோள் என்றறிவது.*

தொடர்ந்து சொல்லும்போது வன்புலம் மென்புலம் பெருமை விருந்து என்ற பொதுப்பொருள்களைக் குறிப்பிடு கிறார். அடுத்து, பயன் குறிப்பு மெய்ப்பாடு என்ற பொருள்களைப் பல நூற்பாக்களால் எடுத்துக்காட்டுகிறார். மெய்ப்பாடுகள் காமனுடைய ஐங்கணைகளையும் கூறி, சுப்பிரயோகம், விப்பிர யோகம், சோகம், மோகம், மரணம் என்ற நிலைகளை விளக்கிய பிறகு, எண் சுவைகளையும் அவற்றின் விளக்கம் முப்பத்திரண் டையும் பல நூற்பாக்களால் விரித்துரைக்கிறார். பின்னர் பாட் டின் காரணம், காலம், கருத்துரை, இயல்புரை, விளைவு, உவமை என்ற பொருள்களைத் தாமே நூற்பாக்களால் விரிக் கிறார். 21 நூற்பாக்கள் உவமையை விரிக்கின்றன. பின்னர் புடையுரை என்பதொன்று கூறுகிறார்.

புடையுரை யென்பது நடைவகை தெரியின்
திறந்தெரி பாட்டி னிற்பொரு ளன்றியும்
புறம்பெற வருஉம் பொருள்வகை யுடைத்தே.

இவர் கூறும் இப்பொருள்கள் எல்லாம் பிற இடங்களில் காணப் பெறாத புதுப்பொருள்கள். அடுத்து ஒரு நூற்பாவால், பிற நூல்கள் பொருள்கோள் என்ற பெயரால் கூறும் வகைகளைப் பொருள்நடை என்ற பெயரால் விரிக்கிறார். சந்தத்தின் எழுத் தளவு என்ற பெயரால் பல நூற்பாக்களையும், குறட்பாக்களை யும் இலக்கணமாக எடுத்துக்காட்டுகிறார்.

பின்னர் சந்தம் எழுத்துவகையால் 26 பேதம் என்று சொல்லி இவற்றின் பெயர்களைத் தந்து உதாரணப் பாடல்களும் தரு கிறார். இவையாவும் வடமொழி மரபு என்பது தெளிவு. இங்கு வருகின்ற பெயர்களுள் காயத்திரி அனுட்டுப்பு என்று வடமொழி யாப்பின் பெயர்கள் வருவன காண்க. இப்பெயர்களுள் நிலை நன்னிலை உண்டி பகுதி பந்தி வனப்பு முதலான தமிழ்ப் பெயர் களும் உள்ளன. இவர் காட்டுகின்ற சில சந்தங்களும் உதாரணப் பாடல்களும் கீழே தருகிறோம்:

*உத்தம்:*
கார் நேர் வார் யார்.

*அதியுத்தம்:*
போதி யாதி பாத மோது.

*மத்திமம்:*
வேரம் போய் – மாரன் சீர் – சேருங்கால் – நேர்வன்யான்.

*நிலை:*

போதி நீழற் – சோதி பாதங் – காத லானின் – றோதனன்றோ.

*நன்னிலை:*

மன்ன னேரியன் – சென்னி மானதன்
கன்னி காவலன் – பொன்னி நாயகன்.

*காயத்திரி:*

கருவி வானமே – வருவர் மாதிரம்
பொருவி லாமிதே – பருவ மாவதே.

*உண்டி:*

போதுறு புனைகோதாய் – காதல ரயமானா
வேதுறு மனமீதே – யாதர வகலாதே.

*அனுட்டுப்பு (32 எழுத்து)*

அணிதங்கு போதி வாமன்
பணிதங்கு பாத மல்லால்
துணிபொன் றிலாத தேவர்
மணிதங்கு பாத மேவார்.

உளர்குழ விருளாகி
யிளநகை நிலவாக
வளர்குழன் மடமானே
தளர்வது தமியேனே.

*புள்வேளூர்ப் பூதன் என்ற வள்ளலைக் குறித்த அழகிய பாட்டொன்றை இவர் காட்டுகிறார். இவரே செய்த பாடலா யிருக்கலாம். உதாரதையணிக்கு எடுத்துக்காட்டு:*

காலையும் வந்த கலைஞர் கதிர்கரந்த
மாலையும் வாராதே என்செய்வார்? – நீலம்
புனிற்றா நிரைமேயும் புள்வேளூர்ப் பூதா!
கனிற்றாகாண், அம்மறையார் கை?*

---

* *பெருந்தொகை 962. புல்வேளூர்ப் பூதன் என்று அவ்வை வரலாற்றில் வரும் பெயர் புள்வேளூர்ப் பூதன் என்றே இருத்தற்குரியது; புள் வேளூர் - புள்ளிருக்கு வேளூர். இப்பாடலின் முதல்வரியில் சொல் கவைஞர் என்றே உள்ளது. நான்காம் வரியில் கனிற்றா என்ற சொல்லின் வடிவமும் பொருளும் தெளிவாயில்லை. கன்றிப்போகாதா என்று பொருளாகலாம்; காலையும் மாலையும் வந்து உன்னிடம் வாங்கி வாங்கிக் கை கன்றிப் போகாதா; 'கனிற்றாகாண்?' என்பது பேராசிரியர் வெள்ளைவாரணனார் கூறிய விளக்கம்; கனற்றா காண் என்று மிருக்கலாம்.*

புல்வேளூர்ப் பூதன் என்பவன் அவ்வையாரால் போற்றப்பெற்ற ஒரு வள்ளல் என்ற வரலாறு உண்மையே என்பதற்கு இப்பாடல் ஆதரவு தருகிறது. (இந்நூல் பாகம் 1; அத்தியாயம் 4, அவ்வையார் வரலாறு பார்க்க.) இதனால், பெருந்தேவனார் இவ் அவ்வையார் முதலானோர் ஒரு காலத்தில் வாழ்ந்தனர் என்பது தெரிகிறது.

## மேற்கோள் நூல்கள் – இலக்கியம்

பண்டைய உரையாசிரியர் பலரையும் போலவே பெருந் தேவனாரும் நன்கு தெரிந்த இலக்கிய இலக்கணங்களையும் இன்று தெரியப்படாதனவற்றையும் எடுத்து மேற்கோள்காட்டு கிறார். 'புராண கவிஞர்' என்று கூறுகிறார்; இவர் கருதுவது புராணம் செய்த கவிஞரா அல்லது புராதனக் கவிஞரா என்பது விளங்கவில்லை. பண்டைக் காப்பியங்களின் பாடல்களை இவர் எடுத்துத் தருவது சூளாமணியிலும் குண்டலகேசியிலும், குண் டலகேசி விருத்தம் கிளி விருத்தம் எலிவிருத்தம் நரி விருத்தம் என்பனவும் கூறுகிறார். அன்றியும், இவர்காட்டும் மேற்கோள் களில் பல பாடல்கள் ஒரு காப்பியத்திலிருந்து எடுத்தவை போலத் தெரிகின்றன. இருபது பாடல்கள் ஒருகால் குண்டல கேசிக்கே உரியனவாய் இருக்கலாம்; எடுத்துக்காட்டாக ஒரு பாடலைக் கீழே தருகிறோம்:

> **பேய்மை யாக்குமிப் பேதைமைக் கள்வனொ டுடனாய்க்**
> **காமுற் றாமதன் பயத்தினிற் காமனைக் கடந்து**
> **நாம ரூஉம்புகழ் கொடுப்பதோர் நன்னெறி நண்ணும்**
> **வாமன் வாய்மொழி மறந்திட்டு மறந்தொழி கின்றாம்.**

இவர் குறிப்பிடும் வேறு காப்பியங்கள் உதயணன் கதையும் (பெருங்கதை) பெருந்தேவனார் பாரத வெண்பாவும், பாரதப் பாடல்கள் இதனுள் பதினாறு வெண்பாப் பாடல்களும் ஒரு விருத்தப்பாடலும் வருகின்றன; இரண்டு வெண்பாக்களே. அச்சிட்ட பாரதவெண்பாவில் உள்ளன. ஏனையவை இன்று கிடைக்காத பாரதவெண்பாப் பகுதிக்குரியன போலும். அப்படியே இங்கு காணப்படும் பாரத விருத்தப்பாடலும் பெருந்தேவனார் பாரதத்திற்கு உரியதாக இருக்கலாம். அதனுள் அச்சிட்ட பகுதி யில் மூன்று விருத்தப்பாடல்கள் இருப்பது அறியத்தக்கது. இங்கு வரும் விருத்தம் பின்வருவது.

அங்குலிய மொன்றுபுள லாழ்தரு கிணற்றில்விழ
வந்தமுனி தேடுமினெனாப்
புங்கமொடு புங்கமுற எய்தவ னெடுத்தமை
புகன்றருகு நின்றவரைநீர்
இங்கித னிலைத்தொகைகள் யாவுமுரு வப்பகழி
ஏவுமின் எனாமுன் விசயன்
துங்கவில் வளைத்தொரு கணத்தினில் வடத்திலை
தொளைத்தனன் இலக்கில் தொடையால்.

இதுபோல இவ்வுரையுள் இராமாயண வரலாறு பற்றிய மூன்று வெண்பாக்கள் காணப்படுகின்றன. இவையும் முன் இருந்ததாக வேறு உரைகளால் அறியப்படுகின்ற பழைய இராமாயண வெண்பாவுக்கு உரியனவாய் இருக்கலாம்.

அப்பர் தேவாரம் இளம்பெருமாள் அடிகள் பாடிய சிவ பெருமான் திருமும்மணிக்கோவை என்ற திருமுறைகளிலிருந்து பாடல்களை இவர் எடுத்துக்காட்டுவது இவர் சமயத்தை குறித்த பகுதியில் சொல்லப்பட்டது. சங்க நூல்களில் இங்கு வருவன கலித்தொகை, குறுந்தொகை என்பன. நானாற்பதையும் குறிப் பிடுகிறார். வேறு பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், திருக்குறள் நாலடி நான்மணிக்கடிகை முதுமொழிக் காஞ்சி என்பன. பிற சான்றோர் நூல் முத்தொள்ளாயிரம்; பெயர் குறிப்பிடாத வேறு நூல்களும் இருக்கும்போலும். யாப்பதிகார உரைப்பகுதியில் யாப்பருங்கல விருத்தி மேற்கோள் பாடல் பலவற்றை அப்படியே எடுத்து வைத்திருக்கிறார்.

இருப்பினும், சில முடிவு கருதி ஒரு விருத்தப் பாடலை இங்கு குறிப்பிடத் தோன்றுகிறது. அறுசீர்க் கழிநெடிலடியால் வந்த செய்யுள் என்று இவர் காட்டுவது,

இரவிடை மதிய மென்பான் ஓடிப்போய் மறையு மெல்லை
விரியிரு ளெழினி நீக்கி விசும்பெனும் அரங்கு தன்மேல்
கரைகடன் முழவ மார்ப்பக் கதிரெனுங் கைகள் வட்டித்து
எரிகதி ரென்னுங் கூத்தன் ஆடுவான் எழுந்து போந்தான்.

இங்கு, பாடலாசிரியர் கூறும் கருத்து, மதியம் மறையும் எல்லை யில், இருளாகிய திரையை நீக்கி, விசும்பாகிய அரங்கில், கட லாகிய முழவம் ஆர்க்க, கிரணங்களாகிய கைகளை விரித்து, கதிரவனாகிய கூத்தன் ஆட எழுந்து வந்தான் என்பது. பாடல்

மிக்க அழகாயிருக்கிறது ஆசிரியரே செய்தமைத்த பாடலாயிருக்கலாம். இதைக் கம்பராமாயணம் பாலகாண்டம் கைக்கிளைப் படலத்து 16ஆம் செய்யுளோடு ஒப்பிட்டுப் பார்க்க:

எண்ணரிய மறையினொடு கின்னர்கள் இசைபாட,
உலகம் ஏத்த
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும் கரம்குவிப்ப,
வேலை என்னும்
மண்ணுமணி முழவதிர, வான்அரங்கில் நடம்புரிவான்
இரவி என்னும்
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரித்தால் என, விரிந்த
கதிர்கள் எல்லாம்.

இங்கு சொல்லப்பட்ட பொருள் இரவி என்னும் சிவபெருமான் நடராசமூர்த்தியாக விசும்பாகிய அரங்கில் கடல் முழவம் ஆர்ப்ப மறையும் கின்னரரும் இசைபாட உலகம் ஏத்த வேதியர் முதலானோர் கரம் குவிக்க நடம்புரியும்போது, அவன் சடை விரிந்தது போல இரவியின் கதிர்கள் விரிந்தன என்பது. இவ்விரு பாடல்களுக்கும் உள்ள ஒற்றுமை ஊன்றி நோக்கத்தக்கது. பின்னால் காலம் என்ற தலைப்பில் சில சொற்கள் கூறுவோம்.

## மேற்கோள் நூல்கள் – இலக்கணம்

இனி இலக்கணம் என்று வரும்போது, வீரசோழிய ஆசிரியரே, 'அலங்காரங்கள் தண்டி சொன்ன நூலின்படியே உரைப்பன்' என்று வடமொழித் தண்டியாசிரியரைக் குறிப்பிடுகிறார்; இவரும் அங்ஙனமே பல இடங்களில் 'இச்செய்யுள் தண்டியாசிரியர் இலக்கியப்படி பொருளெனக் கொள்க' என்று எழுதுவது வடமொழியாசிரியரையே குறிப்பிடும். யாப்பருங்கலம் செய்த அமிதசாகரரை இரண்டிடங்களில் குறிப்பிடுகிறார். இன்று ஒரு பகுதி கிடைத்து, சாமிநாதையரவர்களால் பதிப்பிக்கப் பெற்ற அகப்பொருளிலக்கணமாகிய தமிழ் நெறிவிளக்கப் பாடல்கள் சிலவும் இங்கு வருகின்றன. அப்படியே நிகண்டுச் சூத்திரங்கள் சிலவும் காணப்படும்; இவை திவாகரம், பிங்கலந்தையில் உள்ளன. 'தருக்கமாவது நியாய சூடாமணி, புதியா நுட்பம் ஆகியவற்றுள் கண்டுகொள்க' என்று எழுதுகிறார். இத்தருக்க நூல்கள் இன்று ஆட்சியிலிருப்பதாகத் தெரியவில்லை. 'பாடுதன் மரபும் தாரணைப் பகுதியும் வன்ன மரபுள்ளும் தாரணை நூலுள்ளும் கண்டுகொள்க' என்று மற்றோரிடத்தில் எழுதுகிறார். இவை ஒருகால் நாடகத் தமிழுக்குரிய நூல்களாக

லாம். இவ்விரு தொடர்களையும் இவர் யாப்பருங்கல விருத்தியுரையிலிருந்து (ஒழிபியல் பக்கம் 516) எடுத்திருக்கிறார் என்று தெரிகிறது. அங்கு இவற்றை விளக்கும் பகுதி பின்வருவது:

'பாடுதன் மரபு' என்பது, குலனும், விச்சையும், ஒழுக்கமும், பருவமும் என்றிவற்றிற்குத் தக்க வகையாற் பாட்டுடைத் தலைமகனையும் அவன் சின்னங்களையுமே பாடுதலும், கிளவிப் பொருளல்லவற்றோடு பாட்டுடைத் தலைமகனைப் பெயரும் ஊரும் முதலிய உறுப்புக்களைச் சார்த்திப் பாடுதலும், தீயனவற்றை அவன் பகைவரைச் சார்த்திப் பாடுதலும் என இரண்டாம். அவையெல்லாம் பெரிய முப்பழம் முதலாயினவற்றுட் கண்டுகொள்க. 'தாரணைப் பகுதியும்' என்பது, தாரணை விகற்பங்களும் என்றவாறு. தாரணை விகற்பங்களாவன - நாமதாரணையும் அக்கரதாரணையும், செய்யுட்டாரணையும், சதுரங்கத் தாரணையும், சித்திரத் தாரணையும், வயிரத் தாரணையும், வாயுத் தாரணையும், நிறைவு குறைவாகிய வெண்பொருட்டாரணையும், வச்சிரத்தாரணையும் முதலாயினவற்றை உருவக்கர சங்கேதங்களால் இடம்பட வறிந்து தரித்து, அனுலோமமாகவும், பிரதிலோமமாகவும், பிறவாறாகவுஞ் சொல்லுவது. அவையெல்லாந் தாரணை நூலுட் கண்டுகொள்க.

பன்னிரு படலத்தையும் குறிப்பிடுகிறார்; மயேச்சுரர், அவிநயனார், காக்கைபாடினியாரையும் பெயர் சுட்டிச் சொல்கிறார்.

யானைத்தொழில் ஒரு பிரபந்தவகை என்று குறிப்பிட்டு, அதற்கு இலக்கணம் பன்னிரு பாட்டியல் முதலான பிரபந்த இலக்கண நூல்களில் சொல்லப்பட்டுள்ளது. பெருந்தேவனாரும் 'யானைத்தொழில் முதலாகிய செய்யுட்களையெல்லாம் அடிவகுத்தற்கு இலக்கணம் சொன்னார்...' என்று எழுதுகிறார். இப்பிரபந்தம் ஒருகால் சோழப் பேரரசு ஓங்கியிருந்த காலத்தில் இருந்திருக்கலாம். பிற்காலத்தில் இதுபற்றிய பேச்சே எழுந்ததில்லை. ஓரிடத்தில் முதலாம் இராசேந்திரனுடைய மெய்க்கீர்த்தி வரிகளைக் குறிப்பிடுகிறார்: எதுகை கருவியாகக் கொண்டு அடி வழங்குவதாகில்,

**திருமன்னி வளர இருநில மடந்தையும்**
**போர்ச்சயப் பாவையும் சீர்த்தனிச் செல்வியும்***

---

* இவ்வரிகள் மெய்க்கீர்த்தி என்ற நினைவில்லாமல் வீரசோழிய உரையுள் பிழையாக அச்சிடப்பட்டுள்ளன.

இன்னும் சில செய்யுளும், ஆசிரியப்பா வெண்பாவோடு மாறு கொண்டு போலி வெண்பாவாகும்' என்கிறார்.

இவ்வாறு நாம் கருதும் நூல்களுள், சிறப்பாய்க் குறிப்பிட வேண்டிய ஒன்று, அணியியல் என்பது. இப்பெயர்கொண்ட அலங்கார நூலொன்று தண்டியலங்காரத்துக்கு முன்னதாக வழங்கிவந்தது என்று, யாப்பருங்கல விருத்தி அடியார்க்கு நல்லாருரை முதலியவற்றால் நன்கு விளங்குகிறது.* இவ்வணி யியலையே பெருந்தேவனார் குறிப்பிடுகிறார் என்று நாம் கருத இடமுண்டு. தண்டியலங்காரம், பெருந்தேவனாருக்குப் பின்னர் தோன்றிய நூல் என்பது எமது கருத்து. ஆதலால் பெருந்தேவ னார் அணி பற்றிய இலக்கணச் சூத்திரங்களை மேற்கோளாகக் காட்டும்போது, அவை மேற்குறிப்பிட்ட அணியியலுக்குரியன என்றே கருதவேண்டும். அலங்காரப் படலத்தில் உதாரதை என் பதில் தொடங்கி (கலித்துறை 151), சிலேடை வரையில் (கலித் துறை 170) இவர் 105 அணியியல் சூத்திரங்களைத் தந்து ஒவ் வொன்றுக்கும் மேற்கோளும் தருகிறார். சூத்திரங்கள் யாவும் இரண்டு வரி கொண்ட நூற்பாக்கள். இவையாவும் அணியியற் சூத்திரங்களாயிருக்கலாம் என்ற ஐயம் எழுகிறது. அன்றி, இவர் ஒவ்வொரு சூத்திரத்தின் பின்னரும் 'எனக்கொள்க' என்று கூறு கிறார். இக்கூற்றினால் ஒருகால் இவை இவரே செய்தமைந்த சூத்திரங்களோ என்ற ஐயமும் எழுகிறது.

மேலும் அலங்காரப் படலத்தில் வீரசோழியவுரையில் வரும் உதாரணச் செய்யுட்களில் 90 வெண்பாக்கள் தண்டியலங் காரத்துள்ளும் வருகின்றன. பின்வந்த தண்டியலங்காரமுடையார் சில உதாரணங்கள் வீரசோழிய அலங்காரப் படலத்திலிருந்தே எடுத்தமைத்துக் கொண்டார் என்று கருதவேண்டும்.

இலக்கண மேற்கோள் சூத்திரங்களாகப் பல பாடல்கள் தரப்பட்டுள்ளன. இவை வெண்பா, குறட்பா, விருத்தம், நூற்பா, கலிவெண்பா முதலான பலவகை யாப்பினுள் அமைந்திருக் கின்றன. வெண்பா யாப்பும் நூற்பா யாப்பும் பண்டை இலக் கணங்களுக்குரிய பாடல்களாயிருத்தல் கூடும். ஆனால் கலி வெண்பா போன்றவை உரையாசிரியரே தம் கருத்தை விளக்கு வதற்காகத் தாமே செய்துகொண்டன போலத் தோன்றுகின்றன.

---

* இது பற்றிய ஒரு குறிப்பைத் தண்டியலங்காரம் பற்றிய கட்டுரையில் காணலாம். (பக்கம். 86-89)

*குறட்பா, கலிவெண்பா, விருத்தம் என்ற மூன்றுக்கும் உதாரணங்களைக் கீழே காண்க:*

பாதம் இரண்டிரண் டொத்துக் குறைந்தனகொள்
பாதிச் சமமாப் பகுத்து.

*சந்தத்தின் தொகை அளவு கூறுமிடத்து இதுபோலப் பல குறட்பாக்கள் உள்ளன. அகப்புறத்தின் பகுதிகள் பத்தும் கூறுகின்ற ஒரு பாடல் கலிவெண்பா (97):*

ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டும் ஆயுங்கால்
காந்தள் கவிமடமா வேறுதல்; காமமிக்
காய்ந்தவர் வள்ளி வெறியாட்டாம்; – வாய்ந்த
சுரநடை மாதர் வருத்தம்; – சுரனுள்
முதுபாலை தன்னை மொழியின் – மதுமலர்த்தார்க்
காவலன் வீயக் கவன்ற ததுவாகும்
பாசறை முல்லை தலைமகன் – பாசறைக்கண்
மாசறு மாதரை யுள்ளுதல்; – மாசற்ற
இல்லவள் முல்லையும் அஃதேயாம்; – சொல்லுங்காற்
குற்றிசை கோல்வளை யாளைத் தலைமகன்
முற்றத் துறந்த துறவாம்; குறுங்கலி
முற்றத் துறந்த தலைமகனை முன்னின்று
பொற்றொடி மாதர் பழிதூற்றாம்; – குற்றந்தீர்
தாபதம் காதற் றலைமகனை நீங்கிய
மேவரு மாதர் நிலையாகும்; – மேவருஞ்சீர்
நீக்கப்பட் டாளை யுவந்த தலைமகன்
பார்த்துறூஉந் தன்மை யதுவாம் தபுதாரம்;
பத்து மகத்தின் புறம்.

*இதுபோலவே பிரத்தார இலக்கணம் கூறுவார்; 'எட்டாராய் நேமி பதினேழாய்' என்று தொடங்குவது.*

அளவடியே முதலாக அனைத்தடியி னானும்
அழகமர்நான் கடிமுதலா எட்டடியி னளவும்
வளமலியுஞ் சீரராக வுறுப்புவந் தாகும்
மன்னியவீ ரடியிரண்டு மோரடியா னான்கும்
உளமலிசிந் தடியெட்டுங் குறளடியீ ரெட்டும்
ஒருங்கியல்பே ரெண்சிற்றெண் ணிடையெண்ணோ டளவெண்
தளமலியம் போதரங்க மெனும்பெயரால் நிலவுந்
தாழிசைக்கீ ரடிசிறுமை பெருமைநான் கடியே.

**காலம்**

இப்பெருந்தேவனாரின் காலத்தை வரையறை செய்வதற்குச் சில குறிப்புக்கள் உதவி செய்கின்றன. முதலாவது முன்னமே விளக்கியபடி, இவர் தம் உரையைக் கடமையாகவே செய்ததால் புத்தமித்திரனாரின் மாணாக்கராகின்றார். எனவே, அவருடைய முதிய பிராயத்தில் இவர் இளைஞராயிருந்தார் எனல் பொருந்தும். புத்தமித்திரர் வீரராசேந்திரன் காலத்தில் இவ்விலக்கணத்தைச் செய்து வீரசோழியம் என்று பெயரிட்டார். வீரராசேந்திரன் காலம் கி.பி. 1063-70 ஆகும்; புத்தமித்தரர் காலம் சுமார் 1060-1090 எனக் கருதலாம். மாணாக்கரான பெருந்தேவனார் காலம் 1080-1120 எனக்கொள்வது பொருந்தும்.

இவ்வுரைகாரர் வீரராசேந்திர சோழன் காலத்துக்குப் பிற்பட்ட நூல் எதையும் மேற்கோளாகக் காட்டவில்லை. ஆகவே, இவர் இச்சோழன் காலத்தை அடுத்து வாழ்ந்தார் என்பது உறுதியாகிறது.

மற்றொரு குறிப்பு: வச்சத்தொள்ளாயிரம் என்ற நூலை இவர் குறிப்பிடுகிறார். இந்நூல் இன்று கிடைக்காமற் போயினும், இது முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் எழுதப்பெற்றது என்றும், காலம் சுமார் 1100 ஆக இருத்தல் வேண்டும் என்றும், பிந்திய அத்தியாயமொன்றில் முடிவு செய்கிறோம். ஆகவே புத்தமித்திரரின் மாணாக்கராய் 11ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்த இப்பெருந்தேவனார் அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்து உரை எழுதினார் என்றே கருத வேண்டும்.

எட்டாரைச் சக்கரத்துக்குப் பிரத்தார இலக்கணம் கூறுகிற 10 கண்ணிகொண்ட ஒரு கலிவெண்பாவை எழுதி உரைகாரர், விளக்கம் கூறுமிடத்து, எட்டாரைக்கும் எட்டுத் தலைவர் பெயர் வருவதைக் காட்டுகிறார்; இவர்கள் கயில குலகரன், காவேரி வல்லவன், கண்ணுமுனறிவான், கரிகால கன்னன், விக்கிரம சோழன், வளவநாராயணன், வீரராசேந்திரன், பரநிருபகாலன் என்போர். இவர்களுள் நாம் இங்கு கருதவேண்டியது காலத்தால் பிற்பட்ட விக்கிரமசோழன்; இவன் ஆட்சிக்காலம் கி.பி. 1118-1135. இக்காலத்திலும் பெருந்தேவனார் இருந்திருக்கிறார். ஆதலால் இவர் காலம் கி.பி. 1080-1120 ஆக இருக்கலாம் என்று இங்கு வரையறை செய்தது எல்லாவிதத்திலும் பொருந்துவதே.

இவ்விக்கிரமசோழன், வீரராசேந்திர சோழனுடைய சகோதரி அம்மங்காதேவியின் மகனான முதற் குலோத்துங்கனுடைய புதல்வன்.

இதுகாறும் கூறியவற்றால் இப்பெருந்தேவனார் கி.பி. 1100க்கு முன்னும் பின்னுமாக வாழ்ந்தார் என்பது உறுதிப்படும். எனினும், இக்கூற்றுக்களைக் கொள்ளாது, இவரைக் காலத்தால் பிற்பட்டவராய்க் கருதியவர் வையாபுரிப் பிள்ளையவர்கள். அவர் கருத்தையும் இங்கே சொல்வது பொருத்தமாகும்.

ஏழாம் வேற்றுமைப் பிரத்தியயத்தின் முன் எழுவாயுருபு வந்தமைக்கு உதாரணமாக இரண்டு தொடர்களை இவ்உரைகாரர் குறிப்பிடுகிறார்:

> **மலையாளர் பக்கற் சேவகம் செய்தான்**
> **கம்பனாரிடைப் பெருமை யுளது.**

இவற்றுள் முதல் தொடரில் குறிப்பிடும் மலையாளர் என்பது இன்று நாம் கூறுகின்றபடி கேரள நாட்டினரான மலையாளர் போலும்; இங்ஙனமாயின் இவருக்கு அந்நாட்டு மக்கள் தொடர்பு இருந்திருக்க வேண்டும்.

இரண்டாவது தொடரே இங்கு சிறப்பாய்க் கருதத்தக்கது. பவானந்தர் கழகத்தார் 1942ஆம் ஆண்டில் பதிப்பித்த வீர சோழியப் பதிப்பில் இத்தொடரை 'நம்பனாரிடைப் பெருமை யுளது' என்று பதிப்பித்திருக்கிறார்கள். பழைய பதிப்பை இவர்கள் திருத்தியதற்குக் காரணம் சொல்லவில்லை; பழைய பாடம் இன்னது என்று ஒரு குறிப்பு எழுதவும் இல்லை; புதுப் பாடம் பொருள் உடையதன்று. நம்பன் இறைவன்; நம்பனார் - இறைவனார். இறைவனை நம்பனார் என்று குறிப்பிடுதல் இலக்கியத்தில் காணப்படாதது; வேண்டாத மரியாதைப் பன்மை. இக்காலத்தில் சில நவீன ஆராய்ச்சியாளர், சிவபிரான், சிவபெருமான் என்றெழுத மனமில்லாது, சிவனார் என்றே எழுதுகிறார்கள். இந்த இருபதாம் நூற்றாண்டின் போலித்தனமான உணர்ச்சி அக்காலத்தில் இருந்ததில்லை. இறைவனாரிடம் பெருமையுளதென்பது பொருளற்ற மொழி. கம்பனாரிடைப் பெருமையுளது என்று தொடரில் வருவது இயல்பாகப் பலரறி பொருளாகவுள்ளது. எடுத்துக்காட்டாகச் சொல்லவும் தகுவது. இதில் சொல்லும் பொருளும் வழக்கும் தெளிவாகவும் திருத்த

மாகவும் உள்ளன. இதைவிட்டு, நம்பனார் என்று கூறும்போது, இதில் என்னதான் வழக்கு உள்ளது? பொருளே இல்லை. கடவுளுக்குப் பெருமை உண்டு என்று யாரே சொல்லுவார்? இது பலரறி பொருளாகச் சொல்லத்தக்கதன்று. ஆதலால் இது பிழை என்றும், கம்பனார் என்ற சொல்லே பாடமாதல் வேண்டும் என்றும் தெளிவாய்ப் புலப்படும்.

வையாபுரிப்பிள்ளையவர்கள் கம்பனார் என்றே பாடம் கொண்டார்; ஆனால் கம்பர் 12ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி என்று முன்னமே அவர் முடிவு கட்டிக்கொண்டமையால், பெருந்தேவனாரைக் காலத்தில் பின்னுக்கு இழுக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. இது வேண்டாத முடிவு; பொருத்தமில்லாதது. பெருந்தேவனார் 1100க்குச் சற்றுப் பிந்தியகாலம் வரையில் வாழ்ந்தார் என்று பெறும்போது, கம்பர் முந்தியவர் என்பதை ஏற்கத் தடையே இல்லை. 'கம்பனாரிடைப் பெருமையுளது' என்று பலரறிந்த பழஞ்சொல்லாக இவர் எடுத்துச் சொல்லும்போது, நீண்டகாலம் இடையீடு இருந்திருக்க வேண்டும். நவீன ஆராய்ச்சியாளர் தோன்றிக் கம்பரை மூன்று நூற்றாண்டுகள் பின்னாலே தள்ளுகின்ற வரையில் எல்லோரும் அவர் சகாத்தம் எண்ணூற்றேழில் (கி.பி. 885) இராமாயணம் அரங்கேற்றினார் என்று கருதி வந்தார்கள். இது சரியே. இதற்கு இருநூறு ஆண்டுகள் பிற்பட்டு வாழ்ந்தவர் நம் பெருந்தேவனார். இது கம்பரைக் குறித்த ஆராய்ச்சி அல்ல ஆதலால், இதை இந்த அளவில் நிறுத்திக் கொள்ளுகிறோம்.

மேலும் பெருந்தேவனார் மேற்கோளாய்த் தருகின்ற ஒரு பாடல் கம்பர் காலத்தை வரையறை செய்வதற்கு உதவுகின்றது என்று கருதுகிறோம். மேற்கோள் பாடல்களில் 'இரவிடை மதியம் என்பான்' என்ற பாடலுக்கும் கம்பர் பாடலுக்கும் உள்ள ஒற்றுமையை எடுத்துக்காட்டினோம். (பக்கம். 148) அவ்விரண்டிலிருந்தும் பெறுவது, கம்பராமாயணப் பாடலைத் தழுவி இம்மேற்கோள் பாடல்காரர் தம் பாடலைச் செய்தார் என்ற நிலையாகும். இப்பாடல் பெருந்தேவனாருக்குக் காலத்தால் முந்தியது. எனவே, அவர் காலமாகிய 12ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது; 11 அல்லது 10ஆம் நூற்றாண்டாய் இருக்கலாம். இவர் கம்பரைத் தழுவித் தம் பாடலைச் செய்தார் என்பது பொருந்துமாகவே, கம்பர் காலம் இதற்கு முந்தியதாகிறது.

ஆகவே, 9ஆம் நூற்றாண்டு என்ற கருத்துக்கு இது ஒரு சிறப்பான ஆதரவு தருகிறது. இப்பாடல் பெருந்தேவனாரே செய்த தாயின், அதன் முடிவும் இதுவே.

விக்கிரமசோழனைப் பற்றிய குறிப்பினால், பெருந்தேவனார் அவனையறிந்தவர் என்பது பொருள். அவன் தன் தந்தை குலோத்துங்கன் காலத்தில் தென்கலிங்கப் போரில் ஈடுபட்டுப் பெருவெற்றியும் புகழும் கொண்டான் என்பதை, மூன்றாம் அத்தியாயத்தில் அவன் வரலாற்றில் குறிப்பிட்டிருக்கிறோம். பெருந்தேவனார் அவன் இளமையில் தொடர்பு கொண்டு, பட்டமெய்தியும் சில ஆண்டுகள் இருந்திருத்தல் பொருத்தமே. அங்ஙனமாக, உரை எழுதியது சுமார் 1120 என்று திட்டமாகக் கூறலாம்.

பல நூல்களை நாம் ஆராய்ந்து வரும்போது, சிலசமயம் உரையாசிரியர்களும் நூலாசிரியரை ஒப்பச் சிறந்த பண்பும் பெரும் புலமையும் உடையவர்களாயிருக்கக் காண்கிறோம். இத்தகைய சிறப்புடைய உரையாசிரியர் வரிசையில் நம் பெருந்தேவனாரும் முக்கியமான ஒருவர் என்று கருதுகிறோம்.

வீரசோழிய நூற் பயிற்சி இன்மையால் உரைப்பயிற்சியும் நாட்டில் குறைவு. இவ்வுரை இன்னும் அதிகமான பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் உரியது.

## பதிப்பு

தாமோதரம்பிள்ளை பதிப்பு, 1881. இவர் விரிவான முன்னுரை எழுதி, தமிழ் வடமொழியிலிருந்து வந்தது என்பார் கூற்றை வன்மையாக மறுத்திருக்கிறார். தமிழ்மொழி வளர்ச்சியின் காலம் எட்டு என்பர்: ‘அபேதகாலம் அக்ஷரகாலம் இலக்கண காலம் சமுதாயகாலம் அநாதாரகாலம் சமணகாலம் இதிகாச காலம் ஆதினகாலம்’ என. பவானந்தர் கழகப்பதிப்பு, கா.ர. கோவிந்தராச முதலியார், 1942.

OOO

அத்தியாயம் 9

# சைவ இலக்கியம்

## முன்னுரை

இலக்கியத்துறையில் சைவசமயம் மிகவும் பொலிவு பெற்று விளங்கிய காலங்கள் பல. அப்பரும் சம்பந்தரும் வாழ்ந்து தங்கள் அருட் பாசுரங்களால் தமிழ் நாடெங்குமுள்ள சிவாலயங்களில் தமிழ் மணமும் சிவ மணமும் கமழச் செய்து இயல் தமிழையும் இசைத் தமிழையும் வளர்த்த காலத்துக்கு இணையாகப் பின்னொரு காலத்தைக் குறிப்பிடுதல் அரிது. இது நிகழ்ந்தது ஏழாம் நூற்றாண்டில். பின்னர், அடுத்து வந்த காலங்களில், சுந்தரரும், மாணிக்கவாசகரும், திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்கள் பலரும், வாழ்ந்து பதிகங்கள் பாடிச் சிவ பெருமான் திருவருளிடத்தே மக்களை ஆற்றுப்படுத்தினார்கள். இந்தப் பக்திப்பிரவாகம் காரணமாக, ஒன்பதாம் நூற்றாண்டு தொடங்கி வளர்ந்து வந்த சோழ மன்னர் பேரரசு சைவம் வளர்க்கும் பேரரசாக விளங்கிற்று. தமிழ் நாடெங்கும் எண்ணற்ற பெருங்கற்றளிகளைச் சோழ மன்னர் எழுப்பினார்கள். கோயில்களெங்கும் அரகர முழக்கமும் தமிழ் முழக்கமும் இசையும் பெருகின. சிவபெருமானைத் தொழுது அவனருள் பெற்ற அருளாளர் வரலாற்றை அறிந்து அவ்வழி நடப்பதில் மக்களுக்கு ஆர்வம் பெருகிவந்தது.

மக்கட் சமுதாயத்திலிருந்த இத்தகையதொரு சிவபக்திப் பெருக்கத்தின் விளைவாக எழுந்ததே சேக்கிழார் பெருமான் பாடிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணம். சிவபெருமான் திருவருள்பெற்று விளங்கிய நாயன்மார்களின் வரலாற்றைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கொடுத்த குறிப்பின் வழியாக வரலாற்றுச் செய்திகளுக்கும் பொருந்த விரித்துரைக்

கும் தமிழிலக்கியமாக அவரது நூல் அமைந்தது. இது சைவ அருளிலக்கியமாக மட்டுமன்றி, தமிழ்ப் பெருங்காவியமாகவும் அமைந்தமை தமிழருடைய பெரும்பேறாகும். இரண்டாம் அத்தியாயத்தில் இதை விரிவாக ஆராய்ந்தோம்.

மெய்கண்ட சாத்திரம் எனப்படும் சைவசித்தாந்த சாத்திரங் களின் முதல்நூல் செய்த மெய்கண்டார் காலம் அடுத்த நூற் றாண்டின் இடைப்பகுதி என்பது ஆராய்ச்சியாளர் பொதுவாய்க் கொண்டிருக்கும் முடிபு: எனினும், இதுபற்றி இன்னும் ஆராய்ச் சிக்கு இடமுண்டு; ஒருவேளை இவர் காலம், பலர் குறிப்பிட் டிருக்கிறபடி 1232ஐ ஒட்டியதாயிராமல், அதற்கு ஒரு நூற்றாண்டு முற்பட்டதாய் 12ஆம் நூற்றாண்டின் பிற்பாதியாய் இருக்கலாம் என்றும் வேறிடத்தில் குறிப்பிட்டிருக்கிறோம்.*

ஒட்டக்கூத்தர் பாடிய தக்கயாகப்பரணி என்ற விரிந்த பரணி நூலும் ஒரு சைவசமய நூலாகும். இதை அப்புலவர் வரலாறு கூறும் பகுதியில் விரிவாக ஆராய்ந்தோம். இங்ஙனமே புகலூரந்தாதி தில்லையுலா போன்ற சிறு பிரபந்தங்களும், தத்தம் அளவில் சிறப்புடைய சமய நூல்களாகும். இவற்றைப் பிரபந்த இலக்கியம் என்ற பகுதியில் பின்னர் பார்ப்போம். கல்வெட்டுக்கள் குறிப்பிடும் சைவ நூல்களும் பல; அவை இன்று கிடைக்கவில்லை. அவற்றைப் பற்றிய குறிப்பைப் பிற இலக்கியம் என்ற பகுதியில் காணலாம்.

இவற்றை நீக்கி, இங்கு சைவ சாத்திரங்களை மட்டும் பார்ப்போம். மெய்கண்டாருக்கு முற்பட்ட சித்தாந்த சாத்திரங்கள் என வழங்கும் திருஉந்தியாரையும் திருக்களிற்றுப்படியாரை யும் ஆராய்கிறோம். இவ்விரு நூல்களுக்கும் முதலில் திரு என்ற அடையும் இறுதியில் ஆர் என்ற விகுதியும் அமைந்து சிறப்பிப் பது தமிழ் நூல்களின் வரலாற்றில் மிகவும் அருமையானது. இத்தகைய அருமைப்பாடு, மாணிக்கவாசகர் செய்ததாக வழங்கு கின்ற திருச்சிற்றம்பலக் கோவைக்கும் அவரே செய்த திருவா சகத்தின் பகுதியான திரு உந்தியாருக்குமே உண்டு. இந்நூல் வர லாறுகள் விளங்கக் கூறப்பட்டிருப்பினும், ஆசிரியர்களான உய்யவந்தார் இருவர் பரம்பரை பற்றிய விளக்கம் தெரிய வழி இல்லை. இவர்கள் சிவானுபூதிச் செல்வர்கள்; தமிழ்ப் புலமை யும் நிரம்பியவர்கள்.

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு பார்க்க.

*சைவசித்தாந்த சாத்திரமாகத் தமிழில் முதன்முதல் செய்யப் பட்ட நூல், மெய்கண்டார் அருளிச்செய்த சிவஞானபோதம். அவர் முதலாகத் தோன்றிய குருசிஷ்ய பரம்பரை 'மெய்கண்டார் பரம்பரை' என்றும், 'மெய்கண்ட சந்தானம்' என்றும் வழங்கும். சைவ சித்தாந்த சாத்திரங்கள் என்றும், மெய்கண்ட சாத்திரங்கள் என்றும் வழங்குகின்ற சாத்திர நூல்கள் பதினான்கு. இவற்றைப் பின்வரும் வெண்பா குறிப்பிடுகிறது:*

**உந்தி களிறே உயர்போதம் சித்தியார்**
**பிந்திருபா உண்மை பிரகாசம் – வந்தஅருட்**
**பண்புவினா போற்றிக்கொடி பாசமிலா நெஞ்சுவிடு**
**உண்மைநெறி சங்கற்பம் உற்று.**

*இப்பாடல், சித்தாந்த சாத்திரங்களை முதன்முதல் அச்சிட்ட மதுரை நாயகம்பிள்ளை பதிப்பில் (1866) காணப்படுகிறது. இப்பாடல் எப்போது தோன்றிற்று, இதற்கு ஆதாரம் யாது என்பது என்று விளங்கவில்லை. ஆயினும், அன்று முதல் சாத்திரங் களை முறைப்படுத்தும் வரிசை இப்பாடலை ஒட்டியே உள்ளது. சிவஞான போதத்துக்கு முந்தியனவாக இரண்டு சாத்திரங்களை இப்பாடல் கூறுகிறது. அவை திருவுந்தியார் திருக்களிற்றுப் படியார் என்பன. சைவசித்தாந்த சாத்திரங்களைத் தொகைப் படுத்தி வரையறை செய்ய ஆன்றோர் முற்பட்டபோது, இயல் பாக சிவஞான போதத்தையே முதலாவதாகக் கொண்டிருப் பார்கள். எனினும், அந்நூலுக்கு முந்தியே தமிழ்நாட்டில் வழங்கி வந்து, சைவ நன்மக்களுடைய ஈடுபாட்டையும் பெருமதிப்பை யும் பெற்ற பண்டைச் சிறப்புடைய அனுபூதி நூல்களான இவ் விரண்டையும் ஆன்றோர் சாத்திர நூல்களாகவே கொண்டு, முதல் இருநூல்களாக வரிசைப்படுத்தினார்கள் என்று கருதுவது வழக்காற்றுக்குப் பொருந்தும்.*

*திருமுறைத் தொகுப்பும் பாகுபாடும் பெரிய புராணத் தோடு முற்றுப் பெற்றிருந்தன; உந்தி களிறு இரண்டும் பெரிய புராணத்தின் பின் எழுந்தன; இவற்றையும் ஆன்றோர் போற்றிய தோடு, தோத்திர சாத்திரத் தொகுப்புக்களில் வைத்து என்னவும் கருதினர்; இவற்றைத் தொகுக்காமல் விட அவர்களுக்கு மன மில்லை. திருமுறைகளைப் பன்னிரண்டுக்கு மேல் பெருக்க இயலாது. ஆகவே, சாத்திரங்களை வரிசைப்படுத்த முற்பட்ட போது, இவ்விரண்டையும் முதல் இரு நூல்களாக முறைப் படுத்தினர் என்று நாம் கொள்ளலாம்.*

மெய்கண்டார் தொடங்கி வழங்கிவந்த சாத்திர நூல்கள் குருசிஷ்ய உபதேசக்கிரமமாகச் சைவ சித்தாந்த உண்மைகள் முழுமையும், அல்லது அவற்றுள் ஏதேனும் ஒரு பகுதியை மட்டும், முறையாக எடுத்து விளக்குவன. ஆனால், உந்தி களிறு என்ற இரண்டும் வரன்முறையாகச் சாத்திரம் கூறும் நூல்கள் ஆகா; இவை முழுமையும் அனுபூதி வாக்காக எழுந்தவை. இவற்றில் சாத்திரமும் உண்டு தோத்திரமும் உண்டு, உலகியலும் உண்டு.

இனி, இவ்விரு நூல்கள் போலவே, இக்காலத்தில் எழுந்த மற்றொரு பெருநூல் ஞானாமிர்தம் என்ற சாத்திர நூல். பண்டைச் சைவ நூலுரையாசிரியர் அனைவரும் இதன் வரிகளை எடுத்து மேற்கோளாகத் தருகிறார்கள். ஆனால், சித்தாந்த சாத்திரங்கள் என்று சாத்திரங்களை ஒரு தொகுப்பாய் வழங்கத் தொடங்கிய காலத்து, இந்நூலை அவற்றுள் சேர்த்து வழங்கவில்லை. 'உந்தி களிறே என்ற பாடலுக்கு ஆதாரம் இல்லை. முதன்முதல் அப்பாடலைப் பதிப்பித்த மதுரநாயகம் பிள்ளை அதை எழுதியிருக்கக் கூடும்; அவருக்கு ஞானாமிர்தத்தைப் பற்றித் தெரியாது; ஆகவே அதையும் சாத்திரங்களோடு சேர்த்துக் கூறவில்லை என்றுதான் சொல்லவேண்டும். ஏடுகளில் சித்தாந்த சாத்திரங்கள் வரிசையில் இந்த நூல் எங்குமே காணப்படவில்லை; ஆகவே அவர் சேர்க்கவில்லை. மேலும் அனுபூதி நூல்களான உந்தி களிற்றின் தன்மையையும் மெய்கண்ட நூல்களான சிவஞானபோதம் சித்தி பிரகாசம் முதலியவற்றின் தன்மையையும் கடந்த ஒருபோக்கில் இந்த நூல் இருப்பதால், இதை அவற்றோடு யாருமே சேர்த்துக் கருதவில்லை போலும். இந்த நூலைக் குறித்த ஆராய்ச்சியையும் இவ்வத்தியாயத்துள் காணலாம்.

## உய்யவந்த தேவர் இருவர்

### பண்டை வரலாறுகள்

சிவஞான போதம் முதலான பதினான்கு சாத்திரங்கள் சைவ சித்தாந்த சாத்திரம் எனப்படுகின்றன. இவற்றுள் திருஉந்தியார், திருகளிற்றுப்படியார், என்ற இரு சிறுசாத்திரங்கள் சிவஞான போதம் செய்த மெய்கண்டார் காலத்துக்கு முன்னமே தோன்றியவை என்பது பழமையாக வழங்கிவரும் வரலாறு. இவற்றைச் செய்தோர் முறையே திருவியலூர் உய்யவந்த தேவரும், திருக்கடவூர் உய்யவந்த தேவரும் ஆவர்.

இச்சாத்திர உரையேடுகளில் இவை தோன்றிய வரலாறு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. இவ்விரண்டு நூல்களின் பழைய பொழிப்புரையானது இந்நூல்களின் வரலாற்றைப் பின்வருமாறு முன்னுரையாகக் கூறுகிறது.

'பரிபூரணமாயிருக்கிற சிவன் ஆன்மாக்களுக்குச் சிவானு பவம் விளையும் நிமித்தமாக மானுடச்சட்டை சாத்தி, உய்யவந்த தேவநாயனார் என்னுந் திருநாமத்தையுஞ் சாத்திக்கொண்டு, வடவேங்கடம் தென்குமரி எல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்து ஒருநாள் திருவியலூரிலே எழுந்தருளினார். அவ்வூரிலே இருக்கிற ஆளுடைய தேவர் நாயனார் கண்டு தெரிசித்தபோது அவருடைய மலபரிபாகத்தை அறிந்து தீட்சை பண்ணி ஞான உபதேசமும் பண்ணி திருஉந்தியார் என்று பேரிட்டு நாற்பத்து நான்கு செய்யுளாக நூலும் பண்ணி, அந்த நூல் முடிவிலே தம்முடைய பெயர் தோன்ற ஒரு செய்யுளும் பண்ணி, அந்த நூலினுடைய தாற்பரியத்தையும், உள்ளபடி அறிவித்துச் சிறிது நாள் சென்று தன்னியல்பை அடைந்தார். பின்பு ஆளுடைய தேவநாயனார் முன்சொன்ன எல்லைக்குள்ளே சஞ்சாரம் பண் ணுங்காலத்து ஒருநாள் திருக்கடவூரிலே எழுந்தருளினார். அவ் வூரிலே ஆட்டு வாணியக் குலத்திலே உற்பவித்தவரொருவர் கண்டு தெரிசித்தபோது, அவருடைய மல பரிபாகத்தையறிந்து தீட்சை பண்ணித் தம்முடைய ஆசாரியருடைய பெயரையுஞ் சாத்தித் திருவுந்தியாரென்கிற சாத்திரத்தையும் அறிவித்துச் சிறிது நாள் சென்று தன்னியல்பையடைந்தார். பின்பு அந்த உய்யவந்த தேவநாயனார் முன்சொன்ன எல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்திலே ஒரு நாள் சிதம்பரத்திலே எழுந்தருளினார். அவ்வூரிலே ஒருவர் ஞானம் பெறவேண்டித் தலவாசம் பண்ணியிருந்து இவரைக்கண்டு தெரிசித்தபோது (இவர் அவரது) மல பரிபாகத்தையறிந்து தீட்சை பண்ணித் திருவுந்தியாருக்கு வழி நூலாகத் திருக்களிற்றுப் படியார் என்று நூறு செய்யுளாக ஒரு நூலும் பண்ணி அறிவித்துச் சிறிது நாள் சென்று தன்னியல்பையடைந்தார். திருக்களிற்றுப்படியாரென் பதற்குக் காரணம், இவர் நூல் பண்ணின காலத்து இவர் கீழ் சாதியென்றும் இவருடைய நூல் கைக்கொள்ளலாகாதென் றும் சிறிது பேர் சொல்ல, சிறிது பக்குவராயுள்ளவர்கள் அந்த நூலைப் பஞ்சாக்கரப்படியிலே கொண்டுபோய் வைத்தார்கள்.

அந்தப் படியிலே செய்திருக்கிற கல்லாணை (அந்நூலைத்) துதிக் கையாலே யெடுத்து எல்லாவற்றுக்கும் மேற்படியிலே கொண்டு போய் வைத்தது. ஆகையால் (இந்நூல்) அப்பெயர் பெற்றது. இந்தச் சந்தான பரம்பரையை இப்படிக் கண்டுகொள்க'.

இந்த உரையின் காலம் 16ஆம் நூற்றாண்டு ஆகலாம். பதினேழாம் நூற்றாண்டில் இவ்விரு நூல்களுக்கும் உரை எழுதிய சிற்றம்பலவர் என்னும் சிவப்பிரகாசர் இதைத்தழுவி விரிவுரை எழுதி இருக்கிறார்: 'திருவுந்தியார் என்கிற சாத்திரத்து வரலாறு: சைவ சித்தாந்தத்தின் உண்மையை உணர்த்தவல்ல, உய்யவந்த தேவர் என்று திருநாமத்தையுடைய பரமகலியாணன், உத்தர பூமியினின்றும் தட்சிண பூமியிலுள்ள ஆன்மாக்களை இரட் சிக்கப்படுகை காரணமாக சேது அளவாக எழுந்தருளி மீண் டும் ஸ்ரீகாவேரிக்கரையே எழுந்தருளா நிற்க, திருவிசலூரில் ஆளுடைய தேவநாயனார் தரிசிக்கப்பெற்று, இந்த தரிசின விசேடத்தாலே கன்மத்தில் உபேட்சையும், ஞானத்தில் அபேட் சையும் உண்டாய் ஸ்ரீபாதத்திலே தண்டன் பண்ணி, 'தம்பி ரானே, அடியேன் அனாதியே தொடங்கிச் சனன மரணங்களாகிய துக்க சாகரத்திலே விழுந்து கரைகாணாமல் அழுந்தா நின்றேன். அடியேனை இந்தச் சனன மரணங்களாகிய துக்க சாகரத்தி னின்றும் எடுத்தருளித் திருவடியாகிய கரையிலே சேர்த்தருள வேணும்' என்று விண்ணப்பம் செய்யக் கேட்டுத் திருவுள்ளத் தெயடுத்தருளி, காருண்யத்தின் மிகுதியாலே ஸ்ரீ காவேரிக் கரையிலேயிருந்து திருக்கண்சாத்தித் திருவடியும் வைத்தருளி, இவருக்கு ஞானவிரோதமாயுள்ள மல மாயா கன்மங்களையும் கருவி கரணாதிகளையும் தேகாதிப் பிரபஞ்சங்களையும் உணர்த்தி, இவை தோஷமே விளைவிக்கும் என்கிற மரியாதையும் அறிவித்து, இவை யிற்றினின்றும் விடுவித்து, ஆன்ம சொரூபத்தையும் சிவ சொரூபத்தையும் உணர்த்தி, சிவனே குருமூர்த்தியானான் என்னும் படியும் தெளிவித்து, அனாதியே குடிபோந்த வாதனை தீரும்படி சிவசொரூபத்துடனே, பல பிரகாரத்தாலும் ஐக்கியத்தையும் பண்ணுவித்து, வேறற நிற்கும் உபாயமும் கொடுத்து, இந்த நிலை பிரிந்தார் பார்த்துக்கூடும்படி சிருட்டியாக ஒரு சாத்திரம் வேணுமெனக் கருதி, ஆலம்வித்திலே ஆலினது பரிணாமம் அடங்கின தன்மை போல, வேதாகமங்களில் தீர்வையான பொருளை நாற்பத்துநாலு திருவுந்தியில் சுருங்க, அருளிச்

செய்து, இது நீங்கலாகத் தம்முடைய திருநாமம் தோன்ற ஒரு திருவுந்தியும், அருளிச்செய்து, இந்தச் சாத்திரத்தையும் இவருக் குட்படுத்தி, 'மேலும் ஞானத்துக்குப் பக்குவரானாரைக் கடாட் சிக்க வேண்டின காலத்து இந்தச் சாத்திரத்தின் வழியே புத்தி யும் படுத்து இரட்சியும்' என்று அருளிச்செய்து, மீண்டும் உத்தர பூமியில் எழுந்தருளினார். பின்பு ஆளுடைய தேவநாயனாரும் நெடுங்காலம் திருவிசலூரிலே எழுந்தருளியிருந்து விசுவத்தி லுள்ளார் கிலேசம் தீரும்படி வியாத்தி பண்ணுகின்ற காலத்து திருக்கடவூரிலே ஆட்டு வாணிப வங்கிசத்திலே கன்ம சேஷத் தாலே வந்து அவதரித்தார் ஒருவர், அவர் ஞானத்துக்குப் பக்குவ மானார். அப்போது தம்மைக் கடாட்சிக்க வேண்டி ஆளுடைய தேவநாயனாரைத் தரிசித்த அளவிலே தம்முடைய நிலையைக் கைவிட்டு இவருடைய ஸ்ரீபாதத்திலே தண்டன் பண்ணி, 'அடியேனை இரட்சித்தருள வேண்டும்' என்று விண்ணப்பம் செய்யக் கேட்டருளி, இவர் ஞானத்துக்குப் பக்குவரானார் என்னும்படியும் விளங்கி இவர் கருத்தை திருவுள்ளத்தை யடுத்தருளி இவரையும் தாம் பெற்றபடியே இரட்சித்து இந்தத் திருவுந்தி என்கின்ற சாத்திரத்தையும் உளப்படுத்தி, தம்முடைய தேசிகன் திருநாமப்படியே உய்யவந்த தேவநாயனார் என்ற திருநாமமும் சாத்தி, இவரும் திருவிசலூரிலே மீள எழுந்தருளி னார். பின்பு உய்யவந்த தேவநாயனாரும் நெடுங்காலம் இப் பொருளுடனே வாதனை பண்ணி அனுபவ சித்தியான பின்பு பெரும்பற்றப் புலியூரிலே எழுந்தருளியிருக்கிற நாளிலே, ஞானத்துக்குப் பக்குவமானவர் ஒருவர் வந்து நெடுங்காலம் ஸ்ரீ பாதசேவை செய்து இந்தச் சேவையைத் திருவுள்ளத்தை யடுத்தருளி இவருக்குத் தாம் பெற்றபடியே உணர்த்தி, இவர் பொருட்டாகத் திருக்களிற்றுப்படி என்கிற சாத்திரத்தைத் திருவுந்தி உள்ளுறையாக அருளிச்செய்து, இந்தச் சாத்திரம் இவருக்குட்படுத்தித் தம்மைபோல் பார்த்தருளினார்.'

இவ்விரு உரையாசிரியர்களின் குறிப்புக்களாலும் நாம் பெறுவது 'திருவியலூரில் இந்த சிவஞானியான உய்யவந்த தேவர், தம்மையடுத்த ஆளுடைய தேவநாயனாரின் பொருட் டுத் திருஉந்தியார் என்ற பெயருடைய சைவநூல் செய்தார். ஆளுடைய தேவர் அதைத் தம் மாணாக்கரான திருக்கடவூரின ருக்கு உபதேசித்துத் தம் ஆசிரியரின் பெயரான உய்யவந்த தேவர்

என்ற பெயரையும் சூட்டி மற்றொரு நூலும் செய்யக் கட்டளை யிட்டார். அதன்படி இவர் திருக்களிற்றுப் படியார் செய்தார். இதை நடராசரின் சபைத் திருப்படியிலுள்ள யானைத் துதிக்கை களாலெடுத்துப் பெருமான் திருவடியில் வைத்த காரணத்தால் நூல் திருக்களிற்றுப்படி என்று பெயர்பெற்றது' என்ற செய்தி களாகும். திருவுந்தியாரின் நடை திருமந்திரத்தை நினைவூட்டு வது. இதனால் இதன் ஆசிரியர் வடநாட்டிலிருந்து தென்னாடு வந்து மீண்டும் வடநாடு திரும்பினார் என்ற கதை ஒப்புக் கொள்ளத்தக்கதன்று என்பது ஆன்றோர் கருத்து. தன்னியல்பை அடைந்தார். பரம்பொருளே உய்யவந்தாராக எழுந்தருளி வந்து மீண்டும் தன் பரம்பொருள் நிலைக்கு திரும்பிவிட்டது என்பதே முதல் உரையின் கருத்து. சிவபெருமானே ஆசாரிய னாக வருகிறான் என்ற சைவசமயக் கருத்துக்கு இது ஒத்தது.

உய்யவந்தார் என்பது அக்காலத்தோர் தரித்துக் கொண்ட ஒரு பெயர் என்று தெரிகிறது. அகப்பொருள் விளக்கம் செய்த நாற்கவிராச நம்பியின் தந்தையும் ஓர் உய்யவந்தார்.

**காலம்**

திருவுந்தியார் சகம் 1070இலும் (கி.பி. 1148) திருக்களிற்றுப் படியார் சகம் 1100இலும் (கி.பி. 1178) செய்யப்பெற்றன என்பது வரலாறு. இதற்கு ஆதாரம் விளங்கவில்லை. திருவுந்தியாருக்கு விளக்கமாக எழுதப்பெற்றதே திருக்களிற்றுப்படியார் என்பதில் ஐயமில்லை. பிந்தியதில் நால்வர் வரலாறுகள் மிகவும் விரிவாய்க் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும் அரிவாட்டாயர், கண்ணப்பர், கோட்புலி, சண்டீசர், திருத்தொண்டர், திருக்குறிப்புத் தொண்டர், மங்கையர்க்கரசி, மூர்க்கர், மூர்த்தி ஆகிய நாயன்மார் வரலாறு கள் சுட்டப் பெறுகின்றன. அன்றியும் சேந்தனார், களி நிவேதனம் செய்த வரலாறும் சொல்லப்பெறுகிறது. இவற்றால் இந்நூலின் காலம் பெரிய புராணத்தை அடுத்ததாகலாம் என்று கொள்வது பொருந்தும். சேக்கிழார் காலம் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலமாகிய கி.பி. 1133-1150; சேக்கிழார் நூல் செய்தது 1140-5 ஆகலாம். ஆதலால், திருக்களிற்றுப்படியின் காலம் இதற்கும் சற்றுப் பிந்தியதாகிய கி.பி. 1178 என்பதை ஒப்புக் கொள்வதில் எவ்விதத் தடையும் எழ நியாயமில்லை. ஆதலால் இவ்விரு நூல்களின் காலம் முறையே 1148, 1178 என்ற பரம்பரை வழக்கு, பொருத்தமே.

## திருஉந்தியார்

இரு நூல்களில் உந்தியாரே முற்பட்ட நூலென்று வரலாற்றினால் அறிகிறோம். இது 45 தாழிசைகளால் ஆன ஒரு சிறுநூல். தாழிசை ஒவ்வொன்றும் மூன்றடி கொண்டது. இந்த யாப்பு. திருவாசகத்தில் வரும் திருவுந்தியாரைப் பின்பற்றியே அமைக்கப்பட்டது. உய்யவந்தார் உந்தி பறத்தலாகிய ஒரு விளையாட்டமைப்பைத் தம் நூலுக்கு அமைப்பாக எடுத்துக் கொண்டது ஓர் அரியநிலை.* மிகவும் பெரிய பொருள்களை மிகவும் எளிய முறையில் பாடிக்காட்ட இவ்வனுபூதிமான் நினைத்தார் போலும். இந்நூலின் பாடல்கள் திருமுறைகளின் சாரமாய்ச் சைவசித்தாந்த நுண்பொருள்களைச் சுவையாகப் புலப்படுத்துகின்ற மறைமொழிகளாய் இருப்பன. திருவாசகத்தினும்கூட இவை ஓசைநயம் மிக்கவையாய் உள்ளன. கூறும் பொருளில் சமய சங்கேதப் பொருள்களும் சொற்களும் மிகுந்து, திருமந்திரம் போல, எளிதில் பொருள் புலப்படுதற்கு அருமையாயுள்ளன. விளக்கவுரை இல்லையேல், பொருள் விளங்குதல் இயலாது.

இது காலத்தால் முற்பட்ட நூலாதலோடு, திருவருள் நலமும் செறிந்ததாக அமைந்தமையின் ஆன்றோர், சாத்திர வரிசையில் இதனை முதற்கண் வைத்துச் சிறப்பிப்பாராயினர். பொருளால் இது பன்னிரு திருமுறைகளின் பயனாய் உள்ளது என்பர் சைவப் பெரியோர்; வேதாகமங்களால் வரக்கூடிய சில ஐயங்களையும் தெளிவாக்கி முடிவு கூறுகின்றது. இதன் ஆசிரியர் உய்யவந்தார் என்பது இறுதிப் பாடலால் தெரியவரும்:

> வைய முழுதும் மலக்கயம் கண்டிடும்
> உய்யவந் தானுரை உந்தீபற
> உண்மை உணர்ந்தானென்று உந்தீபற.

இவர் எங்கும் தனியான ஒரு குரு வணக்கம் சொல்லவில்லை. இதற்கு முந்தியதான (44) வாழ்த்துப் பாடலில், இவர் தமக்கு

---

* திருவுந்தியார் அமைப்பைப் பிற்காலத்தில் மேற்கொண்டவர்கள், தத்துவராயர் பாடுதுறை - 101 - திருவுந்தியார் 10 பாடல்; சாந்தலிங்க சுவாமி (17 நூ.) அவிரோத உந்தியார் 100 பாடல்; சோமசுந்தர நாயகர் சித்தாந்த உந்தியார் (20 நூ) 103 பாடல்.

இறைவனே அருட் சத்தியோடு குருவாய் வந்து அருள் செய்தான் என்று கூறுகிறார்; உபசாரமாகச் சொல்லவில்லை, உண்மை யாகவே சொல்கிறார்;

> சிந்தனையி னுள்ளும்என் சென்னியி னும்சேர
> வந்தவர் வாழ்க என்று உந்தீபற
> மடவா ளுடனேஎன்று உந்தீபற.

(வந்தவர்-அருளாசிரியராக வந்த இறைவர். மடவாள்-அம்மை) இதே கருத்தை அகளமாய் யாரும் அறிவரிய பொருள். சகளமாய் வந்து தன்னையே தந்தது என்று சொல்வதாலும் தெளிவுபெறும்.

இனி, நூற்பொருளைச் சுருக்கிக் கூறுவோம்* 1-6: உய்ய வந்தார் தாம் ஆசான் மூர்த்தியால் பெற்ற அருள் ஞானத்தைத் தொகுத்துக் கூறுகிறது; சாதனமும் பயனும் தொகுத்துச் சொல் லுகிறது. 7-18: சாதனத்தின் வகைகளாக ஆதாரயோகம், நிரா தாரயோகம், மீதானஞ் சேறல், அதில் நிற்றல் 19-20: இன்புறு நிலை. 21-22: இன்புறும் நிலை பெற உபாயங்களான தத்துவ உணர்வு, வாசியோகம், 23-28: பாசவீடு சிவப்பேறு ஆகிய பயன். 29-31: பரமுத்தியின் இயல்பு. சிவநெறியின் சிறப்பு. 32-38: அணைந்தோர் தன்மை. 39-40: பரமுத்தியின் இயல்பு. 41-43: உய்யும் நெறி, 44: குரு வாழ்த்து; 45: நூற்பயன்.

உந்தி குழாம்கூடிய மகளிர் விளையாட்டு என்பதற்கு இயைய, ஆசிரியர் ஒரு பாடலில், (2), ‘என் பெண்ணே’ என்ற விளியை அமைத்திருக்கிறார். அதன் உரை: ‘தன்னுடைய நெஞ்சத் தைப் பார்த்து என் பெண்ணே தகாதவற்றுக்குட்படுகின்றாய் எனப் பேதைமையதனால் நெஞ்சத்தைப் பெண்ணெனக் கூறியது.’

## உந்தீ பற — பொருள்

உந்திபறத்தலை முதன்முதல் சொல்பவர் பெரியாழ்வார். இவருடைய திருமொழியில் மூன்றாம் பத்து, ஒன்பதாம் திரு மொழிப் பாசுரங்கள் பதினொன்றும் இப்பொருள் கொண்டன; தலைப்பு ‘நந்தன்மதலையைக் காகுத்தனை நவின்று உந்தி பறத்தல்’ என்பது. பாடல்கள் நாலடியின் மிக்குவந்த கலித் தாழிசை; நாலடிகளும் ஒரே தொடையில் அமைய, நாலாம்

---

* இப்பகுதி க. வச்சிரவேல் முதலியார் திருவுந்தியார் உரையைத் தழுவியது.

அடியின் ஈற்றுத்தொடர் பாடிப்பற என்று அமைந்துள்ளது. ஐந்தாமடி எதுகையில் வாராது, இதே ஈற்றுத் தொடரைக் கொண்டு முடிகிறது:

என்நாதன் தேவிக்கன் றின்பப்பூ ஈயாதாள்
தன்நாதன் காணவே தண்பூ மரத்தினை
வன்னாதப் புள்ளால் வலியப் பறித்திட்ட
என்நாதன் வன்மையைப் பாடிப்பற;
எம்பிரான் வன்மையைப் பாடிப்பற.

பாடிப்பற என்பது உந்தி பறத்தலாகும். இதை இத்திருமொழியின் இறுதிப் பாசுரத்தில் அவரே, 'காகுத்தனை நவின்று உந்தி பறந்த ஒளியிழையார்கள் சொல்' என்று சொல்லுகிறார். பாடிப் பற என்பதற்கு வியாக்கியானம் எழுதும்போது, 'பற என்றது லீலாரச விசேஷவ்யாபாரமாய் ஒருவரையொருவர் மிகுத்துச் சொன்னதாய்த் தலைக்கட்டுகிறது' என்று திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்தில் எழுதுகிறார். 'பற என்றது உந்திபற என்றபடி; ஒருவர்க்கொருவர் எதிரியாய்க் கொண்டு சொல்லி, உந்தி பறக்கையாகிற லீலாரசம் கொண்டாடின சொல்' என்பது மணவாளமாமுனி வியாக்கியானம். அடுத்து, திருவாசகத்தில் 14ஆம் பதிகம் திருவுந்தியார் என்றே பெயருடையது; 19 பாடல் கள்; இரண்டடியின் மிக்கு வந்த கலித்தாழிசை; ஒரு பாடல் காண்க:

ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி உந்தீபற
கொங்கை குலுங்கநின் றுந்தீபற.

முதலடி நான்கு சீராகவும், ஏனையவை ஒருசீர் குறைந்து மூன்று சீராகவும் அமைக்கப் பெற்றுள்ளன. இரண்டாம் அடிக்கும் மூன்றாம் அடிக்கும் எதுகை இல்லை. மோனை உண்டு. நாம் கருதும் திருவுந்தியாரும், திருவாசகப் பகுதியைத் தழுவியே பாடப் பெற்றிருக்கிறது.

உந்தி பறத்தலென்பது பெண்களின் விளையாட்டு வகையாகும். பல்வரிக் கூத்துள் ஒன்றாக அடியார்க்கு நல்லார் இதைக் காட்டுவார். உந்திப் பறத்தலன்று; உந்திபற என்று விளித்துப் பாடுவது; முதலிரண்டு அடிகளை ஒரு பெண் சொல்ல, மூன்றாம் அடியை மற்றொரு பெண் சொல்வதாக அமைந்துள்ளது. உந்தீ பற என்பது மகுடம்; பொருளால் ஏனைய சொற்றொடர்

களோடு தொடர்பின்றிப் புறத்துறுப்பாய் நின்று பாட்டை அணிசெய்கிறது. பெண்கள் பாடியாடுவது என்பதைத் திருவாசகப் பாடல்களில் 'கொங்கை குலுங்க நின்று உந்தீபற' என்றும் 'இளமுலைப் பொங்கநின்று உந்தீபற' என்றும் வருவன வற்றால் அறியலாம். இவ்விளையாட்டாகிய செயலானது, பறவை பறக்கும்போது தன் சிறகுகளை அடித்துக் கொள்வது போல் சிறுமியர் கால்களை ஒருசேர அசையாது வைத்து, பறப்பதுபோலக் கைகளை ஆட்டி ஆடும் ஒரு விளையாட்டாகும்.'உந்தி என்றது குழாங்கூடிய மகளிரது விளையாட்டு. பற ஒருமைப் பன்மை மயக்கம். பறக்க என்னும் வியங்கோளைப் பறவென விகாரமாக்கி உம் தீபற எனப் பிரித்து உமது அனாதி குற்றத்தை விளைக்கும் மும்மலங்களையும் கருவிகருணாதிகளையும் தேகாதிப் பிரபஞ்சங்களையும் விட்டுப் போம்படி இந்த ஞானசாத்திரத்தின் கருத்தே கருத்தாக நிற்பாயெனக் கொள்க. பறக்க வென்னும் எச்சத்தைப் பறவென விகாரமாக்கி உம்முடைய தீமைகளெல்லாம் பறந்துபோகும்படி கருதி நிற்பீர் எனினும் அமையும்' என்பது தில்லைச் சிற்றம்பலவர் உரை. தத்துவராயர் திருஉந்தியாரில், 'உந்தீபற பெண்காள் உந்தீபற' என்ற மகுடத்தில் இவ்வொருமை பன்மை மயக்கத்தைக் காண்கிறோம்.

## திருக்களிற்றுப்படியார்

### ஆசிரியர்

இந்நூல் வரலாறும், பெயர்க்காரணமும், ஆசிரியர் வரலாறும் முன்னமே சொல்லப்பட்டன. நூலின் பாடல்களில் இரண்டு நூலாசிரியரைக் குறிப்பிடுகின்றன. ஒன்று, 3ஆம் பாடல்:

> என்னறிவு சென்றளவில் யான்இன் றறிந்தபடி
> என்னறிவிலார் அறிக என்றொருவன் – சொன்னபடி
> சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான் எனக்கதனைச்
> சொல்லக்கேள் யானுனக்கச் சொல்.

இங்கு யான், ஒருவன்-திருவியலூர் உய்யவந்ததேவர்; ஒருவன் சொன்னான்-ஆளுடைய தேவநாயனார்; எனக்கு - திருக்கடவூர் உய்யவந்தாராகிய எனக்கு, என்பது பொருளாகும். 96ஆம் பாடலில் இதை இன்னும் தெளிவாய்ப் பெயர்க் குறிப்பிட்டுச் சொல்கிறார்:

ஆளுடையான் எந்தரமும் ஆளுடையா னேயறியும்
தாளுடையான் தொண்டர் தலைக்காவல் – நாளும்
திருவியலூ ராளும் சிவயோகி என்றன்
வருவிசையை மாற்றினான் வந்து.

திருவியலூர் ஆளும் சிவயோகி இப்போது ஆளுடைய தேவ ராக வந்து என்னை ஆட்கொண்டார் என்பது கருத்து. 'சேடன் படிபுரக்கும் தென்கடவூர் உய்யவந்தான் - நாடும் களிற்றுப்படி' என்ற உரைச்சிறப்புப் பாயிர வரிகள் நூற்பெயரையும் ஆசிரியர் பெயரையும் தெளிவாய் உரைக்கும்.

கொ. சண்முகசுந்தர முதலியார் பதிப்பித்த திருக்களிற்றுப் படி உரைப்பதிப்பில் பின்வருமாறு எழுதியிருக்கிறார்; 'வட நாட்டு உய்யவந்த தேவர் தமது சிஷ்யர் திருவியலூர் ஆளுடைய தேவருக்குச் செய்துதந்த திருவுந்தியார் சொற்சுருங்கி அர்த்தம் ஆழ்ந்திருப்பதை யாவரும் உணர்கவெனக் கருதி அதனுள்ளுறை யாக அவ்வுந்தியின் தலைக்குறிப்பினையே இவ்வெண்பாக்களில் அமர்த்தி விரித்தோதினர். இவர் திருவியலூர் ஆளுடைய தேவர் சிஷ்யரும் வடநாட்டு உய்யவந்ததேவர் சந்தானத்தைச் சேர்ந்த வருமாவர்.' இங்கு வடநாட்டு உய்யவந்ததேவர் சந்தானம் என்று இவர் கூறுவதற்கு எந்த ஆதாரமும் இல்லை. பழைய உரைகள் தரும் வரலாற்றாலும் மேற்காட்டியவற்றாலும் திருவியலூர் உய்யவந்தாரின் மாணாக்கர் ஆளுடையதேவர் என்பதும், அவர் மாணாக்கர் திருக்கடவூர் உய்யவந்தார் என்பதும் தெளிவு.

**நூலைப் பற்றிய பாடல்கள்**

களிற்றுப்படி வரலாற்றில் கூறிய கல்லானைச் செய்தியை, கி.பி. 1750 வாழ்ந்த பெரும்புலவரான மாரிமுத்தாப்பிள்ளை தாம் பாடிய புலியூர் வெண்பாவில் (78) குறிப்பிடுகிறார்.

வாட்கைஅச வாணிபன்சொல் மா நூலி னைப்படிக்கற்
பூட்கை எடுக்கக்கொள் புலியூரே – தாட்கமலப்
போதுளவ னத்தன் புருகூதன் போற்றும் அந்திப்
போதுளவ னத்தன் புவி.

படிக்கற்பூட்கை - படியிலிருந்த கற்களிறு. இது இவ்வரலாறு அக்காலத்தில் வழங்கியதென்பதற்குச் சான்று பகரும். இதே காலத்தில் தருமைச் சிவானந்த முனிவர் என்பவர் செய்ததாகக் கூறும் சம்பிரதாயதீபம் என்ற நூலில் திருக்களிற்றுப்படியாரின் சிறப்பை உணர்த்தும் செய்யுளொன்று காணப்படுகிறது.

திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று
நிருத்தனைநீ கும்பிடென்றார் நேயத்து – இருத்தும்
திருக்களிற்றுப் படியார் சேமத்துச் சொன்னார்
குருக்கடைக்கண் ணால்அறிந்து கொள்.

*இப்பாடலின் முதலிரு வரிகள் திருவுந்தியாரின் 17ஆம் பாடலாகும். இதன் கருத்து, திருக்களிற்றுப்படியாரின் கருத்தைக் குருவின் உபதேசத்தால்தான் அறிதல் கூடும் என்பது;*

திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற,
நேர்பட அங்கேநின் றுந்தீபற.

*என்பது திருவுந்தியார் பாடல்.*

*சைவ சாத்திர உரையாசிரியர் அனைவருமே திருக்களிற்றுப் படியாரைக் குறிப்பிட்டுள்ளனர். இது இயல்பு. தத்துவராயர் என்ற வேதாந்த நூலாசிரியர் (15 நூ) பல நூல்களிலிருந்து தாம் தொகுத்த பெருந்திரட்டு என்ற மூவாயிரம் பாடல் கொண்ட பெருநூலில், திருக்களிற்றுப்படி மூன்று பாடல்களைத் தொகுத்துரைக்கிறார்; ஏனைய சித்தாந்த நூல் ஒன்றையும் தொடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.*

பொருளும் மனையும் அறமறந்து போகம்மறந்து புலன்மறந்து
கருவி கரணம் அவைமறந்து காலம் மறந்து கலைமறந்து
தருமம் மறந்து தவம்மறந்து தம்மை மறந்து தற்பரத்தோடு
உருகி உருகி ஒருநீர்மை யாயே விட்டார் உய்யவந்தார்.

*என்பது ஆசிரியரைப் போற்றும் பாடல்.*

**நூல்**

*100 வெண்பாக்களைக் கொண்டது. பாடல்கள் நேரே திருவுந்தியார்ப் பாடல் தொடர்களை எடுத்து விரித்தனவாகவும், அதன் கருத்தை மேலும் விளக்குவனவாகவும் அமைந்துள்ளன. விளக்கம் கூறுமிடத்து, திருக்குறள் வரிகளையும் திருவாசக வரிகளையும், அமைத்துப் பாடுகிறார். நான்கு பாடல்களில் மாணவக என்று மாணாக்கனை விளித்துக் கூறுகிறார். தெண்ணீர்மையாய், ஐயா, ஏழாய் என்பன பிற விளிகள். சம்பந்தர் பாலை நெய்தல் பாடினார் என்பதை நம்பியாண்டார் நம்பி பாடுகிறார். இவரும் இருமுறை குறிப்பிடுகிறார். சேக்கிழார்; இதைக் குறிப்பிடவில்லை. சேக்கிழார் நூலுக்கும் இவருக்கும்*

கால இடையீடு சுமார் 30 ஆண்டுகளே இருந்திருக்கும். ஆதலால் இவர் பெரியபுராணத்தைப் பயின்றதில்லை. தம் காலத்தில் சைவ சமூகத்தில் அறியப் பெற்றிருந்த செய்திகளையே கூறினார் என்று கருத வேண்டும். இவர் குறிப்பிடும் நாயன்மார் வரலாறுகள் - அப்பர் செய்திகள் பல, அரிவாள் தாயர், கோட்புலி, சம்பந்தர், சிறுத்தொண்டர், சுந்தரர், திருக்குறிப்புத் தொண்டர், மங்கையர்க் கரசி, மூர்க்கர் மூர்த்தி ஆகியவை. திருவாதவூரடிகளையும் சேந்தனாரையும் குறிப்பிடுகிறார். சேந்தர் வரலாறு நம்பி யாண்டார் நம்பியால் குறிப்பிடப்பட்டது; களிற்றின் பாட்டு மிக்க நெகிழ்ச்சியுடையது:

அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க – அவிழ்ந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே, மெய்யன்பில்
சேந்தனார் செய்த செயல்.

சிவஞானப்பாலுண்டார் திருஞானப்பிள்ளையார் என்று கேட்ட பாண்டிமாதேவியும் எவ்வாறு மனம் நெகிழ்ந்தார் என்பதை அடுத்த பாட்டும் உருக்கமாய்ச் சொல்லுகிறது:

சுரந்த திருமுலைக்கே துய்யசிவ ஞானம்
சுரந்துண்டார் பிள்ளைஎனச் சொல்லச் – சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையாள் அன்பிருந்த வாறு.

நாயன்மாருடைய அருள் வாழ்க்கைகளையும் அருள் அனுப வத்தையும் இவர் பலமுறை பாடி மகிழ்கிறார். சம்பந்தர் அப்பர் சுந்தரரோடு மாணிக்கவாசகரையும் சேர்த்து நால்வர் எனச் சொல்லும் மரபு இவர் காலத்திலேயே தோன்றிவிட்டது. நால்வர் செயல்களையும் தொடர்பான நான்கு பாடல்களில் சொல் கிறார். சம்பந்தர் அப்பர் வரலாறுகள் விரிவுடையன;

ஓடம், சிவிகை, உலவாக் கிழி, அடைக்கப்
பாடல், பனை, தாளம், பாலைநெய்தல், – ஏடெதிர்வைப்பு
என்புக் குயிர்கொடுத்தல் – ஈங்கிவைதாம் ஓங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல்.

கொல்கரியின், நீற்றறையின், நஞ்சிற்கொலை தவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடல்நீந்தல், – நல்ல
மருவார் மறைக்காட்டில் வாசல்திறப் பித்தல் –
திருவாமூ ராளி செயல்.

*அடியார் தொண்டுகளை மெல்வினை வல்வினை என்று இவர் விளக்கிச் சொல்வது தனிச்சிறப்பு (16-20) வல்வினையைச் சிறுத் தொண்டர் சண்டேசர் அரிவாள் தாயர் முதலியோர் வரலாறு களால் விளக்குகிறார். அருள்வடிவும் தானுமாய் இறைவன் எழுந்தருளிய சிறப்பினைப் பாடும் பாடல் பிரசித்தமானது:*

ஆகமங்கள் எங்கே, அறுசமயம் தானெங்கே,
யோகங்கள் எங்கே, உணர்வெங்கே, – பாகத்து
அருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல், அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு.

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்கள் ஒன்றாக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவால் – இன்றுரைக்க
என்னால் இயன்றிடுமோ, என்போல்வார் ஏதேனும்
சொன்னால்தான் ஏறுமோ சொல்.

*என்ற பாடல், இறைவனைச் சாத்திரங்களால் நிச்சயிக்க முடியா தென்பதைக் கூறுகிறது. இறைவன் எல்லாமாயும் அவற்றின் வேறாயும் உடனாயும் உள்ளான் என்பது ஒரு நுட்பமான சைவ சித்தாந்தக் கருத்து. சம்பந்தர் தேவாரத்தில் திருவீழிமிழலைப் பதிகத்தில் இதை அழகாய்ப் பாடுகிறார்.*

ஈறாய்முதல் ஒன்றாய்இரு பெண்ணான் குணமூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவை ஐந்தாய்
ஆறாய்சுவை ஏழோசையோ டெட்டுச்சுவை தானாய்
வேறாய்உடன் ஆனான்இடம் வீழிம்மிழ லையே.

*இக்கருத்தை அமைத்து இவரும் ஒரு பாடல் பாடுகிறார்:*

ஈறாகி அங்கே முதலொன்றாய் ஈரிரண்டாய்
மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் – வேறாய்
உடனாய் இருக்கும் உருவுடைமை என்றும்
கடனாய் இருக்கின்றான் காண்.

*எல்லாம் இறந்த இடமே சிவன் என்பது ஒரு பாடல்.*

ஒன்றன்று இரண்டன்று உளதன்று இலதன்று
நன்றன்று தீதன்று நானன்று – நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவும் அன்று
தலையன்று அடியன்று தான்.

*ஒரு பாடலில் சைவசமயமே மேலானது என்ற கருத்தையும் கூறுகிறார்.*

இன்றிச் சமயத்தின் அல்லதுமற் றேழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார் – இன்றிங்கே
அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவர்கள்
எங்குமிலை கண்டாய் இது.

**பதிப்பு:**

திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் பழைய பொழிப்புரையுடன் சைவ சித்தாந்த மகாசமாஜம்: சித்தாந்த சாத்திரங்கள், இரண்டாம் பதிப்பு 1940. தில்லைச் சிற்றம்பலவர் என்னும் சிவப்பிரகாசர் உரை: கொ. சண்முகசுந்தர முதலியார் பதிப்பு, 1888. நாகலிங்க முனிவர் பதிப்பு 1897; சமாஜப் பதிப்பு 1934. இவ்வுந்தியாருரை மிக்க வேறுபாடுகளுடன் ஏட்டில் காணப் படுகிறது; இவ்வுரை ஆய்ந்து பதிப்பித்தர்க்குரியது. திருவாவடு துறை யாதீனப் பதிப்பு 1951; மேற்படி யாதீனப் பதிப்பு சிவ பிரகாசருரையும் வேறுரையும் 1969; இலக்கணம் முத்துக் குமாரசாமித் தம்பிரான் குறிப்புக்களுடன் 1951; திருவுந்தியார் மட்டும், வச்சிரவேல் முதலியார் உரை, 1966. திருக்களிற்றுப் படியார், கண்ணுடைய வள்ளல் அனுபூதியுரை, மு. அருணாசலம் 1962. திருவுந்தியார் காஞ்சி ஞானப்பிரகாசர் பதிப்பு 1968. திரு வுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் மூலம் முதன்முதல் பிற சாத்திரங்களோடு மதுர நாயகம்பிள்ளையால் 1866இல் பதிப்பிக்கப்பட்டது; பின்னர் ஆனூர் சிங்காரவேல் முதலியார் மூலப்பதிப்பு 1899; கொ. சண்முகசுந்தர முதலியார் மூலப் பதிப்பு 1871, 1875; தருமபுரம் மெய்கண்ட சாத்திர மூலம் முதல் பதிப்பு 1942; இரண்டாம் பதிப்பு 1956.

**குறிப்பு**

### திருஉந்தியாரும் மெய்கண்ட சந்தானமும்

திருவுந்தியாரையும் மெய்கண்டாரையும் குறித்த ஒரு புதிய கருத்து. சித்தாந்த சாத்திரம் பதினான்கு என்பது சம்பிரதாயம். அவை திருஉந்தியார் திருக்களிற்றுப்படியார் என்ற இரண்டு, மெய்கண்டார் செய்த சிவஞானபோதம் முதலாகப் பன்னிரண்டு ஆகப் பதினான்கு. இவற்றை மெய்கண்ட சாத்திரம் என்றும் பெரியோர் சொல்வர். இப்பதினான்குமே மெய்கண்ட சாத்திரம் என்பதற்குப் பண்டைய ஆதாரம் இல்லை. 'உந்தி களிறே' என்ற

பாடலை ஆதாரமாகச் சொல்வார்கள். இது மிகவும் பிற்காலத்துப் பாட்டு.* எனினும் சாத்திர ஏடுகள் அனைத்திலும் உந்தி, களிறு இரண்டும் தவறாமல் முகப்பில் காணப்படுகின்றன. இவை முகப்பில் காணப்படுவதால் மெய்கண்டாருக்கு முற்பட்ட காலத்தில் எழுந்தவை என்று ஆன்றோர் கருதினர் என நாம் கொள்ளலாம். இன்றும் கூட இந்நூல்கள் இரண்டும் கி.பி. 1148, 1178இல் செய்யப்பட்டன என்பது பொதுவாக நிலவும் கருத்தாகும். சிவஞானபோதம் செய்த மெய்கண்டார் கி.பி. 1232ஐ ஒட்டி வாழ்ந்தார் என்ற ஒரு கருத்து ஆராய்ச்சியாளர் பெரும்பான்மையோர் கொண்டுள்ள ஒரு கருத்தாகும். 1232 என்ற ஆண்டு ஒரு கல்வெட்டின் துணைகொண்டு எழுந்தது. ஆனால் மற்றொரு கல்வெட்டின் துணைகொண்டு மெய்கண்டார் காலம் ஒருகால் 1125 - 1175 ஆகக் கொள்ளக்கூடுமென்று வேறிடத்தில் நாம் குறிப்பிட்டிருக்கிறோம்.❖ இக்கருத்தை ஒப்புக்கொண்டால், திருவுந்தியாருக்கும் மெய்கண்டாருக்கும் நேர்முகத் தொடர்பு இருக்கலாம் என்ற ஓர் எண்ணம் உதிக்கிறது. மெய்கண்ட நூல் தொகுப்பின் ஒருமை நோக்கி யாவும் மெய்கண்ட மரபு என்று சொல்கிறோம்; ஆனால் இப்படி ஒரு ஒருமை உண்மையில் இருந்திருக்கவும் கூடும் என்ற ஓர் ஐயமும் எழுகின்றது. இதற்கு ஆதாரமான சில கருத்துக்களையும் கீழே தருகிறோம்.

இக்கருத்துக்களைப் பார்க்குமுன் இரண்டு குறிப்புக்கள் சொல்லத்தக்கன. ஒன்று திருவுந்தியாருக்கு உரிய சிறப்பு. இதைச் சாத்திர நூல்களின் வரிசையில் முதலாம் நூலாக வைத்திருப்பது இதன் பெருமையை நன்கு புலப்படுத்துகின்றது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சிறப்பான மூன்று சைவ சாத்திரங்கள் தோன்றின என்று இந்த அத்தியாயத்தில் விளக்கினோம். அம்மூன்றில் உந்தி, களிறு என்ற இரண்டும் சித்தாந்த சாத்திரங்களில் முதல் இரு நூல்களாய்க் கொள்ளப்பட்டு வந்துள்ளன. மற்றொரு நூலாகிய ஞானாமிர்தம் அவ்வாறு கொள்ளப்படவில்லை. இதற்கு ஒரு காரணம், அந்த இரண்டும் மட்டும் மெய்கண்டார் சந்தானத் தொடர்புடையன என்ற கருத்தாகலாமல்லவா? ஞானாமிர்தத்துக்கு அவ்விதத் தொடர்பு காட்ட இடமில்லை.

---

* பக்கம் 158 பார்க்க.

❖ எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூல் காண்க.

மற்றது திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்ற பெயர்களில் உள்ள மரியாதையைக் குறிக்கின்ற விகுதிகள். இரண்டுக்கும் திரு என்ற அடை முதலிலும் ஆர் என்ற விகுதி பின்னாலும் சேர்க்கப்பெற்று வழங்குகின்றன. இவ்வாறு வழங்கும் பிறநூல்கள் மாணிக்கவாசகரது திருவாசகத்துள் அமைந்த திருஉந்தியாரும் அவரே பாடியதாகக் கருதப்பட்டுவரும் திருக்கோவையாரும் ஆகும். நாலடியார் என்ற ஒரு பண்டைய நூலுக்கு மட்டும் ஆர் என்ற விகுதி சேர்த்து வழங்குகிறோம். சித்தாந்த சாத்திரங்களுள் சிவஞான சித்தி மட்டும் ஆர் விகுதி பெற்றுச் சித்தியார் என்று வழங்குகின்றது. இவை எல்லாம், குறிப்பிட்ட நூல்கள் சைவ சமூகத்தில் எவ்வளவு பெருமதிப்பைப் பெற்றிருந்தன என்பதைக் காட்டுகின்றன.

இனி திருவுந்தியாரையும் மெய்கண்டாரையும் தொடர்புபடுத்திச் சில கருத்துக்களைக் கீழே தருகிறோம்.

| | | |
|---|---|---|
| 1. | திருவியலூர் உய்ய வந்த தேவர் பரம்பொருளே ஆவர். இவர் ஆன்மாக்கள் உய்ய வேண்டி மானிடச் சட்டை சாத்தி வந்தார் என்று உரைகள் கூறுகின்றன. மற்றொரு வரலாறு இவர் உத்தர பூமியினின்றும் தக்ஷிண பூமியில் உள்ள ஆன்மாக்களை ரட்சிக்கும் பொருட்டு வந்தார் என்பது. | திருக்கயிலாயத்திலிருந்து பரஞ்சோதி முனிவர் பூலோகத்தில் சஞ்சாரம் பண்ணினார். அப்போது திருவெண்ணெய் நல்லூரில் மெய் கண்டாராகிய குழந்தையைக் கண்டு, திருவருள் தூண்ட, அக்குழந்தைக்குச் சிவஞான உபதேசம் செய்தார். |
| 2. | உய்ய வந்த தேவர் ஆளுடைய தேவ நாயனாருக்கு உத்தேசித்த பின் சிறிது நாள் சென்று தன்னியல்பை அடைந்தார். (உத்தர பூமிக்கு எழுந்தருளினார்) | பரஞ்சோதி முனிவர் மெய்கண்டாருக்கு உபதேசித்த பின் மீண்டும் திருக்கயிலாயத்துக்கே எழுந்தருளினார். |
| 3. | உய்யவந்தார் சிறந்த சிவானுபூதிச் செல்வர். அவர் செய்த உந்தியார் என்ற நூலின் பொருள் மறை முடிவு எனலாகும். இறைவனது ஆணையைத் தாங்கி நூல் செய்தார். | பரஞ்சோதி முனிவர் திருவருள் உணர்த்திய வண்ணம் மெய்கண்டாருக்கு உபதேசம் செய்தார். மெய்கண்டார் செய்த நூற்பொருள் மறை முடிவு எனலாகும். |

| | |
|---|---|
| 4. திருவியலூர் உய்யவந்த தேவர் செய்த திருவுந்தியார் மூன்றடித் தாழிசைகள் 45 கொண்டது. | மெய்கண்டார் செய்த சிவ ஞானபோதம் சிறு நூற்பாக் கள் 12 கொண்டது. |
| 5. உந்தியாருக்கு, அவருடைய மாணாக்கர் ஆளுடைய தேவ நாயனாரின் கட்டளைப்படி இவருடைய மாணாக்கரான திருக்கடவூர் உய்யவந்த தேவர் 143 வெண்பாக்களைக் கொண்ட திருக்களிற்றுப்படி யாரை வார்த்திகம் போலச் செய்தார். | சிவஞான போதத்துக்கு மெய் கண்டாரே 81 வெண்பாக்கள் கொண்ட வார்த்திகப் பொழிப் பும் செய்தார். |
| 6. உந்தியார் சாத்திரப் பயிற்சி மிக்க அனுபூதிமான்களுக் குரிய நூல். | சிவஞான போதம் சாத்திரப் பயிற்சி மிக்க அனுபூதி மான் களுக்குரிய நூல். |
| 7. உந்தியார் சில சொற்களா லானது சூத்திரம் போல. சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளைத் தெரிப்பது. | சிவஞான போதம் சூத்திர மாகவே அமைந்து, சில்வகை எழுத்திற் பல்வகைப் பொரு ளைத் தெரிப்பது. |
| 8. திருஉந்தியார் செய்த காலம் கி.பி.1148 என்பர். | மெய்கண்டார் காலம் இது வரை சொல்லப்பட்ட 1232 என்பதற்கு மாறாக கி.பி.1125 - 1175 ஆக இருக்கலாம் என்று சொல்லப்பட்டது. |

இங்கு காட்டிய ஒற்றுமைகளால் சில முடிவுகள் செய்யக்கூடும். கயிலாயத்திலிருந்து வந்தார் என்று வரலாறு கூறுவதை இன்றைய ஆராய்ச்சியுலகம் ஒப்புக்கொள்வது அரிது. உய்யவந்தார் வட நாட்டிலிருந்து வந்தார் என்ற உரைக்கூற்றை இதனோடு தொடர்புபடுத்தி, மெய்யாகவே நிகழ்ந்திருக்கக் கூடிய நிகழ்ச்சி யாகக் கருதிப் பார்த்தால், கீழ்ச்சொல்லிய கருத்துக்கள் புலப் படலாம்.

அ. திருவியலூர் உய்யவந்தாரே பரஞ்சோதி முனிவர் என்று சொல்லப்படுகிறார்.

ஆ. அவருக்குப் பல மாணாக்கர் இருந்தனர்; ஒருவர் இதுகாறும் அறியப்பட்ட ஆளுடைய தேவநாயனார், மற்றவர் மெய் கண்டார் என்று சொல்லலாம். மெய்கண்டார் வழியாகவே சந்தானம் வளர்ந்தது. ஆளுடைய தேவருக்குப் பின் திருக் கடவூர் உய்யவந்ததேவர் உபதேசம் பெற்றார். அவருக்குப் பின் அவர் வழியாகச் சந்தானம் வளர்ந்ததாக வரலாறு இல்லை.

ஓர் ஒப்புமையும் கருதத்தகும். உய்யவந்த தேவருக்கு மேலே கூறியதுபோல, மாணாக்கர் இருவர். மெய்கண்ட தேவருக்கும் மாணாக்கர் இருவர்; முதல்வரான அருணந்திசிவத்தின் வழியே மெய்கண்ட சந்தானம் வளர்கின்றது. ஆனால் மற்றொரு மாணாக்கரான மணவாசகங் கடந்தார் (ஆளுடைய தேவர் மாணாக்கர் போல) நூல் செய்திருந்த போதிலும், அவர் வழியே சந்தானம் வளரவில்லை.

இ. திருவியலூரர் உய்யவந்தார் இரு மாணாக்கருக்கும் உப தேசித்து மெய்கண்டாரை நூல் செய்யச் சொன்னார். இவரும் சிவஞானபோதமும் அதன் வார்த்திகமும் தாமே செய்தார். மற்றொரு மாணாக்கரான ஆளுடைய தேவர் நூல் செய்யாவிட்டாலும், தம் மாணாக்கரான திருக் கடவூர் உய்யவந்த தேவருக்கு நூல் செய்யுமாறு சொல்ல, அவர், முதல் உய்யவந்தார் நூலுக்கு வார்த்திகம் செய்தார்.

ஈ. இவர்களுடைய காலங்கள் வருமாறு:

| | |
|---|---|
| உய்யவந்தார் (திருவியலூரர்) | 1100 - 1150 |
| ஆளுடைய தேவர் | 1125 - 1175 |
| உய்யவந்தார் (திருக்கடவூர்) | 1150 - 1200 |
| மெய்கண்டார் | 1125 - 1175 |

எனவே, இங்கு காட்டிய பாரம்பரியமானது பின்வந்த பன்னிரு மெய்கண்ட சாத்திரங்களோடு முன்வந்த உந்தி களிறு இரண்டை யும் தொடர்புபடுத்திக் காட்டுகின்றது. இதன்படி பார்க்கும் போது பதினான்கு நூல்களும் தொடர்ந்த ஒரு சந்தான நூல் களாக அமைகின்றன. பெருமை பற்றியும் தொடர்பான சாத்திரப் பொருள் அமைப்புப் பற்றியும் சிவஞானபோதம் சிறப்புப் பெறு கின்றது. அது காரணம் பற்றியே இது மெய்கண்ட சந்தானம் என்று பெயர் பெறுகின்றது.

அன்பர்கள் ஒன்று நினைவில் கொள்ளவேண்டும். இந்தச் சாத்திர ஆசிரியர் நூல் செய்தார்கள் என்பது உண்மை. ஆனால் மெய்கண்டாரின் வாழ்க்கை வரலாற்றுக்கு ஆதாரம் எதுவு மில்லை. மிகவும் பிற்காலத்தில், அதாவது சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில், வாழ்ந்த சாமிநாத தேசிகர் என்பவர் சந்தானா சாரிய புராண சங்கிரகம் என்ற ஒரு சிறுநூல் செய்தார். அதனுள் சந்தான ஆசாரியர் நால்வர் வரலாறுகளை அவருக்குத் தெரிந்த அளவு தொகுத்துச் சொன்னார். அவர் கூற்றுத்தான் இந்நால்வர் வரலாற்றுக்கும் ஆதாரம். மற்றபடி உண்மை விளக்கத்தில் காணப்படும் வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே என்பது முதலான தொடர்களால் மெய்கண்டார் சுவேதவனப் பெருமாள் என்று பெயர் பெற்றிருந்தார் என்றும், திருவெண் காட்டில் பிறந்தார் என்றும், திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்து அங்கு ஞான உபதேசம் பொல்லாப் பிள்ளையார் அருளும் பெற்றார் என்றும், நாம் யூகிக்கலாம். இவற்றுக்கு நூல் களில் ஆதாரம் காணப்படவில்லை. எனவே, இவைபோன்ற யூகமான செய்திகளாகிய உய்யவந்தார் மெய்கண்டார் தொடர்பு பற்றிய செய்திகளும் ஆய்ந்து சிந்திக்கத்தக்கவை; சம்பிரதாயத் துக்கு முரண் என்று ஒதுக்கிவிடத்தக்கன அல்ல. ஏனெனில் சம்பிரதாயத்துக்கு வேர் இல்லை. இவற்றை முடிந்த முடிபாக இப்போது வற்புறுத்திச் சொல்லவில்லை. அன்பர்களுடைய நடுநிலையான சிந்தனைக்கே விட்டுவிடுகிறோம்.*

## வாகீச முனிவர் - ஞானாமிர்தம்

### ஆசிரியர் வரலாறு

இந்த நூற்றாண்டில் தோன்றிய சிறந்த சைவ சித்தாந்த சாத்திர நூலாகிய ஞானாமிர்தம் என்ற பழைய நூலைச் செய் தவர் வாகீச முனிவர். இவருடைய ஞானாசிரியர் பரமானந்த முனிவர். அவர் கோடலம்பாகை என்னுமூரினர். (இவ்வூர் வேதாரணியத்தருகு உள்ளது என்று பழைய ஞானாமிர்தப் பதிப்புக் கூறுகிறது.) அருண்மொழித்தேவன் என்ற பிள்ளைத் திருநாம முடையவர்; அருண்மொழித்தேவன் என்பது 985-1014

---

* இதுவன்றியும், சேக்கிழார், திருவியலூர் உய்யவந்த தேவர், மெய்கண்டார், திருக்கடவூர் உய்யவந்த தேவர் என்று ஒரு தொடர்பு இருக்கலாமோ என்ற ஓர் ஐயம் எழுகிறது. 12ஆம் நூற்றாண்டு பாகம் 1, பக்கம் 197.

இல் ஆட்சி செய்த பேரரசன் முதலாம் இராசராசனது இயற் பெயர். பிற்காலத்தில் சிறப்பான மக்கள் பலருக்கு இது பெயராக அமைந்துள்ளது; சேக்கிழாரின் இயற்பெயரும் இதுவே. இவர் குடிப்பெயர் அம்பர்கிழான்; சோழநாட்டு அம்பர் என்ற ஊருக்கு உரிமை பூண்ட குடியினர் போலும்;

இருள்நெறி மாற்றித்தன் தாள்நிழ லின்பம் எனக்களித்தோன்
அருள்மொழித் தேவன்நற் கோடலம் பாகை அதிபனெங்கோன்
திருநெறி காவலன் சைவ சிகாமணி சில்சமய
மருள்நெறி மாற்ற வரும்பர மானந்த மாமுனியே.

என இவர் பாடிய தனிப்பாடலாலும்,

புண்ணியம் படைத்து மண்மிசை வந்த
தோற்றத் தன்ன ஆற்ற லெங்குரிசில்
குணப்பொற் குன்றம் வணக்க வாரா
ஐம்புல வேழத்து வெந்தொழில் அவியக்
கருணை வீணை காமுறத் தழீஇச்
சாந்தக் கூர்முள் ஏந்தினன் நிறீஇத்
தன்வழிக் கொண்ட சைவ சிகாமணி
பரமா னந்தத் திருமா முனிவன். (அகவல் 4)

பாடல் சான்ற பல்புகழ் நிறீஇ
வாடாத் துப்பிற் கோட லாதி
அருளா பரணன் அறத்தின் வேலி
பொருள்மொழி யோகம் கிரியையிற் புணர்ந்த
அருள்மொழி திருமொழி போலவும். (அகவல் 28)

என்ற ஞானாமிர்தப் பாடற் பகுதிகளாலும் இது விளங்கு கின்றது. இவர் சோழ நாட்டிலிருந்து தொண்டை நாடு சென்று சென்னைக்கருகேயுள்ள திருவொற்றியூரடைந்து அங்கு கோளகி சந்தானத்தின் கிளையாக இருந்த சைவமடத்தில் நிரஞ்சன தேவர் என்ற பெரியார் வழியில் வந்த சதுரானன பண்டிதர் காலத்தில் வாழ்ந்து வந்தார் போலும்.

'ஆன்மாவுக்குப் புகலிடமாயுள்ளது சிவபிரானுடைய திருவடியே' என்று கூறுகின்ற 53ஆம் அகவலின் கருத்தைக் கூறும் உரைகாரர், 'நமக்கு புகலிடமாயுள்ளது அகண்ட பரி பூரணமாய் நிறைந்த நிரஞ்சன தேவநாயனாருடைய சீர்பாத

மல்லாது வேறுண்டோ?' என்று மாணாக்கர்களுக்கு ஆசிரியர் அறிவுறுத்துவதாக எழுதியிருப்பது இங்கு அறியத்தக்கது. உரையிறுதியில் காணப்படும் தனிப்பாட்டும் நிரஞ்சன தேவருடைய திருவடியைக் கோடலம் பாகை முனிவர் அடையச் செய்தார் என்று போற்றுகின்றது:

**பொன்னைநிலத்தைப் புரிகுழல்மாதரைப் பொய்யுணர்வென்று**
**என்னை நிரஞ்சன தேவன்தன் தாள்நிழல் எய்துவித்த**
**மன்னைவயற் கோடலம் பாகையு ளானை மனத்துவைத்த**
**பின்னை வருவதுண் டோஇடர், அஞ்சலென் பேதைநெஞ்சே.**

இவர் திருவொற்றியூரிலிருந்த காலத்தில் சோம சித்தாந்தம் வளர்த்தார் என்று சாசனம் கூறும்; சோம சித்தாந்தம் என்பது சோம சம்பு சிவாசாரியர் செய்த பத்ததியின் படிக்கான சமய நெறி என்பது அறிஞர் துணிபு. இவர் சிவாகமத் தேர்ச்சி மிக்கவராக இருந்து சிவாகமக் கருத்துக்களை இந்த ஞானாமிர்தம் என்ற நூலாக எழுதிய சிறப்புக் காரணமாக, ஞானாமிர்தாசிரியர் என்ற பெயர் இவருக்கு வழங்கலாயிற்று; வாகீசப் பண்டிதர் எனப்பட்ட இவர் பின்னரே வாகீச முனிவரானார் போலும். ஞானாமிர்தம் பாடிய பின்னர் இவர் திருநெல்வேலி நாட்டிற்குச் சென்று அங்கு திருவாலீச்சுரம் என்ற இடத்தில் இருந்த கோளகி மடத்தின் கிளையின் தலைவராயிருந்தார். இவரை முன்னிட்டு ஞானமிர்த ஆசிரியர் சந்தானத்துக் குரியவரைக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. மேற்கூறிய செய்திகளன்றி இவர் வாழ்க்கை வரலாறுகள் வேறெவையும் புலப்பட்டில.

இங்கு குறித்த சாசனங்கள் பின்வருவன: திரு வாலீச்சுரம் சிவாலயத் திருமதில்..... திருபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியத் தேவனது மூன்றாம் ஆட்சியாண்டு. 'திருஞானம் விண்ணப்பம் செய்வதற்குச் சிவப்பிராமணர் எண்மர் கோளகி மடத்து ஞானாமிர்தாசாரியர் ஆகிய சந்தானத்தைச் சார்ந்த புகலிப் பெருமாள் என்பவருடன் உடன்படிக்கையின் மேல் நிலம் பெற்றனர்' என்பது ஒன்று. மற்றொன்று 'கோளகி மடத்து ஞானாமிர்த சந்தானத்தவரான அகோர தேவர்க்கு நந்தவனம் நடத்தி வருவதற்காக சிவப்பிராமணர்கள் நிலம் உதவினர்' என்பது. இவற்றின் காலம் கி.பி. 1254. எனவே, இக்காலத்தின் முன் ஞானாமிர்தாசிரியர் சந்தானம் பிரசித்தி பெற்றிருந்தது என்பது தெளிவாகின்றது.

ஞானாமிர்தம் – நூற்பொருள்

ஞானாமிர்தம்* என்பது ஆசிரியர் இந்நூலுக்கு வைத்த பெயர். 6ஆம் பாடலின் இறுதி வரிகளால் இது விளங்கும்.

அச்சா ணாழி எற்பட எழுதலின்
ஞானா மிருதம் என்ப –
ஆனாச் செவ்வி மாநூற் பெயரே.

இந்நூல் 75 அகவற்பாக்களால் ஆனது. பாக்கள் 4 அடிச் சிறுமையும் 56 அடிப் பெருமையும் உடையன. நான்முகத்து உள்ள 'முக்கட்டிருகவுட்டு', 'மதிபாய் சடைமுடித்து' என்ற விநாயகர் வணக்கமாகிய இரு வெண்பாக்களும், வேறு நூல் சுவடிகளின் முகப்பிலும் காணப்படுகின்றமையால், நூலுக்குப் புறம்பான பழம் பாடல்கள் எனக் கருதத்தக்கன. பாயிரப் பகுதியானது கடவுள் வாழ்த்து விநாயகர் துதி, கலைமகள் துதி, ஆசிரியர் துதி, அவையடக்கம், நூற்பெயர், ஞானம், யோகம், கிரியை, சரியை என நூற் பாகுபாடு நால்வகை எனல் - என்ற பொருள்களையுடையது. நூலானது, பாயிரப் பகுதியின் பின் எட்டு இயல்களாகவுள்ளது. இவை சம்மிய ஞானம், சம்மிய தரிசனம், பாசபந்தம், தேகாந்தரம், பாசனாதித்துவம், பாசச் சேதம், பதிநிச்சயம், பாசமோசனம் என்பன.

இவ்வியல்களின் பொருளைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம்: **சம்மிய ஞானம்❖** - பொருள்கள் மூன்று. பதி, பசு, பாசம்; இறை, உயிர், உலகு என; உயிர் மூன்று அவத்தைப்படும். உயிருக்கு மலத்தொடர்பு அனாதி. அதனால் மாயா காரியமான உடம்பொடு பொருந்தி வினைப்பயன் நுகர்ந்து மலம் நீங்கி வீடு பேறு அடையும். உயிர் அறிவுடைப் பொருள். பாசக்கூட்டம் அறிவில்லாதது. **சம்மிய தரிசனம்** - உயிருக்குச் சாக்கிரம் முதலான ஐந்தவத்தை உண்டு. **பாசபந்தம்** - பாசம் மூன்று. ஆணவம் மறைப்பது. மாயை 36 தத்துவங்களாக விரிவது. மாயை உள்பொருள்; அசேதனம், ஆகவே தோன்றி ஒடுங்கும். ஒடுக்குபவன் இறைவன். வினை, முக்காரணத்தாலும் வரும்

* பதஞ்சலிகளால் நிறைந்த நாயனார் சந்தானம் ஒன்றாய்ப் பின் பலவாயின, ஞானாமிர்தம் இவர் செய்தநூல் போலும் என்பது வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முத்தி நிச்சயப் பேருரை (1700).

❖ சம்மிய ஞானம் - நன்ஞானம்; சம்மிய - சம் யக்

இருவினை. துக்கம் மூவகை. **தேகாந்தரம்** - வினை காரணமாகப் பிறப்பிறப்புக்கள் நிகழ்கின்றன. **பாச அனாதித்துவம்** - பாசம் அனாதி; இவற்றின் தொடர்பு அற நீங்குவதே சுத்தநிலை. **பாசச் சேதம்** - யாக்கை நிலையாமை ஞானத்தால் காண, மாயைத் தொடர்பு கெடுகிறது. வினையின் தன்மையும் காரண காரியமும் உணர, கன்ம நாசம் ஏற்படுகிறது. சிவஞானம் விளங் கவே மலம் கெடுகிறது. வினை கன்மம் மலம் மூன்றும் அனாதி நித்தப் பொருள். ஆனால் உயிரோடு தொடர்பு அனாதி; நித்தம் அன்று. **பதி நிச்சயம்** - முதற்பொருள் சிவன். உயிர்கள் சிவனே ஞானத்தால் உணர்ந்து அனுபவிக்கின்றன. சத்தி எங்கும் பரந்து நிற்கும். திருவருளால் சிவானுபவத்துக்கான அறிவு உதிக்கும். **பாசமோசனம்** - உயிர் சிவமாந்தன்மை எய்துவது, இருள் நீக்கமும் ஒளி விளக்கமும் போல, ஒருங்கு நிகழ்வது. தீக்கை வாயிலாக உயிர் ஞானவழியில் சிவயோகம் பெறும்.

## நூற்சிறப்பு

இந்நூல் காலத்தால் மெய்கண்டாருக்கு முந்தியதென்று சொல்வர்; இதிலுள்ள சமயக் கருத்துக்கள் தமிழ் நாட்டினருக்கே யுரிய பழஞ் சைவக் கருத்துக்கள் என்று கருதத் தடையில்லை. இந்நூல் அகவற்பாவால் இயன்றது என்று குறிப்பிட்டோம். இந்நடையானது கல்லாடம் போலப் பழைய தமிழ்நடை; சங்க நூல்களின் நடையைக் கொண்டெழுதியது, ஆதலால் கடின மானது என்று சொல்வர். இதனைப் படிக்கும் காலத்துச் சங்க நூல்களின் சொற்களும் தொடர்களும் அப்படியே இதன்கண் பெய்திருக்கக் காணலாம். பின்னே கூறப்பெறும் எடுத்துக் காட்டுக்கள் இதை நன்கு புலப்படுத்தும்.

வாகீச முனிவர் காலம் 12ஆம் நூற்றாண்டு என்று நமக்கு இப்போது திட்டமாய்த் தெரிகிறது. இதை மறந்து பார்த்தால் இந்நூல் சங்க இலக்கிய காலம், பல நூற்றாண்டுகள் முற்பட்ட தாக இருக்கவேண்டும் என்றே பொதுவாய்க் கருதத்தோன்றும். வினாவும் விடையுமாய் உள்ள பல பாடல்கள் அருள்நந்தி செய்த இருபா இருபதிலுள்ள அகற்பா வரிகளை நினைப்பிக்கும். கடின நடை என்ற காரணத்தாற் போலும், பிற்காலத்தே இந்நூற் பயிற்சி குறைந்துவிட்டது. எனினும், மதுரைச் சிவப்பிரகாசர், சிவஞான சுவாமிகள் போன்ற பேருரையாசிரியர்கள் இந்நூற் பாடல்களை எடுத்துக்காட்டுகிறார்கள். 15ஆம் நூற்றாண்டில்

*சிவப்பிரகாசப் பெருந்திரட்டுத் தொகுத்த தத்துவராயர் இதன் பாடல்களில் இருபத்தெட்டை உரையோடு எடுத்துச் சேர்த்திருக் கிறார். இவற்றால் இந்நூல் மிகச்சிறந்த பண்டைப் பிராமண நூல்களில் ஒன்று என்பதில் தடையில்லை.*

*ஆசிரியர் சிவாகமப் பயிற்சி மிக்கவர் என்பதோடன்றி இந்நாட்டுப் புராண இதிகாசங்களில் நிறைந்த பயிற்சியும் ஈடுபாடு முடையவர். வினைவகை, தீவினை முதலியன கூறுமிடங்களில் ஆசிரியர் பல இதிகாச வரலாறுகளைக் குறிப்பிடுகிறார். கன்னன், தக்கன், இந்திரசித்து (இந்திரதத்தன் என்ற முனிவர்), யாளி, வரருசி, சயத்திரதன், சனமேசயன், நகுடன் (39-40) முதலியோர் இவ்வாறு குறிப்பிடப்பெற்றவர். வினைகளை நல்வினை தீவினை என்று பாகுபாடு செய்து மனம் வாக்குக்காயம் என்ற மூன்றி னாலும் வினை நிகழுமென்று விளக்கியுரைக்குமிடத்து, தமிழ் நாட்டு வழக்கிலுள்ள முப்பதிரண்டறங்கள் முதலியவற்றை முறையாக அமைத்துப் பாடியிருப்பது அறிந்து இன்புறத் தக்கது. இவ்விடங்களில் இந்நூலின் நடைச்சிறப்பையும் நன்கு காணமுடியும்.*

*மனத்தால் ஆர்ச்சிக்கும் கன்மம் (அகவல் 24):*

இருள்தீர் காட்சி, அருளொடு புணர்தல்,
அரும்பொறை தாங்கள், பிறன்பொருள் விழையாமை,
செய்தநன் றறிதல், கைதவங் கடிதல்,
பால்கோ டாது பகலிற் றோன்றல்,
மான மதாணி யாணிற் றாங்கல்,
அழுக்கா றின்மை, அவாவிற் றீர்தல்,
அருந்துயர் உயிர்கட் கிருந்த காலை
அழல்தோய் வன்ன ராகி ஆனாக்
கழலு நெஞ்சிற் கையற் றினைதல்,
பன்னருஞ் சிறப்பின் மன்னுயிர்த் தொகைகட்கு
அறிவும் பொறியுங் கழிபெருங் கவினும்
பெறற்கருந் துறக்கந் தம்மி னூஉங்கு
இறப்ப வேண்டுமென் றெண்ணரும் பெருங்குணம்.

*வாக்கின் கன்மத்தால் கூடிய புண்ணியம்:*

அறம்பெரிது கரைதல், புறங்கூ றாமை,
வாய்மை, கல்வி, தீமையிற் றிறம்பல்;
இன்மொழி இசைத்தல், வன்மொழி மறத்தல்,

அறிவு நூல் விரித்தல், அருமறை யோதுதல்,
அடங்கிய மொழிதல், கடுஞ்சொல் லொழிதல்,
பயன்நின்ற படித்தல், படிற்றுரை விடுத்தல்.

*காயத்தால் ஆர்ச்சிக்கும் கெடாத கன்மம்:*

அருந்தவந் தொடங்கல், திருந்திய தானம்,
கொடைமடம் படுதல், படைமடம் படாமை,
அமரர்ப் பேணல், ஆவுதி யருத்தல்,
ஒழுக்க மோம்பும் விழுப்பெருங் கிழமை,
உடம்பிடி யேந்தி உடல்தடிந் திடுமார்
அடைந்த காலை யவணியல் துயரந்
தேரா ரல்லர் தெரிந்தும் ஆருயர்
பெரும்பிறி தாக விரும்பின மிசைஞரின்
ஓராங்குப் படாஅ மாசில் காட்சி,
ஐம்பெரும் பாதகத் தாழி நீந்தல்,
இந்தியப் பெரும்படை இரிய நூறும்
வன்தறு கண்மை, வாளிட் டாஅங்கு
நோவன செய்யினும் மேவன விழைதல்,
தவச்சிறி தாயினும் மிகப்பல விருந்து
பாத்தூண் மரீஇய பூக்கமழ் இரும்பொழில்
தன்மனைக் கிழத்தி யல்லதைப் பிறர்மனை
அன்னையிற் றீரா நன்ன ராண்மை,
கார்கோ ளன்ன கயம்பல கிளைத்தல்,
கூவல் தொட்டல், ஆதுலர் சாலை,
அறங்கரை நாவின் ஆன்றோர் பள்ளி,
கடவுள் நண்ணிய தடவுநிலைக் கோட்டம்:
இனையவை முதல நினைவருந் திறத்த
புரத்தல் அறத்துறை.

*மாயா மலபந்த க்ஷயம் கூறுகின்ற 50ஆம் பாடல், 28 வரிகளால் யாக்கையை இழித்துக் கூறுகின்றது. யாக்கையைப் பழித்தே பாடல் செய்கின்ற சைனர் கூட இவ்வளவு வன்மையாகப் பாடிக் கண்டதில்லை:*

ஏற்புக் குப்பையைப் புட்குலத் துணவை
நரப்புக் கருவியைத் திலைப்பெருஞ் சேக்கையைப்
புன்புல வாரியைத் துன்புக் குறையுளை
ஈருட் போர்வையை வேரின் விளைவைத்

தசைப் பெருந்திரளை நசைக்கின் செவிலியை
மூளைச் சேற்றை முழுமலக் குழுவை
ஞாளிக் கிரையைப் பூளைப் பொதியை
வெண்ணிணப் பெருமையைப் புண்ணின் பொற்பைக்
கொடுமைக் கோதையை அடுசினத் தமலையை
மாசின் தேசை வழும்பின் வைப்பைத்
தோலின் வேலியைத் துகளின் துப்பை
எரிப்பெருங் கொள்ளையை நரிக்கார் அயினியை
பெருநோ யறையைக் கருநரைக் கமத்தைக்
குறும்பிக் கொண்டலை இறும்பற் குறைவைப்
புழுப்பா சறையை அழுக்கார் உருவை
பஞ்ச விந்தியப் பாகர்க் காகா
அஞ்சா மதகரி அடவியை வஞ்ச
அரவு வாழளையை நுரைவா யருவியை
வாத வழுவைத் தீதுக அணைத்த
வெளிலைப் பித்தின் விளிவருங் குறும்பைக்
குரைவிரி யிருமல் திரைவிரி புரையைக்
காமச் சும்மையைக் கவலைக் கெல்லையை
நாமத் தரணைத் தீமைத் திறலை
அழுக்கா றணையும் விழுப்பெருந் தெருவை
ஏமாப் பிரலை விலங்கலைத் தீமை
இருஞ்சுறவு கலித்த திருந்திரும் பௌவத்தை
மறத்தின் மன்னை வழுக்கின் புக்கிலை
இறப்பின் கேதன மிதனை மறப்பிற்
கொண்டனை யானெனக் கொளலொழித் தொண்டிறல்
மாய வினைய தான தேயாத்
தனுகரண புவன போகம்
எனும்வகை யறிநனி துனியினி துகவே.

*இப்படியே, வாகீச முனிவர் எடுத்தபொருள் ஒவ்வொன்றையும் பலபட விரித்துரைத்திருப்பது கற்று மகிழத்தக்கது. பதி இலக்கணம் கூறும் 55ஆம் பாடல் காண்க. இப்பாடல் சொல்லும் கருத்து முந்தைய நூல்களைத் தழுவியும், வரும் நூலுக்கு வழி காட்டியாயும் உள்ளது. பல பாடல்கள் வினாவும் விடையுமாக அமைந்துள்ளன.*

---

*புலவாரி - புலாற்கடல். ஈர் - ஈரல். அமலை - செறிவு. கமம் - மேகம். பற்குஉறைவு - பல்லுக்கு இருப்பிடம். வெளில் - கம்பம். விலங்கல் - மலை. மன்னை - நிலையை.*

நூலிலுள்ள சிறப்பான செய்திகள் இரண்டொன்றைக் குறிப்பிடுவோம். கலைவாணி துதி இவர் அமைத்திருப்பது சிறப்பு:

பொழுதொடு விப்பிரர் தொழுதனர் நுவல,
இமையா மங்கையர் அமையாது பழிச்ச,
தீதற இருந்த ஆதி நாயகி
கலைமகள் கழலிணை கருத –

என்கிறார். கலைமகளை விப்பிரர் முப்பொழுதும் தொழுகிறார்கள், அவள் ஆதிநாயகி என்று இவர் கூறுவதும், கலைமகள் கழலிணை கருத - என்று முற்றுமோனையில் அமைத்திருப்பதும், இவருக்குக் கலைமகளிடமுள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்துகின்றன. இவர் தமிழினிடத்தும் மிக்க ஈடுபாடு கொண்டவர். தமிழ்த்துறை நிரம்பாத் தன்மையேன் என்று தம்மைக் கூறிக் கொள்வார்; அம்மையைத் தமிழ் வளர்குமுதச் செவ்வாய்க் கோமளவல்லி என்பார். ஆரியன் என்ற சொல்லை இவர் உபயோகிப்பது சிந்திக்கச் செய்கிறது. ஆசாரியன் என்ற பொருளில் ஓரிடத்தில் சொல்வார். மற்றோரிடம் மிலேச்சர் என்று இவர் கூறுவதை உரைகாரர் ஆரிய மெய்காப்பார் என்கிறார். ஆரிய வூமன் போல என்று கூறுவதை உரைகாரர் ஆரியநாட்டு ஊமன் என்று கூறுகிறார். ஆரியம் என்ற சொல்லால் அக்காலத்துக் கீழோரைக் குறிப்பிட்டனர் போலும். 'தேற்றா மாந்தர் ஆரியம் போல, கேட்டோர்க்கு நகைதரும்' என்பது வீரசோழிய மேற்கோள் செய்யுளின் கருத்து. திவாகரம் பிங்கல நிகண்டுகள், மிலேச்சர் ஆரியர் என்று கூறும். அக்காலத்தில் யவனர் இன்றைய கூர்க்கர் போல, தமிழ்நாட்டில், காவல்தொழில் புரிந்துவந்திருக்கிறார்கள், அவர்கள் அன்னிய நாட்டார், வேறு சமயத்தார். அவர்களை இந்திய நாட்டார் மிலேச்சர் என்று கூறுவது இயல்பே. எனவே, இந்த நூல்களில் ஆரியர் என்று வருமிடங்கள் அந்த அன்னியரைக் குறித்தனவேயன்றி; இன்று நாம் சொல்லுகின்ற ஆரியரைக் குறித்தனவல்ல, இது ஆரியன் ஐயன் என்ற பொருளுடைய சொல்லின் வடிவம்.

**நூற்பகுதிகள்**

கிடைக்கின்ற நூற்பகுதி ஞானாமிர்தம் ஞானபாதம் ஒன்று மட்டுமே. இந்நூலமைப்பால் மெய்கண்டாருக்கு முன்னமே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகைப் பாகுபாடு ஏற்பட்டிருந்தது என்று அறிகிறோம். இவ்வாசிரியர் அந்நான்கு பாதங்களையுமே முறையாகச் சொல்லப் புகுகின்றார் (7):

அருமறை எவையும் திருமிகு ஞானம்,
இலங்கொளி யோகம், நலங்கிளர் கிரியை,
சரியை என்ற விரிதரு பாதம் –
கறையறு மறைமுறை நெறியின்
அறைய மற்றரோ, அறிகதில் அமர்ந்தே.

*அடுத்தப் பாடலின் (8) தொடக்கத்தில், ஞானபாதம் சொல்லப் புகுகின்றேன் என்று தொடங்குகின்றார்:*

பிறழா நிலைமைப் பெரும்பெயர் ஞானக்
கறையது பாதம் முறையுறக் கழறின்.

*இவ்விரண்டு கூற்றுக்களாலும் வாகீச முனிவர் முறையே நான்கு பாதங்களுக்கும் நூல் செய்தார் என்று அறிகிறோம். ஆனால் கிடைப்பது இந்த ஞானபாதம் ஒன்று மட்டுமே. மற்ற மூன் றும் கிடைக்கவில்லை. 43ஆம் அகவல் உரையுள் 'எண்டரும் அண்டம் என்னும் கிரியா பாதத்திரு அகவலுட் காண்க என்று ஞானபாத உரைகாரர் எழுதுகிறார். அன்றியும், 18ஆம் நூற் றாண்டின் பிற்பாதியில் வாழ்ந்த சிவஞான சுவாமிகள், தம் சிவ ஞானபோத மாபாடியத்தில் கிரியாபாதப் பாடலொன்றை எடுத்துக்காட்டுகிறார்; சூத்திரம் 2, அதிகரணம் 3, அண்டங் களியல்பு கூறுமிடத்து மேற்கோள்:*

அருட்படை பரப்பிய மருட்பெருங் குரிசில்
காம முதலிய ஏமத் தானையொடு
மான மாக்களும் இரிய ஆனாது
ஒருபுறங் கண்ட பீடுடை மறவ
தோத்தா துக்க ளேய்த்து வாவினை
கோத்தெறி கவர்வினென் குறிமற் றுற்றவை
ஆற்றித் தத்துவ வத்துவா முதல
மாற்றிப் புவன மந்திர மீறில்
வருண மாப்பதம் இருள்தீர் இன்கலை
யாறு மீறி லாண்டிய லடையக்
கூறு மரனெறி தேறின ரோய
வாதித் தத்துவ அத்துவா வோதில்
தீதி லண்ட கடாகங் கோடி
யோசனை கீழதன் உம்பர்ப் பேசிற்
கால வனலுருத் திரர்வரை கோடி
தோலாப் பற்பன் அனந்தன் ஈசன்

பிங்கலன் காலன் குரோதன் சலசன்
தங்கா வதிபலன் தனதன் சங்கரன்
என்றிவர் கோடி உருத்திர ரொருவரைச்
சென்றனர் சூழத் திகழ்வோர் துன்றி
விரிந்துசூழ் போதத் திருந்தரி யமளி
ஆயிர மிரண்டகன் றருமணிச் சுடர்சொரிந்து
ஆயிர முயர்ந்த அதனூங் கேய
ஈரைந் தாயிரம் யோசனை உயர்ந்தோர்
மேனி யீரிரண் டியல்கரத் துற்ற
வைவாட் கேடகந் தந்துற் றொளிர
வெஞ்சரஞ் சாபம் எஞ்சா தேந்தி
இருந்தோர் புவனம் பொருந்தின ரவர்போல்
ஆகமம் புரியும் அணிகிள ரிறைவர்
போகிய வுயர மாவீழ் கோட்டங்
கோடி மற்றவர் கொழுஞ்சுடர்க் கற்றை
ஓடிய தொருபது கோடி மாடு
நிராலம் பனமைங் கோடி பேரா
ஒளிகிளர் கால வுருத்திரர்
அணிகிளர் தேகம் தெளிமதி சிறிதே.

என்னும் ஞானமிர்தத்தும் காண்க என்று மட்டும் கூறுகிறார். பொருளமைதியால் இது கிரியா பாதத்துள்ளதென்று கருது கிறோம்.

இருநூறு ஆண்டுகட்கு முன்வரை இருந்த இப்பகுதி இப்போது எங்குமே கிடைக்கவில்லை. இப்படியே யோகப் பகுதியும் சரியைப் பகுதியும் இருந்து இறந்தன போலும்.

யாழ்ப்பாணத்துச் சுவாமிநாத பண்டிதர் முன்னமே தாம் பதிப்பித்த சிவஞானபோத மாபாடியமும் சிற்றுரைப் பகுதியும் அடங்கிய பதிப்பில் இரண்டாம் சூத்திரம், மூன்றாம் அதி கரணத்தின் இறுதிப் பகுதியாகிய 'அண்டங்களின் இயல்பு' என்ற பகுதி கிடைக்காமல் அப்போது அச்சிடவில்லை. பின்னர் இது மட்டும் கிடைத்து 1916இல் 16 பக்கம் கொண்ட தனிப்பகுதியாக இதை அச்சிட்டு, தாம் வெளியிட்ட சிவாக்கிர பாடிய முதற் சூத்திரத்தின் தமிழ் மொழிபெயர்ப்போடு சேர்த்து வெளியிட் டார். இதன் முதற்பக்கத்தில் 'அருட்படை பரப்பிய மருட் பெரும் குரிசில்' என்ற கிரியாபாதப் பாடலொன்றின் முதல்

*வரியைத் தந்து இச்செய்யுள் அச்சிடப்பட்ட ஞானாமிருத ஞான பாதத்தும் அச்சிடப்படாது எம்மிடத்திருக்கும் யோக பாதத்தும் காணப்படவில்லை, கிரியா சரியா பாதங்கள் கிடைத்தில என்று அடிக்குறிப்பு எழுதினார். எம்மிடத்துள்ளது என்று அவர் குறிப் பிட்ட யோகபாதம் என்ன ஆயிற்று என்று இன்று அறிவா ரில்லை.* இதனால் ஞானாமிருதம் நாற்பாதங்களும் உடையது என்ற கருத்து வலியுறுகின்றது.*

**உரை**

*ஞானாமிர்தம் உரையோடு இருமுறை அச்சிடப்பெற் றுள்ளது. உரை செய்தார் அந்தச் சந்தான பரம்பரையில் வந்து உபதேசம் பெற்ற ஒரு பக்குவி என்று கருதக்கூடும். அவர் பெயர் வரலாறு விளங்கவில்லை. காலத்தால் அவர், ஆசிரியர் காலத் துக்கு அடுத்த சில நூற்றாண்டுகளில் (16 நூ.) தோன்றியவராக லாம். உரையானது பண்டைய இலக்கிய உரைபோல் இலக்கியச் சிறப்புப் பெற்றிராவிட்டாலும் நூலின் பொருளை யாவரும் அறியுமாறு எழுதப்பட்டுள்ளது. கடினமான நடையும், பொரு ளமைதியும் உடைய இச்சமய நூற்பொருளை அறிவதற்கு இவ் வுரை பேருதவி என்பதில் ஐயமில்லை.*

*உரைகாரர் 16ஆம் பாடலுரையில் பிங்கல நிகண்டை மேற்கோள் காட்டுகிறார். வினை வகை கூறும் 24ஆம் அகவல் உரையில், திருந்திய தானம் என்ற தொடருக்கு உரையாக,*

நல்லோர்க் குவந்த பல்சுவைப் போனகம்
மாகதிர் அணிமணி வண்கா லேகம்
செம்பொன் மென்துகில்

*முதலாக உள்ளவற்றைத் தானம் செய்தல்' என்று எழுதுகிறார். இங்குகாட்டிய பாடல் வரிகள் இடம் விளங்கவில்லை. உரை யாசிரியர், 'ஞானாமிருதம் என்னும் தமிழாகமம்' என்பார் (அகவல் 32) இவர் கருத்து இவ்வாகமத்தை வாகீச முனிவருக்கு அவருடைய குரு உபதேசித்தார் என்பது.*

*பதிஞானம் கூறும் 54ஆம் பாடலில் வரும் பல பிறவி களைக் குறிப்பிடும் 'மொய்த்திடை எய்துவ எனைப் பலவன்றே' என்ற தொடருக்கு உரை கூறுமிடத்து ஓர் உரை வேறுபாடு.*

---

* *சிவஞான பாஷ்யம் கிடைத்து அச்சானதே ஒரு சுவையுள்ள வரலாறு; அவ்வரலாறு இன்றுள்ளோர் சிலருக்குத் தெரியும்.*

வெள்ளெருக் கரவும் விரவும் சடைப்
புள்ளு ருக்குவே ளூரரன் பொற்கழல்
உள்ளிருக்கும் உணர்ச்சி யில்லாதவர்
நள்ளிருப்பர் நரகக் குழியிலே. (அப்பர்)

என்னும் மகாவாக்கியத்தின் படி எண்ணிறந்த பலவாகிய செனன மல்லவோ' என்றெழுதுவது கருதத்தக்கது.

ஔவை துரைசாமிப் பிள்ளை பதிப்பில் காட்டியுள்ள உரை வேறுபாடுகளைக் காணும்போது, ஒருகால் இருவேறுரைகள் இருந்தனவோ என்ற ஐயம் கூட எழுகின்றது.

## காலம்

சாசன ஆராய்ச்சியால் வாகீச முனிவர் இரண்டாம் இராசாதி ராசன் (1163-78) காலத்தவர் என்று தெரிகிறது. அவனது 9ஆம் ஆட்சி ஆண்டில் திருவொற்றியூரில் நடைபெற்ற பங்குனி உத்திர விழாவில் ஆறாம் திருநாளன்று சோழ மன்னன் முன்னிலையில் ஆளுடைய நம்பிகள் புராணம் விரிவுரை செய்யப்பட்டபோது ஒற்றியூர் மடாதிபதியான சதுரானன பண்டிதரும் சோம சித்தாந்தம் வக்காணிக்கும் வாகீச பண்டிதரும் பிற கோயிலதிகாரிகளும் அரசனுடன் இருந்து கேட்டனர். இவ்வாகீச பண்டிதரே தமிழ் ஞானாமிர்தம் செய்த வாகீச முனிவர் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. சாசனத்தின் ஆண்டு 1175 ஆகும். முனிவர் ஞானாமிர்தம் பாடியது பின்னரே ஆகும். 1185 என்பர். எனவே இவர் காலம் 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி (சுமார் 1150-1200) என்று வரையறை சொல்லக்கூடும்.

## பதிப்பு

மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப்பு சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர், உரையுடன் கூடியது. ஔவை துரைசாமிப் பிள்ளை. பதிப்பு 1954, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்: மிகவும் சிறப்பான முன்னுரை, குறிப்புரை, பாட வேறுபாடு கொண்ட ஆராய்ச்சிப் பதிப்பு.

○○○

## அத்தியாயம் 10

# வைணவ இலக்கியம்

### முன்னுரை

12 ஆம் நூற்றாண்டானது வைணவ சமயத்தின் சரித்திரத்தில் மிகவும் முக்கியமான காலம். இராமானுசர் கி.பி.1137இல் திரு நாட்டுக் கெழுந்தருளினார். அவர் சாதித்த காரியங்கள் மிக்க அற்புதம் பொருந்தியவை, மேலும் 1133-1150இல் அரசாண்ட இரண்டாம் குலோத்துங்க சோழன் வைணவ சமயத்துக்குத் தீங்கிழைத்தான் என்றும், அவன் பெயர் கிருமிகண்ட சோழன் என்றும், அவனால் இராமானுசர் திருவரங்கத்தைவிட்டு ஓட நேர்ந்தது என்றும், பலகதைகள் பிற்கால வைணவக் குரு பரம் பரை நூல்களுள் சொல்லப்பட்டிருக்கும். இவை முழுமையும் உண்மையல்லாத கதைகள் என்று பதினொராம் நூற்றாண்டு வரலாற்றில் கூறினோம்.

இச்சமயக் கதைகள் ஒருபுறம் நிற்க, இலக்கியக்கண் கொண்டு பார்க்கும்போது, வைணவ சமயத்தில் சிறப்புடைய ஆசிரியர் இக்காலத்தே தோன்றினார்கள், நூல்கள் தோன்றின, பிற்கால வைணவ இலக்கிய வளர்ச்சிக்கு இவை தோற்றுவாயாக அமைந்தன என்பதையும் காண்கிறோம். மூங்கிற்குடி அமுத னார், இராமானுச நூற்றந்தாதி பாடினார். இதை உடையவரே பாராட்டி, வைணவ நித்தியானு சந்தானத்தில் கைக்கொள்ளும் படி நியமித்தார், நூற்றெட்டுச் சாவித்திரி என்று இதன் தனியன் இதைக் குறிப்பிடும். பிரபன்ன காயத்திரி* என்பது இதற்குள்ள மற்றொரு பெயர். திவ்வியப் பிரபந்தங்களை முதலாயிரம்,

---

* பிரபன்னன் - கடவுளையே சரணாகவுள்ளவன். காயத்திரி தன்னை ஓதுபவனைக் காப்பது.

பெரிய திருமொழி, திருவாய்மொழி இயற்பா என்று நான்கு பிரிவாகப் பாகம் செய்து, அவற்றோடு இந்நூற்றந்தாதியையும் இயற்பா இறுதியில் கூட்டி நாலாயிரம் பாடல் என்று இராமானுசர் கணக்கிட்டார் என்றால், இதன் பெருமைக்கு வேறு சொல்வது மிகை.

இராமானுசர் சீடருள் திருக்குருகைப்பிரான் பிள்ளானும் அருளாளப் பெருமான் எம்பெருமானாரும் இக்காலத் தொடக்கத்தில் வாழ்ந்து நூல் செய்தவர்கள். பிள்ளான் இராமானுசரின் நியமனப்படி திருவாய்மொழி வியாக்கியானம் ஆறாயிரப்படி செய்தார். வைணவ சம்பிரதாயத்தில் இதுவே முதன்முதலாகத் தோன்றிய வியாக்கியான நூல் என்பர். அடுத்த நூற்றாண்டில் நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை ஆகிய ஆசாரியர்கள் முறையே 9, 24, 36 ஆயிரப்படி வியாக்கியானங்கள் செய்யவும், பின்னால் வாதிகேசரி அழகிய மணவாளர் 12 ஆயிரப்படி செய்யவும், தோற்றுவாயாயிருந்தது இவ்வுரையே என்றால் பொருந்தும்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் இருசிறு தமிழ் வெண்பா நூல்கள் பாடியிருக்கிறார். இவையும் அமுதனார் அந்தாதிபோல, வைணவர் (தென்கலை) நித்தியானு சந்தானத் துக்குரியன.

இவற்றைப் பார்க்கும்போது, இவ்வாசாரியருட் சிலரேனும் தமிழ் மொழியிலும் சிறந்த புலமை பெற்றிருந்தார்கள் என்று அறிகிறோம். வடமொழியில் நூல் இயற்றுவதுதான் பெருமை என்ற எண்ணத்தினாலேயே இவர்கள் தமிழில் பெருநூல்கள் செய்யாமல் வடமொழியில் செய்தார்கள் என்று கருத வேண்டியிருக்கிறது. இவர்கள் அனைவருக்கும் ஆசாரியரான இராமானுசர் தமிழில் எந்த நூலும் செய்யவில்லை. தமிழ்நாட்டுத் திருவரங்கத்தில், கோயில் என்ற பெருஞ்சிறப்புடைய தலத்தில், வாழ்ந்து, தமிழ் நாலாயிரப் பிரபந்தத்தைப் பெரிதும் கொண்டாடிய இவர், தாம் எழுதிய பாஷ்யங்கள் யாவும் வடமொழியில் செய்தார். தமது ஸ்ரீ பாஷ்யத்தில் தமிழ் நாலாயிரப் பிரபந்தத்தைக் குறிப்பிடவே இல்லை. தமிழைச் சொன்னால் வடமொழிவாணர், முக்கியமாக சங்கர அத்வைதிகள் தம்மை இழித்துப் பேசுவார்கள் என்ற பேரச்சம்! குரு எப்படி சீடன் அப்படி ஆதலால், இவ்வாசாரியர் யாவரும் வடமொழிவாணர்களாகவே இருந்துவிட்டதில் வியப்பில்லை.

பின்னால் பிள்ளைலோகஞ்சீயர் செய்த இராமானுசார்ய திவ்விய சரிதையில், இராமானுசர் வாழ்ந்த காலத்திலேயே அவர் மீது தாலாட்டுப் பாடப் பெற்றிருந்தது என்று கூறுகிறார். இது பற்றிய ஒரு குறிப்புப் பின்னே காணலாம், இது எவ்வளவு தூரம் உண்மை என்பதும், இவ்வரலாறு பிற்கால இடைச்செருகலா என்பதும் அறிய வழியில்லை.

## திரு அரங்கத் தமுதனார்

### ஆசிரியர்

இராமானுச நூற்றந்தாதி பாடிய காரணத்தால் இவர் வைணவ சமயத்தில் சிறப்பாகப் போற்றப் பெறுகிறார். இவர் அணியரங்கத்து அமுதனார் என்பவர் புதல்வராக மூங்கிற் குடியில் பங்குனி மாதம் அத்த நட்சத்திரத்தில் பிறந்தார். திருவரங்கம் சென்று அங்கே வாழ்ந்து வந்ததோடு, அரங்கநாதனுக்குத் திரு நந்தவன கைங்கரியம் செய்துவந்தார். அங்கிருந்த அடியார் எல்லோரும் இவரைப் பெரியகோயில் நம்பி என்று போற்றி வந்தனர். இளமையிலேயே இவர் சாத்திரங்களை நன்கு கற்று நிபுணராகித் தம் குலத்தார் செய்துவந்த சந்நிதிப் புரோகித விருத்தியையும், புராணபடன கைங்கரியங்களையும் சிறப்பாகச் செய்துவந்தார். இச்சிறப்பினால் இவருக்குச் செருக்கு உண்டாயிற்று என்று வரலாறு கூறுகின்றது.

அக்காலத்து, இராமானுசர் இவரைத் திருத்திப் பணிகொள்ள எண்ணங்கொண்டு இதற்குக் கூரத்தாழ்வாரை நியமித்தார். அங்ஙனமே கூரத்தாழ்வாரும் இவருக்கு ஞானச்சுடர் கொளுத்தி, இவருடைய அஞ்ஞானத்தைப் போக்கி, இவரை எம்பெருமானார் கீழ்க்கொண்டு சேர்ப்பித்தார். அவரும் இவரைக் கடாட்சித்து, கூரத்தாழ்வாரைக் கொண்டு சமய சாத்திரங்களை யெல்லாம் இவருக்கு நன்கு போதிக்கச் செய்தார்.

இப்படி திருவரங்கத் தமுதனார் கூரத்தாழ்வாரை ஆசிரயித்துப் பிரியாது இருந்து வருகின்ற நாளிலே, இவர் இராமானுசர் மீது சில பிரபந்தங்கள் பாடி அவற்றை அவர் சந்நிதியிலே கொண்டு போய்ச் சமர்ப்பித்தார். அவரும் அவற்றை எடுத்துப் புரட்டிப் பார்த்து, அவை தம் உளப்பான்மைக்கு மாறுபட்டிருந்தமையாலே அவற்றைப் புன்னகையோடு கிழித்தெரிந்து

விட்டு, அவரைப் பார்த்து, "என்னைப் புகழ்ந்து பாடுகின்றவை யெல்லாம் பயனற்ற சொற்கள். நீர் இவற்றை விட்டு உமக்கு ஆசாரியராகிய கூரத்தாழ்வாரையும் ஆழ்வார்களையும் திவ்விய தேசங்களையும் பற்றி ஒரு பிரபந்தம் செய்யும்" என்று நியமித்தார்.

அதன்மேல் அமுதனார் அப்படியே பாடத்தொடங்கி, திருமால் ஆலயங்களையும் ஆழ்வார்களையும் குறிப்பிட்டு, இராமானுசர் புகழாக நூற்றெட்டுக் கலித்துறைப் பாடல் கொண்ட இராமானுச நூற்றந்தாதி என்ற நூலைப் பாடி முடித் தார். இதைப் பார்த்து இராமானுசர் மிகவும் மகிழ்ச்சியடைந் தார். இந்நூலைச் செய்தாருடைய வாக்கு அமுத வாக்காயிருந்த படியால் இவருக்கு அமுதன் என்னும் அரிய திருநாமத்தையும் அகங்குளிர்ந்து பிரசாதித்தார். அதுமுதல் பெரியகோயில் நம்பி என்ற இவருக்கிருந்த பெயர்மாறி, திருவரங்கத் தமுதனார் என்று வழங்கலாயிற்று.

இராமானுசர் தம்முடைய மாணாக்கரெல்லாம் தினமும் இந்த அந்தாதியை அனுசந்திக்கும்படி நியமித்தார். நாலாயிரப் பிரபந்தத்துக்குச் சமமான பெருமை இதற்குண்டு. திருமடல்கள் இரண்டையும் இரண்டே பாடல்களாகக் கணக்கிட்டு இந் நூற்றந்தாதி நூற்றெட்டுப் பாடல்களையும் சேர்த்து, நாலாயிரப் பிரபந்தம் என்று கணக்கிடுகின்ற சம்பிரதாயமும் உண்டு. இத னால் இதற்குள்ள சிறப்பு நன்கு விளங்கும்.

வடகலை மூவாயிரப்படி குரு பரம்பரை இவ்வரலாற்றைப் பின்வருமாறு கூறும். 'அப்போது திரு அத்தியயனோற்சவத் துக்குத் திருநகரியினின்றும் நம்மாழ்வார் அதிக மழையால் கோயிலுக்கு எழுந்தருளாமலிருக்க, உடையவர் கோயிலில் நம்மாழ்வாரைத் திருப் பிரதிஷ்டை செய்து திரு அத்தியயனோற் சவத்தை நாதமுனிகள் நியமனப்படி நடப்பித்தார். அப்போது கூரத்தாழ்வானிடத்தில் ஆசாரிய பக்தியைத் தெரிந்த திருவரங் கத்தமுதனார், நம்மாழ்வார் விஷயமாய் மதுரகவிகள் அருளிச் செய்த கண்ணி நுண்சிறுத்தாம்பின் அர்த்தத்தை ஒப்பிட்டு ஒரு பாட்டுக்குப் பத்துப் பாடலாக உடையவர் விஷயமாய் ஒரு நூற்றந்தாதி அருளிச்செய்து உடையவர் திருவடிகளில் சமர்ப் பிக்க, அதை உடையவர் உபேக்ஷித்தருளினார். அப்போது முதலிகளெல்லாம் தெண்டன் சமர்ப்பித்து, "இந்தப் பிரபந்தம் உபேக்ஷிக்கத் தக்கதன்றே, முன்பு ஸ்ரீநாதமுனிகளுக்கு ஆழ்வார்

திவ்வியப் பிரபந்தத்தைப் பிரசாதிக்கும்போது, பொலிக பொலிக என்கிற பாட்டில் தேவரீர் திருவவதாரத்தைக் குறித்துத் தேவரீர் திவ்விய மங்கள விக்கிரக சொரூபத்தையும் காட்டி இந்தப் பிரபந்தம் திருவவதரித்து நாலாயிரமாகச் சேர்க்கப்படும் என்று அருளிச் செய்தாரென்று சம்பிரதாயம் இருக்கிறதே!" என்று அருளிச் செய்தார்கள். இவ்வளவிலே அழகிய மணவாளன், பிரபந்தங்களோடு சேர்க்கும்படி அர்ச்சகமுகமாய்த் திருவாய் மலர்ந்தருள, உடையவர் அப்படியே நூற்றந்தாதியை இயற்பா முடிவிலே சேர்த்து, நாலு விபாகமுள்ள பிரபந்தங்களைப் பாட்டுக்களாலும் நாலாயிரமாக்கி, இயற்பா அனுசந்தானத்தை அமுதனாருக்கு நியமித்தருளி, உற்சவத்தை முடித்துப் பல்லாண்டு பல்லாண்டு என்று மங்களா சாசனம் செய்தருளினார்.'

**நூல்**

இராமானுச நூற்றந்தாதி, இலக்கியச்சுவை பொருந்திய ஒரு சிறந்த துதிநூல். வைணவர்களுக்குக் கிடைத்த ஒரு பெரும் பேறு என்றே இதைச் சொல்லவேண்டும். 108 கட்டளைக் கலித் துறைகள் கொண்டது. இராமானுசர் புகழைப்பாடும் இந்த நூலில் ஒரு பாடலில் தம் நேர் ஆசாரியரான கூரத்தாழ்வாரை யும் குறிப்பிடுகிறார்:

மொழியைக் கடக்கும் பெரும்புக ழான்வஞ்ச முக்குறும்பாம்
குழியைக் கடக்கும்நம் கூரத்தாழ் வான்சரண் கூடியபின்
பழியைக் கடந்தும் இராமா னுசன்புகழ் பாடியல்லா
வழியைக் கடத்தல் எனக்கினி யாதும் வருத்தமன்றே.

பிரபன்னனுக்குரிய 108 காயத்திரி மந்திரம்போல இதன் பாடல் கள் கருதப்பட்டமையால் பிரபன்ன காயத்திரி என்று இது வழங்கப்பெறும். இச்சிறு நூலிலுள்ள ஒப்பற்ற பக்திச்சுவை யும் பக்தியினால் விளைந்த பெருமிதமும், பயிலுந்தொறும் நாவுக் கும் உள்ளத்துக்கும் பெரியதோர் இன்பமூட்டுவதாகும். சுவை நலம் கனிந்த சில பாடல்களை எடுத்துக்காட்டாக இங்கு தரு கிறோம்:

படிகொண்ட கீர்த்தி இராம யணமென்னும் பத்திவெள்ளம்
குடிகொண்ட கோயில், இராமா னுசன்குணங் கூறும்அன்பர்
கடிகொண்ட மாமலர்த் தாள்கலந் துள்ளங் கனியும்நல்லோர்
அடிகண்டு கொண்டுகந்து என்னையும் ஆளவர்க் காக்கினரே.

உதிப்பன உத்தமர் சிந்தையுள், ஒன்னலர் நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறி நடப்பன, கொள்ளைவன் குற்றமெல்லாம்
பதித்தஎன் புன்கவிப் பாவினம் பூண்டன, பாவு தொல்சீர்
எதித்தலை நாதன், இராமா னுசன்தன் இணையடியே.

பார்த்தான் அறுசம யங்கள் பதைப்ப, இப் பார்முழுதும்
போர்த்தான் புகழ்கொண்டு, புன்மையி னேனிடைத் தான்புகுந்து
தீர்த்தான் இருவினை, தீர்த்தரங் கன்செய்ய தாளிணையோடு
ஆர்த்தான், இவைஎம் மிராமா னுசன்செய்யும் அற்புதமே.

வாழ்வற் றதுதொல்லை வாதியர்க்கு என்றும் மறையவர்தம்
தாழ்வற் றது தவம் தாரணி பெற்றது, தத்துவநூல்
கூழற் றது குற்ற மெல்லாம் பதித்த குணத்தினர்க்கந்
நாழற் றது நம் மிராமா னுசன்தந்த ஞானத்திலே.

இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம், மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம்மாயனுக்கென்பர்நல்லோர் அவைதன்னொடும்வந்
திருப்பிடம் மாய னிராமா னுசன்மனத் தின்றவன்வந்
திருப்பிடம், என்றன் இதயத்துள் ளேதனக் கின்புறவே.

*வேதப்பிரான் பட்டரென்பவர் இந்நூலுக்கு இரு தனியன்கள் பாடியிருக்கிறார்:*

முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன்
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும், – என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன், தென்புலத்தார்க்கு
என்னுக் கடவுடையேன் யான்.

நயந்தரு பேரின்ப மெல்லாம் பழுதென்று நண்ணினர்பால்,
சயந்தரு கீர்த்தி இராமா னுசமுனி தாளிணைமேல்,
உயர்ந்த குணத்துத் திருவரங் கத்தமுது, ஓங்கும்அன்பால்
இயம்பும் கலித்துறை யந்தாதி ஓத இசைநெஞ்சமே.

*மற்றொரு தனியன் இந்த நூலை நூற்றெட்டுச் சாவித்திரி என்றே கூறும்:*

இனிஎன் குறைநமக்கு, எம்பெருமா னார்திரு நாமத்தால்,
முனிதந்த நூற்றெட்டுச் சாவித்திரியென்னு நுண்பொருளை,
கனிதந்த செஞ்சொல் கலித்துறை யந்தாதி பாடித்தந்தான்,
புனிதன் திருவரங் கத்தமு தாகிய புண்ணியனே.

*ஏட்டூர் சிங்கராசாரியர் என்பவர் இவ்வந்தாதிக்கு வியாக்கியானம் எழுதியுள்ளார்.*

## நூற்றந்தாதியும் ஆழ்வார்கள் காலமுறையும்

இனி ஆழ்வார்களின் காலமுறை யறிவுக்கு இந்நூல் அருந் துணையாயிருப்பது குறிப்பிடத்தக்கது. கூரத்தாழ்வாரைக் குறிப் பிட்டபின், அடுத்த 14 பாடல்களில் (8-21) அமுதனார் முறை யாக 12 ஆழ்வார்களையும் நாதமுனி யமுனைத்துறைவர் என்ற ஆசாரியர்களையும் ஒவ்வொரு பாடலில் குறிப்பிட்டுப் பாடு கிறார். பாடுகின்ற வரிசை பின்வருவது:

1. திருவிளக்கைத் தம் திருவுள்ளத்தே இருத்தும் பொய்கைப் பிரான்-8;
2. ஞான மென்னும் நிறைவிளக்கேற்றிய பூதம்-9;
3. கோவலுள் மாமலராள் தன்னொடும் மாயனைக் கண்டமை காட்டும் பேயாழ்வார் -10;
4. நான் மறைச் சொம்பொருள் செந்தமிழாலளித்த பாண்பெருமாள் -11;
5. மழிசைக் கிறைவன் - 12;
6. துளபத்தொழில் மாலையும் தமிழ் மாலையும் செய்த தொண்டரடிப் பொடி - 13;
7. கொல்லி காவலன் குலசேகரன் - 14;
8. பல்லாண்டு காப்பிடும் பெரியவர் - 15;
9. சூடிக்கொடுத்தவள் - 16;
10. தண்டமிழ் செய்த நீலன் (திருமங்கை) - 17;
11. மறைகளை ஆயிரம் இன்தமிழால் செய்தற்கு வரும் சடகோபன் - 18;
12. மதுரகவியாழ்வார் - 19; (நாதமுனி - 20; யமுனைத் துறைவர் - 21) என்று வரும் பாடல்களின் அமைப்பைக் காண்க.

ஆழ்வார்களின் சரித்திரத்தைக் கூறுபவர், முதன்முதலாக 13ஆம் நூற்றாண்டின் இறுதியில் (1290) வாழ்ந்த பின்பழகிய பெருமாள் ஜீயர்; இவருடைய ஆறாயிரப்படி குருபரம்பரையே மூலநூல். ஆனால் இவருக்கும் 160 ஆண்டுகள் முன்னதாக, நம் மாழ்வார் (மதுரகவி) தொடங்கி நாதமுனி யமுனைத் துறைவர் இராமானுசர் என்று தொடர் பாக வந்த ஆசாரிய பரம்பரையில், இராமானுசர் காலத்திலேயே அமுதனார் வாழ்ந்து, தம் நூலில், இவ்வரிசை முறையை அமைத்தார் என்றால், பின்பழகியாருடைய சொல்லைவிட இவர்காட்டும் வரிசை முறையே அதிகம் வலிமை யுடையது, உண்மையோடு ஒட்டியது என்று கருதவேண்டும்.

முதலாயிரமாகிய இசைப்பா இறுதியில், திருமாலை பாடாது ஆழ்வாரொருவரை மதுரகவி பாடிய கண்ணிநுண் சிறுத்தாம்பு சேர்க்கப்பட்டதுபோல, இயற்பா இறுதியில் திரு மாலைப்பாடாது ஆசாரியரை அரங்கத்தமுதனார் பாடிய நூற் றந்தாதி சேர்க்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

இவ்விடத்தில் ஆசாரியர் பின்னும் இருவர் கொண்டுள்ள கருத்தையும் சிறிது குறிப்பிட்டு மேற்செல்வோம். முதலாவது வேதாந்த தேசிகர் அதிகார சங்கிரகப் பாடல்:

பொய்கைமுனி பூதத்தார் பேயாழ் வார்தண்
    பொருநைவருங் குருகேசன் விட்டு சித்தன்
துய்யகுல சேகரன்நம் பாண நாதன்
    தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வே லேந்தும்
    மங்கையர்கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகள்நாம் தெளிய ஓதித்
    தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றோமே.

தேசிகர் பரமபதமடைந்தது கி.பி. 1369. மற்றொரு பாடல் மண வாள மாமுனிகள் பாடல்:

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐயன் அருள்மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதன் அன்பர் தாட்டூளி நற்பாணன் நன்கலியன்
ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு.

மணவாள மாமுனிகள் காலம் 1370-1443. இவ்விருவர் கூறும் கால அடைவுகளும் அமுதனார் அடைவினின்றும் வேறுபட்டுள்ளன. எனினும், ஒன்றை நினைவிலிருத்துதல் அவசியம். வைணவ மரபில் நம்மாழ்வாரே ஆசாரிய பரம்பரையின் முதல்வர்; இவர் பிற ஆழ்வார் அனைவரையும் தம் அங்கங்களாய்க் கொண்டவர் என்று வைணவர் கருதுவது மரபு. அதன்படி பார்க்கும்போது, ஏனைய ஆழ்வார் அனைவரும் காலத்தால் இவருக்கு முற்பட்டவர் ஆவர். மேலும் இவ்விருவரும் அமுதனாருக்கு இருநூறு முந்நூறு ஆண்டுகள் பிற்பட்டு வாழ்ந்தவர்கள். எனவே, பின்பழகிய பெருமாள்சீயர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகிய மூவர் கூறியுள்ள அடைவைவிட, திருவரங்கத்தமுதனார் கூறுவது அதிகம் வலியுடையதாகும்.

கால முறையைச் சொல்வது இவருடைய நோக்கமல்ல என்றாலும் கூட, எல்லோர் பெயரும் வந்தமையாலும், இதை இராமானுசர் அங்கீகரித்துள்ளமையாலும், இது கிரமமாகவே உள்ளதென்று கருதவேண்டும். அப்படிக் கருதும்போது, ஆழ் வார்களின் காலக்கிரமமும் காலமும் பின்வரும் வரிசைப்படி அமைக்க இயலும்:

| | | |
|---|---|---|
| 1-3. முதலாழ்வார் மூவர் | - | 6ஆம் நூற்றாண்டு. |
| 4. திருப்பாணாழ்வார் | | |
| 5. திருமழிசையாழ்வார் | | 7ஆம் நூற்றாண்டு. |
| 6. தொண்டரடிப்பொடியாழ்வார் | | |
| 7. குலசேகராழ்வார் | | |
| 8. பெரியாழ்வார் | | |
| 9. சூடிக்கொடுத்தவள் | | 8ஆம் நூற்றாண்டு. |
| 10. திருமங்கையாழ்வார் | | |
| 11. நம்மாழ்வார் | | |
| 12. மதுரகவியாழ்வார் | | 9ஆம் நூற்றாண்டு. |
| நாதமுனிகள் | - | 9ஆம் நூற்றாண்டு. |
| யமுனைத்துறைவர் | - | 10ஆம் நூற்றாண்டு. |

இவர் கூறுகின்ற முறையை அடிப்படையாக வைத்தே ஆழ்வார்கள் வரலாற்றைக் கருதுவதும் காலத்தைக் குறிப்பதும் ஆராய்ச்சிக்குப் பொருத்தமாயிருக்கும். வைணவ பரம்பரை யுணர்வு இராமானுசர் காலத்தில் மிகவும் சிறப்பானது, புதியது, குழப்பமில்லாதது; ஆகவே அமுதனார் கூறியுள்ள, இராமானுச நூற்றந்தாதி இப்பரம்பரையைத் திருத்தமாய் கூறுகிறதென்றே கருதலாம்.

காலம்

இராமானுசர் பரமபதம் அடைந்த காலம் கி.பி. 1137 என்பர். அவரது முதுமையில் அமுதனார் இளம் பிராயத்தினராய் இருந் திருப்பார் போலும். இவரைக் குறித்த கல்வெட்டுச் செய்தி ஒன்று திருக்கோவலூர் திருமால் ஆலயத்துச் சாசனத்தால் தெரியவரு கிறது. இராசராசச் சேதிராயர் என்பார் ஆணைப்படி, வன்னிய மலையமான் என்ற சோழ அதிகாரி திருக்கோவலூர் மகாசபை யாரிடமிருந்து சில நிலங்களை விலைக்குப் பெற்று அவற்றைத் திருவரங்கம் பெரியகோயில் திருநந்தவனக் கைங்கரியம் நடத்தி வருவதற்காக மூங்கிற்குடி திருவரங்கத் தமுதனாருக்கு அளித்தான் என்பது சாசனச் செய்தி. இச்சாசனம் மூன்றாம் குலோத்துங்க சோழனது மூன்றாம் ஆட்சியாண்டில் அமைந்தது. அரசன் காலம் 1178-1218; ஆகவே சாசனகாலம் 1181 ஆகிறது. இதனால் பெறுவது, திருவரங்கம் பெரியகோயிலில் தலைமை பூண்டிருந்த

மூங்கிற்குடித் திருவரங்கத் தமுதனார் திருக்கோவலூரிலும் நந்தவனத்திற்காக நிலம் பெற்றிருந்தார் என்பதாகும்.

இவர் 108 பிராயத்திற்கு மேல் வாழ்ந்திருந்தார் என்று பெரிய திருமுடியடைவு கூறுகிறது. எனவே, இராமானுசர் இவரைக் கடாட்சித்த காலம் இவருக்கு வயது 25 இருக்கும் என்று கொண்டாலும் கூட, இவருடைய ஆயுட் காலம் கி.பி. 1100-1208 என்று கொள்வது பொருத்தமாகும். இதன்படி முற்குறித்த சாசன மெழுந்த காலத்தில் இவர் வயது 80 ஆக இருத்தல் கூடும். இவ ரைக் குறித்த வாழித் திருநாமம்:

**எந்தாதை கூரேசர் இணையடியோன் வாழியே**
**எழில்மூங்கிற் குடிவிளங்க இங்குவந்தான் வாழியே**
**நந்தாமல் எதிராசர் நலம்புகழ்வோன் வாழியே**
**நம்மதுர கவிநிலையை நண்ணினான் வாழியே**
**பைந்தாம அரங்கர்பதம் பற்றினான் வாழியே**
**பங்குனியில் அத்தநாள் பாருதித்தான் வாழியே**
**அந்தாதி நூற்றெட்டும் அருளினான் வாழியே**
**அணியரங்கத் தமுதனார் அடியிணைகள் வாழியே.**

'மதுரகவி நிலையை நண்ணினான் வாழி' என்று வருவது குரு பரம்பரைக் குறிப்புக்கும் ஆதரவு தருவதாயுள்ளது.

### திருப்பதிக் கோவை

நாயன்மார் தேவாரம் பாடிய தலங்களையும், ஆழ்வார் மங்களாசாசனம் செய்தருளிய தலங்களையும், முறையாகத் தொகுத்துக்கூறும் பாடல் திருப்பதிக்கோவை எனப்படும். சைவத்தில் உமாபதி சிவமே முதலில் திருப்பதிக்கோவை பாடி னார் என்று சொல்வதுண்டு. (அது ஆதாரமற்ற கூற்று.) அது போல வைணவத்தில் பலர் பாடியதாக வரலாறுகள் கூறும். 10ஆம் நூற்றாண்டில் வங்கிபுரத்தாய்ச்சி என்பவர், யாப்பிலக் கணத்துக்கு உட்படாத ஒரு பாடலால் திருப்பதிகளைக் கோத்துச் சொன்னார். பின்னால் 17ஆம் நூற்றாண்டில் மணவாளதாசர் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி பாடினார். இங்கு குறிப்பிடப் பெற்ற திருப்பதிக் கோவைகளல்லாமல், மேலுமொரு திருப்பதிக் கோவை தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் உள்ளது. இது எண்சீர் ஆசிரிய விருத்தம் 133 கொண்டது. பாடல்தோறும் திருப்பதி, திருமால் பெயர், தாயார் பெயர், கோலம், விமானம், புட்கரணி என்பவற்றையும் கூறுவது. மிகவும் பிற்காலம்.

*இவைபோல, 12ஆம் நூற்றாண்டில் திருவரங்கத் தமுதனார் ஒரு திருப்பதிக்கோவை பாடினார் என்று சொல்லப்பெறும்.* இது 40 கண்ணி கொண்ட ஒரு கலிவெண்பாவால் ஆனது. இதன் பாயிரச் செய்யுளான வெண்பா:*

ஓங்கும் திருவரங்கர் தாமுகந்த ஒண்பதிகள்
மூங்கிற் குடியமுதன் முத்தமிழால் – நீங்காத
அன்பர்தமர் வாழ அருள்செய்த அந்தணர்கோன்
தன்பதுமத் தாளே சரண்.

*இப்பாடல் செய்தவர் மூங்கிற்குடியமுதர் என்று இவ் வெண்பா திட்டமாய்க் கூறுவது கருதத்தக்கது. பங்கயத்தோள் இக்குவாகுவுக்கு என்று தொடங்கி, 'வாழ்வார்கழலே நமக்குக் கதி' என்று நூல் முடிகிறது. இதன் இறுதிப்பகுதி பின்வருவது:*

தொண்டர்குழாம் சூழுமிந்தத் தொல்பதிகள் – கண்டும்
தொழுதும் வலஞ்செய்தும் சொல்லித் துதித்தும்
முழுதும் உணர்ந்தும் முறையே – எழுதுகலை
ஓதியும் வேதமுரைத்தும் உலகறியத்
தாதி னடிமைத் தலைநின்றும் – வேத
நிழலே சரணம் என நினைந்து வாழ்வார்
கழலே நமக்குக் கதி.

மின்னு திகிரி வலவன் விசும்பெங்கும்
பன்னு திருப்பதிகள் பாவெல்லாம் – துன்னுகலை
கற்றார்கள் தொண்டர் கழற்கமலம் கால்பணியப்
பெற்றார் பெறாதார் பிறப்பு.

*அரங்கத்தமுதனார் இத்திருப்பதிக்கோவை பாடினார் என்பது, வடிவழகிய நம்பிதாசர் பாடிய எம்பெருமானார் வைபவத்திலும் குறிப்பிடப் பெற்றுள்ளது (775).*

ஆங்கவர் தமிழ்வே தங்கள் அனைத்தையும் வடித்தசாரத்
தோங்கிய நூற்றந் தாதி உரைத்தனர் உலகம் உய்ய,
பாங்கின்நூற் றெட்ட தான திருப்பதி யடைவும் பாடித்
தேங்கமழ் பொழில்சூழ் பூதூர்த் தேவனார்கழற்கீழ் வாழ்ந்தார்.

---

* *செந்தமிழ் தொகுதி 44, 1947, பக்கம் 61.*

108 திருப்பதியடைவில் இங்கு சில வேறுபாடு காணப்படுகிறது. நடுநாட்டுப் பதிகளான திருஅயிந்தையும் கோவலும் தொண்டை நாட்டுப்பதிகளுடன் சேர்த்தெண்ணப்பட்டன. கச்சிப்பவள வண்ணம் என்பது தனிப் பதியாகக் கூறப்படவில்லை: கச்சியுள் அடக்கிக் கூறப்பட்டது போலும். வடநாட்டுப் பதிகளுடன் திருநாட்டுத் திருப்பதியும் சேர்த்துக் கூறப்பட்டது.

## திருக்குருகைப்பிரான் பிள்ளான்

**வரலாறு**

இவர் பெரியதிருமலை நம்பியின் புதல்வர் இருவருள் ஒருவர்; கிடாம்பியாச்சான் அத்தை புதல்வர். இவர் மற்றப் பிள்ளைகள் போலில்லாமல், இளமையிலேயே திவ்வியப் பிரபந்தத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார். எம்பெருமானார் வைபவத்தைப் பெரிய திருமலை நம்பி கேட்டு மகிழ்ந்திருக்கும் போது, இவரும் அவர் புகழையே செவிமடுத்தும் சொல்லியும் வந்தார். நம்பியும் இதுகண்டு மகிழ்ந்து இப்பிள்ளானை ஆச்சானுடன் எம்பெருமானார் தரிசனத்துக்கு அனுப்பி, அவரைத் திருமலை தொழ அழைத்து வருமாறு பணித்தார். எம்பெருமானாரும்.... பிள்ளானைப் பார்த்து மகிழ்ந்து ஆசீர்வதித்தார். பின்னர் அவர் திருமலையடைந்து பெரிய திருமலை நம்பியை வணங்கியபோது, பிள்ளானை எம்பெருமானாரிடம் ஒப்புவித்தார். அவரும் பெற்று விசேஷ உபதேசம் செய்தார். இவ்வாறு இவர் வளர்ந்து வர, நெடுநாள் சென்றபின் ஒருநாள், எம்பெருமானார் திவ்வியப் பிரபந்த அர்த்தங்களைத் தம் மனத்துள் சொல்லிக்கொண்டு தம் மடத்தினுள் உலாவுகையில், பிள்ளான் திறவுகோல் துவார வழியாகப் பார்த்து, உடையவர் செய்த அபிநயக்கிரமத்தால் இன்ன பாசுரம் என்று அறிந்து, "இப்போது திருமாலிருஞ் சோலைமலை என்றேன் என்ன என்ற திருவாய்மொழி அனுசந்தானமோ?" என்று விண்ணப்பம் செய்தார். கேட்ட எம்பெருமானார் மிகவும் ஆச்சரியமடைந்து, பிள்ளானை வாரியணைத்து, பலருக்கும் அவருடைய திறமையைச் சொல்லித் தமக்கு ஞானபுத்திரராக அவரைச் சுவீகரித்தருளினார்.*

* ஆந்திரபூர்ணர் என்ற வடுகநம்பி செய்த யதிராஜவைபவம் 65ஆம் சுலோகம்.

திருவாய்மொழிக்கு இராமானுசர் ஒரு வியாக்கியானம் செய்யவேண்டும் என்ற எண்ணங்கொண்ட சீடர் சிலர், நேரில் சென்று இராமானுசரை வேண்டினால் செயல் முற்றுப்பெறுமோ பெறாதோ என்று ஐயங்கொண்டு, பிள்ளான் வாயிலாகத் தங்களது எண்ணத்தை வெளியிட்டதாகக் குருபரம்பராப் பிரபாவம் கூறுகிறது. பிள்ளானும், இராமானுசரிடத்தில் சென்று தங்களது அபிப்பிராயத்தை வெளியிட்டருள, உடன் இராமானுசரும் "நாம் திருவாய்மொழி வியாக்கியானம் எழுதினால் பிற்பட்டோர் திருவாய்மொழிக்கு இவ்வளவுதான் பொருள் என்று கொண்டு விடுவார்கள். ஆகவே நாம் செய்தல் வேண்டாம்; நமக்குப் பதிலாக நீரே திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்தருளும்" என்று பிள்ளானைப் பணித்தார். இந்நிகழ்ச்சியிலிருந்து பிள்ளானுக்கு இராமானுசர் எத்துணை முதன்மையளித்தார் என்று தெரிகிறது.

இவரது வாழ்க்கையில் மற்றொரு நாள் நடந்த நிகழ்ச்சியால் இவர் இராமானுசரது உளக்கருத்தினை நன்கறிந்தவர் என்பது தெளிவாகும். ஒருநாள் இராமானுசர் பிட்சை பெறப் பெரியநம்பி திருமாளிகைக்கு எழுந்தருளினபொழுது, பெரிய நம்பியின் புதல்வியான அத்துழாய், வாயிற்கதவைத் திறந்தாள், அப்போது அவள் கையிலிருந்த வளைகள் ஒலித்தன. அந்தநேரம் இராமானுசர் திருப்பாவைப் பாசுரங்களை அனுசந்தித்துக் கொண்டுவந்த இடம், 'செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய்' என்பது. தாம் சொல்லவும் வாயில் திறக்கவும் கண்ட இராமானுசர், எல்லாவற்றையும் மறந்து, தமது அனுசந்தானத்திற்கு நப்பின்னைப்பிராட்டியே வந்து சேவை செய்ததாக எண்ணி, அப்பெரு மகிழ்ச்சியில் மூர்ச்சையாகி விட்டார். இதனைக் கண்ட அருகிலிருந்த சீடர் அனைவரும் காரணம் தெரியாமல் சோகிக்க, அத்துழாயும் உள்சென்று தனது தகப்பனாரிடத்தில் இதனைத் தெரிவிக்க, அவரும் ஓடோடி வந்து அருகிலிருந்தவர்களை 'நேற்று ஸ்வாமி பிட்சை எடுத்துக் கொள்ளவில்லையோ?' என்று கேட்க, பிள்ளான் மட்டும், "அது அப்படியல்ல: 'உந்து மதகளிற்றன் ஓடாத தோள் வலியன்' என்ற பாசுரத்தில் 'வளையொலிக்க வந்து திறவாய்' என்ற தொடரின் பயன்" என்று விண்ணப்பித்தார். இந்நிகழ்ச்சி, பிள்ளான் இராமானுசர் இதயத்தை எவ்வளவு நன்கு அறிந்திருந்தார் என்பதைப் புலப்படுத்தும்.

பின்னர், பிள்ளான் நாலாயிரத்தில் பிரதானமான திருவாய் மொழிக்குத் தொண்டர்க்கு அமுது உண்ணலாம் படியும், புராண ரத்தினம்* போலவும், ஆறாயிரம் கிரந்தங்களால் ஒரு வியாக்கியானம் செய்தருளினார். அதைக்கண்டு மகிழ்ந்த எம்பெருமானார், அவருக்குத் திருக்குருகைப் பிள்ளான் என்று பெயரிட்டு அவ்வுரைக்கு பகவத் விஷயம் என்ற நாமமும் சூட்டி, 'நாம் செய்த ஸ்ரீ பாஷ்யத்தைப் போல இதுவும் காலட் சேபத்தில் வைக்கப்படுவதாக' என்று நியமித்தருளினார். உடையவர் இவரை 74 சிம்மாசனாதிபதிகளில் முதல்வராயும், ஸ்ரீ பாஷ்ய ஸ்ரீ பகவத் விஷய உபசிம்மாசனாதிபதி ஒருவரேயாயும் நியமித்தார். இவர் உடையவரின் ஞானபுத்திரர் என்ற காரணத் தால் அவரிடம் பெறுதற்கரிய பல சிறப்புக்களைப் பெற்றிருந் தார். அவர் தமது ஆராதனமான பேரருளாளரையும் ஹயக்கிரீ வரையும் இவருக்குப் பிரசாதித்தருளி, தமது அந்திமதசையில் தமது பிரிவை எண்ணி வருந்திய முதலிகளுக்கு, 'பிள்ளான் இருக்க உங்களுக்குக் குறைவில்லை. பகவத் கைங்கரியங்களை நடத்திவாருங்கள்' என்று அறிவுறுத்திப் பிள்ளான் மடியில் தலைவைத்தபடியே திருநாட்டுக்கு எழுந்தருளினார். உரிய காலத்தில் பிள்ளான் வழியாக, எங்களாழ்வான், நடாதூரம்மாள், சுருதப் பிரகாசிகா பட்டர், கிடாம்பி அப்புள்ளான், வேதாந்த தேசிகர் என்ற வரிசையில் வடகலை வைஷ்ணவ பரம்பரை வளரலாயிற்று.

### காலம்

இவர் கலியப்தம் 4163இல் பிறந்தார் (கி.பி. 1062). இவர் பிறந்தது திருமலை. பிள்ளைத் திருநாமம் குருகேசர். இவர் இராமானுசர் திருநாட்டுக்கு எழுந்தருளிய பிறகும் (1137) நெடு நாள் வாழ்ந்தவர் ஆதலால் இவருடைய காலம் 11ஆம் நூற் றாண்டின் இறுதியும் 12ஆம் நூற்றாண்டின் முற்பாதியும் ஆகும்.

### நூல்கள்

பிள்ளான் செய்த நூல்கள் திருவாய்மொழி ஆறாயிரப்படி, பிள்ளான் ரகசியம் என்பன. இவர் பூதத்தாழ்வாருடைய இரண் டாம் திருஅந்தாதிக்குத் தமிழ்த் தனியன் ஒன்று செய்தார் என்று வழங்குவர்:

---

* புராண ரத்தினமாவது விஷ்ணுபுராணம்; இது ஆறாயிரம் சுலோகம் கொண்டது.

என்பிறவி தீர இறைஞ்சினேன் இன்னமுதா
அன்பே தகளி அளித்தானை – நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

பிள்ளான் ரகசியம் வடமொழி நூல். ஆறாயிரப்படி குறித்துச் சில சொற்கள் கீழே கூறுகிறோம்.

## ஆறாயிரப்படி

இவர் செய்த ஆறாயிரம் கிரந்தம்* கொண்ட திருவாய் மொழி வியாக்கியானத்துக்கு ஆறாயிரப்படி என்று பெயர் வழங்கும். வைணவ மரபில் இந்த நூல் முதல்முதலாக எழுதப் பட்ட உரைநடை நூல்; மணிப்பிரவாள நடையில் எழுதப் பட்டது. பின்வந்த நூல்களைவிட இந்த நூலில் வடமொழியே மிகுதி. இவருக்கு முன் எந்தச் சமயத்திலும் (வைணவம், சைனம், சைவம்) இவ்வாறு மணிப்பிரவாள நூலோ உரையோ எழுந்த தாகத் தெரியவில்லை. படி என்று நூலைக் குறிப்பிடும் மரபும் முதல்முதல் இந்த நூலுக்கே எழுந்தது. படி என்பது ஓர் அளவு: படி என்பது ஒரு கிரந்தம். இவருடைய நூலுக்குப் பிறகு, 9, 24, 36, 12 ஆயிரப்படிகள் திருவாய்மொழி வியாக்கியானங்களாக எழுந்திருக்கின்றன.❖ இவர் உரையே முதலில் எழுந்ததும் சுருக்க மானதுமாகும். இவ்வுரையில் ஈடுபட்ட மணவாள மாமுனிகள் இரண்டு பாடல்களால் இதைப்பெரிதும் போற்றுகிறார்.

முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்
அந்த வியாக்கியைகள் அன்றாகில், – அந்தோ,
திருவாய் மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்க வல்ல
குருஆர், இக்காலம் நெஞ்சே, கூறு.

தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான்
பிள்ளான் எதிராசர் பேரருளால் – உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப்பொருளை அன்றுரைத்தது
இன்பமிகும் ஆறா யிரம்.

---

* கிரந்தம் என்பது வடமொழியில் ஒற்றெழுத்து நீக்கி 32 எழுத்துக் கொண்ட ஒரு செய்யுள் அளவு.

❖ இவற்றைக் குறித்த விளக்க அட்டவணையை எமது 13ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் விளங்கக் காணலாம்.

இவ்வுரை இராமானுசர் கூறிய கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டது. ஆகையால் இதனைப் பிள்ளான் தமது சொந்தநூலாகக் கருதவில்லை. இந்திய இலக்கியங்களில் ஆசிரியர் தமது நூலின் தொடக்கத்தில் மங்கள சுலோகங்களை இயற்றுவதுண்டு. ஆனால் ஆறாயிரப்படியில் மங்கள சுலோகங்கள் இல்லாமை, பிள்ளான் இதனைத் தம் சொந்தப் படைப்பாகக் கருதவில்லை என்பதை வலியுறுத்தும். இவர் உரையில் இராமானுசர் தம் நூல்களில் எழுதியுள்ள வடமொழித் தொடர்களை அப்படியே எடுத்து வைத்து எழுதுகிறார். ஆளவந்தாருடைய தோத்திர ரத்தினக் கருத்துக்களையும் எடுத்து அமைத்திருக்கிறார். சில பாட்டுக்களுக்குக் கருத்தை மட்டும் கூறுவார். சிலவற்றில் பதங்களுக்கு அன்னுவயம் காட்டி முடிப்பார். சில பாடல்களில் சுருக்கமாக ஒரே வரியில் உரை எழுதுகிறார். வடமொழித் தொடர்களைத் தமிழ் உருபுகளையும் வினைகளையும் கொண்டு முடிக்கிறார். அன்றியும் ஒவ்வொரு திருமொழியிலும் முன்வந்த பாசுரங்களோடு தொடர்புபடுத்தி எழுதுவது இவர் இயல்பு. ஒரு திருமொழியில் சில பாடல்களுக்கு விரிவான மேற்கோள்களைக் காட்டி மற்றவற்றைச் சுருக்கிச் சொல்வதும் இவருடைய மற்றோர் இயல்பு. எடுத்துக் காட்டாக அஞ்சிறைய மடநாராய் என்ற (1.4.1) நன்கு தெரிந்த பாடலின் வியாக்கியானத்தை இங்கு தருகிறோம்.

எம்பெருமானோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டி, தன் முன்னே ஸம்ச்லேஷித்து வர்த்திக்கிற நாரைகளைக் கண்டு, தான் வ்யஸநாதிசயத்தாலே அறிவிழந்திருக்கையால், 'தன் வார்த்தைகளை அறியா' என்னுமிடத்தை விவேகிக்கமாட்டாதே, அவற்றினுடைய ஸம்ச்லேஷ ஸ்வபாவத்தைக் காண்கையாலே தம்னோபாதி அளவுடையவாகக் கொண்டு, அவற்றைக் குறித்து, தன்னளவிலே வார்த்தை சொல்லுகிறவிடத்தில் சேவலைக் குறித்துச் சொல்லுகை ஈடல்லாமையால், அதைக் குறித்துச் சொல்லுகிற வார்த்தையையும், ஔசித்யத்தாலே பேடையை நோக்கி, 'நினைத்தவிடத்திலே நினைத்தபோதே சொல்லுகைக் கீடான உபகரணங்களை யுடையையாய், ஸம்ச்லேஷத்தையே தாரகமாகவுடையையாய், துக்கா ஸஹிஷ்ணுவுமாயிருந்த நீ, பக்கலிலே க்ருபை பண்ணி, ஆச்ரிதருடைய ஸமஸ்த துக்க் நிரஸந ஸ்வபாவனான பெரிய திருவடியை திவ்ய வாஹநமாகவுடைய எம்பெருமானுக்கு என்விடு தூதாய்ச் சென்று என்

திறத்தைச் சொல்லவேணும்' என்று அபேக்ஷித்து, பின்னையும் அவை போகாதிருந்தவாறே, 'சொன்ன வார்த்தையை அவன் அங்கீகரியா தொழியில் செய்வதேன்?' என்று போகாதிருந்தவனாகக் கொண்டு, 'இப்படி ஆச்ரிதவத்ஸலனானவன் அங்கீகரியா தொழியுமோ? அவன் என் வார்த்தையை அங்கீகரியா தொழிகையாகிறவன் சிறையில் அவன் உங்களை வைக்கில் அத்தனையும் எனக்காகப் பட்டாலாகாதோ?' என்றே செய்ய வேணும் என்று சொல்கிறாள்.

இவர் முழுமையும் வடமொழியாகவே எழுதுகின்ற இடங்களை இங்கு காட்டவில்லை. நல்ல தமிழிலும் எழுதவல்லவர் என்பதை ஓர் எடுத்துக்காட்டால் காட்டலாம். 'செல்வன் நாரணன் என்ற சொல் கேட்டலும்' என்ற (1.10.8) பாடல்:

இப்படி என்னுடைய அயோக்யதையைப் பார்த்து "அவன் திறத்துப்படுவேனல்லேன்" என்று இருக்கச் செய்தேயும், செல்வ நாரணன் என்ற சொல்லைக் கேட்குமளவில் என்னுடைய சர்வ கரணங்களும் என் வசமின்றியே இழுத்துக்கொண்டு அவன் பக்கலிலே விழாநின்றன; நானும் அதிசபலனாய் 'எங்குற்றாய் எம்பெருமான்?' என்று அவனை நாடுவன்; இது என்ன ஆச்சரியம்! இப்படி நான் அதிசபலனாய்த் தன்னைவிட மாட்டா தொழிந்தால் அவன் என்னை விடலாமிறே; அவன் என்னிற் காட்டிலும் அபிநிவிஷ்டனாய் என் பக்கலிலே அதிபஹு மானத்தைப் பண்ணிக்கொண்டு என்னை விடுகிற்றிலன்; நான் என் செய்வன்? என்று நோகிறார்.

பாட்டின் சொற்களை வைத்தே இவர் எளிதாகப் பொருளை முடித்துக் காட்டுவதற்குப் பின்வருவது ஓர் உதாரணமாகும். (5.3.10):

யாம்மட லூர்ந்தும்எம் ஆழியங்கைப் பிரானுடை
தூமடல் தண்ணந் துழாய்மலர் கொண்டு சூடுவோம்,
யாம்மட மின்றித் தெருவு தோறுஅயல் தையலார்
நாமடங் காப்பழி தூற்றி நாடும் இரைக்கவே.

யாம்மடமின்றித் தெருவுதோறு அயலார் நாவுங்கூட நாடும் இரைக்க யாம் மடலூர்ந்தாகிலும் எம்மாயங்கைப் பிரானுடைத் தூமடல் தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோம் என்கிறாள்.

சுருக்கமான உரைக்கு ஓர் எடுத்துக்காட்டு:

விட்டிலங்கு செஞ்சோதித் தாமரைபாதம் கைகள்கண்கள்
விட்டிலங்கு கருஞ்சுடர் மலையே திருவுடம்பு
விட்டிலங்கு மதியம் சீர்சங்கு சக்கரம்பரிதி
விட்டிலங்கு முடியம்மான் மதுசூதனன் தனக்கே. (2.7.5)

இப்படி என்னை வைஷ்ணவனாக்குகைக்குத் தன் அழகை உபகரணமாகக் கொண்டு என்னுள்ளே புகுந்தருளினான் என்கிறார்.

## அருளாளப் பெருமாள் எம்பெருமானார்

இராமானுசருடைய சீடராயிருந்த இவர் ஞானசாரம் பிரமேயசாரம் என்ற இரு வைணவ சமய நூல்கள் செய்தவர்.

**வரலாறு**

உடையவர் மிக்க விபவத்தோடு கோயிலில் எழுந்தருளியிருந்த காலத்து, வடக்கே யக்ஞமூர்த்தி என்ற ஒரு பிராமணர் மிகச் சிறந்த கல்விமானாயிருந்தார். இவர் சகல சாஸ்திர பண்டிதராகி வித்தையாலும் சிஷ்ய சம்பத்தாலும் மிகுந்திருந்தார். காசியடைந்து கங்காஸ்நானம் செய்து, அங்குள்ள பண்டிதரையெல்லாம் வென்று, அங்கு உடையவருடைய பெருமையைக் கேட்டுப் பொறாதவராய், அவருடன் வாதம்செய்து வெல்ல வேண்டும் என்று எண்ணி, அனேக சாஸ்திரங்களைச் சுமை சுமையாகக் கட்டி எடுப்பித்துக்கொண்டு, தென்னாடு வந்து மிக்க ஆடம்பரத்தோடு உடையவரைக் கண்டு தம்மோடு தர்க்கிக்க வேண்டுமென்று அழைத்தார்.

அவரும் இதற்கிசைந்து, "நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்று கேட்டார். "நாம் தோற்றால் உம்முடைய திருவடி நிலையைச் சுமந்து உம் பெயரையிட்டுக் கொண்டு உம்முடைய மதத்திலும் பிரவேசிக்கக் கடவோம். நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்று அவர்கேட்க, உடையவர், "நான் தோற்றால் கிரந்த சந்நியாசம் செய்துகொள்ளக் கடவேன்" என்றார். அதன் மேல் இருவரும் 18 நாள் வரையறை செய்துகொண்டு ஒருவருக்கொருவர் தோலாமல் மத்த யானைகள் எதிர்க்குமாப் போலத் தர்க்கித்து வந்தார்கள்.

17 ஆம் நாள், யக்ஞமூர்த்தியினுடைய யுக்தி பலத்தினாலே உடையவருக்கு ஒன்றும் தோன்றாதபடி நிற்க, யக்ஞமூர்த்தியும்,

தமது வெற்றி தோற்றும்படி எழுந்து, "நாளை வாரும்" என்று அவரை அனுப்பி வைத்தார். அவரும் திரும்பி வந்து மிக்க வருத்தத்தோடு, "ஆழ்வார் தொடங்கி ஆளவந்தார் அளவாக ஓரான் வழியால் விளங்கி வந்த இந்த வைணவ தரிசனம் இன்று என்னாலே தோற்கக்கடவதோ?" என்று வருந்திப் பேரருளாளப் பெருமாளிடம் சென்று முறையிட்டார்.

அவருடைய கனவில் பெருமாள் தோன்றி, "இளையாழ்வீர், நீர் கலங்குவானேன்? சமர்த்தனாயிருப்பான் ஒரு சிஷ்யனை உமக்கு உண்டாக்கித் தந்தோம். உமக்கு பரமாசாரியரான ஆளவந்தார் சொல்லிய அகண்ட மாயாவாத கண்டனத்தைச் சொல்லி வெற்றி பெறுவீராக" என்று கூறினார். அவ்வாறே துணிந்து அவர் மறு நாள் சபைக்கு எழுந்தருளியபோது, அவருடைய நடையின் கம்பீரத்தையும் அவருடைய சந்தோஷத்தையும் கண்டு, சிறந்த வித்துவானாகிய யக்ஞமூர்த்தி அஞ்சி, அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "தங்களுக்கு இப்போது தெய்வ அனுகூலம் ஏற்பட்டிருக்கிறதென்று அறிகிறேன். அதனாலே நான் தங்களுக்குத் தோற்றேன்" என்று கூறினார். கூறி, அவருடைய உபதேசத்தைப் பெற்றுத் தம்முடைய ஏக தண்டத்தை முறித்தெறிந்து, அவரிடம் திரிதண்டமும் காவியுடையும் பெற்றுச் சீடரானார். உடையவர், தம்முடைய பெயரையும் தமக்குக் கனவில் அருள் செய்த பேரருளாளப் பெருமாள் பெயரையும் சேர்த்து, 'அருளாளப் பெருமாள் எம்பெருமானார்' என்று இவருக்குப் பெயரிட்டார். பின்னர் திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரம் முடிய இவருக்கு ஓதுவித்து, சகல கிரந்தங்களையும் பிரசாதித்தார். பின்னர் தம்மை அடிபணிந்த அனந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி மருதூர் நம்பி முதலியோரை இவரையே குருவாய்க் கொள்ளும்படியும் சேர்ப்பித்தார்.

பின்னொரு சமயம் வெளியூர் வைணவர் இருவர் கோயிலையடைந்து "எம்பெருமானார் மடம் எங்கே?" என்று விசாரித்த போது, அங்குள்ளார் "எந்த எம்பெருமானார்?" என்று கேட்டார்கள். காரணம், உடையவராகிய எம்பெருமானார் - அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்ற இருவர் பெயராலும் மடங்கள் தனித்தனி இருந்தமை. இதைக் கேட்டுக் கொண்டிருந்த அருளாளப் பெருமாள், 'இப்படி நம்மைப் பிரித்துச் சொல்லுதல் தகாது' என்றுணர்ந்து, தம்முடைய மடத்தை இடித்துவிட்டு, உடையவர் திருவடிகளில் கணமும் பிரியாது நித்தியகைங்கரியம் செய்துகொண்டு இருக்கலானார்.

*இவர் வடிவில் சிறியவர் என்று இராமானுசர் கூறியிருக்கிறார். திருமேனி சிறுத்து ஞானம் பெருத்திருக்கிற இவர் சிறு மாமனிதர். இவரைத் தம் திருவாராதனமான பேரருளாளரைத் திருவாராதனம் பண்ணிக் கொண்டிருமென்றும் நியமித்தார்.*

நூல்

*இவர் ஞானசாரம் பிரமேயசாரம் என்று இரு தமிழ் நூல்கள் செய்திருக்கிறார். இருநூல்களையும் உடையவர் திருக்கண் சாத்தியருளி அங்கீகரித்தார். இரு நூல்களுக்கும் மணவாள மாமுனி வியாக்கியானம் செய்திருக்கிறார்.* **ஞானசாரமாவது** *40 வெண்பாக்களும் ஒரு தனியனும் கொண்டது. இது திருமால் திருவடிகளைப் பற்றிக் கொண்டால் நிச்சயம் வீடருளுவான் என்று கூறுவது. இதற்குப் பாடல்தோறும் சாத்விகதந்திரம், பௌகர சங்கிதை, ஜயசங்கிதை, சனற்குமார சங்கிதை, பிரமாண்ட புராணம்; இராமாயணம், பாரதம், கீதை, பாகவதம், முகுந்த மாலை முதலிய பல வடமொழி நூல்களிலிருந்து மணவாள மாமுனிகள் ஆதாரம் உரைத்திருக்கிறார். பின்வருவன இந்நூற் பாடல்களுக்கு எடுத்துக்காட்டு:*

வண்டு படிதுளப மார்பனிடைச் செய்தபிழை
உண்டு பலஎன்று உணர்ந்தனரேல், – தொண்டர்செயும்
பல்லா யிரம்பிழைகள் பார்த்திருந்தும், காணும்கண்
இல்லா தவன்காண் இறை. 24

வேதமொரு நான்கின் உட்பொதிந்த மெய்ப்பொருளும்
கோதில் மனுமுதல்நூல் கூறுவதும் தீதில்
சரணா கதிதந்த தன்னிறைவன் தாளே
அரணாகும் என்னும் அது. 31

*தொண்டர் பிழைகாணும் கண் இல்லாதவன் இறை! - என்ன அரியபக்தி! ஞானசாரத்தைச் சிறப்பித்து இவரைப் போற்றுகின்ற ஒரு தனியன் பின்வருவது:**

அருளார் கருங்குழல் தோகையர் வேல்விழி யில்துவளும்
மருளாம் வினைகெடு மார்க்கம்பெற்றேன் மறைநான்கும் சொன்ன
பொருள்ஞான சாரத்தைப் புந்தியிற்றந்தவன், பொங்கொளிசேர்
அருளாள மாமுனி அம்பொற் கழல்கள் அடைந்தபின்னே.

* *ஏட்டுப்பிரதி*

**பிரமேயசாரம்** என்பது, பத்து வெண்பாவும் ஒரு தனியனும் கொண்டது. இறைவனருளைப் பெறுவதற்கு வழி கருமமும் ஞானமும் அல்ல, சுவதர்மமாகிய பாகவதசேவையே என்று உணர்த்துவது. ஞானசாரத்தைப் போலன்றிப் பிரமேய சாரத்தின் பொருள் எளிதில் உணரக் கூடியதன்று. பின்வருவது இந்நூலின் பாடலில் ஒன்று:

> இறையும் உயிரும் இருவர்க்கு முள்ள
> முறையும் முறையே மொழியும் – மறையும்
> உணர்த்துவா ரில்லாநா ளொன்றல்ல ஆன
> உணர்த்துவார் உண்டான போது. 10

இவ்விரு நூல்களும் அழகான தமிழில் சுவைபடச் செய்யப் பட்டுள்ளவை. இவற்றை நோக்கும்போது, அக்காலத்திலிருந்த வைணவ ஆசாரியர் உண்மையிலேயே நல்ல தமிழ்ப்புலமை பெற்றிருந்தார்களென்றும், வடமொழியில் நூல் செய்தால் தான் சிறப்பு, தமிழில் செய்தால் இழிவு என்ற அக்காலப் பிராமணர் களுடைய கொள்கையின்படி வடமொழியில் நூல் செய்தார்கள் என்றுமே கருதவேண்டியிருக்கிறது.

## பட்டர்

கூரத்தாழ்வார் ஆண்டாள் இருவருடைய குழந்தையாகப் பட்டர் கலி ஆண்டு 4424இல் பிறந்தார். (கி.பி. 1123). இவர் பிறந்த நாள் நம்மாழ்வார் பிறந்த வைகாசி விசாகத்தை அடுத்த நாள். இவரோடு பிறந்த பிள்ளை ஸ்ரீராமப்பிள்ளை என்பவர். இராமானுசர் தம் சீடரான எம்பாரைக் கொண்டு இவ்விரு குழந்தைகளையும் எடுத்து வரச்செய்து மூத்தவனிடம் விளங்கிய பேரொளியை உணர்ந்து பராசரபட்டர் என்றும் இளையவரை வேதவியாசபட்டர் என்றும் பெயர் சூட்டினார். பராசரர் பிற் காலத்தில் பெரியபட்டர் என்றும் பட்டர் என்றும் வழங்கப் பட்டார். இளையவர் பிற்காலத்தில் ஸ்ரீராமப்பிள்ளை என்று வழங்கப்பட்டார். பட்டருடைய சிறுபருவத்தைக் குறித்த கதை கள் பல. ஒருசமயம் இவர் தெரு மணலில் விளையாடியபோது, தெருவில் விருதுகாளங்களோடு சிவிகையில் வந்த ஸர்வக்ஞ பட்டரைத் தடுத்து கையில் புழுதியை அள்ளி, "இது எவ்வளவு மண்?" என்று கேட்டார். ஸர்வக்ஞர் விடைகூற முடியாமல் விழிக்க, இவர் "ஒரு கைப்பிடி மண்" என்று சொல்லி அவரைப் பரிகசித்தாராம். இவருக்கு எம்பார் மந்திரங்களை உபதேசித்தார்.

இவருடைய கீர்த்தி விளங்கிவருங் காலத்தில் வட நாட்டி லிருந்து மாதவசூரி என்ற வேதாந்தி அனைவரையும் தர்க்கத்தில் வென்று மிக்க சிறப்போடு திருவரங்கம் வந்தார். அவரைப் பட்டர் சென்று பார்த்து வெற்றிகொண்ட செய்தியை நஞ்சீயர்* வரலாற்றால் அறியலாம். தோற்ற அந்த வேதாந்தியே இவருடைய மாணாக்கராகி நஞ்சீயர் என்று பெயர் பெற்றார். பட்டர் திரு நெடுந் தாண்டக வியாக்கியானத்தில் மிகவும் வல்லவர். அதிலும் சிறப்பாக 21ஆவது பாடலாகிய 'மைவண்ண நறுங்குஞ்சிக் குழல் பின்தாழ என்ற பாடலுக்கு மிகவும் விரிவாகப் பிரசங்கம் செய் வாராம். இதைச் சொல்லியே இவர் வேதாந்தியை வென்றார் ஆனபடியால், இவ்வொரு பகுதி மட்டும் இன்று கிடைக்கிறது, ஏனைய பகுதிகள் கிடைக்கவில்லை.

ஆளவந்தார் திருநாடு அலங்கரித்த பிறகு இராமானுசர் அவர் உடலைச் சென்று கண்டபோது, கைவிரல்கள் மூன்று மட்டும் மடங்கி இருக்கக்கண்டு, 'வியாச பராசரரிடத்திலே நன்றி பாராட்டும் முறையில் ஒரு சீடரை வளர்க்க வேண்டும் என்பதும், நம்மாழ்வார் திருவாய்மொழி வியாக்கியானம் எழுத வேண்டும் என்பதும், வியாச சூத்திரங்களுக்கு விசிட்டாத் வைத பரமாக ஒரு வியாக்கியானம் எழுதவேண்டும் என்பதும் ஆள வந்தாருடைய விருப்பங்கள், அவை நிறைவேறாமையால் விரல்கள் மடங்கி இருந்தன என்று கேட்டறிந்து, அவ்விருப்பங் களைத் தாம் நிறைவேற்றுவதாக உறுதி கூறவே, விரல்கள் நிமிர்ந்தன என்பது இராமானுசர் வரலாறு. அந்த நினைவினால் அவர் கூரத்தாழ்வார் புதல்வருக்குப் பராசரபட்டர் என்று பெயரிட்டு இவரைக் கொண்டு விஷ்ணு சகஸ்ரநாம பாஷ்யம் செய்வித்தார்.

பட்டர் அனேக வடமொழி நூல்கள் செய்து, திருவாய் மொழி போற்றி வளர்த்த செவிலித் தாயாகிய இராமானுசர் புகழைப் பரப்பி வந்து, இளம்பருவத்திலேயே கபாலம் வெடித் துத் திருநாட்டுக்கு எழுந்தருளினார். 28 ஆண்டுகள் வாழ்ந்தார் என்பது வரலாறு. பட்டர் இல்லறத்தார், இரு மனைவியர். ஒரு சமயம் அரங்கன் சேவைக்குச் சென்ற பட்டர் அரங்கன் அழகைப் பார்த்துக் கண்ணீர் பெருக்கி நின்றாராம். இவர் விரும்பியவாறு அரங்கன் காட்சி அருளினார். திவ்விய தரிசனம் பெற்றோர்

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூல் காண்க.

*சீக்கிரமே பரமபதம் அடைவர் என்று ஒரு நம்பிக்கை உண்டு. இதை எண்ணி இவருக்குக் கலக்கம் ஏற்பட்டதோ என்று வினவிய அரங்கனுக்கு இவர் கூறிய விடை; பரமபதத்தில் இக்குனிந்த முகமும் அழகும் காணப்பெறுவதை இழந்து விடுவேனோ என்று அஞ்சினேன் என்றாராம். பட்டர் உற்சவம் கார்த்திகை அமாவாசையில், பட்டர் பாடிய ரங்கராஜ ஸ்தலத்தில் திருமங்கை மன்னன் நாகையில் புத்த விகாரத்தை; அழித்து வைதிகமாக்கிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். இவர் பாடிய திருவாய்மொழித் தனியன்கள் இரண்டு குறிப்பிடத்தக்கன:*

**வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்**
**ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும், – ஈன்ற**
**முதற்றாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த**
**இதத்தாய் இராமா னுசன்.**

**மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்**
**தக்க நெறியும் தடையாகித் – தொக்கியலும்**
**ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதுங் குருகையர்கோன்**
**யாழினிசை வேதத் தியல்.**

**கைசிக புராண உரை**

*பட்டர் வராக புராணத்தில் சொல்லப்பட்டுள்ள கைசிக புராணம் என்ற 92 சுலோகங்களுக்குத் தமிழ் உரை எழுதினார். திருக்குறுங்குடி என்ற தென்னாட்டுத் தலத்தில் நம்பாடுவான் என்ற பாணன் ஒருவன் அதிகாலையில் கைசிகம் என்ற பண்ணை நம்பி சந்நிதியில் பாடி ஒருநாள் பாடின ஒரு பாட்டின் பலத்தால் ஒரு பிரமராக்கதன் தேவனாகச் செய்த வரலாற்றைக் கூறுவது. எடுத்துக்காட்டாக இதில் ஒரு பகுதி மட்டும் தருகிறோம். 'நமக்குப் பாடுவான் பெறும்பேறு சொல்கிறோம்; யாவனொருவன் கார்த்திகை மாசத்துச் சுக்லபக்ஷ த்வாதசியன்றைய தினம் நம்முடைய சந்நிதி முன்பே வந்து இந்தக் கைசிக மாஹாத்மியத்தை வாசிக்கிறான், யாவனொருவன் கேட்கிறான் - அவர்களும் 'சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே' என்றும் 'ஏதத் ஸாம காயந் நாஸ்தே' என்றும் சொல்லுகிறபடியே நமக்குப் பல்லாண்டு பாடிக்கொண்டு ஆத்மானுபவம் பண்ணிக்கொண்டிருப்பார்கள் காணும் - என்று நாச்சியாரைப் பார்த்துப் பெருமாள் அருளிச் செய்தார். இப்படி அருளிச் செய்த வார்த்தை*

யைக் கேட்டு, நாச்சியாரும் ப்ரளயார்ணவத்திலுண்டான இளைப்பெல்லாம் தீர்ந்து இக்கரணரூபமாயிருப்பதொரு உபாய வைபவமிருந்தபடியென் என்று க்ருதார்த்தையானாள்'.

## மைவண்ண நறுங்குஞ்சி வியாக்கியானம்

இது முன்னமே குறிப்பிடப்பட்டது. இந்தத் திருமங்கையாழ்வார் பாடல் ஒன்றுக்கு மட்டும் பட்டருடைய வியாக்கியானம் கிடைத்துள்ளது. இது 800 கிரந்த அளவு என்று சொல்வார்கள். அச்சிட்ட டெம்மி அளவுள்ள புத்தகத்தில் இதுமட்டும் 38 பக்கம் உள்ளது. அதில் சில பகுதியை மட்டும் கீழே தருகிறோம்.

மைவண்ண நறுங்குஞ்சி என்ற பாடல்,

மைவண்ண நறுங்குஞ்சிக் குழல்பின் தாழ,
மகரம்சேர் குழைஇருபாடு இலங்கி யாட,
எய்வண்ண வெஞ்சிலையே துணையா இங்கே
இருவராய் வந்தார் என் முன்னே நின்றார்:
கைவண்ணம் தாமரை, வாய் கமலம் போலும்
கண்ணிணையும் அரவிந்தம், அடியும் அஃதே;
அவ்வண்ணத் தவர்நிலைமை கண்டும், தோழி!
அவரைநாம் தேவரென்றே அஞ்சி னோமே.

மைவண்ண நறுங்குஞ்சியித்யாதி - நாயகனோடே கலந்து பிரிந்து பிரிவாற்றாமல் நோவு படுகிறாளொரு நாயகி, உபாயத்தாலே உபவநத்திலே பூக்கொய்யவென்று புறப்பட, நாயகனும் வேட்டைக்கென்று வர, அங்கே உபயம் பலித்து ஸம்ச்லேஷம் ப்ரவிருத்தமாய் நாயகனும் போனவளவிலே, இத்தைக் கடைப் பிடித்துத் தலைக்காவலாக நின்ற தோழி வந்து கிட்டி, 'அவன் செய்த படியென்' என்று கேட்க; அவளுக்கு, ப்ரவிருத்தமான படியை நாயகி சொல்லுகிறாள் இப்பாட்டால்.

சிலையே துணையா - இவ்விடத்தில் பிரிநிலையாலே 'கொங்குண் வண்டே கரியாகி வந்தான்' என்னுமாப் போலே போகத்துக்கு வருகிறவர் ஊரைத் திரட்டிக்கொண்டு வாராதே வில்லே துணையாகக் குறியுடைமையோடே வந்தார்காண். சிலையே துணையா ஆயுதச்சாலை போலே சொட்டை, சுரிகை தொடக்கமான கருவிகளெல்லாம் கட்டிச் சுமவாதே வில்லொன்றையே கொண்டுவந்தார் காண், போகத்துக்கு வருகிறவர்

ஸ்ரக்சந்தந தாம்பூலாதிகளான போகோப கரணங்களோடே வருமித்தனை போக்கி, வில்லுத்தானென் னென்னில்; பூர்வஸம்ச் லேஷத்துக்குத் தாய்மாராகிற விடறு கட்டைகளாலே சில விரோதம் பிறந்து இன்னும் அடி தொடங்கி ஹ்ருதயபரீக்ஷை பண்ணவேண்டுமாகையாலே, அதுவும் ஸ்வயம் தௌத்யத்திலே யிழிந்து, அதுக்கு அவகாசம் பாஹ்யோத்யாநத்திலே நானும் தோழிமாரும் பூக்கொய்கிற விடத்திலே தாமும் வேட்டைக் கென்று ஏகாந்தமாக வரவேண்டி அதுக்கு வில்லபேக்ஷிதமாகை யாலே கொடு வந்தார் காண்; அன்றியிலே, சிலையே துணையா என்று 'வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாய்' என்ற படியே ஒருவில்லை வாங்கவேண்டுகையாலே, கொடுவந்தா ராகவுமாம்.

அன்றிக்கே, சிலையே துணையா என்று - 'ஹதாந்யே கேநராமேண மாநு ஷேண பதாதிநா சதுர்த்தசஸஹஸ்ராணி ராக்ஷஸாம்பீமகர்மணாம்' என்று - பதினாலாயிரம் ராக்ஷஸரைத் தாமொருவருமே கொன்று வென்றி கொள்ளுகிறவிடத்தில் தம்பியாரும் பிராட்டிக்குக் காவலாய் நிற்க அத்தனி வீரத்துக்குத் துணையாய் நின்று நிறுத்தறுத்துக் கொடுத்த தனி வில்லாகை யாலே அத்தைக் கொடுவந்தாராகவுமாம். அன்றிக்கே, சிலையே துணையா என்று அவஷ்டப்ய சதிஷ்ட்டந் தம் ததர்சதநுரூர்ஜிதம் என்கிறபடியே, என்னைப் பிரிந்த தளர்த்திக்குத் தமக்கு ஊன்று கோலாகக் கொண்டு வந்தாராகவுமாம். அன்றிக்கே, சிலையே துணையா என்று - இது இப்படி துணைப்படுகைக்குக் காரணம் ப்ராவண்யமும் குணவத்தையுமிறே, மற்றுமுள்ளவற்றிற் காட்டில் ஏற்றம் வில்லுக்கென்கிறாளாகவுமாம். அன்றிக்கே, குணவிசிஷ்ட வஸ்துவுக்கு குணவிசிஷ்ட வஸ்துவிறே துணையாயிருப்பதென் கிறாளாகவுமாம்.

## குறிப்பு

பட்டர் 70 சுலோகம் கொண்ட திருமஞ்சன கட்டிய மொன்று செய்திருந்தாராம். காலக்கிரமத்தில் அவர் குடும்பத்தார் பல பிரிவினராய்ப் பிரிந்தபோது, ஏடுகளையும் பிரித்துக் கொண்டார்கள்! ஒவ்வொரு பிரிவினரிடமும் சில ஏட்டிதழ்கள் பிரிந்துவிட்டன. முழுக்கட்டியம் இன்று கிடைப்பதில்லை; சிலரிடம் சிலசில பாடற் பகுதிகள் மட்டும் கிடைக்கின்றன என்று சொல்வர்.

## தனியன் பாடிய ஆசிரியர்

நாதமுனிகள் நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களைக் கண்டு பிடித்துப் பிரசாரம் செய்தகாலம் முதல், வைணவ சமயத்தில் தோன்றிய அடியவர்களும் ஆசாரியர்களும் தத்தமக்கு விருப்ப மான ஓர் ஆழ்வாரையும் அவர் நூலையும் சிறப்பித்துப் பாடல் பாடியிருக்கிறார்கள். சிறப்புப்பாயிரம் எனச் செய்த இப்பாடல் களைத் தனியன் என்று கூறுவது வைணவ மரபு. நாதமுனிகளே இவ்வாறு மதுரகவியையும் பெரியாழ்வாரையும் குறித்துப் பாடினார் என்று வரலாறு உண்டு. குறிப்பிட்ட ஆசிரியர் தம் பெயரால் வழங்கும் இந்தப் பாடலைப் பாடினாரா இல்லையா என்று உறுதியாகச் சொல்லமுடியாது. இப்பாடல்கள் இந்த முறையில் சம்பிரதாயமாக நெடுங்காலமாய் வழங்கி வரு கின்றன. வைணவ சமயத்தார் தங்கள் நூல்களை நன்கு போற்றி வந்திருக்கிறார்கள். அவர்கள் சம்பிரதாயத்தை நழுவவிடாமல் நன்கு காப்பாற்றுபவர்கள். ஆதலால் இப்பாடல்களின் வரலாறு பொதுவாக உண்மை என்றே நாம் கருதவேண்டும். இந்த முறை யில் கிடைக்கிற பாடல்கள் வெண்பா அல்லது கட்டளைக் கலித்துறையாகவே உள்ளன. கிடைக்கிற பாடல்களின் தொகை சுமார் 50 இருக்கும். இவை பெரும்பான்மை 10 - 12 நூற்றாண்டு களில் பாடப்பெற்றவை. இவைகளில் இந்த நூற்றாண்டுக்குரிய தனியன் பாடல்களைப் பாடிய ஆசிரியர்களைப் பற்றித் தெரிந்த அளவு இங்கே சொல்வது பொருத்தம்.

### ஆழ்வான் 1031–1136

கூரத்தாழ்வான்; இவர் முன் குறிப்பிட்ட பட்டருடைய தந்தை. கூரம் என்ற ஊரில் பிறந்தவர். இராமானுசருடைய பிரதான சீடர். இவருடைய கண்ணைச் சோழமன்னன் பறிக்கச் செய்தான் என்பது வைணவக் கதை. பல வடமொழி நூல்கள் செய்தவர். இவருடைய மாணாக்கரே திருவரங்கத்தமுதனார். திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழிக்கு இவர் தனியன் பாடினார்:

நெஞ்சுக் கிருள்கடி தீபம், அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல அமுதம், தமிழநன் னூல்துறைகள்
அஞ்சுக் கிலக்கியம், ஆரண சாரம், பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறி, பரகாலன் பனுவல்களே.

தமிழ் நன்னூல் துறைகள் அஞ்சு என்பதை ஐந்திலக்கணம் என்று கருதுவர்.

### முதலியாண்டான் 1019 – 1124

இவர் இராமானுசரது சகோதரி புதல்வர். செல்வம் மிக்கவர். இராமானுசருடைய மாணாக்கர். இவர் புதல்வர் கந்தாடையண்ணன், ஸ்ரீபெரும்பூதூரில் இராமானுசருக்கு விக்கிரகம் அமைத்தவர். (இவர் புதல்வரே நம்பிள்ளை வரலாற்றில் காணும் தோழப்பர்.) முதலியாண்டான் பாடியது, பொய்கையாழ் வாருடைய முதல் திருவந்தாதிக்குத் தனியன்:

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு – வையத்து
அடியவர்கள் வாழ அருந்தமிழ் நூற்றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

### எம்பார் 1026 – 1131

இவர் எம்பெருமானாரின் சிறிய தாயாருடைய புதல்வர். கோவிந்த பட்டர் என்பது பெயர். கங்கையில் நீராடியபோது கையில் ஒரு லிங்கம் வந்துசேரக் காளத்தியில் அதை வைத்துச் சிவலிங்க பூசை செய்துவந்தார். மாமனாகிய திருமலை நம்பியால் வைணவராகி, இராமானுசர் சீடராயும் அவருக்கு அடுத்த ஆசாரியராயும் வாழ்ந்தார். இவர் செய்த பெரிய திருமொழித் தனியன் பின்வருவது:

எங்கள் கதியே, இராமா னுசமுனியே,
சங்கை கெடுத்தாண்ட தவராசா, – பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்த மறையாயிரம் அனைத்தும்
தங்குமனம் நீஎனக்குத் தா.

### சீராமப்பிள்ளை 1123

இவர் பட்டருடைய தம்பி. கூரத்தாழ்வார் புதல்வர். இவர் திருமழிசையின் நான்முகன் திருவந்தாதிக்குத் தனியன் பாடினார்:

நாரா யணன்படைத்தான் நான்முகனை, நான்முகனுக்
கேரார் சிவன்பிறந்தான் என்னும்சொல், – சீரார்
மொழிசெப்பி வாழலாம் நெஞ்சமே, மொய்பூ
மழிசைப் பரனடியே வாழ்த்து.

## கிடாம்பியாச்சான் 1058 –1158

இவர் காஞ்சியில் பிறந்தவர். பெரிய திருமலை நம்பியின் மருமகன். திருக்கோட்டிநம்பியின் நியமனத்தால் உடையவருக்குச் சமையல் செய்துவந்தார். இவர் நம்மாழ்வார் திருவிருத்தத்துக்குத் தனியன் செய்தார்.

கருவிருத் தக்குழி நீத்தபின் காமக் கடுங்குழிவீழ்ந்து
ஒருவிருத் தம்புக் குழலுறு வீருயி ரின்பொருள்கட்கு,
ஒருவிருத் தம்புகு தாமல் குருகையர் கோனுரைத்த
திருவிருத் தத்தோ ரடிகற் றிரீர், திரு நாட்டகத்தே.

## அனந்தாழ்வான் 1055 – 1205

இவர் திருமலையில் ஓர் ஏரி கட்டியபோது மணல் சுமந்து கொண்டிருக்க, பெருமாள் ஒரு சிறுவனாக இவருடைய கூடையை வாங்கப் புக, 'என் ஜீவனத்தை ஏன் கெடுக்கிறார்? நீயும் ஒன்றெடுத்துச் சும' என்றார். பின்னர் இவர் மனைவி கர்ப்பவதி மண் சுமந்து கொண்டு வர, அவளுக்கு உதவியாக அதே சிறுவன் உதவி செய்வது கண்டு, இவர் கொட்டெடுத் தடிக்கத் திருவேங்கடத்தான் ஓடி மறைந்தான். ஒருநாள் திருவேங்கடமுடையான் அழைக்க, ஆசாரிய நியமனமான கருமுகை மொட்டு வெடியா நிற்பதால் வரமுடியாதென்கிறார். அதன் மேல் பெருமாள் 'உம்மை இங்கிருந்து போகச் சொன்னால் என்ன செய்வீர்?' என்றுகேட்க இவர் 'பரன் சென்று சேர் திருவேங்கடம்' என்ற பாசுரத்தைச் சொல்லி, நீர் நேற்று வந்தீர், நான் இன்று வந்தேன், அவ்வளவே நமக்குள் வேறுபாடு' என்றாராம்! இவர் பாடிய திருவாய்மொழித் தனியன்:

ஏய்ந்த பெருங் கீர்த்தி இராமா னுசமுனிதன்
வாய்ந்தமலர்ப் பாதம் வணங்குகின்றேன், – ஆய்ந்தபெரும்
சீரார் சடகோபன் செந்தமிழ்வே தந்தரிக்கும்,
பேராத வுள்ளம் பெற.

## பிள்ளை திருநறையூர் அரையர்

இவர் திருநாராயணபுரத்தில் பெருமாளைச் சேவிக்கச் சென்ற சமயம் விரோதிகள் கோயிலுக்கு நெருப்பு வைக்க, பெருமாளுக்கு ஏற்பட்ட ஆபத்தைக் கண்டு பெருமாளைக் கட்டிக்கொண்டு உயிர் நீத்தவர். இராமானுசரின் சீடர். திருமங்கையாழ்வாரின் திருமடல் இரண்டுக்கும் இவர் தனியன் செய்தார்:

முள்ளிச் செழுமலரோ தாரான் முளைமதியம்
கொள்ளிக் கென்னுள்ளம் கொதியாமே – வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியை வெட்டி
மருவாளன் தந்தான் மடல்.

பொன்னுலகில் வானவரும் பூமகளும் போற்றிசெய்யும்
நன்னுதலீர் நம்பி நறையூரர் – மண்ணுலகில்
என்நிலைமை கண்டும் இரங்காரே யாமாகில்
மன்னு மடலூர்வன் வந்து.

### சோமாசியாண்டான்

இவரும் இராமானுசரின் சீடருள் ஒருவர். இவர் செய்தன வாக இரு தனியன்கள் - முதலாவது பெரிய திருமொழிக்கும், மற்றது இராமானுச நூற்றந்தாதிக்கும் வழங்குவதுண்டு; இவை சந்தேகத்துக்கிடமானவை என்பர்.

மாலைத் தனியே வழிபறிக்க வேணுமென்று
கோலிப் பதிவிருந்த கொற்றவனே – வேலை
அணைத்தருளுங் கையால் அடியேன் வினையைத்
துணித்தருள வேணும் துணிந்து.

சொல்லின் தொகைகொண் டுனதடிப் போதுக்குத் தொண்டு செய்யும்
நல்லன்ப ரேத்தும்உன் நாமமெல் லாம்என்றன் நாவினுள்ளே
அல்லும் பகலும் அமரும் படிநல்கு, அறுசமயம்
வெல்லும் பரம இராமானுச, இதுஎன் விண்ணப்பமே.

### வேதப்பிரான் பட்டர்

இவர் வரலாறு விளங்கவில்லை. இவர் இராமானுச நூற் றந்தாதிக்குத் தனியன் பாடியிருத்தலால் இந்த நூற்றாண் டென்று கருதுகிறோம். இவர் ஆண்டாளைக் குறித்துப் பாடிய தனியன்கள்:

கோதை பிறந்தவூர், கோவிந்தன் வாழுமூர்,
சோதி மணிமாடம் தோன்றுமூர், – நீதியால்
நல்லபத்தர் வாழுமூர், நான்மறைக ளோதுமூர்,
வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.

பாதங்கள் தீர்க்கும், பரமனடி காட்டும்,
வேதம் அனைத்துக்கும் வித்தாகும்; – கோதைதமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதுவும் வம்பு.

*பின்வரும் இரண்டும் அவ் அந்தாதிக்குரியவை:*

முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன்
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும் – என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன், தென்புலத்தார்க்
கென்னுக் கடவுடையேன் யான்.

நயந்தருபே ரின்பமெல்லாம் பழுதென்று நண்ணினர்பால்
சயந்தரு கீர்த்தி இராமா னுசமுனி தாளிணைமேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமுது ஓங்கும் அன்பால்
இயம்பும் கலித்துறை யந்தாதி ஓத இசைநெஞ்சமே.

**பிள்ளை உறங்காவில்லிதாசர்**

*தாழ்ந்த குலத்தினரான இவரும் இவருடைய மனைவி பொன்னாச்சியும் இராமானுசரால் ஆட்கொள்ளப்பெற்றோர். பக்தியிலும் பிரபத்தியிலும் ஈடில்லாதவர்கள். உறையூரில் சோழனிடம் சேவகம் செய்த வில்லிகள் மூவரில் இவர் முதன்மையானவர். தம் மனைவியின் உடலழகில் ஈடுபட்டு அவள் வெயிலில் வாடக்கூடாது என்று குடைபிடித்த இவரை எம்பெருமானார் திருவரங்கநாதன் அழகில் ஈடுபடும்படி செய்தார். இவருக்கு பின்னர் உடையவர் கருவூலம் காக்கும் தொழில். அரசனிடம் பெற்ற ஊதியம் ஆயிரம் பொன்னையும் விரலால் கூடத் தொடாமல் எம்பெருமானாரிடம் சமர்ப்பித்து வந்தார். இவருடைய பெருமையைக் காட்ட எம்பெருமானார் செய்த விளையாட்டுக்கள் பல. நீராடிப் புனிதமாய் வரும்போது இவருடைய திருமேனி தீண்டுதலால் தமக்குக் காயசுத்தி கிடைக்கிறது என்று எம்பெருமானார் தம் சீடருக்குச் சொன்னார். இவருடைய குணவிசேடங்கள் ஈட்டில் பலவிடத்தும் சொல்லப்பட்டுள்ளன. தென்கலையார் இயல்சாத்தில் பின்வரும் பாடல் உறங்காவில்லி செய்ததாக வழங்குவது:*

நன்று திருவுடையோம், நானிலத்தில் எவ்வுயிர்க்கும்
ஒன்றும் குறையில்லை, ஓதினோம்:– குன்றம்

எடுத்தான் அடிசேர் இராமானு சன்தாள்
பிடித்தார் பிடித்தாரைப் பற்றி.

கம்பர்

பொதுவாக இத்தனியன் பாடல்கள் யாவும் ஆசாரிய பரம்பரையில் வந்தவர்களே செய்தனவாய் இருக்கின்றன. அபூர்வமாய் வேறுபெயர் கிடைப்பது, கம்பர் ஒருவர் பெயரே. கம்பரைக் கம்ப நாட்டு ஆழ்வார் என்றெல்லாம் புகழ்கிறார்கள். இருந்தபோதிலும், வைணவர் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்து இராமாயணம் பாடிய கவிச்சக்கரவர்த்தி கம்பரை இவ்வாறு ஆழ்வார் என்று சொல்லினர் என்று நாம் கருதவில்லை. அவர்களுக்குச் சமயம் ஒன்றுதான் நோக்கமேயன்றி, காவியம் நோக்கமன்று; ஆதலால் அவர்கள் ஆழ்வார் என்று சிறப்பித்தது, சடகோபர் அந்தாதி பாடிய இரண்டாம் கம்பரையே என்று கருதுகிறோம். நம்மாழ்வார்மீது மிக்க சிறப்புடைய இவ்வந்தாதி பாடிய காரணத்தினால் அவர்களுக்கு இக்கம்பரிடம் ஈடுபாடு. சடகோபரந்தாதி பாடிய கம்பரும் இராமாயணம் பாடிய கம்பரும் ஒருவரே என்ற கருத்தால், ஆழ்வார் பட்டம் முதற் கம்பருக்கும் வழங்கப்பட்டது. கம்பர் காலம் இன்னும் முரண் பாட்டுக்கு இடமாயிருத்தலால், இங்கு கூறும் கருத்தும் பெரிதும் முரண்பாட்டுக்கு இடம் கொடுக்கும்.

இவர் பாடியதாக மூன்று தனியன்கள் நாலாயிரத்துள் காணப்படுகின்றன. மூன்றும் திருமங்கையாழ்வார் பாடலுக்கு உரியவை. திருவெழுகூற்றிருக்கைக்கு உரியது:

இடங்கொண்ட நெஞ்சத்திணங்கிக் கிடப்பனஎன்றும் பொன்னித்
தடங்கொண்ட தாமரைசூழும் மலர்ந்ததண் பூங்குடந்தை
விடங்கொண்ட வெண்பல்கருந் துத்திச்செங்கண் தழலுமிழ்வாய்
படங்கொண்ட பாம்பணைப்பள்ளி கொண்டான் திருப்பாதங்களே.

சிறிய திருமடலுக்கு உரியது:

ஊரா தொழியேன், உலகறிய ஒண்ணுதலீர்
சீரார் முலைத்தடங்கள் சேரளவும் – பாரெல்லாம்
அன்றோங்கி நின்றளந்தான் நின்ற திருநறையூர்
மன்றோங்க ஊர்வன் மடல்.

பெரிய திருமடலுக்கு உரியது:

என்னிலைமை யெல்லாம் அறிவித்தால் எம்பெருமான்
தன்னருளு மாகமும் தாரானேல், – பின்னைப்போய்
ஒண்துறைநீர் வேலை உலகறிய ஊர்வன்நான்,
வண்டறைபூம் பெண்ணை மடல்.

தனியன் பாடியவராக நாம் கருதும் இக்கம்பருடைய வரலாறு, பின்னே பிரபந்த இலக்கியம் - 2 என்ற 13ஆம் அத்தியாயத்துள் சொல்லப்படுகின்றது. இக்குறிப்புக்களை அவ்விடத்துக் கூறுவதே பொருத்தம். எனினும், பொருள் தொடர்பு நோக்கி இவ்வத்தியாயத்துள் சொல்லப்பட்டது.

## எம்பெருமானாரடியாள்

இவ்வாறு சொல்லப்பட்ட தாசி ஒருத்தி இருந்து இராமானுசர் மீது ஒரு தாலாட்டுப் பிரபந்தம் பாடியிருந்தாள். இவள் இராமானுசர் திருவடி சம்பந்தம் பெற்றவள். இதை ஒருநாள் இவள் தன் வீட்டில் இசையோடு பாடிக் கொண்டிருந்தாள். அவ்வழியே சென்ற கோவிந்தப்பெருமாள் என்பவர், தம் காரியங்களையெல்லாம் மறந்து இசையில் ஈடுபட்டு நெடுநேரம் நின்று கேட்டுக்கொண்டிருந்தார். பார்த்தவர்கள் போய் இராமானுசரிடம் சொல்ல, அவர் அழைத்து விசாரித்தபோது, கோவிந்தர் இருந்த நிலைமை தெரிந்தது. இவர் பெரிய திருமலை நம்பி புதல்வர், உடையவர் சீடராய், பின்னர் என்பார் என்று பெயர் சூட்டப்பெற்று ஆசாரியராகிறார்.

இத்தாலாட்டு இன்று இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் இதில் சில கண்ணிகள் மட்டும் தெரிகின்றன.

அத்திரிசூழ் ஞாலம் அனந்தாவ தாரமெனச்
சித்திரையி லாதிரைநாள் வந்துதித்த தேசிகனோ.

கேசவனார் வாழக் கிளைவாழக் கீர்த்திமிகும்
ஆசூரி வந்துதித்த ஆரியனைச் சொன்னாரார்.

செம்பொற் றிருவமைந்த செல்வப்பிள்ளை யாமவனை
ஐம்பத் திருவர்தம் அடைக்கலமா வைத்தாரோ.

திருவரங்கக் கோயில்தனை நோக்கிச் சிறப்புடனே
யதிகளுடன் ஆரியர்கள் சூழ்ந்திறைஞ்சும் வேதியனோ.

இவ்வரலாறும் பாடல்களும் பிள்ளைலோகஞ்சீயர் செய்த இராமானுசார்ய திவ்விய சரிதையில் காணப்படுபவை (1886 பதிப்பு: பக்கம் 7, 112, 222). இவை எந்த அளவு உண்மையா னவை என்பதை வேறு வழியில் அறிவதற்கில்லை.

## மணிப்பிரவாளம்

மணிப்பிரவாள நடை பற்றி வை.மு. கோபாலகிருஷ்ண மாசாரியர் செந்தமிழ் 12ஆம் தொகுதி பக்கம் 485 - 95இல் ஒரு குறிப்பு எழுதியிருக்கிறார்.* அதில் கூறியுள்ள கருத்துக்கள் இங்கு அறிதற்குரியன. 'மணிப்பிரவாளம் என்பதற்குப் பலவகை யான பொருள் சொல்லப்படும். பிரவாளம் - பவழம். செந்நிற மணியும் (மாணிக்கம்) செந்நிறப் பவழம் சேர்த்த கோவை. வடமொழி, தென்மொழி இரண்டும் ஒத்த தெய்வமொழிகள். அதனால் இரண்டும் விரவிய நடை மணிப்பிரவாளம் எனப் பட்டது. இரண்டாம் கருத்து, மணி - முத்து; ஆகவே வெண் முத்தும் செம்பவளமும் கோத்தவிடத்து நிறவேறுபட்டால் காட்சிக்கு இன்பம் தருவதுபோல, இந்நடை செவிக்கின்பம் பயக்கும் என்றவாறு.

**முத்துக் களாலு மிஹநற் பவழங்க ளாலு**
**மொத்துக் கலந்த தமிழா லபிஸம்ஸ் க்ருதேந —**
**எத்திக்கி லும்பவது ஹாரல தேவ பத்தா**
**புத்திக்குமத் க்ருத்ரியம் க்ருதிநாம் விபூஷா.**

என்றமை காண்க. மூன்றாவது கருத்து, மணி என்பது நீலமணி; மணிவண்ணன் என்பதைப்போல நீலமும் பவழமும் கலந்த நிறவேறுபாடு என்பது பொருள். இந்த இரண்டில் மணி எது பிரவாளம் எது என்று வினவில், பருவம் வந்தவரது சொல்லைப் போல வலிய உச்சரிப்புப் பெற்றுத் தனக்குரிய முடிவு முதலியன பெரும்பாலுமின்றி ஒளி மாழ்கிக் கிடக்கும் வடமொழியை வலிய தோற்றத்துடன் கூடி ஊன்றிப் பாராதபோது ஒளியுடன் விளங்காது நிற்கும் பவளமாகவும், இன்னிசை உடையதாய் இனிமை என்ற பொருளைத் தரும் தமிழ் என்பதையே தனக்குப் பெயராகப் பெற்று இயல்பாகவே சுவைகொண்டு விளங்கும் மழலைச் சொல்போல் இனிய தென்மொழியை மணியாகவும்,

---

* மணிப்பிரவாளம் பற்றிய ஒரு விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

ஒரு படியாகக் கொள்ளலாமென்று தோன்றுகின்றது.' வட சொல்லுக்கு முடிவுகள் வடமொழி மரபின்படியும் தென் சொல்லுக்கு முடிவுகள் தமிழ் மரபின்படியும் அமைத்துச் செய்வதே மணிப்பிரவாளம். இந்தப் பெயர் வழங்குவதற்கு உலக வழக்கே ஆதாரம்.

அகநானூற்றில் இடையில் உள்ள பாடல்கள் மணிமிடை பவளம் என்று பெயர் பெறுவதைக் காண்க. வட மொழிவாணர் தமிழில் நூல் செய்த ஆரம்ப நிலையில் தமிழ்ச் செய்யுள் நூல்களில் வடசொற்களைத் திரித்து, தற்பவ மொழிகளாக வும் தற்சம மொழிகளாகவும் வழங்கி வந்தார்கள். அவை இயற்கை வடிவோடு வழங்கவில்லை. மதப்பற்று அதிகமுடையவர்கள் வடமொழியின் இயற்கை வடிவத்தையே கொள்ள ஆரம்பித்தார்கள்.

பெருந்தேவனாரது பாரத உரைநடைப் பகுதியில் மணிப் பிரவாளம் காணப்படுகிறது. கல்வெட்டுக்களிலும் உண்டு. பௌத்தரும் சைனருமே இவ்வாறு மணிப்பிரவாள நடை நூல் எழுதினார்கள் என்பர். (இன்று மணிப்பிரவாளச் சைன நூல்கள் உள்ளன, பௌத்த நூல் எதுவுமே இல்லை)

சாத்திரஞ் செய்த வைணவ ஆசாரியர் மிகவும் அதிகமாக மணிப்பிரவாளத்தைக் கைக்கொண்டார்கள். மணிப் பிரவாளத்தை முதலில் வழங்கியவர் வைணவரே. பிள்ளான் தொடங்கி வந்த இம்மணிப் பிரவாளச் சொல்முடிபு தேசிகர் காலத்தில் மாறிவிட்டன. இதுவே தமிழில் மணிப்பிரவாளத்தின் நிலை.

○○○

அத்தியாயம் 11

# சைன இலக்கியம்

## முன்னுரை

சைன சமயத்தைச் சேர்ந்த ஆசிரியர் பலர் பண்டை நாளிலிருந்து தமிழில் இலக்கிய இலக்கணங்கள் செய்து தமிழ் மொழித்தொண்டு செய்துள்ளனர். பெருங்காப்பியங்களான சிந்தாமணி, சூளாமணி, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் சில, இலக்கண நூல்கள், உரைகள் பல அச்சமயத்தாரால் செய்யப் பெற்றன. நூற்றாண்டுதோறும் அவர்கள் செய்த நூல்கள் பல இருப்பினும் இந்த நூற்றாண்டில் சைன சமயத்தார் செய்த நூலாய்க் கொள்ளத்தக்கது, அருங்கலச் செப்பு ஒன்றே. இதுவும் ஒரு சமய நூல். பன்னிரண்டுக்கு முந்திய நூற்றாண்டுகளிலும் பிந்திய நூற்றாண்டுகளிலும் சைன சமயத்தார் செய்த இலக்கண இலக்கியங்கள் உரைகள் பல உள்ளன; இந்த நூற்றாண்டில் அத்துணை அதிகமாகத் தெரியவில்லை.

இந்நூற்றாண்டுக்குரியதென்று கருதப்பெறும் தீபங்குடிப் பத்தையும் இறுதியில் ஆராய்கிறோம்.

## அருங்கலச் செப்பு

### பெயர்

இத்தொடரானது 'அரிய அணிகலன்களை வைத்துள்ள பேழை' என்று பொருள்படும். சிலப்பதிகாரம் ஊர்காண் காதையில் (அடி. 68-69) இத்தொடர் அப்படியே பயில்கிறது.

ஆயிரங் கண்ணோன் அருங்கலச் செப்பு
வாய்திறந் தன்ன மதிலக வரைப்பின்.

'பெறுத்தற்கரிய மணிக்கலம் பெய்த பணிப் பெட்டகம்' என்று அடியார்க்கு நல்லார் உரை எழுதுகிறார். அருங்கலப் பேழை என்ற தொடர் சிந்தாமணியில் (557) பயில்கிறது. வட மொழியில் 'இரத்தின கரண்டகம்' என வழங்கும் தொடரின் மொழிபெயர்ப்பே இத்தொடர் என்று கருதுவோரும் உளர். வடமொழியில் சமந்திர பத்ராசாரியர் என்பவர் (இவர் காலம் சுமார் கி.பி. 600 என்பர்) இரத்தின கரண்டக சிராவகாசாரம் என்றொரு நூல் எழுதினார்.* தமிழ் நூற்பெயர் வடமொழி நூற்பெயரின் மொழிபெயர்ப்பு என்று கருதுவதைவிட, கால முறையால் பார்க்கும்போது, சமந்திர பத்ராசாரியர் சிலப்பதி காரத் தொடரை அறிந்து வடமொழியாக்கிக் கொண்டார் என்று கொள்வதே உண்மையாயிருக்கும் போலும். உவப்பின் மையைக் கூறும் இந்நூற் பாடலிலேயே அருங்கலம் என்ற தொடர் வருகிறது.

நூல்

நூலின் பெயரமைதி இவ்வாறு நாம் சொன்னபோதிலுங் கூட, நூலானது வடநூலின் மொழிபெயர்ப்பு என்பதில் தடை யில்லை. இது குறட்பாக்களாலான நூல். திருக்குறளை நன்கு பயின்று அதன் கருத்துக்கள் பல எடுத்தமைத்துக் கொண்ட ஆசிரியர், குறள் வெண்பா யாப்பிலேயே நூல் செய்தார்.

> அணிம திக்குடை அருகனைத் தொழ
> அருவி னைப்பயன் அகலு மே.❖

என்ற அருகன் துதியோடு தொடங்கி, 180 குறட்பாக்களைக் கொண்டதாய், இறுதியில்,

> நச்சரவு அணிநிழல் – பச்சைமா மலைதனை
> நிச்சலும் நினைபவர்க்கு – அச்சம் இல்லையே.

என்ற 23ஆம் தீர்த்தங்கரராகிய பார்சுவநாதர் போற்றுத லோடு நூல் முடிகிறது. ஓரேட்டில், எழுதினவர் பெயரைக் குறிப்பிடுகின்ற,

---

* இவ்வடமொழி நூலின் பாடல்கள் ஏழு, நீலகேசியுரையில் மேற் கோளாய் வருகின்றன.

❖ இது குறட்பா அன்று.

நித்தம் அருகன் மலரடியைச்
சித்த மதனில் மகிழ்ந்தேத்திக்
குற்ற மில்லா இந்நூலை
நக்க னையன் எழுதினனே.

என்ற பாடல் காணப்படுகிறது.

நூற்சிறப்பையும் பயனையும் உரைக்குமிடத்து ஆசிரியர் மூன்று பாடல்களில் நூலின் பெயரைக் குறிப்பிடுகிறார்.

அருங்கலச் செப்பினை ஆற்றத் தெளிந்தார்
ஒருங்கடையும் மாண்பு திரு. 175

முத்தி நெறிகாட்டும், முன் அறியா தார்க்கெல்லாம்
சித்தி அருங்கலச் செப்பு. 179

தீரா வினைதீர்க்கும், சித்திபதம் உண்டாக்கும்,
பாராய் அருங்கலச் செப்பு. 180

இந்நூலாசிரியர் குறள் யாப்பை மேற்கொண்டதோடு, ஒரு குறட் பாடலையும் அப்படியே எடுத்துத் தம் நூலுள் வைத்திருக்கிறார்.

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றின்
நாமம் கெடக்கெடும் நோய். (178)

முக்குற்றங்களையும் அவர் குறிப்பிட எண்ணியபோது, இக்குறட் பாவை விட்டு வேறு சொல்ல முடியவில்லை.

இவற்றால் திருக்குறளிடத்து இவர் கொண்ட ஈடுபாடு நன்கு விளங்கும். இவருக்கு மூலம் வடமொழி நூல் என்று கருதப் பட்ட போதிலுங்கூட, கூறும் பொதுக்கருத்துக்கள் யாவும் தமிழில் வழங்கிய கருத்துக்கள், சைன சமயத்தில் இல்லறம் துறவறம் என்ற இரண்டே அறங்கள் பேசப்படும். இல்லறத்தார் சிராவகர் (சாவகர்) எனப்படுவர். இந்நூல் இவர்கள் மேற்கொண் டொழுகத்தக்க அறங்களைப் பொதிந்து வைத்த பேழை போன்றமையால், அருங்கலச் செப்பு என்று பெயர் பெற்றது.

## நூற்பொருள்

குற்றமொன்றில்லா அறம் கூறப்புகுந்த ஆசிரியர் நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்னும் மூன்றும் அறம் என்கிறார்.

மெய்ப்பொருள் தேறுதலை நற்காட்சி. மெய்ப்பொருளாவன மூன்று: தலைமகன் நூல் முனி. தலைமகன் இறைவன்; அவனால் வெளிப்பட்டு நின்றது நூல், அறநூல். இது மெய்ப்பொருளைக் காட்டி, உயிர்க்கு அரணாகித் துக்கம் கெடுக்கும். இந்திரியத்தை வென்று முற்றத் துறந்தவன் முனிவன். ஐயம் அவா உவர்ப்பு மயக்கு ஆகிய நான்கும் இன்மையும், அறப்பழி நீக்கலும், அழிந்தாரைத் தாங்கலும், அறவோரைக் கண்டு அளவளாவலும் (உவத்தலும்), அறத்தை விளக்கலும் நற்காட்சியின் எட்டு உறுப்புக்கள். இந்த உறுப்புக்கள் குறைந்தால் பயனில்லை. சில குறைகளால் நற்காட்சி எய்தாது. அவை, மூன்றுவகை மூடம், எண்வகை மதம், ஆறு அவ்விநயம் என்பன. உலக மூடம், தேவ மூடம், பாசண்டி மூடம் என்பன மூடம் மூவகை. மயக்கம் அல்லது மதம் எட்டாவன: பிறப்பு, குலம், வலி, செல்வம், வனப்பு, சிறப்பு, தவம், உணர்வு. இவற்றாற் பெரியம் என்ற அகங்காரம் அறத்தை அழிக்கும். மிச்சை இலிங்கியர், நூல், தெய்வம், அவா, அச்சம், உலோபிதம் ஆகிய ஆறும் அவ்விநயம் ஆம். நற்காட்சி உடையவர் சித்தி எய்துவர். பொருளைப் பொய் என்று உணர்தல் நன்ஞானம். நல்லொழுக்கம் நிறைவு குறைவு என இருவகை. நிறைவு துறவியருக்கு. அதனினும் குறைந்தது குறைவு; இது இல்லறத்தாருக்கு உரியது. துறவியருக்குரியது மகாவிரதம். இல்லறத்தாருக்கு உரியன; விரதம் மூவகை, பூசனை சல்லேகனை என்பன. விரதம்* மூவகையாவது அணுவிதம் ஐந்து - பெரியகொலை செய்யாமை, பொய்யாமை, கள்ளாமை, காமமின்மை, பொருள் வரைதல்; குணவிரதம் மூன்று - திசை வரைதல், பயனில செய்யாமை, ஐந்தன் சுவை வரைதல்; சிக்கா விரதம் நான்கு - சாமாயிகம், உண்ணாவிரதம், இடம் வரைதல், ஈகை என்பன. பின்னும் நல்லொழுக்கத்தின் பிரிவுகள் உபவாசமும் பூசனையும் சல்லேகனையும் ஆகும். விரதங்கள் எவற்றால் கெடும் என்பதை உணர்ந்து அவற்றின் நீங்கி ஒழுகத்தக்கன. அறத்தின் பயன், பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு ஆகிய நான்கும் அறுத்தல். அறுத்து நற்காட்சி பெற்றவர் மூவுலகத்து உச்சிச் சூளாமணி விளக்குப் போன்ற குற்றமில் சித்தியுடையவர். இல்லறத்தார் பதினொரு நிலையர். அந்நிலைகளில் நின்று நூலை உணர்ந்து

* இங்கு கூறியுள்ள விரதங்களில் பல காலவேறுபாட்டால் இன்று பொருந்தாதன.

ஒழுகித் தீராவினை தீர்ந்து சித்திபதம் பெறுதலே செய்யத்தக்கது. நற்காட்சி ஞானம் ஒழுக்கம் மூன்றும் இரத்தினத் திரயம்.

**சில கருத்துக்கள்**

நீலகேசிக்குப் பிறகு இதுவே தனிச் சைனசமய நூல். அச்சமயத்தின் உண்மைகளின் ஒரு பிரிவை இது விளக்கி உரைக்கிறது. இந்நூல் சைன சமயத்தில் இல்லறத்தாருக்குரிய ஒழுக்க நியதிகளை வரையறுத்துக் கூறுகிறது. அறநெறிச் சார மானது இதன் வழிவந்து இதை விளக்குகின்ற நூல் என்று சொல்வர். ஆனால் அந்நூல் ஒருவகையில் சைனசமய உண்மை களைச் சுருக்கமாகச் சுட்டிக் கூறுவதோடு, பொதுவாக எல்லாச் சமயங்களுக்கும் பொருந்தவல்ல நீதி தருமங்களை அழகுறப் போதிப்பதாயுள்ளது. அருங்கலச் செப்பு அவ்வாறு அமைய வில்லை: சைன சமயத்துக்கே சிறப்பாக உரிய தருமங்களை மட்டும் கூறுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

'முற்றுணர்ந்தானை ஏத்தி மொழிகுவன்' என்ற தொடக்கப் பாடலிலுள்ள கருத்து, 'தருமச் சுடரானென்னும் தன்மையினான் எல்லாம் உணர்ந்தான் அவனே இறையாக ஏத்தி' என்ற நீலகேசிக் கடவுள் வாழ்த்துப் பாடலைத் தழுவியது. இது இயல்பே. நீலகேசி சமயவாத நூலாதலால் சமய அறம் சொல்லவந்த இவ் வாசிரியர் அந்நூலின் கருத்தை எங்கும் தழுவியே சொல்கிறார். யாப்பருங்கலத்துச் சிறப்புப் பாயிரமும் (11ஆம் நூற்றாண்டு) முற்றொருங்குணர்ந்தோன் என்று அருகனைக் குறிப்பிடுவது அறியத்தக்கது.

தெய்வ வழிபாட்டைச் சொல்லும்போது பொதுமையா கவே பேசுகிறார்:

> தேவாதி தேவன் திருவடிக்குப் பூசனை
> ஓவாது செய்க, உவந்து. 143

நற்காட்சியுடையார் நரகம்புகார், விலங்காய்ப் பிறவார். பெண்களும் பேடிகளும் நற்காட்சி உடையவர் ஆகார் என்று ஒரு பாடலில் கூறுகிறார்.

> பெண்டிர், நபுஞ்சகர், ஆகார் – பிழைப்பு இன்றிக்
> கொண்ட நற் காட்சி யவர்.

*நற்காட்சியின்றி வீடுபேறு இல்லையாதலால், பெண்பிறவியில் வீடுபேறில்லை என்ற கருத்தை ஆசிரியர் உணர வைக்கிறார். உண்ணத்தகாதன என்று கள்ளையும் புலாலையும் சொல்லு மிடத்து, இவர் தேனையும் உண்ணத்தகாதது என்று சேர்த்துச் சொல்கிறார் (82). பெரிய கொலை நீக்குதல் அணுவிரதம் என்றும் (66), சிறிய கொலையையும் நீக்குதல் மாவிரதம் என்றும் (86) கூறுகிறார். இவ்விடத்து, கூறியது கூறல் என்னும் குற்றம் வரு வதுபோல் தோன்றுகிறது.*

**பெரியகொலை, பொய், களவொடு காமம்,**
**பொருளை வரைதலோடு ஐந்து.** 66

**சிறியகொலை, பொய், களவொடு, காமம்,**
**பொருளைத் துறத்தலோடு ஐந்து.** 86

**கொலைமுதலா ஐந்திணையும் முற்றத் துறத்தல்**
**தலையாய மாவதம் ஆம்.** 87

*என்ற மூன்று பாடல்களையும் காண்க. (மாவதம் - மகாவிரதம்; இது பிராகிருதப் பிரயோகம்.) ஐந்தன் சுவையை நீக்கவேண்டும் என்று கூறுமிடத்து, நீக்கத்தக்கன யாவை என்று கூறுகிறார்:*

**வேப்பமலர், இஞ்சி, வெண்ணெய், அதம்பழம் –**
**நீப்பர் இவை போல்வன.** 101

*(இங்கு அதம்பழம் என்பது அத்திப்பழம். அழுகின பழம் என்று காணப்படும் பொருள் பொருத்தமன்று.) நாயின் செவியில் சீவகன் உபதேசித்த மந்திரத்தின் வலியால் அந்நாய் சுதஞ்சணன் என்னும் தேவனாய்ப் பிறந்தது என்ற சீவகசிந்தாமணிக் கதையை,*

**தேவனும் நாய் ஆகும் தீக்காட்சியால்; நாயும்**
**தேவன் ஆம், நற்காட்சி யால்.** 38

*என்ற பாடலில் குறிப்பிடுகிறார் போலும். அச்சிலதேல் பண்டியும் இல்லை, சுவரிலதேல் சித்திரமில்லை என்ற பழமொழிகளையும் (45) நூலில் காணலாம். சாதி சிறப்புடையதன்று, நற்காட்சியே சிறப்புடையது என்பதை ஒரு பாடலில் சொல்லுகிறார்:*

**பறையன் மகன்எனினும், காட்சி உடையான்**
**இறைவன் எனஉணரற் பாற்று.** 37

நூலுக்கு இலக்கணமாக ஆசிரியர் நான்கு குறட்பாக் களைத் தருகிறார். இவை பற்றிச் சில சொற்கள் இங்கு கூறத் தக்கன.

1. சரிதம் புராணம் அருத்தக் கியானம்
அரிதின் உரைப்பது நூல்.

2. உலகின் கிடக்கையும் ஊழி நிலையும்
மலைவின்று உரைப்பது நூல்.

3. இல்லறம் ஏனைத் துறவறம் என்றிவற்றைப்
புல்ல உரைப்பது நூல்.

4. கட்டொடு வீடும் உயிரும் பிறபொருளும்
முட்டின்றிச் சொல்வது நூல்.

இவற்றுள், முதற்பாடல் கூறும் மூன்று பொருளும், இரண்டாம் பாடல் கூறும் உலகின் கிடக்கை ஊழிநிலை என்ற இரண்டும், புராணங்களில் சொல்லத்தக்க பஞ்ச லட்சணங்கள் ஆகும். அடுத்த பாடலில் இல்லறம் துறவறம் என்ற கருத்துக்கள், பொது வாகக் குறள் போன்ற நீதி நூல் அமைப்புடைய நூல்கள் எல் லாமே கூறுவன இறுதிப்பாடலில் சொல்லப்பட்டவை, பந்தம் மோட்சம் ஆன்மா உலகு என்பன ஆகும். இங்கு சைனத்தில் தெய்வம் என்பது சிறப்பான இடம் பெறாமையால் இறை என்ற பொருள் சொல்லப் பெறவில்லை;

இதில் சொல்லப்பட்ட கருத்துக்களுக்கு எடுத்துக்காட்டாக இருபத்தைந்துக்கு மேற்பட்ட சமய வரலாறுகளைப் பெயர் குறிப்பிடுகிறார். இவை சைன சமயத்தாரிடையே நன்கு அறியப் பட்ட கதைகளாகும். ஒவ்வொரு விரத விளக்கத்தின் முடிவிலும் அதன் இறப்பு என்றொரு பாடல் கூறுகிறார். (இறப்பாவது கழிதல் அல்லது கெடுதல்.) இது, எவ்வகைச் செயல்களால் அவ் விரதம் கெடும் என்று உணர்த்துகிறது. நூல் என்ற பொருளை ஆறு பாடல்கள் பேசுகின்றன - 9, 10, 58-61. பொருள் நிறைவை யும் தொடர்பையும் நோக்கி, இவை ஒரே இடத்தில் அமைந் திருத்தலே பொருத்தம். அச்சுப்பிரதிகளில் அவ்வாறு இல்லை.

வடசொற்களைப் பாகத வடிவத்தில் இந்நூலில் தமிழ்ப் படுத்தியிருப்பது சிறப்பாயுள்ளது. இந்திரியம் - இந்தியம்,

பிரம்மசாரி - பம்மன், பிரமாதம் - பமாதம், மோகம் - மோவம், விரதம் - வதம், விஷ்ணு - விண்ணு போல்வன காண்க. சைனர் பிராகிருத மொழிப்பயிற்சி நிரம்பியவர் ஆதலால், இவ்வடிவில் சொற்களை அமைப்பது அவர்களுக்கு எளிது. கருத்துக்கள் உவமைகள் பல மிகவும் சிறப்பாக உள்ளன.

இந்நூற் பாடல்களையும் தொடர்களையும் திருநூற்றந் தாதி உரையும் (14 நூ.) சமய திவாகர முனிவர் செய்த நீலகேசி யுரையும் (14 நூ.) எடுத்தாளுகின்றன. நூல், சிறப்புடைய பல பொருள்களைக் கொண்டிருப்பினும் தமிழ் மக்களிடையே ஆட்சி பெறவில்லை.

இப்படியொரு நூல் இருப்பது, கற்றாருக்குத் தெரியாமை யும் அச்சில் சமீபகாலம் வரையில் இந்நூற் கிடைக்கப் பெறா திருந்தமையும் ஒரு காரணமாயிருக்கலாம்.

இந்நூலின் பொருட் பாகுபாட்டைப் பின்னே ஓர் அட்ட வணையாகக் காட்டியிருக்கிறோம். (பக். 232)

**ஆசிரியர்**

சுவையுடைய இவ்வரிய சைன சமய நூலைச் செய்த ஆசிரியர் பெயரும் வரலாறும் விளங்கவில்லை. இவர் தமிழிலும் வடமொழியிலும் நிரம்பப் பயிற்சியுடையவர்; பிராகிருத மொழி யிலும் புலமையுடையவர்.

ஏட்டுப்பிரதியில் காணப்படும் 'நித்தன் அருகன் மலர டியை' என்ற பாடலை முன்னமே காட்டினோம்; இதில் வரும் நக்கனையன் என்ற பெயர் ஏடெழுதியவர் பெயரா அல்லது நூலாசிரியர் பெயரா என்பது விளங்கவில்லை. எனினும், ஒரு வரலாறு மட்டும் இங்கு குறிப்பிடுதல் தகும்

கிறிஸ்து அப்தம் தோன்றுவதற்கு முன்னரே உச்சயினி யிலிருந்த சைனசமய ஆசாரியர் பலர் அங்கு கொடியபஞ்சம் வரப்போவதுணர்ந்து, தென்திசை நோக்கி வந்தார்கள். வந்த சைன சங்கத்தார், மைசூர் நாட்டில் இன்று சிரவணபெள்குளம் என்று வழங்குகின்ற கடவப் பிரக்ஷேத்திரத்தில் குடியேறினார்கள். சிறப்பாக இருந்த ஒரு சங்கம் திரமிள சங்கம் என வழங்கப் பெற்றது.


அருங்கலச்செப்பின் பொருட்பாகுபாடு
அறம் 3
நற்காட்சி
நன்ஞானம்
நல்லொழுக்கம்
உறுப்பு 8:
ஐயமின்மை
அவாவின்மை
உவர்ப்பின்மை
மயக்கின்மை
அறப்பழி நீக்கல்
அழிந்தாரைத்
தாங்கல்
அறவோரைக்
கண்டுவத்தல்
அறமுரைத்தல்
குறை 3:
1. மூடம் 3:
உலகமூடம்
தேவமூடம்
பாசண்டி மூடம்
2. மதம் 8:
பிறப்பு
குலம்
வலி
செல்வம்
வனப்பு
சிறப்பு
தவம்
உணர்வு
3. அவ்விநயம் 6:
மிச்சை இலிங்கியர்
நூல்
தெய்வம்
அவா
அச்சம்
உலோபிதம்
உறுப்பு 3:
1. சரிதம்
2. புராணம்
3. அருத்த ஞானம்
இல்லறம்
துறவறம்
மகாவிரதம்
விரதம் 3:
பூசனை
சல்லேகனை
1. அணு விரதம் 5:
பெரிய கொலை செய்யாமை
பொய்யாமை
கள்ளாமை
காமமின்மை
பொருள் வரைதல்
2. குண விரதம் 3:
திசை விரதம்
அனர்த்ததண்ட விரதம்
போகோப போக
பரிமாண விரதம்
3. சிக்கா விரதம் 4:
சாமாயிகம்
போசத விரதம்
தேசோவகாசிக விரதம்
அதி திசம்விபாக விரதம்

இதன் பிரிவுகள் பல கணங்கள்; பிரசித்தியடைந்தது நந்தி கணம். இதன் பிரிவுகளுள் ஒன்று அருங்கலான்வயம் என்ற பெயருடையது.* இவ் அருங்கலான் வயத்தார் திருவாரூயருக்கு அருகுள்ள தீபங்குடி என்ற ஊரில் வாழ்ந்து தங்கள் சமயத்தைப் பேணினர். இவர்கள் தமிழரேயாயினும் வடமொழியிலும், கன்னடத்திலும், பிநராகிருதத்திலும், பாலிமொழியிலும் பெரும்புலமையுடையவர்கள். இவ் அருங்கலான் வயத்தாருள் ஒருவரால் அருங்கலச் செப்பு செய்யப்பெற்றிருந்தது என்பதே ஆசிரியர் குறித்துப் பொதுவாகச் சொல்லத்தக்கது. அருங்கலான்வயம் அருங்கலச் செப்பு என்ற பெயரொற்றுமையும் இக்கருத்துக்கு ஆதரவு தருகிறது. (அன்வயம் - குலம், சுற்றம்)

கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டார் இத்தீபங்குடியினர் என்பது வரலாறு. இத்தலத்துக்குத் தீபங்குடிப் பத்து என ஒரு அருகதோத்திரப் பதிகமும் செய்யப் பெற்றிருக்கிறது.❖

### காலம்

இந்நூலைத் தழுவிச் சைன சமயத்தில் காட்சி ஒழுக்கம் ஞானம் என்ற பொருள்களை இல்லறத்தாருக்குரிய அளவில் விரித்து ஒழுக்க நூலாகச் செய்யப்பட்டது அறநெறிச்சாரம். அதன்காலம் 13ஆம் நூற்றாண்டு என்று தெரிகிறது. அது கொண்டு பார்க்கும்போது, இந்நூல் ஒரு நூற்றாண்டு முற்பட்டதாகலாம். எனவே, இதன் காலம் 12ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என்று கருதுகிறோம். இது பத்தாம் நூற்றாண்டில் எழுந்த நீலகேசியின் பின் செய்யப்பட்டது என்பது தெளிவு. ஆகவே பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குரியது என்பது பொருந்துவதே.

### பதிப்பு

பாகுபலி நயினார் பதிப்பு திருக்கலம்பகத்துடன் 1883. 1941இல் உரைப்பதிப்பு ஒன்று வந்தது. எஸ். ராஜம் பதிப்பு திருத்தமானது, பொருள் தலைப்புக்கள் உடையது, 1959 பாடல் வரிசையில் சில மாறுபாடுகள் உள்ளன. பழம்பதிப்பில் 'இயமங்கள் காலவரையறை இல்லை - நியமங்கள் அல்லாவதம்' என்ற பாடல் இல்லை (102). க. சுகுமாரன் எழுதிய உரைப் பதிப்பு 1960. பழைய உரையும் இந்நூலுக்கு உண்டு.

---

* து.அ. கோபிநாதராவ், செந்தமிழ் தொகுதி 5 பக்கம் 35.

❖ தீபங்குடி பற்றிய ஒரு குறிப்பை 60ஆம் பக்கத்தில் காணலாம்.

அரசாங்கத் தொன்னூல் நிலையத்திலிருந்து இந்த நூலைப் பழைய உரையோடு பகுதிகளாக வெளியிட்டு வருகிறார்கள். இவ்வுரை பேச்சுத்தமிழில் மணிப்பிரவாள நடையில் எழுதப் பட்ட உரை. முதல் பாடல் உரை பின்வருவது: ‘லோக லோக ஸ்வரூபமான சமஸ்த ஜீவாதி வஸ்துஸ்வர்பமான ஸ்வாமியை ஸ்தோத்ரம் பண்ணிச் சொல்வேன் பதினெட்டுக் குற்றங்களும் நீங்கின தருமஸ்வரூபத்தினை.’ இங்கு வடமொழிச் சொற்கள், தொடர்கள் யாவும் வடவெழுத்துக்களாலேயே எழுதப்பட்டுள்ளன (1972). முன்னமே நூல் என்று காட்டப்பட்ட நான்கு பாடல்களுக்கு உரை எழுதுமிடத்து இவ்வுரை, இந்நான்கும் முறையே பிரதமானுயோகம், கரணானுயோகம், சரணானுயோகம், திரவ்யானு யோகம் என்ற நான்கு வேதங்கள் என்று கூறுகிறது.

### சில குறிப்புக்கள்

அருங்கலச் செப்பு, சாவகருக்குரிய ஒழுக்கங்களை விளக்கியுரைக்கும் சிறந்த சிறு நூலானமையால், அதன் பொருளை இங்கு அட்டவணைப்படுத்திக் காட்டினோம். பாகுபாட்டில் வடமொழித் தொடர்களே அதிகம் உள்ளன. மேலும் சில விளக்கங்களை இங்கு தருகிறோம்.

நற்காட்சி - மெய்ப்பொருள் தேறுதல் நற்காட்சி (3). பொருள் 3: தலைமகன் நூல் முனி என. மயக்கு - மோகம் (20). அறப்பழி நீக்கல் - அறவோர் குறைகளைத் தூற்றாதிருத்தல், உப கூவனம். மூடம் - மயக்கு, பாசண்டி - தீய மார்க்கத்தாரைப் போற்றுதல். மிச்சை இலிங்கியர் - ஒரு பதிப்பாளர் மிச்சை இலக்கியர் என்று அச்சிட்டார்; இலிங்கியர் - அனுமானத்தை மட்டும் முக்கியமாகக் கொண்டு வாதிடும் தார்க்கிகர்; மிச்சை - அஞ்ஞானம். அவ்விநயம் - விநயம் அல்லாதன. மிச்சையை இலிங்கியர் நூல் தெய்வம் என்ற மூன்றிடத்தும் கூட்டுக. அருத்த ஞானம் - அற நூல் உணர்வு. அணுவிரதம் - அனுவிரதம் என்றும் சொல்வர். திசை விரதம் - எல்லை வரைதல்; இன்ன எல்லைக்கு அப்பால் போகேன் என்று வரைந்து கொள்ளுதல். அனர்த்த தண்ட விரதம் - பயனில செய்யாமை. போக உபபோக பரிமாண விரதம் - ஐம்புலன்களின் சுவையடக்கல். சிக்கா - சிட்சை. சாமாயிகம் - தியானம். போசத விரதம் - உண்ணாவிரதம். தேசோவ காசிக விரதம் - இடம் வரைந்துகொள்ளுதல். அதிதி சம்விபாகம் - ஈகை. சல்லேகனை - வடக்கிருத்தல்.

## தீபங்குடிப் பத்து

இந்த நூற்றாண்டில் தோன்றியது என்று கருதத்தக்க ஒரு சிறு தோத்திர நூல்.* பத்துப் பாடல்கள் கொண்டது போலும். இவற்றுள் ஏழு பாடல்களே கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன (கலிங்கத்துப்பரணி, கோபாலையர் பதிப்பு, பக்கம் 9, முகவுரை). இதன் பாடல்கள் யாவும் 'மடவார் (சுகமென் மொழியார், விற்புருவப்படையார், குண்டார் முலை மென் மடவார், கொலை வேல் விழியார்) அதரம் கோபம் கடியும் தீபங்குடியே' என்ற முடிபையுடையது. (இதன் பொருள் தீபங்குடி மடவாரின் அதரம் இந்திரகோபப் பூச்சியின் நிறத்தை வெல்வனவாயுள் ளன என்பது) இதனுடைய மூன்றாம் பாடலே, அபயனுக்கு விடையாகச் சயங்கொண்டார் சொன்ன பாடல் என்பது முதல் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. இதன் பாடல்கள் யாவும் தீபங்குடிக் கோயிலில் எழுந்தருளியுள்ள அருக தேவனைப் புகழ்வன என்று சொல்வர். தமிழ் நாவலர் வாழ் புலியூர் தவமே புரிவார் தமதூர், அறநூல் சொல்வார் தமதூர், அறமே பணிவார், அருகன் பதமே பணிவார், பரமன் சரணைப் பணிவார், இதமே புரிவார் என்ற தொடர்களால் அருகன் அடியார் வாழூர் என்று பொருள் கொள்ளவேண்டும். தமிழ் நாவலர் சரிதைப் பதிப்பாளர் கூறியபடி அருகக் கடவுளின் ஊர் என்பது பொருந் தாது. சிறப்பான கற்பனைத் திறம் நிரம்பிய சயங்கொண்டார் கற்பனை வறண்டு அதரம் கோபம் கடியும் தீபங்குடி என்று எல்லாப் பாடல்களிலும் பாடினார் என்பது நம்ப ஒண்ணாதது. பாடல்களிலும் சுவை இல்லை. சயங்கொண்டார் தீபங்குடியினர் என்பதற்காக இவை அவர் தலையில் சுமத்தப்பட்டன என்று கருதவேண்டும். இப்பாடல்கள் - கொண்டு அவர் அருக சமயத் தினர் என்று கருதுவதும் பொருந்தாத கருத்தே.

'பல ஜினதாசர்களால் செய்தருளிய பத்தும் பதிகத் தோத்திரத் திரட்டு' என்ற ஒரு சிறுநூல் 1912இல் அச்சிடப் பட்டது. இது துதிப்பாடல் கொண்டது; அருகன் துதியாக 26 பதிகங்கள் உடையது. பல அருகத் தலப்பதிகங்கள் இதில் உள்ளன. 'தீபங்குடியில் பாழிமேல்பால் திசைத்தீபமே சார

* இது பற்றி முதல் அத்தியாயம் காண்க.

நீழலானே' என்று அருகதேவருக்கு இங்கு உள்ள கோயில் பற்றி ஒரு பதிகம் பாடுகிறது; நான்கு பதிகங்கள் இதுபற்றி இந்நூலில் அடங்கியுள்ளன. இவற்றுள் தீபங்குடிப்பத்து அச்சிடப்பட வில்லை.

இருந்தபோதிலும், தமிழ் நாவலர் சரிதை இப்பாடலை அபயனோடு தொடர்புபடுத்திக் கூறியுள்ளபடியால், அத் தொடர்பை மட்டும் ஏற்று, 12ஆம் நூற்றாண்டின் தொடக் கத்தில் வாழ்ந்த ஒரு புலவர் இப்பத்தைப் பாடினார் என்று கருதலாம். ஆதலால், இந்த நூற்றாண்டில் அருங்கலச் செப்பு மட்டுமின்றி இந்த நூலும் பாடப்பட்டது என்று நாம் கருது வோம். அச்சிடப்பட்டுள்ள ஏழு பாடல்களுக்கு அதிகமாக வெளிவந்ததாகத் தெரியவில்லை. நூற்பாடல்கள், முதல் இரு வரிகளில் தீபங்குடி வாழ்வோரது சீலத்தையும் பின்னிரு வரிகள் பெண்களின் நிலையையும் கூறுவன. இவ்வூரில் மக்கள் கல்விப் பொருளே செல்வப் பொருளாய்க் கருதி, காலையும் மாலை யும் நற்குணனை நினைத்துத் தவமே புரிவர், வினைசெய்யார்; இருள் உண்ணார், தேன் நறவு, ஊன், பொய் கொலை களவு தவிர்வார். பொய்தீர் அறநூல் செய்வார்; தீமை செய்யார், வாமன் தாள் தொழுது நல்அறமே புரிவார்; அருகன் பத தாமரையே பணிவார்; மாதவருக்குரியனும் துகளார் மனமுற்ற வருக்கு அரியனுமான பரமன் தாளைப் பணிவார்.

அங்குள்ள மடவார் வருணனை: சிற்றிடையும் மகரக் குழையுமுடையார்; குயில் சோலையில் கூவக் காதலரை நினைந்து உருகுவார்; கையும் முகமும் விழியும் குயமும் காலும் கமலம் போலும்; மதனுக்குடையார்; போதார் முலையார்; மலையோ குடமோ மணிமா முடியோ வனசத்திளமா முகையோ முலை என் கொலைவேல் விழியார்: பெண் பிறப்பை இழித்துப் பேசும் சைனர் ஏன் இவ்வாறு பெண்களைப் புகழ்ந்து வருணிக்க வேண்டும்?

○○○

## அத்தியாயம் 12

# பிரபந்த இலக்கியம் – 1

### முன்னுரை

சங்க இலக்கிய காலந்தொடங்கியே தமிழில் சிறு பிரபந்தங்கள் தோன்றிவிட்டன. பத்துப்பாட்டுள் முதல் பாட்டாகிய திருமுருகாற்றுப்படை ஒரு பிரபந்தம்; சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை என்பனவும் அதுபோலவே ஆற்றுப்படைப் பிரபந்தங்களாகும். 10ஆம் நூற்றாண்டுக்குரிய நூலாகிய பன்னிருபாட்டியல் முதன் முதலாகச் சில பிரபந்தங்களுக்கு இலக்கணம் கூறுகிறது. 80 பிரபந்தங்கள் அங்கு சொல்லப்பட்டன. பின்னர் இவற்றின் தொகை வளர்ந்து, 17ஆம் நூற்றாண்டு நூலாகிய சிவந்தெழுந்த பல்லவராயன் உலாவில் 'தொண்ணூற்றாறு - கோலப் பிரபந்தங்கள் கொண்ட பிரான்' என்று சொல்லும் அளவுக்கு வளர்ச்சி பெற்றுவிட்டன. எனினும் 12, 14, 16 நூற்றாண்டுகளில் தோன்றிய வச்சணந்திமாலை, நவநீதப்பாட்டியல், சிதம்பரப்பாட்டியல்* முதலாயின குறிப்பிடும் பிரபந்த வகைகள் தொண்ணூற்றாறுக்கும் குறைந்தவையேயாகும். ஆனால் உண்மையில் பாட்டியல்களில் சொல்லப்படாத அனேகப் பிரபந்தங்கள் வழக்கில் உள்ளன.

நாம் இங்கு கருதுகின்ற காலப்பகுதியில் சிறப்பாகச் சில பிரபந்த வகைகள் வளர்ந்துள்ளன. முதல் இராசேந்திர சோழன் (1012 - 1044) சாளுக்கியரை வென்ற கொப்பத்து வெற்றி பற்றியும், வீரராசேந்திரன் (1065 - 70) மேலைச் சாளுக்கியரை வென்ற கூடல் சங்கமத்துப்போர் வெற்றி பற்றியும் பரணிகள் எழுந்துள்ளன என்ற குறிப்புக்கள் கிடைக்கின்றன. ஆனால் நூல்கள் கிடைக்கவில்லை. கிடைக்கின்ற முதல் பரணிநூல், முதல்

* இதன் காலத்துப் பிரபந்த மரபியல் 96 குறிப்பிடுகிறது.

குலோத்துங்க சோழன் பெற்ற கலிங்க வெற்றியைச் சிறப்பித்துக் கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டார் பாடிய கலிங்கத்துப்பரணி யாகும். இவரைப் பின்பற்றியே ஒட்டக்கூத்தரும் இரண்டு பரணிப் பிரபந்தங்கள் பாடினாரென்று அறிகின்றோம்; இவற்றுள் பிந்தியதாகிய தக்கயாகப் பரணியொன்றே இன்று கிடைப்பது. இத்தக்கயாகப்பரணியே, அடுத்ததாகிய 13ஆம் நூற்றாண்டில் மற்றொரு சிறப்பான பிரபந்தமான இரணியவதைப்பரணி தோன்ற வழிகாட்டியிருக்கிறது.

இலக்கியம் என்ற பகுதியில் ஒட்டக்கூத்தரையும் அவர் பாடிய தக்கயாகப்பரணியையும் ஆராய்ந்தோம். 'கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன்' என்று பாடலில் போற்றப்பெற்ற இவர் பாடிய கோவையோ அந்தாதியோ கிடைக்கவில்லையா யினும், உலாக்கள் மூன்று கிடைத்துள்ளன. இவற்றையும் இவர் பாடிய ஒரு பிள்ளைத்தமிழையும் முந்திய அத்தியாயத்தில் பார்த்தோம். தில்லையுலா என்ற சிறப்பான நூல் அபூர்த்தியாக இன்று கிடைக்கிறது. இது இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்துக்குரியது.

இனி, கோவை என்ற பிரபந்த வகையுள் அம்பிகாபதி கோவை இக்காலப்பகுதி என்று கருதத்தக்கது. கண்டன் கோவை என்ற ஒருநூல் இருந்து இறந்தது போலும்; கண்டன் - இரண்டாம் இராசராசன்.

மேலும் இக்காலத்துக்குரிய பிரபந்தமாகக் கிடைப்பன, அந்தாதிகள், அமுதனார் செய்த பிரபன்ன காயத்திரி என்னும் இராமானுச நூற்றந்தாதியை வைணவ இலக்கியப் பகுதியில் ஆராய்ந்தோம். மற்றது நெற்குன்றவாணர் பாடிய புகலூரந்தாதி. சடகோபரந்தாதி, சரசுவதியந்தாதி என்ற இரண்டும் இக்காலத் துக்குரியன என்று வழங்கும்.

பாட்டியலில் பெயர் சொல்லப்பெறாத இரு பிரபந்தங்கள் இங்கு கருதத்தக்கன. ஒன்று அலங்கார வகையில் கண்டனலங் காரம் என்று பெயர்பெற்றது; அகப்பொருள் பற்றியது. மற்றது, முத்தொள்ளாயிரம்போலச் செய்யப்பெற்றிருந்த வச்சத்தொள் ளாயிரம் என்பது. ஆனால் இவ்விரண்டும், ஒட்டக்கூத்தர் பாடிய தாகச் சொல்லப்பெறும் அரும்பைத் தொள்ளாயிரமும், இன்று கிடைக்கவில்லை.

இப்பிரபந்தங்களை இவ்வத்தியாயத்துள் ஆராய்வோம்.

# தில்லையுலா

## உலா இயல்பு

தலைவன் வீதியிற் பவனி வருதல் பெருங்காப்பியங்களிற் சிறப்பித்துச் சொல்லப்பெறும். அவ்வாறு வரும்போது ஏழு பருவ மகளிரும் கண்டு மயங்குவதாகப் புலவரால் புகழ்ந்து பாடப்பெறும் தனி நூல்வகை உலா எனப் பெயர்பெறும். இது கலிவெண்பாவால் இயன்றது. புறத்தே வருகின்ற உலாவாத லால் புறவுலா, உலாப்புறம் எனவும் வழங்கும். குலமகளிர் மயங்குவது அறமன்று ஆதலால், பொதுமகளிரே (பரத்தையர்) இவ்வாறு மயங்கினர் என்று ஆன்றோர் நூல் செய்வர். கோயில் திருவிழாக் காலத்தே தேவ கணிகையர் வீதி வழியே இறைவன் உலா வர, மகளிர் கண்டு மயங்கினர் என்று நூல் செய்தல் மரபு. பிற்காலத்தில் 96 வகை என்று கணக்கிடப்பட்ட பிரபந்த வகை யுள் இது மிகவும் பழமையான ஒரு வகையாகும்.

எட்டாம் நூற்றாண்டில் சேரமான் பெருமாள் பாடிய திருக்கயிலாய ஞான உலாவே காலத்தால் மிகவும் பழையது; இதுபற்றி ஆதியுலா என்றும் அந்நூல் சொல்லப்பெறும்; திரு வுலாமாலை என்றும் சொல்வதுண்டு. இறைவன் உலாவரும் போது, தலவரலாறு, சிறப்பு, பெருமானுக்குரிய ஆராதனை, தேருக்கு, எழுந்தருளல், உடன் வருவோர், மகளிர் குழாங்கள் கண்டு காமுறுதல் என்ற செய்திகள் உலாவின் பொருளாக அமையும். ஏழு பருவ மகளிராவார் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்போர். இப் பருவங்களுக்குரிய வயதும் இலக்கணங்கள் கூறும்.

உயிர்களெல்லாம் இறைவனுக்கு ஆட்பட்டவர்கள். ஆகவே இறைவனான நாயகன் உலா வர, உயிர்களாகிய நாயகியர் தத்தம் பக்குவத்துக்கேற்ப வெவ்வேறு நிலையில் அவசமுறுகின்றனர் என்றும் சொல்வது உண்டு; இதன்படி அவசமுற்றவர் ஆடவரும் பெண்டிருமே. அங்கவருணனை முதலியன கூறியது, உயிர்களைக் குறித்த புனைந்துரை. இவ்வாறு இறைவனைக் குறித்து எழுந்த உலா ஆதியுலா (8ஆம் நூற்றாண்டு) பிற்காலத்தில் அரசனைக் குறித்துப் பாடப்பெறும்போது, நிலை வேறுபடுகிறது. இது பற்றி முன்னுரையில் விளக்கினோம்.

'உலகியலை அறியாத இளம் பருவம் பேதைப்பருவம் என்றும், உலகியலை ஒருவாறு உணர்ந்தும் உணராமலும் உள்ளநிலை பெதும்பைப் பருவமென்றும், காம நுகர்ச்சிக்கு ஏற்புடையது மங்கைப் பருவமென்றும், அந்த நுகர்ச்சியில் பயின்றது மடந்தைப் பருவமென்றும், முதிர்ந்தது அரிவைப் பருவமென்றும், மகப்பேற்றையுடைய நிலை தெரிவைப் பருவமென்றும், காம நுகர்ச்சி தளரும் நிலை பேரிளம்பெண் பருவமென்றும் ஒருவாறு அவற்றின் இயல்புகளைக் கூறலாம்.'*

தலங்கள் தோறும் சிவபெருமானைப் புகழ்ந்து உலாப் பிரபந்தங்கள் எழுந்துள்ளன. முருகன் மீதும் திருமால் மீதும், தலைவர்கள் அரசர் வள்ளல் முதலியோர் மீதும், பிற்காலத்தில் உலாப் பாடப்பெற்றுள்ளது. ஆசிரியருடைய கற்பனைத் திறனுக்கேற்றபடி, தசாங்கம், அம்மானை, கழங்கு முதலான உறுப்புக்களும் சேர்த்துப் பாடப்பெறும்.

உலாவின் இலக்கணம் எல்லாப் பாட்டியல் நூல்களிலும் சொல்லப்பட்டுள்ளது. தொடர்ந்து அடிநிமிர்ந்து செல்லும் ஒரே கலிவெண்பாவினால் செய்யப்பெறுகின்றமையின் இது தொடர்நிலைச் செய்யுளும் ஆம் என்பர். இதனுள் தலைவன் பெயர் கூறப்படுதலாலும், அவனைக் கண்டு மகளிர் காமுறுதலாகிய ஒருதலைக் காமச்செய்திகள் மட்டுமே கூறப்படுதலாலும், இது பாடாண் திணைக்குரியதாய் இருப்பதோடு, புறப்பொருளைச் சார்ந்த பெண்பாற் கைக்கிளையுள் அடங்கும் என்பர்.

பெருங்காப்பியங்களில் தலைவன் உலா வருங்காட்சியைக் கவிஞர் புனைந்துரைத்தல் ஒரு சிறப்பான பகுதி. திருமணம் முடிபுனைதல், போர், வெற்றி முதலியவற்றின் பின் உலாவருதல் சொல்லப்பெறும். பெருங்கதையில் உதயணன் உலாவருதல் மிகவும் விரித்துச் சொல்லப்பட்டுள்ளது. அங்கு உத்தம மகளிரொழிய, மற்றைக் கன்னியர் காமம் துரப்புண்டு, கவினழிவெய்தினார் என்று ஆசிரியர் பாடுகிறார். சீவக சிந்தாமணியும் மகளிர் காமுற்ற செய்தி கூறுகின்றது. கம்பராமாயணத்தில், உலாவியற் படலத்தில் இராமபிரான் உலா வருங்கால் பேதை முதல் பேரிளம் பெண்கள் வரையுள்ள எழுபருவ மகளிரும் காமுற்றனர் என்று மரபையொட்டிச் சொல்லப்பட்டுள்ளது. எழு பருவச் செயல்களைச் சுட்டிப்பாடும் மரபைக் கொங்குவேளிர்

* டாக்டர் சாமிநாதையர், திருக்கழுக்குன்றத்துலா முகவுரை.

நீராட்டரவம் என்ற பகுதியில் பாடியிருத்தலாலும் அறியலாம். இவ்வேழினுள்ளும் பேதை உலகியலையோ காமத்தையோ உணராதநிலை, மங்கை முதலான பின்னைந்தும் உணர்ந்த நிலை. பெதும்பைப் பருவமொன்று உணர்ந்தும் உணராத நிலை. இதைப் புனைந்து பாடுதல் அரிதாதலின், 'பேசும் உலாவிற் பெதும்பை புலி' என்று ஒரு வழக்கும் எழுந்துள்ளது.

திருக்கயிலாய ஞானவுலாவை அடுத்து வந்தது, நம்பி யாண்டார் நம்பி பாடிய ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை (11ஆம் நூற்றாண்டு) இவ்விரண்டும் பதினொராம் திருமுறையில் காணப்பெறும். அடுத்து வந்தவை, விக்கிரம சோழன், அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கன், அவன் மகன் இரண்டாம் இராசராசன் ஆகிய சோழமன்னர் மூவர் மீதும் ஒட்டக்கூத்தர் பாடிய மூன்று உலாக்கள். தலைப்பில் குறிப்பிட்ட தில்லையுலா இம்மூன்று உலாக்களின் காலத்திலேயே தோன்றிய ஒரு சிறப்பான உலா என்று இனி நாம் காணலாம்.

**நூல்**

தில்லையுலா நூல் முழுமையும் இன்று கிடைக்கவில்லை; 244 கண்ணிகளே கிடைக்கின்றன; இவை தொடக்கத்திலிருந்து அரிவைப் பருவத் தொடக்கம் 9 கண்ணி வரை; எஞ்சிய அரிவைப் பகுதி, தெரிவைப் பருவம், பேரிளம் பெண் பருவக் கண்ணிகள் ஆகியன கிடைக்கவில்லை. இப்பகுதியைப் பண்டிதர் உலகநாத பிள்ளை தஞ்சை சரசுவதி மகால் சுவடி நிலையத்தில் கிடைத்த அபூர்த்தியான ஓர் ஏட்டிலிருந்து பிரதிசெய்து தமிழ்ப்பொழில் பத்திரிகையில் வெளியிட்டார். கிடைத்த இந்நூற் பகுதியானது, உலாப் பிரபந்த வரிசையில் மிகவும் சிறப்பான இடம்பெறு வதற்குரியது. நூல் பலர் கண்ணில் படாமையால் போலும், இதற்குத் தக்க ஆட்சி ஏற்படவில்லை.

இந்த நூல் மூன்று வகைகளில் சிறப்புடையது. ஒன்று இது ஆசிரியரின் இணையற்ற சிவபக்தியை எடுத்துக்காட்டுகிறது. இரண்டு, சில சரித்திர நிகழ்ச்சிகளுக்குச் சான்று பகர்கிறது. மூன்று, சிறப்பான பண்டைய ஒழுகலாறுகள் பல, வேறெங்கும் காண்பதற்கு இல்லாதவை, எடுத்துக்கூறுகிறது. இவ்வியல்பு களை மேலே குறிப்பிடுவோம்.

கிடைத்த நூற்பகுதியில் காப்புச் செய்யுள் இல்லை. முதல் வரியிலேயே சிவகாம சுந்தரியின் பெயர் வருகிறது. அம்மையார்

தாளமிட, பெருமான் தாண்டவமாடுவதை இரு முனிவரும் மாயனும் பிரமனும் கண்டு வணங்கி, 'பல்லுயிருங் காண நடித் தருள்' என்று ஏத்த, பெருமான் தில்லைவனத்தில் நடித்தார். நூபுரஒலி கேட்டு இமையோர் வந்து இறைஞ்சி, அஞ்செழுத் தெழுதிய கனக ஓடு அம்பலத்தில் வேய்ந்தார்கள்.

– தில்லைவனத்து

ஆனந்த நூபுரம்நின் றார்க்கும் ஒலிகேட்டு
வானின் றிமையோர்கள் வந்திறைஞ்சி – நான்மறையில்
ஆய்ந்த பொருளான அஞ்செழுத்தைச் செங்கனகப்
பூந்தகடு தோறும் புறத்தெழுதி – மேய்ந்து
திசைவிளங்கு நாமத் திருவம் பலத்தே
இசைவிளங்க நின்றாடும் ஈசன். 5–8

பன்றியைத் துரத்திவந்த அரசன் தில்லைவனம் அடைந்ததும் பன்றியும் குதிரையும் தானும் பொன்னானமை கண்டு, இங்கு மாமறையோர் மூவாயிரவரைக் கொண்டுவந்து குடியேற்றினான்; அவருள் ஒருவர் காணாது போகவே, பெருமான் தானே தில்லை மூவாயிரத் தொருவன் என்று காட்டினார். இப்பெருமான் நால் வர் முதலானோர்க்குத் தம்பிரான். திருநீற்றினொளி விளங்கச் சோழன் கண்ட திருநாளில் ஒருநாள் சிவாகமப்படி பூசை பெற்று, எதிரம்பலத்தில் அம்பிகையுடன் தங்கியிருந்து பின் பள்ளியுணர்ந்து, அணிகளும் மாலையும் புனைந்தார். திரு மாலும் சண்டேசரும் தேவரும் போற்ற, மூவாயிரவர் முதலியோர் துதிக்க, திருவாடு தண்டேறி மூன்று வாசலுங்கடந்து திருத்தேரே றினார். மாலோன் குபேரன் வேலன் வேதா ஐங்கரன் மாரன் முதலியோர் தத்தம் ஊர்திகளில் உடன் வந்தனர். நால்வரும் முப்பத்து முக்கோடி தேவரும், விறன்மிண்டர் முதலான நாற்பத்தெண்ணாயிரம் திருநீற்றுத் தொண்டர் சேரமான் வரகுணன் ஆகியோரும் வந்தார்கள். திருநீற்றுச் சோழன் படிவமும் குதிரைமீது வந்தது. கண்ட மகளிர் பெருமானைக் காமுற்றுப் பலவாறாக அரற்றுகிறார்கள். இவ்வாறு சொல்லி முடித்துப் பின் ஆசிரியர் பேதை முதலான எழு பருவ மகளிரின் நிலையை வருணிக்கிறார். பேதையின் வருணனையும் பெதும்பை யின் வருணனையும் சிறப்பானவை. பெதும்பைப் பருவத்துக் கழங்காடலையும் மங்கைப் பருவத்துத் தசாங்கத்தையும் கூறு கிறார். இதுவே இந்நூலின் மேற்போக்கான பொருளமைதி.

ஆசிரியர் தமது சிவபக்தி முதிர்ச்சியைப் பல இடங்களில் புலப்படுத்திச் செல்கிறார். ஆலகால விடத்தைச் சிவபிரான் உண்ண மனம் ஒருப்பட்ட தேவர் செயலைப் பொறுக்கலாற்றாது,

– ஆழிவாய்
ஒப்பற்ற வல்விடத்தை ஊட்ட மனமிசைந்த
முப்பத்து முக்கோடி மூர்க்கர்.

என்கிறார். சமயாசாரியர் நால்வரையும் மிக்க அழகாகப் போற்று கிறார். சம்பந்தர் - புகலிப்பிள்ளை, கவுணியன், பரசமயவாது வென்ற பிள்ளை, திருமுத்தின் பந்தர்க்கீழ்வந்த பாலன்; அப்பர் - வாகீசர், வஞ்சனைகள் வென்றார்; சுந்தரர் - தூது சென்றுவா என்ற தோழர், சேரன் தன் நண்பர்; சுந்தரர்க்குத் தன்னந்தனித் தூது தாள்சிவக்கப் போனார்; மாணிக்கவாசகர் - கோதிலியாம் தென்னற்கு வாய்த்த திருவாதவூரர், பாரிற் பெருவாழ்வையெல் லாம் பெருந்துறையில் நீத்த திருவாசகப் புலவன். மூவர் உரைத்த தமிழ் என்பார். தில்லைவாழந்தணரைப் பலமுறை குறிப்பிடு கிறார். சண்டேசரைத் தந்தையிருதாள் துணித்த சைவத் தவமுனி என்பார். சேரமான் - ஆதியுலாச் சொன்ன நரபதி, தெய்வ உலாச் சேரன்; வரகுணபாண்டியனை இரண்டிடங்களில் சிறப்பித்துக் கூறுகிறார். காரைக்காலம்மையையும் குறிப்பிடுகிறார்.

இந்நூலாசிரியர் சிறுத்தொண்டர் சரித்திரத்தில் பெரிதும் ஈடுபட்டவர் போலும்:

– முடித்தொண்டன்
கொண்டிருந்த பாலகனைக் கூசாமல் கூறாக்கக்
கண்டிருந்த செங்கமலக் கண்மூன்றும்.

என்று பெதும்பை கழங்காடு மிடத்து மூன்று என்ற எண்ணுக் குரிய பொருளைக் கூறியவர், மீண்டும் மங்கைப்பருவம் கூறுங் கால், மங்கையின் துயரம் அறியாதவர் என்று கூறும் தாயின் கூற்றாகப் பின்வருமாறு பாடுகிறார் (196 - 202).

பைங்காட்டி லஞ்சப் பரிபுரம்நின் றோலமிடச்
செங்காட்டில் முன்போன சேவடியும் – முன்காட்டில்
மாதவம் செய்திருந்து வாழ்வா ரகத்திற்போய்ப்
பாதகம் செய்த பவளமும் – காதலித்துப்
பெற்றோர் பிடித்தரியும் பிள்ளைக்காற் பூச்சதங்கைச்
சிற்றோசை கேளாத் திருச்செவியும் – பெற்றோர்

சிறுசந்து மென்குறங்கு செய்தார்க ளென்றும்
கறிகண்டு கூசாத கண்ணும் – பிறவிதனில்
பற்றினோர்க் கெல்லாம் படைக்கும் தலையிறைச்சி
பெற்றிலோ மென்னும் பெரும்பசியும் – சற்றிரங்கா
வன்னெஞ்சமும் உடையான்வல்வினையேன் பெற்றெடுத்த
அன்னம் படுவ தறிவரோ – முன்னம்
அரிந்த மகவை அழைப்பித்தார் மீண்டும்
புரிந்து நகை செய்து போனார்.

இங்ஙனமே மடந்தையை வருணிக்கும்போது சிவபிரான் பற்றிய செய்திகளை உவமையாக வைத்தே வருணிக்கிறார்; சங்கரன் சடாமுடிமேல் திங்கள் அனைய திருநுதலாள், புலியூர் போற்றலர்தம் நெஞ்சினும் இருண்ட கார்குழலாள்.

கண்ணிகள் தோறும் இவ்வாறே பக்திச்சுவை ததும்புகின்ற கருத்துக்களையும் சொல் தொடர்களையும் காண்கிறோம். இவர் திருநீற்றினிடத்திலே அன்பு மிக்கவர் என்பதைப் பல இடத்தும் காண்கிறோம். சோழமன்னர் பெயர்களில் பல இருக்க, திருநீற்றுச் சோழன் என்ற பெயரையே இவர் ஆளுகிறார். விறன் மிண்டரைக் குறித்த இடத்தில் அடியார்களைத் திருநீற்றுத் தொண்டர் என்கிறார். சீர்காழியைக் குறிப்பிட எண்ணிய இவர்,

– திருநீற்றின்
வென்றி விரும்பி மீனவர்கோன் நன்னாட்டில்
சென்ற புலவன் திருப்பதி

என்று பாடுகிறார்.

அடுத்து, இந்நூலால் தெரியவரும் பல புதிய வழக்காறுகளும், ஒழுகலாறுகளும், பெருமானை மன்றுடையான், ஆதிரையான் என்றுகூறும் இவர், சில இடங்களில் ஊருடையான் என்று வேறுஅடை எதுவும் இன்றியே குறிப்பிடுகிறார். ஊர் எனப்படுவது உறையூர் என்பது பழஞ்சொல்; இவருக்கு ஊர், புலியூர் ஆகிய தில்லையாயிற்று. உடன் வந்தோரைக் கூறுமிடத்து சம்பந்தர் முத்துப்பந்தர் நிழற்றவும், மற்ற மூவரும் பொற்றேர் மீதும், வந்தனர் என்று கூறுகிறார். திருநீற்றுச்சோழனை இரண்டிடங்களில் குறிப்பிடுகின்றார். உடன் வந்தோருள் ஒருவனாகத் திருநீற்றுச்சோழனைக் கூறுகிறார்; இங்கு சோழன் படிவம் குதிரை வாகனத்தின் மீது எழுந்தருளுவிக்கப் பெற்றதென்று கருதவேண்டும். திருநீற்றுச்சோழன் - முதற் குலோத்துங்க

சோழன். உடன் வந்தோருள் திருவேளைக்காரரைக் குறிப்பிடு கிறார்; வேளைக்காரராவர், மெய்காப்பாளர்; தலைவனுக்குத் துன்பம் வருங்காலத்து உயிரையும் விடத் துணிந்தவர்கள். ஓரிடத்தில் விறன்மிண்ட நாயனாரைக் குறிப்பிடுகிறார். இந் நாயனார் தேவாசிரிய மண்டபத்திருந்த சிவனடியார்களை வணங்காது சென்ற சுந்தரமூர்த்தியைக் கண்ணுற்று, 'இவ்வாறு சென்ற வன்தொண்டனும் புறகு அவனையாட்கொண்ட சிவ பிரானும் புறகு' என்று கூறினார்.

– தப்புரைக்கில்

நாதனையும் பின்னென்னும் நாற்பத்தெண் ணாயிரவர்
சோதித் திருநீற்றுத் தொண்டரும்.

என்பார்; இங்கு மண்டபத்திலிருந்த தொண்டர் நாற்பத்தெண் ணாயிரவர் என்பது பெரியபுராணத்தில் காணாத புதுச்செய்தி. நாற்பத்தெண்ணாயிரம் இருடிகள் என ஒரு வழக்கு உண்டு.*

இனி, முதல் பராந்தகசோழன் தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்தான் என்று சரித்திரம் கூறும். இவ்வுலா ஆசிரியர், இமையோர் வந்து இறைஞ்சி வேதத்தின் பொருளான திருவைந் தெழுத்தையும் பொற்றகட்டிலே எழுதி அம்பலத்தே வேய்ந் தார்கள் என்று கூறுகிறார். 'தில்லைவனத்து நூபுரம் ஆர்க்கும் ஒலிகேட்டு இமையோர் அஞ்செழுத்தைச் செங்கனகப் பூந் தகடுதோறும் எழுதிப் புறத்து வேய்ந்தார்கள்' என்ற அடிகள் முன்காட்டப்பட்டன. மற்றோரிடத்திலும் 'திருவெழுத்தால் சேணாடர் பொன்மேய்ந்த சிற்றம்பலம்' என்று கூறுகிறார். இவ் வாறு இவர் குறிப்பிடுவது மிகவும் சிறப்பான ஒரு புதிய செய்தி.

**காலம்**

இனி, சரித்திரக் கண்கொண்டு நோக்கும்போது இவ்வுலா வின் காலத்தை நிச்சயிப்பதற்கும் சோழர் வரலாற்றுச் செய்தி களுக்கு ஆதரவு அளிப்பதற்குமான சில செய்திகள் இதன்கண் அமைந்துள்ளமை புலப்படும். சிறப்பானதொன்று, தில்லைத் திருமாலைக் கடலிற் கிடத்திய செய்தி:

– தண்துழாய்

மாலைத் திகிரி மரகதமே கந்துயில
நீலக் கடலளித்த நேரியனும். 64–5

---

* இதைத் தக்கயாகப் பரணி தாழிசை 219 உரை, திருவால வாயுடையார் திருவிளையாடல், திருவானைக்கா உலா முதலியவற்றில் காண்க.

*'துழாய் மாலையணிந்த சக்கரமேந்திய பச்சைப் பசுங்கொண்டல் துயிலும்படி நீலக்கடலுக்கு அனுப்பிய சோழன்' என்று ஆசிரியர் திருமாலை அழகான சொற்களால் குறிப்பிட்டுப்பாடுகிறார். தில்லைத் திருமுற்றத்தில் இடம்போதாமையால் அங்கிருந்த திருமாலை இரண்டாம் குலோத்துங்கன் பெயர்த்துக் கடலில் எறியச் செய்தான் என்பது ஒரு சரித்திர நிகழ்ச்சி. அக்காலத்தில் எழுந்த எல்லா நூல்களும் இந்நிகழ்ச்சியைச் சிறப்பித்தே கூறு கின்றன. உடன் இருந்தவரான ஒட்டக்கூத்தர், தாம் பாடிய குலோத்துங்க சோழன் உலாவிலும் இராசராசன் உலாவிலும் தக்கயாகப் பரணியிலும் இதை விளங்கப் பாடுகிறார்.*

தில்லைத் திருமன்றின் முன்றில் சிறுதெய்வத்
தொல்லைக் குறும்பு தொலைத்தெடுத்து.

*என்பது குலோத்துங்க சோழன் உலா, கண்ணி 39, இனி இராச ராசன் உலா 33:*

பொன்னிற் குயிற்றும் புறம்பிற் குறும்பனைத்தும்
முன்னர்க் கடலகழின் மூழ்குவித்த – சென்னி.

*தக்கயாகப் பரணி, தாழிசை 777 இதை இன்னும் நன்றாய்க் கூறும்:*

முன்றிற் கிடந்த கருங்கடல் போய்
  முன்னைக் கடல்புகப் பின்னைத் தில்லை
மன்றிற் கிடங்கண்ட கொண்டல் மைந்தன்
  மரகத மேருவை வாழ்த்தினவே.

*(இங்கு கொண்டல் குலோத்துங்கன்:* மேரு அவன் மைந்தனான இரண்டாம் இராசராசன்.)*

*'விஷ்ணுக்கள் கடலிலே யோக நித்திரை கொண்டருளும் வரைச் சூரபன்மாவைச் சுட்டி தேவசேனாபதிப் பிள்ளையார் கடலைக் கலக்கிப் புறப்படவிடக் கடலின் சிலுகற்றது. இன்னம் அக்கடலை எனக்கே தரவேண்டும் என்று திருச்சிற்றம்பலம் திருமுற்றத்திலே இடங்கெடாமே, வரமும் பெற்றதாக இடமும் விரிந்ததாகப் பின்னையும் அக்கடலிலே போகவிட்ட குலோத்துங்க சோழதேவர்' என்ற அதன் நயமான உரையும் காண்க. இச்செய் தியை இராமானுசார்ய திவ்விய சரிதை பின்வருமாறு கூறும்.*

---

* *கொண்டல் என்ற சொல் குலோத்துங்கன் கருநிறமுடையவன் என் பதைக் காட்டும். 12 நூ. பாகம் 1, 296ஆம் பக்கம் பார்க்க.*

அம்பொற் கொடைச்சகர ஞாயிரத்தின் மேனாற்பத்
தொன்பதாம் வர்ஷத் துயர்தில்லைத் – தென்பாலிற்
சென்னி குலோத்துங்கன் சித்திரகூ டத்திருமால்
தன்னை யலையெறிநாள் தான்.

இது நிகழ்ந்த காலம் சகம் 1049 என இந்நூல் கூறுகின்றது. அதாவது கி.பி. 1127 ஆகும்; இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலம் கி.பி. 1133-50 என்று ஆராய்ச்சியாளர் முடிவு செய்திருக்கிறார்கள்; எனவே சரிதை குறிப்பிடும் ஆண்டு; எல்லையில் ஏதேனும் பிழை இருத்தல் கூடும்; சரித்திரச் செய்தியில் பிழை யில்லை. அல்லது குலோத்துங்கன் இளவரசராயிருந்தபோதே இச்செய்தி நிகழ்ந்திருக்கலாம்.

இவ்வாறு தில்லையுலா ஆசிரியர் திருமாலுக்குக் கடலளித்த நேரியனும் வந்து அடிபோற்றுமாறு பெருமான் எழுந்தருளினார் என்று கூறும்போது, தாம் நேரே கண்ட செய்தியைப் பாடுகிறார் என்றே நாம் கருதவேண்டும்; இது பழங்காலக் கதையன்று, உடன் நிகழ்ச்சியேயாகும். ஆதலால் இவ்வுலாப் பாடினார் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தே வாழ்ந்தவர் என்று முடிவு செய்யவேண்டும்.

இனி உலா திருநீற்றுச்சோழன் என்று இரண்டு இடங்களில் குறிப்பிடுகிறது. முதல் இடம் முன்னரே குறிப்பிட்டோம். திருநீற்றுச்சோழன் படிமம் போர்மாவின் மீது வந்தது; மற்றோரிடத்தில் கருடன் மிசையே திருமாலும் துங்கப்பரி மிசையே சோழனும், ஓதிமத்தின் மீதே நான்முகனும் வந்தனர் என்று கூறும்போதும், திருமால் சோழன் நான்முகன் ஆகியோர் படிமங்கள் என்றே பொருள்கொள்ள வேண்டும். இங்கு குறிப்பிடப்பட்ட சோழன், திருநீற்றுச்சோழன் என்று முதலில் பெயர் பெற்றிருந்த முதற்குலோத்துங்க சோழனாவான். மற்றோரிடத்தில் அரசர் மூவருக்கும் தம்பிரான் என்று கூறும்போது, வரகுணனாம் செய்ய தமிழ் மாறன் தெய்வவுலாச் சேரன் துய்ய திருநீற்றுச் சோழன் என்று கூறுகிறார். இவற்றால் இவர் சோழ பரம்பரையில் கொண்டிருந்த பேரன்பை நன்கு உணரலாம். இக்குலோத்துங்க சோழனுடைய பேரனாய் வாழ்ந்த இரண்டாங் குலோத்துங்கன் காலத்தே சேக்கிழார் பெரியபுராணம் பாடினார். அவனும் திருநீற்றுச்சோழன் எனப் பெயர் தரித்துக் கொண்டான்; எனினும் முதற்குலோத்துங்கனுக்கு இப்பெயர் அதிகமாய் வழங்கிற்று; திருநீற்றுச் சோழநல்லூர் என்றே

அவன் படை வீரர்களுக்குத் தந்த ஊர்களுக்குப் பெயரிட்ட செய்தி சாசனங்களால் அறியலாம். ஆகவே இவ்வாறு அக்காலத்தில் பிரசித்தி பெற்றிருந்த பெயரை அச்சோழன் பேரனான இவனும் தான் மேற்கொண்டான்; கொண்டதோடு பாட்டன் உருவச் சிலையை நடராசப் பெருமான் விழாவில் உலா வரவும் செய்தான் என்று இப்போது அறிகிறோம்.

மேலும், இரண்டாம் குலோத்துங்கன் தில்லை அம்பலவாணரிடம் எல்லையற்ற பேரன்பு பூண்டவன் என்பதை ஒட்டக்கூத்தர் உலாவிலும் பிள்ளைத்தமிழிலும் பலமுறை கூறுகிறார். 'தில்லை நடராசப் பெருமான் திருவடித் தாமரையிலுள்ள தேனைப்பருகும் வண்டுபோன்றவன்' என்று திருவாரூர்க் கல்வெட்டு இவனைக் கூறும். சமயாசாரியர் திருவுருவங்களைத் திருவாரூர்க் கோயிலில் எழுந்தருளுவித்து மிகுதியாக நிபந்தங்களும் அமைத்தான். உலா ஆசிரியர் பேதையை வருணிக்கும் போது தில்லையைப் பாடவந்தவர், 'சென்னிப் பெருக்காறுடைய பெருமான் தென்ஆரூர்த் திருக்கா வணத்துலவாத் தென்றல்' (121 - 2) என்று கூறுகிறார். இக்குலோத்துங்கன் ஆரூரில் செய்த பணிகளையும் உணர்ந்த ஆசிரியரே இவ்வாறு பாடுகிறார் என்று நாம் முடிவு செய்வது பொருந்தும். காலம் நிகழ்காலம் என்பது இதனாலும் தெளிவு.

அன்றியும் பேரம்பலத்தை இவர் எதிரம்பலம் என்று கூறுவதும் (44) கருதத்தக்கது. இவ்வழக்கு சோழர் காலத்தில் இருந்தது; பின்னர் இல்லை. இந்நூலில் முதலியார் என்ற சொல் பயின்றிருப்பது குறிப்பிடத்தக்கது:

முன்நின் றமரரெல்லாம் சேவிப்ப முதலியார்
பொன்னின் திருத்தேர்மேல் போதுதலும் – நன்னுதல்தன்
அங்கைமலர் சிவப்ப ஆடங் கழங்கொழிந்து
செங்கனக வீதியின்கட் சென்றணுகி. 138 – 9

இங்கு முதலியார் - நடராசப்பெருமான். முதலியார் இறைவன் என்ற பொருளில் வருவது ஓர் அரிய பிரயோகம். இச்சொல்லுக்கு இன்றுள்ள பொருளை நாம் அறிவோம். 'மூவாத பேரன்பின் மூவர் முதலிகள் - தேவாரம் செய்த திருப்பாட்டும்' என்பது ஏகாம்பரநாதருலா (14 நூ); திருவானைக்காவுலாவில் காளமேகப் புலவர், 'பதினெண் மடத்திற் பயிலும் முதலிகளும்" (159) என்று

பாடுகிறார் (14 - 15 நூ.) இவற்றுக்கும் முன்னமே சேக்கிழார் கண்ணப்பநாயனார் புராணத்தில், 'எங்கள் முன் பெரு முதலியல்லையோ?' என்று காடன் கண்ணப்பரை வினவுவதாகப் பாடுகிறார் (12 நூ.) இங்கு முதலி - முதல்வன். இத்தில்லையுலா வில், முதலியார் என்றசொல் இறைவனையே குறிப்பதாக வந் துள்ளது. இது ஒரு பழமையான பிரயோகமென்பதில் ஐய மில்லை; இது இந்நூலின் காலம் சேக்கிழார் காலத்தையொட்டி யிருக்கலாம் என்ற கருத்தை வலியுறுத்துகிறது.

'தில்லை உலாவானது திருநீற்றுச் சோழனைக் குறிப் பிட்டமையால் இந்நூல் முதற்குலோத்துங்க சோழனுக்குப் பிற்பட்டது. விக்கிரசோழன் இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆகியோருடைய தில்லைத் திருப்பணிகள் கூறாமையால் இவர் களுக்கு முற்பட்டது; சிறுத்தொண்டர் கோட்புலி பரவைக் காகத் தூது சென்றமை, சம்பந்தர் பாண்டிநாடு சென்றமை ஆகியவை இந்நூல் குறிப்பிடுதலால், சேக்கிழார் இந்நூலைப் படித்தே தம் புராணத்துக்கு வேண்டிய சில செய்திகளைத் தெரிந்துகொண்டார்' என்று மா. இராசமாணிக்கனார் தமது சேக்கிழார் என்ற நூலில் எழுதியிருக்கிறார்; இது சிறிதும் பொருந்துவது அன்று. சேக்கிழார் புராணம் பாடிய பின்னரே அப்புராண வரலாறுகள் பிரசித்தமாயின. அக்கதைகளையே உலாக்காரர் சொன்னார் என்று நாம் கருதவேண்டும். 'மரகத மேகம் துயில - நீலக்கடல் அளித்த நேரியன்' என்று சிறப்பாய் உலா ஆசிரியர் கூறுதலால், தில்லைத் திருமாலை இரண்டாம் குலோத்துங்கன் அகற்றிய செய்தி மிகவும் சிறப்புடையதென அக்காலத்தவரால் கருதப்பட்டது அதை உலாவாசிரியரும் உடனிருந்து நேரில் கண்டு இவ்வாறு பாடலில் அமைத்தார். இவர் இந்நிகழ்ச்சிக்கு முந்திய முதற்குலோத்துங்கன் காலத்தில் இருந்திருக்க முடியாது.

உலாவாசிரியர் சேக்கிழாரின் புராணத்தை நன்கு தெரிந்து உலாப்பாடுகிறார் என்பதை விளக்க ஒரு குறிப்புத் தருவோம். சிறுத்தொண்டர் புராணத்தில் பைரவவேடத்தாரை உபசரிக்கப் புகுந்த திருவெண்காட்டு நங்கையார், 'தலை இறைச்சி அமுதுக்கு ஆகாது எனக் கழித்தோம்' என்றார். ஆனால் அவரோ, 'அது வுங்கூட நாம் உண்பது' என்றார். (பெரியபுராணம் 3732) இக் கருத்தை யுணர்ந்து உலாவாசிரியர், 'பிறவிதனில் - பற்றி னோர்க்கெல்லாம் படைக்கும் தலையிறைச்சி - பெற்றிலோம்

என்னும் பெரும்பசியும்' (200) என்ற வரிகளில் பாடுகிறார். இதனால் இவர் சேக்கிழாருக்குப் பின்வந்தவர் என்பதைத் திட்ட மாகக் கூற முடிகிறது. ஆதலால் உலாவின் காலம் குலோத்துங்கன் காலத்திறுதி (1150) அல்லது சற்றுப் பிற்பட்டுக் கூட இருக் கலாம். சேக்கிழார் பெரியபுராண விரிவுரையைச் சிறப்பாக ஓராண்டுக் காலம் செய்தார் (சுமார் 1145) என்பது வரலாறு. அவ்வுரையை நேரில் கேட்டே இப்புலவர் இவ்வாறு அமைத்து இருக்கலாம். நூலின் நயத்தையும் பக்திச் சிறப்பையும் செய்தி களின் அருமையையும் கருதியே இதை ஒட்டக்கூத்தர் பாடி யிருக்கலாம் என்ற ஐயத்தைத் தெரிவிக்கிறோம்.

## நெற்குன்றவாணர்

### வரலாறு

இவர் இன்றைய சென்னைக்கு அருகிலுள்ள நெற்குன்றம் என்ற ஊரினர். முதல் குலோத்துங்கசோழன் காலத்தில் வாழ்ந் தவர். வேளாளருக்குத் தலைவராய் இருந்த களப்பாளர்* என்ற சிற்றரசர் குடும்பத்தில் பிறந்தவர். நெற்குன்றங்கிழார் என்றும் வழங்கப் பெற்றார். பெரியபுராணம் கூறும் அறுபத்து மூன்று நாயனாருள் ஒருவரான கூற்றுவநாயனாரும் சிவஞானபோதம் அருளிய மெய்கண்ட தேவரும் போன்ற புகழ் படைத்த பலர் இந்தக் களப்பாள மரபில் தோன்றியவர் என்பது அறியத் தக்கது. இவர் கல்வி கேள்விகளால் மிகவும் சிறப்புற்று விளங்கி, தாமும் சிறந்த கவிஞராய், கற்றோரை ஆதரிக்கும் வள்ளலாய் வாழ்ந்தார். வாணர் இவரது இயற்பெயர் போலும். தொண்டை நாட்டில் முதலியார் என்பது பெருவழக்கு.

தம்மிடம் பொருள் விரும்பிவரும் புலவர் சிலர் வாய் திறந்து கேட்பதற்கு நாணுவர் என்று எண்ணிய நெற்குன்றவாணர், தம் வீட்டின் முற்றத்தில் மணலைப் பரப்பி, அதில், வருவோர் தம் அவாவினை எழுதிக் காட்டினாற்போதும் என்றுகூட ஓர் ஏற் பாடு செய்திருந்தார்; இதை மறைந்திருந்து பார்த்துத் தக்கபடி பொருள் வழங்குவது இவர் வழக்கம் என்பர்.

---

* களப்பாளர் வேறு, களப்பிரர் வேறு. களப்பாளர் பண்டைத் தமிழ்க்குடி, சைவமரபு; களப்பிரர் அன்னிய நாட்டினர், மொழியினர், அன்னிய மதத்தினர் (சைனர்).

உணலைப் பசும்பொன் முதலா னவற்றை உதவிப்பின்னும்
குணலச்சை உள்ளவர் கேட்கவும் கூசுவர் சொல்லெனவே
எணலைக் கருதி எழுதிவைப் பீரென இல்மறைந்து
மணலைப் பரப்பிய முன்றிலுள் ளான்தொண்டை மண்டலமே.

என்று தொண்டைமண்டல சதகம் இதைக் குறிப்பிடும். ஒரு சமயம் வல்லை (தொண்டை நாட்டிலுள்ள திருவல்லம்) என்ற ஊரிலிருந்த நம்பி காளி என்ற யாதவ குலப்புலவர் இவரைக் காணவேண்டி வந்தார். அப்போது இவர் வெளியே சென்றிருந் தார். 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்று பழமொழி சொல்வதுபோல, இவர் வீட்டுப் பணிப்பெண்ணா யிருந்தவ ளொருத்தி, புலமை நிரம்பியவளாய் இருந்தாள். அவள், வந்த புலவரைத் தக்கபடி வரவேற்று, அவர் மனம் உவக்கும் வண்ணம் பரிசில் தந்து உபசரித்தாள். அந்தநேரம், வெளியிலிருந்து திரும்பி வந்த நெற்குன்றவாணர், புலவரையும் அவருக்குத் தம் பணிப்பெண் செய்த உபசாரத்தையும் கண்டு மிகவும் மகிழ்ந்ததோடன்றிப் பின்னும் வேண்டும் பொருள் களை நல்கினார். நம்பி காளியின் கவிதைப் பண்பால் பெரிதும் மனம் கவரப்பட்டவராய், தம்மையுமே அவருக்கு அடிமைப் படுத்திக் கொண்டார். இதைக் குறிப்பிட்டு அவரே பின்வருமாறு பாடினார்:

கற்குங் கவிவல்ல யாதவர் கோன்நம்பி காளிக்குயாம்
விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்
பொற்குன் றமும்புகழ்க் கங்கா நதியும் பொதியமும்போல்
நெற்குன்றமும்நம் மரபுமெந் நாளும் நிலைநிற்கவே.

இச்செய்தியைத் தொண்டை மண்டல சதகமுடையார் அப்படியே கூறுகிறார் (83):

பன்னுந் தமிழ்க்கவன் மாமனை தாதி பரிசளிப்ப
முன்நம்பி காளிக்கு நெற்குன்ற வாண முதலியென்போன்
பின்னுஞ் சிலபல பொன்னுங் கொடுத்துதன் பேர்நிறுத்த
மன்னுந் தமிழுமுரைத்தான் அவன்தொண்டை மண்டலமே.

அக்காலம் தொண்டை நாடு சோழ மன்னர் ஆதிக்கத்தில் இருந்து வந்தது. இந்நெற்குன்றம் சயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்து நெற்குன்றம் என்று வழங்கும். அங்கிருந்த

பெருநிலக்கிழாரான நெற்குன்றவாணர், களப்பாளராயர் எனவும் பெற்றார். ஒரு சமயம் அங்கு நிலவிய பஞ்சத்தின் கொடுமை யால் மன்னனுக்குச் செலுத்த வேண்டிய திறையை இவரால் செலுத்த முடியவில்லை. அதனால் மிக்க வருத்தமடைந்து இவர் தம் வழிபடு கடவுளாகிய திருப்புகலூர்ப் பெருமானைக் குறை யிருப்பதற்காக அங்கு சென்றார். திறை கொடாமையால் இவரைச் சிறையிலிடுமாறு அரசன் ஆணை பிறப்பிக்கவே, ஏவலர் இவரைத் திருப்புகலூர் ஆலயத்திற் கண்டு மன்னன் ஆணையைக் கூறினர். இவர் இறைவனை வணங்கிவிட்டு வருவ தாகச் சொல்லி வழக்கம்போல நீராடிக் கோயிலினுட் புகுந்து முதலில் ஞான விநாயகரைப் பணிந்து அவர் சந்நிதியில் ஒரு பாடலைப் பாடினார்.

உரைசெய் மறைக்கும் தலைதெரி யாஒரு கொம்பையென்றே
பரசு மவர்க்குப் பெருநிழ லாக்கும் பழனமெல்லாம்
திரைசெய் கடற்றுறைச் சங்க முலாவுந் திருப்புகலூர்
அரசி னிடத்து மகிழ்வஞ்சி யீன்றவோர் அத்திநின்றே.

அக்கோயில் தளிப் பெண்களிலொருத்தி மிக்க புலமையுடை யவள். இப்பாடலைக் கேட்டுக்கொண்டிருந்தாள். வந்தவரையும் அவர் பொலிவையும் பாட்டின் பொருளையும் ஊன்றி நோக்கிய அவள், ‘இப்பாடல் ஓர் அந்தாதிக்குக் காப்புச் செய்யுளாக அமையலாமே!’ என்றாள். வாணர் கேட்டார்; சொல்லியவள் ஒரு பெண் என்பதையும் கண்டார். தண்டலாளன் ஒறுக்கின்ற துன்பத்தில் வேதனையுற்றிருந்தபடியால் அவர், ‘அந்தாதிக்குக் காப்பானால் அரசிறைக்குப் பொருளாகுமா?’ என்று கூறினார். இதைக்கேட்ட அப்பெண், இவருடைய நிலையை விசாரித்துத் தெரிந்துகொண்டு, இவர் கட்டவேண்டிய அரசிறைத் தொகை யைத் தானே செலுத்திவிட்டு அரச தண்டனையினின்றும் இவரை மீட்டாள். அவளுடைய செயலுக்கு நன்றி பாராட்டும் முகமாக வாணர் அவள் குறிப்பிட்டபடியே இச்செய்யுளைக் காப்புச் செய்யுளாகக் கொண்டு ‘பூக்கமலம்’ என்று தொடங்கிச் சிலநாளில் திருப்புகலூரந்தாதி நூறு பாடல் பாடி முடித்தார்.

புலவர் புராணம் பாடிய தண்டபாணி சுவாமிகள் நெற்குன்ற வாணர் சரித்திரத்தை முப்பது பாடல்களாகப் பாடியிருக்கின் றார். அதனுள் பல வேற்றுமைகள் காணப்படுகின்றன. வாணர் மீது பொறாமை கொண்ட ஒரு கயவன் ‘ஒரு நாளேனும் உன்னை

என்னிடம் அடிமையாக்குகின்றேன் என்று சொல்லியிருந்தும், வாணர் கவிச்சுவை நுகர்தலிலேயே பொழுதுபோக்கி, தம் பெருஞ்செல்வம் முழுமையும் தீர்த்தார். அப்போது அம்பிகாளி என்ற ஒரு புலவன் வந்து இவர் மீது பாடல் பாட, பொருள் இல்லாமையால் இவர், 'என்னை இன்னானிடம் கொண்டு போய் அடிமையாக விற்றுப்பொருள் கொள்வாயாக' என்று கூறினார். அவன் அவ்வாறே பொருள் பெற்றுச் சென்றான். வாணனுடைய மனைவி உணவு கொள்ள அழைத்தபோது இவர் 'அம்பிகாளிக்கு இன்று யான் விலையானேன்' என்று சொல்லியனுப்பினார். அந்நேரம் தொண்டைமான் சேவகன் இவரை அடுத்துத் திறை அளிக்கும்படி வற்புறுத்த, அடிமை கொண்டவனும் இவரை விட்டுவிட, இவர் தொண்டைமான் முன் சென்றார். அவன் இவரைப் பார்த்து 'நீர் அளவாகப் பொன் ஈந்திருந்தால் மந்தநிலை வந்திராது' என்றுகூறித் தொண்டை நாடு கடந்து சோழநாடு கொண்டுபோய் விட்டுவிடுமாறு சொன்னான். அவ்வாறே இவரும் வெள்ளாறு கடந்துவந்து, தில்லை முதலான தலங்களை வணங்கிப் புகலூர் பணிந்து, அங்கு பாடல் பாடினார். தளிப்பெண்டு இவருக்காகத் தரவேண்டிய தொகையைத் தந்தபிறகு இவர் திரிபந்தாதி பாடி முடித்தார். மன்னன், பொருளைப் பெறாமல், 'இதையும் உம் நாட்டையும் ஊரையும் நீரே பெறுக' என்று கொடுத்துவிட்டான்.

இவ்வாறு இவர் அந்தாதி பாடிய பிறகு மீண்டும் நல்ல செல்வாக்கோடு மன்னன் அவையில் வாழ்ந்திருந்தார் என்று அறிகிறோம். இரண்டாம் குலோத்துங்கசோழன் காலத்தில் அவனது அவையில் பெரிதும் மதிக்கப்பெற்ற புலவர்களுள் ஒருவராய் இவரும் விளங்கினார். அங்கு அப்போது ஒட்டக்கூத்தர் முதலியோர் இருந்தனர். இவரும் அப்போது முதிய பிராயம். ஒட்டக்கூத்தர் இக்காலத்தில் நடுத்தர வயது உடையவராயிருந் திருப்பார். இவர் முதிய பிராயத்தினராயிருந்து அவருக்கு நல்லறிவு கொளுத்தினார் என்றும் தமிழ்நாவலர் சரிதையால் அறிகிறோம். கூத்தர் தாம் அவைப்புலவராயிருந்த காலத்தின் தொடக்க நிலையில், சிறிது கல்வி கற்று அரசனிடம் பரிசில் பெற எண்ணிக் கவிதை புனைந்துகொண்டு வந்த புலவர்களைக் கொடுமையாக நடத்திவந்தார். அரசனுக்கே அவர் ஆசிரியராய் இருந்த முறைமையினால், அவரைத் தடுத்துத் திருத்துபவர்கள் யாருமிலர். ஆனால் முதியவராயிருந்த நெற்குன்றவாணர், தாம்

கவிஞர் மட்டுமன்றி வள்ளலாயும் இருந்தமையால், கூத்தர் செயல் தகாது என்று உணர்ந்து அவரைத் திருத்தவும் முன்வந்தார்.

> கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர்; கோகனகப்
> பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில; பூவில்விண்ணோர்
> காக்கண்ட செங்கைக் கவிச்சக்ர வர்த்தி,நின் கட்டுரையாம்
> பாக்கண் டொளிப்பர்க ளோ,தமிழ் பாடிய பாவலரே.

என்ற பாடலைச் சொல்லிக் கூத்தருடைய கொடுமையை நீக்கினார் என்று அறிகிறோம்.*

**காலம்**

ஒரு சாசனக் குறிப்பினால் நெற்குன்றவாணர் காலம் திட்டமாய்த் தெரிகிறது. திருப்புகலூரில் உச்சிப்போதில் பெருமானுக்குத் திருவமுது நிவேதனம் செய்து தினம் பன்னிரு பிராமணர் உண்பதற்கு நிபந்தம் அமைத்தார் என்று திருப்புகலூர் அக்கினீசுவரர் ஆலயத்துச் சாசனமொன்று தெரிவிக்கிறது.

'ஸ்வஸ்தி ஸ்ரீ, சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 49ஆவது மிதுன நாயிற்றுப் பூர்வ பட்சத்து அத்தத்து நாள், குலோத்துங்கசோழ வளநாட்டுப் பிரமதேசத்து தேவலோகம்.... மகாசபையோம். இறையிலிநிலம் விலை ஆவணம்; உடையார் ஸ்ரீ புகலூர் தேவர் மத்தயான்ன சுத்தியமுது செய் தருளும் போது உத்த மாத்ர மாநம்.... லோக மாணிக்கச் சதுர் வேதி மங்கலத்து வரகூர் நம்பியார் குளத்தின் தெற்குக் கரையிலே நித்தம் 12 பிராமணர் உண்பதாக ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்துப் பேரூர் நாட்டு நெற்குன்றத்து நெற்குன்றங்கிழான் அற்புதக் கருவுணாயகரான களப்பாள ராஜர் செய்வித்த சாலைக்கு.... சாலைப்புறமாக இறையிலி செய்து....'; சாசனத்துப் பயிலும் களப்பாளராசர் என்ற தொடர் இவருடைய தகுதியைக் காட்டுகிறது.

இப்புகலூர்ச் சாஸனத்தின் காலம், முதல் குலோத்துங்க சோழனுடைய நாற்பத்தொன்பதாவது ஆட்சியாண்டு, எனவே இது கி.பி. 1119 ஆகிறது. நெற்குன்றவாணருடைய காலம் 12ஆம்

---

* பிற்காலத்தில் ஒட்டக்கூத்தர் - புகழேந்தி பற்றிய பூசற்கதைகள் எழுதினோர் கோக்கண்டு என்ற பாடலின் இவ்வரலாறு அறியாமையால், புகழேந்தி, வரலாற்றில் இதைச் சேர்த்துக் கொண்டார்கள் என்று தெரிகிறது.

நூற்றாண்டின் முற்பாதி என்று சொல்வதும் பொருந்தும். மேலும் இவர் குலோத்துங்கன் புதல்வனான விக்கிரமசோழன் காலத்தில் திருமந்திர ஓலை நாயகமாகப் பதவி வகித்தாரென்று ஆலங்குடிச் சாசனத்தால் அறிகிறோம்.

இச்சாசன காலத்தில் இவருடைய வயது சுமார் 30 என்று கொண்டால், இரண்டாம் குலோத்துங்கன் (1133 - 50) ஆட்சித் தொடக்கத்தில் இவருடைய வயது சுமார் 44 இருக்கலாம். எனவே இவ்வரசன் காலத்தில் இவர் முதிய பிராயம் உடையவராய் வாழ்ந்தார் என்பது பொருத்தமாகிறது. இரண்டாம் இராசாதி ராசனுடைய ஒன்பதாம் ஆண்டில் (1175) எழுந்த விரிவான பல்லவராயன் பேட்டைச் சாசனம், பலருக்கு நிலம் அளித்த செய்திகளைக் குறிப்பிடும் இடத்தில் நெற்குன்றம் கிழார் களப் பாளராயர் மகளுக்கு மூன்று வேலிநிலம் அளித்த செய்தியை யும் குறிப்பிடுகிறது. இக்களப்பாளராயர், நம் புலவராகவே இருத்தல் கூடும். (அத்தியாயம் 15).

### திருப்புகலூரந்தாதி

இதன் வரலாறு முன்னமே குறிப்பிட்டோம். இது பாயிரம் இரு பாடல்களும் திரிபாக நூறு கட்டளைக் கலித்துறைகளும் கொண்டது. 11ஆம் திருமுறையில் காணும் பல அந்தாதிகளுக்குப் பின் தோன்றிய மிகவும் பழமையான அந்தாதிப் பிரபந்தம் இது வேயாகும். தொண்டை மண்டல சதகத்தில் இரண்டு பாடல் கள் இதைக் குறிப்பிடும்.

கிளப்பார் கிளப்ப அடிமடக் காகக் கெழுமியசொல்
வளப்பா மதுரத் துடன்பூக் கமலமென் றாய்ந்தெடுத்த
களப்பாளன் நெற்குன்ற வாணன் அந்தாதிக் கலித்துறையே
வளப்பார் புகழை வளர்ப்பிக்கு மால்தொண்டை மண்டலமே. (26)

அடிமடக்காக என்பது இவ்வந்தாதி திரிபில் அமைந்ததைக் குறிப்பிடுகிறது. அந்தாதியின் அவையடக்கப் பாடல் களப் பாளன் நெற்குன்றவாணன் இக்கலித்துறை அந்தாதி பாடினார் என்று கூறுகிறது:

வளப்பா டிலாத எருக்கும் இதழி மலரும் அன்பர்
உளப்பா டுறைபுக லூரருக் காதலி னோதிமிக்கோர்
தளப்பா டிதுதமிழ்க் கென்னினுஞ் சாற்றுவன் சந்திரன்சொற்
களப்பாளன் நெற்குன்ற வாணனந் தாதிக் கலித்துறையே.

*இந்நூலின் சிறப்புப் பாயிரமாகப் பின்வரும் பாடல் ஏடுகளில் காணப்படும்.*

பொற்குன் றனைய முலையுமை பங்கற்குப் புண்ணியற்குச்
சிற்குன் றனைய திருப்புக லூரற்குச் செந்தமிழால்
நெற்குன்ற வாணன் உரைத்தஅந் தாதியை நீணிலத்தில்
கற்கின்ற தன்றிக் கவிபாட யாவர்க்கும் கற்பல்லவே.

*இந்நூற்றாண்டின் தொடக்கம் வரையில் தமிழ் பயின்றோர் இவ்வந்தாதியை ஆரம்ப நிலையில் நன்கு பயின்று வந்திருக்கிறார்கள். இந்நூல் திரிபாயினும் எளிமையானது. பெரும் பகுதி அகத்துறைப் பாடல்கள். இந்நூல், வரலாற்றுக்கு ஏற்பப் பக்திச்சுவை கொண்டது. தில்லை இதனுள் பலமுறை சொல்லப் பட்டுள்ளது. தில்லை முதலான பல தலங்களை வழிபட்டுப் புகலூருக்கு வந்தார் என்ற வரலாற்றுச் செய்திக்கும் இது பொருத்தமாக உள்ளது. இதில் குறிப்பிடப்பட்ட பிற தலங்கள் பழனம், ஐயாறு, நள்ளாறு, வெண்காடு, மருது முதலாயின.*

## பதிப்பு

*1875இல் முதலில் வெளிவந்தது. பின்னர் பலரால் பல முறையும் உரையோடு பதிப்பிக்கப் பெற்றுள்ளது.*

## *கண்டனலங்காரம்*

*அலங்காரம் என்பது வடமொழியில் ஒரு சாஸ்திரம்; தமிழில் அணியிலக்கண நூல், தண்டியலங்காரம் மாறனலங் காரம் என்பன காண்க. ஆனால் இங்கு, அலங்காரம் என்பது தமிழில் ஒரு பிரபந்தவகை போலும்; கந்தரலங்காரம் என்ற பிற்கால நூற்பெயர்கள் உள்ளன. கண்டன் என்பது இரண்டாம் இராசராசனது பெயர்களுள் ஒன்று; கண்டனென்றது சிறப்புப் பெயர். 'இதனை இயற்பெயரென்று மயங்காதொழிக. இராச ராசன் என்பது இயற்பெயர்' என்பது தக்கயாகப்பரணி, 549 தாழிசை உரை.*

*இப்பெயர் கொண்ட நூலொன்றிருந்ததாகக் களவியற் காரிகையுரையால் அறிகிறோம். அங்கு இந்நூற் பாடல்கள் பத்து, மேற்கோளாகப் பெயருடன் காட்டப்பட்டுள்ளன. பாடல்கள் யாவும் வெண்பா. பின்வரும் பாடல் ஓர் எடுத்துக்காட்டு:*

சீத விரைக்களபச் செந்தா மரைப்பொகுட்டு
மாதனையீர், அம்போடு வந்ததோ, – சோதிப்
பொருதாரை வேற்கண்டன் பூபால தீபன்
கருதாரின் இங்கோர் களிறு?

இப்பாடல் நம்பியகப் பொருள் உரை மேற்கோளாயும் காட்டப் பட்டுள்ளது. கண்டனை இங்கு, பூபாலதீபன் என்று சிறப்பித் திருக்கிறார். இப்பாடல்கள் அன்றி வேறு ஒரு பாடல் தண்டி யலங்காரவுரையிலும் வீரசோழியவுரையிலும் நூற்பெயர் குறிப் பிடாமல் தரப்பட்டுள்ளது:

ஊசல் தொழிலிழக்கும், ஒப்பு மயிலிழக்கும்,
வாசம் சுனையிழக்கும், வள்ளலே – தேசு
பொழிலிழக்கும், நாளைஎம் பூங்குழலி நீங்க,
எழிலிழக்கும் அந்தோ இதண்.

இப்பாடலின் கண்டன் பெயர் வரவில்லை. ஆனால் களவியற் காரிகையுரை இதைக் கண்டனலங்காரம் என்றே பெயர் குறிப்பிடு கிறது; இங்ஙனமே கண்டன் என்ற பெயர் வராத வேறு பாடல் களும் உள்ளன. ஒரு பாடலில் சனநாதன் என்ற பெயர் வருகிறது (சனநாதன் - இராசராசன்):

பண்சிலம்ப வண்டாடும் பைந்தார்ச் சனநாதன்
வண்சிலம்பிற் கூடல் வளைந்தாலும் – தண்சிலம்ப,
மான்பாயும் வேங்கையிலும் மாறா தலைத்திடுமித்
தேன்பாயும் வேங்கை சிவந்து.

என்ற பாடல் காண்க (களவியற் காரிகை பக்கம் 85). இப் பாடல்கள் யாவும் அகப்பொருள் பற்றியன. களவியற் காரிகை யுரைகாரர் அகத்துறை ஒவ்வொன்றுக்கும் எடுத்துக்காட்டாக முதலில் திருக்கோவை பாண்டிக்கோவை போன்ற கோவைப் பாடல்களை முறையாகக்காட்டி, அடுத்துச் சில வெண்பா நூல்களைக் காட்டுகிறார். கிளவித்தெளிவு கண்டனலங்காரம் முதலான நூல்கள் இவ்வாறு காட்டப்பெறுவன. இதனால் நாம் பெறுவது, அக்காலத்தே அகப்பொருள் இலக்கியங்களாக வெண்பா நூல்கள் பல செய்யப்பெற்றிருந்தன என்பது. பதினெண் கீழ்க்கணக்கில் ஐந்து நூல்கள், வெண்பாவால் ஆனவை, அகப் பொருள் பற்றியன. பின்வந்த அத்தகைய நூல்களுள் இதுவு மொன்று போலும். முற்குறித்தவாறு இது கண்டன் ஆகிய இரண்டாம் இராசராசனைப் புகழ்வதாகும்.

*கண்டன் பெயர் வராத பாடல்களும் கண்டனலங்கார மாகக் களவியற்காரிகை குறிப்பிட்டிருப்பதை மேலே காட்டினோம். அவ்வாறு அந்நூல் கண்டனலங்காரப் பெயரைச் சொல்லா விடினும் கூட, அங்கு வரும் வெண்பாப் பாடல்களுள் சில கண்டனலங்காரம் என்று நாம் கருதத்தக்கன. பின்வரும் பாடல்கள் சில எடுத்துக்காட்டுகளாகும்.*

தத்திச் சிலைத்தெழுந்து தார்குருதி மெய்சோர
இத்திக்கில் இந்தப் புனத்திடையே – தித்தித்தேன்
போந்தனைய சோர்குழலீர், யானெய்த போதொருமான்
போந்ததே இவ்வழியே புக்கு.

தேனை அனைய மொழியாண்மேற் சென்றேதிர்ந்த
யானை கடிந்தார்க்கோ, அவர்க்கன்றி – யேனையரா
இன்றிங்கு நின்றவர்க்கோ, யாவர்க்கோ வென்றி
முன்றின்கண் ஆர்க்கும் முரசு.

கண்டு நிலைதளர்ந்தேன், காத்தருளுங் கார்வரைமேற்
புண்டரிகம் வைத்தான் புகாரனையீர், – வண்டின்
கிளையலம்பு கார்நீழற் கெண்டைமேல் வைத்த
வளையலம்பு செந்தா மரை.

*இறுதிப் பாடல் கண்டனலங்காரம் என்றே சொல்லப்பட்டது. இதில் கண்டன் பெயர் வரவில்லை. நகராகிய புகாரின் பெயர் மட்டும் வருகிறது. கண்டனைப் புகழ்கின்ற வேறு இரு தனிப் பாடல்களும் உரைகளிற் காணப்படுகின்றன. நம்பியகப் பொருளில் (சூத்திரம் 145) காணும் பின்வரும் பாடலும் காண்க; இதுவும் கண்டனலங்காரம் போலும்:*

கம்பமத யானைக் கண்டன் கடல்தொண்டிக்
கொம்பர் விழிக்குவமை கூறுவதென்? – அம்பு
கருநீலம் செங்குவளை காலன்வேல் ஆலம்,
பெருநீர்மை தோற்றழிந்த பின்.

*தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியர் காட்டுவது (பொருள், புறத்திணை 91) பின்வரும் பாடல்:*

அறநீர்மை தாங்கி அளப்பரிதாய் வானப்
புறநீர்போல் முற்றும் பொதியும் – பிறரொவ்வா
மூவேந்த ருள்ளும் முதல்வேந்தன் முத்தமிழ்க்கும்
கோவேந்தன் கண்டன் குடை.

இப்பாடல் குடைமங்கலம்; புறப்பொருளானமையால் கண்டனலங்காரப் பாடலன்று என நாம் கருதுதல் கூடுமாயினும், முத்தொள்ளாயிரத்துள்ளமை போல, இதனுள்ளும் அகம், புறம் என்ற இரு துறைப்பொருள் பகுதிப் பாடல்களும் இருந்திருத்தலும் கூடும்.

இரண்டாம் இராசராசனால் பெரிதும் போற்றப்பெற்று வாழ்ந்த புலவர் ஒட்டக்கூத்தர்; பல தனிப் பாடல்களும் கண்டன் பற்றி அவர் பாடியிருக்கிறார். இவ்வலங்காரமும் அவர் பாடியிருக்கலாம். இவ்வாறு முடிவு செய்வதற்கு வேறு ஆதாரமில்லை.

## கண்டன் கோவை

அகப்பொருள் இலக்கியமாகச் சொல்லப்பெற்றுள்ள கண்டனலங்காரத்தைப் பற்றிப் பேசியவிடத்து, மற்றொரு நூலும் குறிப்பிடத்தக்கது. இது **கண்டன் கோவை** என்ற பெயருடையது. பெயரளவாலே இது கண்டனை - இரண்டாம் இராசராசனைப் - புகழ்ந்து பாடியது என்பது விளங்கும். பின்வரும் பாடல் கோவைக் கொத்துக்களில் வறுங்களம் நாடி மறுகல் என்ற துறைக்குரிய கண்டன் கோவைப் பாடலாகத் தரப்பட்டுள்ளது:

ஆவிளங்கே என்னி லாவியெங் கேயென்னும், ஆனகஞ்சத்
தேவிளங்கே என்னில் தேவிளங் கேஎன்னும், செய்விருந்தைக்
கூவியங்கே அழைக்கும் கரத்தான் கண்டன் கோழிவெற்பில்
பாவிஇங்கே கொண்டமால் கொண்டதோஇப் பனிவரையே.

பழம்பாட்டு என்ற தலைப்பில் களவியற் காரிகையுரையில் வரும் பாட்டு இக்கண்டன் கோவைக்குரியது போலும்.

போகக் கடவன புள்ளென் றிருந்திலம், போந்துதுணை
யாகக் கடவன என்றிருந்த தேம்,அகி லாண்டமெல்லாம்
தியாகக் கொடி கொண்ட கண்டன் புகாரில்தம் சேக்கைதொறும்
ஏகத் தொடங்கின வே,அந்திவாய் எம்மை விட்டு வைத்தே.

என்பது தலைமகள் அந்திப்பொழுது கண்டிரங்கலுக்குச் செய்யுளாக வருகிறது.

குறித்தான், குறித்தொன்றைக் கூறப்பெ
    றான், நின்றன் கொய்தழையைப்
பறித்தான், பறித்துப் பவளச் செவ்
    வாய் வைத்துப் பையப்பையக்

களித்தான், களித்தபின் கண்டன்
புகார்வஞ்சி, காந்தளக்கை
மறித்தான் மறித்தனவே கண்கள்
நீர் வந்து மங்கினவே.

*இப்பாடல் சரசுவதி மகால் தனிப்பாடல் திரட்டு 1 பாடல் 68இல் காணப்படுகிறது.*

*'கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன்' என்பது பழம் பாடல். ஒட்டக்கூத்தர் பாடிய உலாக்கள் மூன்று இருக்கின்றன. கோவை - அந்தாதி இல்லை. இவர் இராசராசன் மீது உலாப் பாடியிருக்கிறார். அவ்விதமே கோவையும் பாடிய சிறப்பினால் மேற்கண்டவாறு புகழப்பெற்றார் என்று நாம் கருதுதல் பொருந்தும். அக்கோவை இக்கண்டன் கோவையாகலாம். நூல் இன்று கிடைக்கவில்லை. வேறு பாடல்களும் கிடைக்கவில்லை.*

## அம்பிகாபதி கோவை

### வரலாறு

*அம்பிகாபதி என்ற புலவர் பாடியதாக வழங்குகின்ற இக்கோவை மிகவும் சிறப்புடைய ஒரு பழமையான கோவைப் பிரபந்தம். இதற்குமுன் எழுந்த கோவைகள் நெல்வேலி வென்றசீர் நெடுமாறனைச் சிறப்பித்து எழுந்த பாண்டிக்கோவையும், தில்லை நடராசப் பெருமான் மீது பாடப்பெற்ற திருச்சிற்றம்பலக் கோவையாரும் ஆகும்.*

### ஆசிரியர்

*இக்கோவையின் அவையடக்கச் செய்யுள் ஒன்று பின் வருவது:*

அருளம் பிகாபதி பொன்னடித் தாமரை சூட்டிஅகப்
பொருளம் பிகாபதி கம்புனைந் தேன்இப் புனைந்தசெஞ்சொற்
றெருளம் புலவர்முன் செப்பிய போதுள தப்புரையார்
மருளங் குழவி மழலைக்கென் னோபொருள் மற்றிங்கன்றே.

*இங்கு முன்வரியில் வரும் அம்பிகாபதி* என்ற தொடர் சிவ பெருமானைக் குறித்தது. அருள் அம்பிகாபதி பொன்னடித்*

---

* *சேக்கிழார் பெரியபுராணத்துள் (2463) சிவபிரானை அம்பிகாபதி என்று குறிப்பிடுகின்றார்.*

தாமரையை என்தலையிலே சூட்டி இந்த அகப்பொருள் நூலாகிய அம்பிகாபதி கோவையைப் பாடினேன் என்கிறார்.

நூலின் பெயராகிய அம்பிகாபதி என்பது இச்செய்யுளில் வரும் 'அகப்பொருள் அம்பிகாதி' என்ற தொடரினின்றும் அமைந்ததோ என்ற ஐயம் இயல்பாய் எழுகின்றது. ஆசிரியர் பெயரை வைத்தே கோவை நூற்பெயர் அமைந்தது வேறு இல்லை. எனினும், நூற்பெயரை அம்பிகாபதி பாடிய கோவை என்றே கல்வியாளர் நெடுங்காலமாய்க் கருதி வருகின்றார்கள். இங்ஙனமாயின், இவ்வாசிரியரான அம்பிகாபதி, யார் என்பது ஆராய்தற்குரியது.

கவிச்சக்கரவர்த்தியான கம்ப நாட்டாழ்வாரின் புதல்வன் அம்பிகாபதி என்பது பழங்கதை. 'கம்பைநதி பாயும் கம்ப நாட்டிலெழுந்தருளிய ஏகம்பநாதர் என்ற சிவபிரானது திருநாமத்தை முன்னோர் தமக்கிட்டழைத்தது போல் கம்பர், தாமும் அம்முறை வழுவாது தம்மகனுக்கு அம்பிகாபதி என்று நாமகரணஞ் செய்தார்.' இப்புதல்வனும் இளமையிலேயே சிறந்த தமிழ்ப் புலமை எய்தினான். 'இவர் பெயர் பெற்று வழங்கும் அம்பிகாபதி கோவை என்னும் நூலையன்றி வேறு ஏதும் ஓர் நூல் செய்ததாகக் கண்டிலம். பஞ்ச இலக்கணங்களுள் ஒன்றான அலங்காரமும், இவர் செய்ததாகச் சிலர் கூறுவர்; அது கிடைத்திலது' என்று தனிச்செய்யுள் சிந்தாமணி தொகுத்த மு.ரா. கந்தசாமிக் கவிராயர் எழுதியிருக்கிறார்.

கம்பர் இராமாயணம் பாடி அரங்கேற்றியபோது அம்பிகாபதி பின்வரும் பாடலைப் பாடினான் என்று கதை வழங்குகிறது:

**சம்ப னாடன் உரைசெவி சாற்றுபூங்**
**கொம்ப னாடன் கொழுநன் இராமப்பேர்**
**பம்ப நாடழைக் குங்கதைப் பாச்செய்த**
**கம்ப நாடன் கழல்தலை யிற்கொள்வாம்.**

அம்பிகாபதி பெயரால் வழங்கும் காதற்கதை எல்லோரும் அறிந்ததே. இவன் குலோத்துங்க சோழ மன்னனுடைய புதல்வி மீது காதல் கொண்டிருந்தான். அவளும் இவனிடம் அன்பு கொண்டிருந்தாள். புலவர் கம்பருக்கும் இச்செய்தி நன்கு தெரியும். ஆனால் மன்னன் இச்செய்தியை அறிந்தபோது மிக்க கோபம் கொண்டான். இதன் உண்மையைச் சோதித்தறியவேண்டி

ஒரு விருந்து செய்து, அதில் கம்பரையும் அம்பிகாபதியையும் அழைத்துத் தன் மகளையே விருந்து பரிமாறச் செய்தான். அவள் பரிமாற வந்தபோது அவள்மீது கொண்ட மோகவெறியினால்,

இட்டடி நோவ எடுத்தடி கொப்புளிக்க
வட்டில் சுமந்து மருங்கசைய –

என்று அம்பிகாபதி பாடத் தொடங்கினான். எஞ்சிய பகுதியையும் அவனே முடித்தால் அவன் அரசகுமாரியைப் பாட நேர்ந்து அதனால் அரசன் அவன் உயிருக்கு ஏதேனும் ஆபத்து விளைவிக்கக்கூடும் என்று அஞ்சிய கம்பர், கலைமகளைத் தியானித்துத் தெருவில் ஒரு கிழவியாகக் கொட்டிக்கிழங்கு விலை கூறி வரச் செய்து, அதைக் குறிப்பிட்டுப் பாடிப் பாட்டை முடித்தார்:

– கொட்டிக்
கிழங்கோ கிழங்கென்றுகூறுவாள், எந்தை
வழங்கோசை வையம் பெறும்.

இருந்த நிலைமையை நன்கு கவனித்த அரசனுக்கு மனம் அமைதி பெறவில்லை. ஆகவே, அவன் அம்பிகாபதியை நோக்கி, 'நீ காதற் சுவையே புலப்படாமல் நூறுபாடல் பாடினாயானால், நீ கூறுவது மெய்யென்று கருதி உன்னை விட்டுவிடுவேன்; காதற்சுவை புலப்பட்டதானால், உடனே உன்னைச் சிரச்சேதம் செய்வேன்' என்று கட்டளையிட்டான். பெரும்புலவனான அம்பிகாபதியும் அப்படியே சம்மதித்துப் பாடத் தொடங்கினான். காப்புச் செய்யுளொன்று பாடி, பின்னர்ப் பாடல்களைப் பாடிக்கொண்டே வந்தான். அருகே உப்பரிகையிலமர்ந்து நிகழ்பவற்றையெல்லாம் சாளரத்தின் வழியே பார்த்துக் கொண்டிருந்த அரசகுமாரியும், 99 பாடல் முடிந்தவுடன் காப்புச் செய்யுளையும் சேர்த்து நூறென்று தவறாகக் கணக்கிட்டுவிட்டாள். அரசன் குறித்த எல்லை கடந்துவிட்டபடியால், இனி நாம் அம்பிகாபதி முன் வெளிப்படலாம் என்று துணிந்து, எட்டிப் பார்த்தாள். அம்பிகாபதியும் அவளைப் பார்த்தான். உடனே தான்செய்து கொடுத்த வாக்கையும் மறந்து,

சற்றே பருத்த தனமே குலுங்கத் தரளவடம்
துற்றே யசையக் குழையூசலாடத் துவர்கொள்செவ்வாய்
நற்றே னொழுக நடனசிங் கார நடையழகின்
பொற்றே ரிருக்கத் தலையலங்காரம் புறப்பட்டதே.

என்ற பாடலை நூறாவது பாடலாகப் பாடிமுடித்தான். எண்ணிக் கொண்டு வந்த அரசன், தன் சூளுரையின்படி அக்கணமே அம்பிகாபதியைச் சிரச்சேதம் செய்தான்; கம்பர் எவ்வளவோ மன்றாடியும் அரசன் கேட்கவில்லை. கோபமுற்ற கம்பர்,

வில்லம்பு சொல்லம்பு மேதினியில் ரெண்டுண்டு,
வில்லம்பிற் சொல்லம்பே மேலதிகம், – வில்லம்பு
பட்டதடா என்மார்பில், பார்வேந்தா, நின்குலத்தைச்
சுட்டதடா என்வாயிற் சொல்.

என்ற பாடல் பாடிச் சோழகுலம் அழிந்து போகும்படி சாபமிட்டார். (சோழகுலம் அப்போது அழியவில்லை. இரண்டாம் குலோத்துங்கன் மகனான இராசராசன் ஆண்டபின் நேர் பரம்பரை நின்றுவிட்ட போதிலும், நூறு ஆண்டுகள் கழித்தே 1279இல் பரம்பரை முடிந்தது.)

இவையன்றி, பின்வரும் தனிப்பாடல்களும் அம்பிகாபதி பாடியனவாக வழங்குகின்றன.

மாவுறங்கின புள்ளு றங்கின வண்டு றங்கின தண்டலைக்
காவுறங்கின இன்ன மென்மகள் கண்ணுறங்கிலள் கையணைக்
கோவுறங்கு கடைத்த லைக்குலதீப வள்ளை குதட்டநின்
ஆவுறங்கு புகார சஞ்சல அஞ்ச லென்ன அடுக்குமே.

வீரமுண் டோமதன் கையம்பி னால்வெந்துவீ ழுகைக்கு
நேரமுண் டோவஞ்சி நேர்பட்ட காலையில் நெஞ்சைவிடப்
பேரமுண் டோசொல ஒண்ணாத காமப் பெருநெருப்புக்
கீரமுண் டோஐய, னேஎன்னபாவம் இனிச்சொல்வதே.

உருகி உடல்கருகி உள்ளீரல் பற்றி
எரிவ தவியாதென் செய்கேன் – வரியரவ
நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெருமாள்
நெஞ்சிலே இட்ட நெருப்பு.

ஏகா வடமென் னிருகொங் கையின்மேல்
ஆகா வடமா னதறிந் திலையே,
த்யாகா பரணா, திசையா னைகளின்
பாகா, பரரா சபயங் கரனே.

இவை யாவும் கற்பனைக்கதைகள் என்று சொல்வது மிகை. யாரோ எக்காலத்திலோ சில பாடல் புனைந்திருந்தார்கள். கற்பனைத் திறம் வாய்ந்த மூளை படைத்தவரொருவர் பிற்காலத்தில் பல்வகைக் கதைகளை மிக்க திறமையோடு ஆங்காங்கு கோத்துத் தொடர்புபடுத்தினார். சில தொடர்புகள் தமிழ் நாவலர் சரிதையிலும் சொல்லப்பட்டுள்ளன. மற்றவை 19ஆம் நூற்றாண்டில்தான் மிகுதியும் ஆட்சி பெற்றன. திருவள்ளுவர், அவ்வை, கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, அம்பிகாபதி போன்ற புலவர்கள் இத்தொடர்புகளுக்கு இலக்காயினர். தொடர்பு கண்டோர், இவ்வகைக் கதைகளால், சம்பந்தப்பட்ட புலவர்களுக்குப் பெருமை என்று கருதியே இவ்வாறு செய்தனர். பொருத்தமில்லை என்பதை அவர்கள் கருதிப் பார்க்கவில்லை. பொருத்தம் ஒருபுற மிருந்தாலும், இவற்றுள் சரித்திரக்கண் கொண்டு நோக்கும் போது, உண்மையன்று என்பதே நாம் இப்போது காண்பது. ஆகவே இவற்றை முழுமையும் ஒதுக்கிவிடத்தான் வேண்டும்.

'அம்பிகாபதி பாடிய பலதுறைக் காரிகை' என்ற பெயர் கொண்ட நூறு பாடல் அடங்கிய சிறுபாடல் திரட்டொன்று சென்ற நூற்றாண்டு முதல் அச்சில் வழங்கி வருகிறது. வெண்பா கலித்துறை முதலான பலவகைப் பாடல்கள், அகத்துறையும் சிற்றின்பமும் கலந்த பாடல்கள். இவை வெவ்வேறு காலத்தில் வாழ்ந்த வெவ்வேறு புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுதி. சென்ற நூற்றாண்டில் யாரோ ஒருவர், அரசன் முன் அம்பிகாபதி 100 பாடல் பாடினான் என்ற கதைக்கு உதவும்படி இப்பாடல்களைத் தொகுத்தாரென்று எண்ண வேண்டும். இப்பாடல்களுட் சில, தெரிந்த நூல்களிலுள்ள பாடல்கள். இவற்றுக்கும் கோவை பாடிய அம்பிகாபதிக்கும் எத்தொடர்பும் இல்லை.

இவ்வாறு போலிக்கதைகளை ஒதுக்கிய பிறகு, உண்மையாகவே அம்பிகாபதி என்ற ஒரு புலவர் வாழ்ந்தார், அவர் கோவை பாடினார் என்று நாம் திட்டமாய் அறிகிறோம். இப்பெயருடையார் இலக்கிய வரலாற்றில் யாரென்று இனிப் பார்க்க வேண்டும். அம்பிகாபதி சம்பந்தமாக மூன்று குறிப்புக்கள் கிடைக்கின்றன. ஒன்று அம்பிகாபதி கோவை பாடினார் என்பது. இரண்டு தண்டியலங்காரம் பாடிய தண்டியாசிரியரின் தந்தை அம்பிகாபதி என்பது. மூன்று நெல்லை வருக்கக்கோவை பாடி

யவர் பெயர் அம்பிகாபதி என்பது. இம்மூவரில், மூன்றாமவ ராகிய நெல்லை வருக்கக்கோவை பாடியவர் வீரை என்னும் ஊரினர், சௌந்தரிய லகரியைத் தமிழில் பாடிய வீரைக் கவிராச பண்டிதரின் மகனார். இவர் காலம் பதினாறாம் நூற்றாண்டு. இச்சிறு கோவையின் பாடலொன்று வைத்தியநாத தேசிகர் (17 நூ.) செய்த இலக்கண விளக்கத்துள் மேற்கோளாக வந்துள்ளது. இவர் காலம் பிற்காலம், இவர் அம்பிகாபதி கோவை பாடியவரல்லர்.

இனி, தண்டியாசிரியரின் தந்தை அம்பிகாபதி என்ற பெய ருடையவர், கோவை பாடியவரும் அம்பிகாபதி என்ற பெயரை உடையவர் என்ற குறிப்புக்களை நாம் ஆராயும் போது, இரு வரும் ஒருவரே என்று அறிகிறோம். இவ்வாறு அறியும் போது இவர் காலமும் திட்டமாய்ப் புலப்படுகிறது. இக்குறிப்புக்களை இனிக் கருதுவோம்.

**காலம்**

தண்டியலங்கார ஏட்டுப்பிரதிகளில் காணப்படுகின்ற சிறப்புப் பாயிரமானது 'வடதிசை இருந்து தென்மலைக்கேகி' என்று தொடங்குகின்ற பாடல். இதைத் தண்டியாசிரியர் வர லாற்றில் கண்டோம். இதன் இறுதி நான்கு வரிகள் இங்கு கருதத்தக்கன.

பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரியல் அம்பி காபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டி என்பவனே.

இச்செய்யுள் 'அணிபெறும் இலக்கணத்தைச் செம்பியன் அவையில் காவிரிநாட்டு அம்பிகாபதி பெற்ற புதல்வராகிய தண்டி என்பவர் யாப்பில் வகுத்தார்' என்று கூறுகின்றது. இதனால், அம்பிகாபதியின் புதல்வர் தண்டி என்று ஏற்படு கின்றது. இவ்வம்பிகாபதியே கோவை நூல் செய்தவராவார் என்று யூகித்து ஒரு முடிவுக்கு வருதற்கு மூன்று குறிப்புக்கள் துணை செய்கின்றன.

முதலாவதாக, தண்டியாசிரியர் மேற்கோள் காட்டுகின்ற பாடல்களுள் ஒன்றாகிய ஆதரந்தீர் என்ற பாடல். இதைச் சொல்

லணியியலுள் 95ஆம் சூத்திரவுரையில் சித்திரக் கவிகளுள் திரி பங்கிக்கு உதாரணமாகத் தண்டி தந்துள்ளார்.

ஆதரந்தீர் அன்னைபோலினியாய்! அம்பிகாபதியே!
மாதுபங்கா! வன்னி சேர்சடையாய்! வம்புநீண் முடியாய்!
ஏதமுய்ந்தார் இன்னல் சூழ்வினைதீர், எம்பிரானினியார்,
ஓதுமொன்றே! உன்னுவாரமுதே! உம்பர் நாயகனே!

முதல் அடியில் வரும் 'அம்பிகாபதியே' என்ற சொல் இங்கே கருதத்தக்கது. இது அம்பிகாபதி என்ற புலவரை நினைவூட்டு வதாயுள்ளது. தந்தையும் பெரும்புலவராயுமிருந்த அம்பிகாபதி யிடம் தண்டியாசிரியர் கல்வி பயின்று அவரிடம் கொண்ட ஈடுபாடு காரணமாக அவர் பெயரை இவ்வாறு செய்யுளில் அமைத்தார் என்று கருதுவது பொருத்தமாகலாம்.

தண்டியாசிரியர் மேற்கோளாகக் காட்டுகின்ற பாடல்களுள் பழம் பாடல்கள் சில நீங்க, ஏனைய யாவும் அவரே பாடியவை என்ற கருத்தை அவரைக் குறித்த வரலாற்றில் கூறினோம். ஏனைய பாடல்களைப் போல இப்பாடலும் அவரே செய்தது என்பதில் ஐயமில்லை.

இனி, இரண்டாவது குறிப்பு, கட்டளைக் கலித்துறை யாப்பில், மேற்கோள் பாடல்களாகப் பின்வரும் இரு பாடல்கள் காணப்படுகின்றன.

சோக மெவண்கொல், இதழிபொன் தூக்கின சோர்குழலாய்,
மேகம் முழுங்க, விரைசூழ் தளவங் கொடியெடுப்ப,
மாகம் நெருங்க, வண் டானங் களிவண்டு பாடஎங்கும்
தோகை நடஞ்செயும் அன்பர்தம் தேரினித் தோன்றியதே.

இடர்த்திறத் தைத்துற, பொற்றொடி நீயடித் துத்தடித்துச்
சுடர்க்கொடித் திக்கனைத்தில் தடுமாறத் துளிக்குமைக்கார்
மடக்குயிற் கொத்தொளிக்கக் களிக்கப் புக்கதோகைவெற்றிக்
கடற்படைக் கொற்றவன் பொற்கொடித் தேரினிக் கண்ணுற்றதே.

இரண்டும் மாறனலங்கார மேற்கோள் வைதருப்பச் சமனிலை, கொடைச் சமனிலை. இவ்விரண்டு பாடல்களையும் கோவை யையும் ஆராயும் போது, சில கருத்துக்கள் எழுகின்றன.

அம்பிகாபதி கோவை மிக்க விரிவுடைய கோவை என்பது முன்னே சொல்லப்பட்டது. 'காலங் குறித்துப் பிரிந்த தலைவன் பிரிவையாற்றாத தலைவிக்கு இரங்கி, தலைவன் தேர்வரவு கூறி, தோழி ஆற்றுவித்தது' என்ற துறைக்கு இவ்விரு பாடல்களும் உரியன. தண்டியாசிரியர் தாமே வெண்பாப் பாடல்களைச் செய்து உதாரணம் காட்டினாரேயன்றி, ஏனைய பாடல்களைக் காட்டியவிடங்களில், பழைய பாட்டல்களை எடுத்துக் கொண் டிருக்கிறார். இதனால் கட்டளைக் கலித்துறையான இவ்விரு பாடல்களும் அவர் பாடியன அல்ல, பிறர் பாடல்களே.

மேலும், அகத்துறைப் பாடல்களான இவ்விரண்டிலும் பாட்டுடைத் தலைவன் பெயரில்லை. இவ்வியல்பு அம்பிகா பதி கோவையொன்றுக்கே உரியது. ஆதலால் இவ்விரண்டும் அம்பிகாபதி கோவைப் பாடல்களாயிருக்கலாமே என்ற ஐயம் எழுகிறது. இது உண்மையாயின் அம்பிகாபதி கோவை தண்டிக்கு முற்பட்டது என்பது தெளிவு.

இனி, மூன்றாவதாக, இவ்விரண்டில் முதல் பாடலாகிய 'சோகம் எவண்கொல்' என்பதன் நான்காம் அடியில் வரும் 'தோகை நடம்செயும்' என்ற சொற்கள். இத்தொடர் சாதாரண மாக இலக்கியப் பரப்பினுள் காணப் பெறவில்லை. ஆனால் அம்பிகாபதி கோவையில் மட்டும் இத்தொடர் மூன்றிடங் களில் காணப்படுகிறது. ஆசிரியர் சிலர், சில சொற்களையும் சில தொடர்களையும் விரும்பிக் கையாளுவர். இத்தொடர் அம்பிகாபதி விரும்பிக் கையாளுகின்ற ஒன்று. கோவையில் காணுமிடங்கள் பின்வருவன:

கறியுறு சாரற் களியுறு தோகைக் கணநடஞ்செய்
வெறியுறு சோலை விழைவுற நீடில் வெருவுறுமான்
மறியுறு செங்கண் மதுமலர்க் கோதை நொது மலர்வந்(து)
அறியுறல்கூடுமென் றோதிரு மேனி அழுங்குவதே. 11

பெடைநின்று காண உடனின்ற தோகை பெருநடஞ்செய்
புடைநின்ற சோலைப்பொதியில்வெற் பாபொற் குழைதொடரும்
இடைநின் றுகுபுனற் கண்ணிக்கும்நின்புகழ்க் காதலுக்கும்
இடைநின்ற பாவிக்கும் ஏதமுறா வண்ணம் எண்ணுகவே. 161

களிதங்கு தோகைக் கணம்நட மாடக் கறங்கருவி
அளிதங்கு சோலை அருவரை நாட, அணிபைங்கிள்ளை
விளிதங்கு தண்புன வேங்கையும் பூத்ததுவிண்ணிடைநின்று
ஒளிதங்கு திங்களும் நீர்கொண்ட கேண்மையும்ஊர் கொண்டதே. 265

இயற்றைக் காணும்போது 'தோகை நடம் செயும்' என்ற தொடர் அமைந்த 'சோகம் எவண்கொல்' என்ற பாடல் அம்பிகாபதி பாடியதே என்று நாம் முடிவுசெய்வது பொருத்தமாகிறது. பெரும்புலவரான தந்தை பாடலை மகனார் எடுத்தாளுவது இயல்பே. ஆதலால் இக்கோவை பாடிய அம்பிகாபதியே தண்டி யின் தந்தையாகிய அம்பிகாபதி என்று கருதுவது பிழையாகாது.

ஆகவே இவ்வம்பிகாபதியின் காலம் தண்டியாசிரியரின் காலமாகிய அனபாயன் என்னும் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலமும் அதற்குச் சற்று முந்திய காலமாகும்.

நூல்

அம்பிகாபதி கோவையில் பாட்டுடைத் தலைவன் அமைக்க வில்லை என்பது இதற்குள்ள தனிச்சிறப்பு. கோவையிலமைந்த தொடர்பான வரலாற்றின் கதைத்தலைவன் கிளவித்தலைவன் என்று கூறப்பெறுவான். இவனது இயற்பெயரைக் கூறுவது மரபல்ல; அவ்வத்திணைக்குரிய பெயர்களாகிய வெற்பன், நாடன், விடலை, ஊரன், சேர்ப்பன் என்பன போன்ற பெயர் களாலேயே இவன் குறிப்பிடப்படுவான். கிளவித் தலைவனை யன்றி, கோவையில் பாட்டுடைத் தலைவன் என மற்றொரு தலைவனும் உண்டு. நூலுள் எந்தத்தலத்து மூர்த்தி அல்லது எந்த அரசர் அல்லது வள்ளல் சிறப்பிக்கப் பெறுகின்றாரோ அவர் அந்நூலுக்குப் பாட்டுடைத் தலைவர். உதாரணமாக, திருக்கோவையாருக்குத் திருச்சிற்றம்பலவரும், பாண்டிக் கோவைக்கு நெடுமாறனும், தஞ்சைவாணன் கோவைக்கு வாணனும் பாட்டுடைத் தலைவர்கள். இவ்வாறு பாட்டுடைத் தலைவன் இன்றிப் பாடப்பெற்ற ஒரே கோவை அம்பிகாபதி கோவையாகும்; இப்படி பாடப்பெற்ற வேறுகோவை இல்லை.

இக்கோவையாசிரியர் பாட்டுடைத் தலைவனாக யாரை யும் கொள்ளாமையால், ஒரு தலைவனையோ அவனுக்குரிய நாடு, நகர், மலை, ஆறு, மாலை போன்ற அடையாளம் ஒன்றையோ ஒவ்வொரு பாட்டிலும் தவறாமல் குறிப்பிட வேண்டிய நிர்ப்

பந்தம் இவருக்கு இல்லாது போயிற்று. மீண்டும் மீண்டும் பாட்டுடைத் தலைவன் பெயரைச்சொல்லி வருவதனால் ஏற்படும் சோர்வும் படிப்போக்கு இக்கோவையில் ஏற்படாது.

பாட்டுடைத் தலைவன் இப்பிரபந்தத்துக்கு இல்லை என்பதை ஆசிரியரே அவையடக்கம் இரண்டாம் பாடலில் கூறுகிறார்:

பாட்டுந் துறையும்* பதினெண் கணக்கும் பழந்தமிழோர்
காட்டும் பனுவலும் கற்றறியேன், சொற்றபுன் கவிக்கு
நாட்டுந் தலைவனு மில்லையென் றால்இன்றென் நாவில் நின்று
கோட்டுங் கலைமகள் கூறுவித் தாளொர் குறையு மின்றே.

இங்கு பாட்டும் என்பது பத்துப்பாட்டு; துறை என்பது அகத்துறை புறத்துறைகளைக் கொண்ட நூல்களாகிய எட்டுத் தொகை நூல்கள்; பதினெண்கணக்கு என்பது பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள். பத்தாம் நூற்றாண்டில் தொகுக்கப் பெற்ற பன்னிருபாட்டியலே முதன்முதலாகக் கீழ்க்கணக்கைக் குறிப்பிடுகிறது; ஆனால் பதினெட்டு என்று சொல்லவில்லை தமிழிலக்கிய இலக்கணங்களில் முதன்முதலாகப் பதினெண் கீழ்க்கணக்கு என்ற ஆட்சி இப்பாடலில்தான் வருகிறது போலும். (பன்னிரு பாட்டியல் மேற்கணக்கு கீழ்க்கணக்கு என்று மட்டும் சொல்லுகிறதேயொழிய, பதினெண் கீழ்க்கணக்கு என்று சொல்ல வில்லை.) பதினெண் கீழ்க்கணக்கு என்ற ஆட்சி பிற்காலம். பன்னிரு பாட்டியல் கீழ்க்கணக்கைக் குறிப்பிடுகிறது: அம்பிகாபதி கோவையே பதினெண் கீழ்க்கணக்கை முதலில் குறிப்பிடும் நூலாகலாம். அடுத்த நூற்றாண்டுகளில்தான் பேராசிரியர் மயிலைநாதர் முதலியோர் இதைக் குறிப்பிடுகிறார்கள்.

மேலும், மிகவும் அதிகமான பாடல்களை உடைய கோவைப் பிரபந்தங்களுள் இதுவும் ஒன்று. கோவையில் நானூறு பாடல்கள் அமையவேண்டும் என்பது விதி போலக் கொள்ளப்படினும், அம்பிகாபதி கோவையுள் 563 செய்யுட்கள் உள்ளன. இங்ஙனமே குலோத்துங்கசோழன் கோவை, திருவாரூர்க் கோவை, மாறன் கோவை, மயூரகிரிக் கோவை முதலியன

---

* 'துறையும்' என்பது தொகையும் என்றிருந்திருக்கலாம்; பாட்டுத் தொகையும் என்பது பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் என்று பொருள்படக் கூடும்; அடுத்துப் பதினெண்கீழ்க் கணக்கு சொல்லப் படுவதும் காண்க.

ஐந்நூற்றுக்கு மேற்பட்ட செய்யுள் கொண்டவை; அவை காலத்தால் அம்பிகாபதி கோவைக்குப் பின்வந்தவை.

இலக்கண விளக்கம் பாடிய வைத்தியநாத தேசிகர் நம்பி அகப்பொருளையே தழுவித் தம் அகத்திணை இயலை அமைத்திருந்த போதிலும்கூட, அதனினும் மிகவும் அதிகமான துறைகளைக் கூறுகிறார். தஞ்சைவாணன் கோவை கப்பற் கோவை ஆகியவற்றை இவர் இலக்கியமாகக் காட்டினும், புதியதுறைகளுக்கு அம்பிகாபதி கோவையையே மேற்கோள் காட்டுகிறார். இங்ஙனம் இவர்காட்டும் கோவைச் செய்யுட்களுள் 192, 102ஆம் சூத்திர உரையில் காட்டப்பட்ட 'திணைகாணும் நன்னிதி' என்ற பாடல் அம்பிகாபதி கோவைப் பாடல் என்று கருதற்குரியது.

தஞ்சைவாணன் கோவை உரை எழுதிய சொக்கப்ப நாவலர் சில புதிய துறைகளுக்கு விளக்கம் கூறுமிடத்து அம்பிகாபதி கோவைச் செய்யுட்கள் ஐந்தைத் தந்திருக்கிறார். மேலும் 'வரையும் இந்நாள் அளவு' என்று பிற செய்யுட் கவியாக அவர் காட்டிய பாடல் அம்பிகாபதி கோவைக்குரிய மிகைப் பாடலாகலாம்.

ஆனந்தரங்கன் கோவை (18நூ) அம்பிகாபதி கோவையிலுள்ள தொடர்களையும், சொற்களையும் செய்திகளையும் அப்படியப்படியே எடுத்து அமைத்துக் கொண்டிருப்பதைக் காணலாம்.

அம்பிகாபதி கோவையின் சிறப்பு, அதற்குப் பாட்டுடைத் தலைவன் இல்லை என்பது. அன்றியும் ஆசிரியர் தம் நூலுள் உடன்கால நிகழ்ச்சிகளை அறியத்தக்க எந்தக் குறிப்பையும் கொடுக்கவில்லை. மற்று, தமிழ்ப்பண், தமிழ் நூல்களைப் போற்றிக் கூறுகின்றார். திருக்குறள், நாலடி, பழமொழி நானூறு, ஆசாரக் கோவைச் செய்யுட்கள் பல அப்படியே எடுத்தமைக்கப் பட்டுள்ளன. கலித்தொகையின் கருத்துக்கள் பல இடங்களில் காணலாம். மணிமேகலை, மரபியல் ஆகிய நூற்பெயர்களும் பயிலுகின்றன.

புராணக்கதைகள், பழக்கவழக்கங்கள், பழமொழிகள் முதலியன இக்கோவையுள் மிகவும் அதிகமாகக் காணப்படும்.

காமஞ் சான்ற கடைக்கோட் காலை,
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி,

அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்,
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.

*என்ற தொல்காப்பியச் சூத்திரத்துக் கிணங்க (பொருள் 190) இந்நூலின் இறுதியில் இல்லறம், துறவறம் என்பவற்றை ஆசிரியர் இரண்டு செய்யுட்களால் கூறுவது அறிந்து மகிழ்வதற்குரியது.*

வேந்தன் பொருளுக்கு வெஞ்சுரம் போய்வந்த வெம்மைஎல்லாம்
பூந்தண் பெடையமர் சேக்கையிற் போக்கினள் பூவை அன்னாள்
ஏந்தும் புதல்வனை இன்புற மார்பில் எடுத்தணைத்து
மோந்தும் தலைவ ருடன்முலை யாகம் முயங்கியுமே.

அல்லொடு நண்பகல் ஐம்புல னால்அரும் போகந்துய்த்து
வல்லியும் மல்லல் வளவய லூரனும் மாதருமே
சொல்லிய கேள்வித் துறைமுடி வாய்ந்து துணைவியரோடு
இல்லறங் காத்துத் துறவறம் தாங்கல் இயைந்தனரே.

*நம்பியகப்பொருள் அகத்திணையியலின் இறுதிச் சூத்திரம் (115)*

மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்து
மிக்க காம வேட்கை தீர்ந்துழித்
தலைவனும் தலைவியும் தம்பதி நீங்கித்
தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்ப.

*என்று துறவைக் கூறுகிறது.*

*மதுரைக் கோவைத்தலைவன் துறவு நினைதல் என்பதை, 'ஆலவாயுறை யத்தர்மற்றை, வாழிக்கமலம் எனக்களித்தாரடி மாறிவைத்தே' என்ற வரிகளாற் காட்டும். திருப்பதிக் கோவை யொன்றே துறவைக் கூறுகிறது;*

நல்லறத் தாற்பெறு தற்கரி தாய்ப்பெற்ற நாயகமீங்கு
இல்லறத் தாறெய்தி வாழ்ந்திருப்பாள் அணங்கே, இனிநாம்
தொல்லறத் தாற்றமிழ் தேர்மாற னைத்துதித் தேதொடர்பால்
வெல்லறத் தாரொடொன் றாம்பெரு வாழ்வெய்த வேண்டுமே.

*என்பது அதன் இறுதிச் செய்யுள், மாறன் வருக்கக்கோவையும் துறவு கூறுவது.*

## பதிப்பு

*அரிகரையர் பதிப்பு 1898. குறிப்புரையோடு கூடிய எமது ஆராய்ச்சிப் பதிப்பு, 1944.*

## வச்சத் தொள்ளாயிரம்

இறந்துபோன நூல்களில் இதுவுமொன்றெனத் தெரிகிறது. இந்நூல் வச்சராயன் மீது பாடப்பெற்றது. இவன் குலோத்துங்க சோழனுடைய படைத்தலைவருள் ஒருவனாயிருந்து வத்ஸராசன் என்ற பட்டமளிக்கப் பெற்றவன். இப்பெயர் வத்தராயன் வச்சராயன் எனவும் வழங்குவதுண்டு. இவன் மேலைச்சளுக்கியரை வென்றவன், கோதாவரி ஜில்லாவிலுள்ள திராட்சாராமம் என்ற ஊரில் எழுந்தருளிய பீமேசுவரமுடைய மகாதேவருக்குக் குலோத்துங்கன் ஆட்சி 25ஆம் ஆண்டில் இவன் தன் பெற்றோர்கள் நற்கதி அடையுமாறு ஒரு நந்தாவிளக்கு வைத்தான். குலோத்துங்கன் காலம் கி.பி. 1070 - 1120; இங்கு குறித்த ஆண்டு கி.பி. 1095 ஆகிறது. இவனுடைய காலம் கி.பி. 1075 - 1120 எனக் கருதி இந்நூற்றாண்டில் இவனைப் பற்றிய பாடல்களைக் குறிப்பிடுகிறோம்.

இவன் சோழநாட்டுக் கஞ்சாறு என்ற ஊரினன் (ஆனந்தத் தாண்டவபுரம்). பஞ்சநதி (ஐயாறு) வாணன் என்பவன் புதல்வனாய் முடிகொண்டான் என்ற பெயரிடப்பெற்று வச்சராயன் என்ற பட்டம் அளிக்கப் பெற்றான். மேற்குறித்த வச்சத்தொள்ளாயிரம் என்றநூல் இவனைப் புகழ்ந்து பாடப்பெற்றது போலும், இந்த நூலை வீரசோழிய உரைகாரரான பெருந்தேவனார் குறிப்பிடுகிறார்:

வேட்டொழிவ தல்லால் வினைஞர் விளைவயலுள்
தோட்ட கடைஞர் சுடுநந்து – மோட்டாமை
வன்புறத்து மீ துடைக்கும் வச்சத் திளங்கோவை
இன்புறுத்த வல்லமோ யாம்.

‘இதனுட் சிறப்புடையவளாகிய தலைமகளை இகழ்ந்து தலைமகன் சிறப்பில்லாத பரத்தையர் மாட்டு நிகழா நின்றமையால் நாட்டுக் கடைஞர் உள்ளார் சிறப்பில்லாத நந்தை ஊன்துப்புடைய ஆமையின் புறத்து உடைத்துத் தின்பர் என்னுமிதனாற் றொகுத்து விளங்கச் சொன்னமையால் தொகைமொழியாயிற்று. வச்சத்தொள்ளாயிரம் முழுவதுந் தொகைமொழி எனக்கொள்க.’

இந்த நூல் வச்சத்து இளங்கோ (வச்சத்தார்கோ, வத்தவர்கோ, வச்சவராயன்) மீது பாடப்பெற்ற தொள்ளாயிரம் வெண்பாக் களையுடையது போலும். நூல் இப்போது கிடைக்கவில்லை. ஒருகால் இது சேர சோழ பாண்டியர் மூவர் மீதும் பாடப் பெற்றதெனக் கருதப்பெறும் முத்தொள்ளாயிரம் என்ற நூலைப் போலச் செய்யப் பெற்றதாகலாம். அந்தநூல் தமிழ்நாட்டு அரசர் மூவரைப் பற்றி அமைந்தமை போலவே, இந்த நூலும் ஒரு தமிழ்நாட்டு வீரனைப் பற்றி அமைந்தது என்று நாம் கருத வேண்டும்.

ஐயர் அவர்கள் பின்வரும் இரண்டு வெண்பாக்களையும் தம்முடைய பெருங்கதை முகவுரையில் எடுத்து எழுதி, 'இவை வச்சத்தொள்ளாயிரத்தைச் சார்ந்தவை என்று தெரியவருகின்றன. அந்நூல் உதயணன் திறத்ததோ வேறோ என்று தெரியவில்லை' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் முன்னே காட்டியவாறு இது ஒரு தமிழ்நாட்டு வீரனைப் பாடிய நூலாகுமேயன்றி, வடநாட்டு உஞ்சையில் வாழ்ந்த இதிகாச கதாநாயகனாகிய உதயணனைக் குறித்தது அன்று என்பது உறுதி:

வாடை குளிர மருந்தறிவா ரில்லையோ,
கூடல் இனியொருகாற் கூடாதோ, – ஓடை
மதவா ரணத்துதயன் வத்தவர்கோ னாட்டிற்
கதவான தோதமியேன் கண்.

உன்னுயிரும் என்னுயிரும் ஒன்றென்ப தின்றறிந்தேன்,
மன்னுபுகழ் வச்சத்தார் மன்னவா, – உன்னுடைய
பொன்னாகத் தெங்கையர்தம் பொற்கைநகச் சின்னங்கண்
டென்னாகத் தேளரிகை யால்.

பின்னும் மூன்று பாடல்கள் பெருந்தொகையுள் சேர்க்கப் பெற்றுள்ளன:

ஒற்றை யலவ னுழுத வரப்பருகே
முற்றி யெழுந்த முடத்தாழை – மற்றவ்
வயலே கனியுதிர்க்கும் வச்சத்தார் கோமாற்
கயலே பிறவே யவா.

அரிகுருகு தின்ற கனிகிடப்ப வாங்கே
வரியலவன் வாயில்வா னீட்டி – நரிதனது
வால்வாங்க மாட்டாத வச்சத்தார் கோமானென்
மால்வாங்க வல்லனோ வந்து.

அவற்பதத்த செந்நெ லருத்தி யருகே
துவர்ப்பதத்த செங்கிடையுந் துய்த்துக் – கவர்ப்பதத்த
மாமேதி மேய்ந்துவரும் வச்சந்தார் கோமானுக்கு
யாமே திலமே திலம்.

*இந்த நூல் கிடைக்கவில்லை என்று முன்னமே குறிப்பிட்டோம். இந்த வத்தவர்கோன் வீரன் என்று புகழடைந்த தொடக்கக் காலத்தில் இவன் மீது இப்பிரபந்தம் பாடப்பெற்றிருத்தல் கூடும். ஆகவே இவன் காலம் உத்தேசம் கி.பி. 1100 என்று கொள்வது பொருந்தும். இந்நூலாசிரியர் பெயரோ வரலாறோ தெரிய வில்லை.*

*இவ்வச்சராயனைக் குறித்த ஓர் ஆசிரியப்பா வீரசோழிய உரையுள் காணப்படுகிறது:*

கொங்கை கோங்கரும் பாக, அங்கை
யணிநிறத் தாமரை யாக, மணிநிறக்
கண்ணிணை குவளை யாக, நுண்ணிழை
நுண்ணிடை வல்லி யாக, நண்ணிய
முறுவல் முல்லை யாக, இறுமாந்து
செவ்வாய் கொவ்வை யாக, கைவிரற்
சீறடி தளிர்க ளாகச் சீறு
மாவஞர் தந்தவிம் மங்கை தன்னைக்
கரத்து மென்றெனக் கிரக்க மின்றி
ஓடரிக் கண்ணியை யொளித்தீ ராயினுங்
காட்டுமி னென்று கைதொழு திறைஞ்சினன்,
வாட்டிறற் றடக்கை வத்தவர் கோவே.

*எனவே, இவ்வத்தவர்கோன் புகழோடு வாழ்ந்த ஒரு தலைவன், இவன் மீது இவ்வச்சத்தொள்ளாயிரம் அன்றி வேறு தனிப்பாடல் களும் பாடப்பெற்றிருந்தன என்று அறிகிறோம்.*

ooo

அத்தியாயம் 13

# பிரபந்த இலக்கியம் – 2

## முன்னுரை

சென்ற அத்தியாயத்தில் இந்நூற்றாண்டில் தோன்றிய பல வேறு பிரபந்தங்களை ஆராய்ந்தோம். அவை யாவும் வரலாற்று ஆதாரமுடையவை. இங்கு ஆராயப்பெறும் பிரபந்தங்கள் மூன்று: சரசுவதியந்தாதி, சடகோபரந்தாதி, ஏர்எழுபது என்பன. இவற்றைக் கம்பர் செய்தார் என்பது வழக்கு; ஒரே புலவர் இவற்றை பாடினார் என்பதே இதன்கருத்து. இப்புலவர் இராமாயணம் பாடிய கம்பர் அல்லாதவராய், பிற்காலத்தில் அதேபெயர் சூட்டப்பெற்ற வேறொருவர் ஆவார். இவருக்கு இரண்டாம் கம்பர் என்ற பெயர் கொடுத்து இவர் பாடல்களை இங்கு ஆராய்கிறோம்.

கம்பர் 12ஆம் நூற்றாண்டில் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் அவன் அவைக்களத்தில் பெரும்புலவராய் விளங்கினார் என்றும், அவரே இராமாயணம் பாடி அரங்கேற்றினார் என்றும் பலர் சொல்லி வருகிறார்கள். முதல்முதலாக மகாவித்துவான் இராகவ ஐயங்கார் (செந்தமிழ், தொகுதி 3) எழுதினார். பின்வந்த எல்லாப் பண்டிதர்களும் பேராசிரியர்களும் இவருடைய கருத்தை அப்படியே தழுவி, கம்பர் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்றே கொண்டார்கள். கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றிய காலத்தைக் குறிப்பிடுவது ஒரு தனிப் பாடல் (வைணவ பரிபாஷையில், இராமாயணத் தனியன்): 'எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழின் மேல்' என்பது. பழைய ஏட்டுப் பிரதிகளிலும் அச்சுப் புத்தகங்களிலும் இராமாயணத் தனியன்கள் நான்கு ஒரு தொகுப்பாகக் காணப்படும். அவை யாவன: நாரணன் விளையாட்டெல்லாம் - சிறப்புப் பாயிர

இலக்கணத்தை யொட்டி வழி, எல்லை, நூற்பெயர், நுதலிய பொருள், ஆக்கியோன் பெயர் என்பன கூறும்; அம்பிலே சிலையை நாட்டி - யாப்பைக் கூறும்; எண்ணிய சகாத்தம் - காலம் களன் காரணம் என்பன கூறும்; இம்பர் நாட்டில் - பயன் இந்நான்கு பாடல்களும் எங்கும் ஒரு தொகுப்பாய்க் காணப் பட்டு* சிறப்புப் பாயிர இலக்கணம் பொருந்தி இராமாயண அரங்கேற்ற காலத்திலேயே செய்யப்பட்டுத் தமிழ்நாட்டில் நிலவி வந்தன. இவற்றுள் எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழு என்ற பாடல், அரங்கேற்றிய காலம் சகாத்தம் 807 - கி.பி. 885 என்று திட்டமாக, உடனிருந்து சிறப்பித்தார் கூற்றாகத் தெளிவு படக் கூறிற்று.

ஆனால், என்ன காரணமோ மகாவித்துவான் அவர்களும் பிறரும் கம்பரைப் பிற்காலத்துக்குக் கொண்டு வரவேண்டு மென்று முயன்று, 807 என்ற தொடருக்குப் பலவகையான வியாக்கியானங்களைக் கற்பித்து, இது வெறும் 807 அல்ல, சகம் 1107 ஆகவே கம்பர் காலம் கி.பி. 1185 என்று பல மேற் கோள்களுடன் தாபிக்க முயன்றார்கள். சோமசுந்தர தேசிகர் சிதம்பரநாத முதலியார் போன்ற சிலர் இதை ஆட்சேபித்தார் களேயன்றி, பொதுவாய்க் கற்றறிந்தவர்கள் எல்லோரும் இதை ஆமோதித்தார்கள்.

நாம் கம்பர் காலம் 9ஆம் நூற்றாண்டு என்றே கருதுகின்றோ மாதலால், 9ஆம் நூற்றாண்டு வரலாறு கூறுகின்ற இடத்தில் அவருடைய வரலாற்றை ஆராய்ந்து காலம் குறிப்பிடுவோம். இங்கு இராமாயணக் கம்பரை விரிவாக ஆராய்வது நமது நோக்கமன்று.

இனி, மற்றொரு புலவர் இருந்து சரசுவதி அந்தாதி சட கோபர் அந்தாதி என்பன முதலான சிறு நூல்களைப் பாடி யிருக்கிறார். இந்நூல்கள் இன்று உள்ளன. அன்றி, இவை ஒவ் வொன்றும் ஒவ்வொரு சிறப்புடையதாயும் இருக்கிறது. கால

---

* பிற்காலத்தில் கம்பராமாயணம் அச்சிட்டோர், முன்குறித்த நான்கு பாடல்களையும் ஒருசேர அச்சிடாமல், தனித்தனியே பிரித்து அச்சிட்டார்கள். இவை ஒருங்கு காணப்பட்டால், படிப்போர் இவை உடன் காலத்துச் சிறப்புப் பாயிரமென்று உணர்ந்து, கம்பர் காலத்தை மூன்றாம் பாடலில் சொல்லியபடி கி.பி. 885 தான் என்று எண்ணி விடுவார்களோ என்ற அச்சம் போலும்! பழம் பதிப்புக்களில் இப்பாடல்கள் நூன்முகப்பில் ஒரு தொகுப்பாய் இருக்கும்.

அறிவு தெளிவு இல்லாமல் வரலாறுகள் வழங்கிவந்த காரணத்தால், கம்பர் ஒருவர் இருந்தார், அவரே இராமாயணம் பாடினார், அவரே இந்த அந்தாதிகள் முதலியவற்றையும் பாடினார் என்று கதைகள் சொல்லுகின்றன. நூல்களையும் கதைகளையும் ஆராய்ந்து உண்மையைக் காணுவது எளிதன்று; கம்பர் மாணிக்க வாசகர் போன்ற பேராசிரியர் பற்றியுள்ள அபிமானங்களைக் கைவிடுவதும் எளிதன்று. ஆயினும் இங்கு ஒருவகையில் துணிந்து சில முடிவுகள் செய்தே ஆகவேண்டியிருக்கிறது. இராமாயணம் பாடிய கம்பர் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்ற கருத்தினால் அவரைக் குறித்த பேச்சை இங்கு விலக்கி விடுகிறோம். மற்றொருவர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்தார், அவர் பெயரும் கம்பர் என்று வழங்குகிறபடியால், அவரை இரண்டாம் கம்பர் என்று இப்போது கூறுவோம்.

இப்படி கூறியதனாலேயே மற்றொருவர் கம்பர் என்ற பெயரிலேயே இருந்தார் என்று ஐயமற நிறுவியதாகாது. இராமாயணம் அன்றிப் பிரபந்தங்கள் சில இவர் பெயரால் வழங்கப் பெறுகின்றன. இவருக்கும் ஒரு பெயர் கொடுத்துக் குறிப்பிடுவது வரலாற்றுணர்வுக்கு உதவுவதாகும். ஆதலால் தெரிந்து வழங்கும் பெயராகிய கம்பர் என்ற பெயரையே இவருக்கு இட்டு வழங்குகிறோம். ஒரே பெயரில் பல புலவர் இருந்திருக்கிறார்கள் என்பது இப்போது நன்கு தெரிந்து ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை: எடுத்துக்காட்டுகள் - அவ்வை, கபில பரணர், நக்கீரர், பெருந்தேவனார், பட்டினத்தார், அகத்தியர் தொல்காப்பியர் என்ற பெயர்களும் பல என்பதை நாம் ஒப்புக் கொள்ளவே வேண்டும். கம்பர் இருவர் என்ற கருத்து இதுவரை பழக்கப்படாத கருத்து. இப்போது பழக்கப்படுத்திக் கொள்வது வரலாற்றுணர்வுக்கு உதவியாயிருக்கும்.

ஒரே பெயருடைய புலவர் பலர் சங்ககாலம் முதல் 15ஆம் நூற்றாண்டு வரையில்கூட வாழ்ந்தார்கள் என்று இலக்கிய வரலாற்றால் அறிகிறோம். இந்த முறையில் கம்பரையும் இருவராகக் கருதி, இக்காலத்து வாழ்ந்து பிரசித்தமாகத் தெரிந்த சிறு நூல்களையும் பாடல்களையும் பாடியவர் இந்த இரண்டாம் கம்பர் என்று பெயர் சூட்டுகிறோம். இவர் செய்தனவாக நாம் இப்போது அறிகின்றவை பின்வருவன: சரசுவதி அந்தாதி, சடகோபர் அந்தாதி, ஏர் எழுபது என்ற மூன்று பிரபந்தங்கள்;

நாலாயிரப் பிரபந்தத்துள் காணும் மூன்று தனியன்கள்;* இவர் வரலாற்றில் தொடர்புடைய பல தனிப் பாடல்கள். இவற்றை இனி ஆராய்வோம். திருக்கை வழக்கம் என்பது கம்பர் பெயரால் வழங்கியபோதிலும், அவர் செய்ததன்று, 12ஆம் நூற்றாண்டுமன்று.

## சரசுவதி அந்தாதி

கம்பர் செய்ததாக வழங்குகின்ற நூல்களில் ஒன்று. கட்டளைக் கலித்துறை, முப்பது பாடல்கள் உடையது. முதலில் ஆயகலைகள் அறுபத்து நான்கினையும், படிகநிறமும் என்ற பிரசித்தமாய்த் தெரிந்த இரு வெண்பாக்களையும் செய்யப் பெற்றுள்ளது. இவற்றை அந்தாதியாசிரியர் செய்திருக்கக் கூடாது என்பதில்லை. இவை கம்பர் வாக்கு என்பர் மு. இராகவையங்கார். 23, 24ஆம் பாடல்கள் சடகோபரந்தாதிப் பாடலைத் தழுவியவை போலத் தோற்றுகின்றன.

> சேதிக்கலாம் தர்க்க மார்க்கங்கள், எவ்வெவர் சிந்தனையுஞ்
> சோதிக்க லாம்,உறப் போதிக்க லாம்,சொன்ன தேதுணிந்து
> சாதிக்க லாம்,மிகப் பேதிக்க லாம்,முத்தி தானெய்தலாம்;
> ஆதிக்க லாமயில் வல்லிபொற் றாளை அடைந்தவரே.

இப்பாடல் சடகோபரந்தாதியில் வரும் 'சாதிக்குமோ பரதத்துவத்தை' என்பதனோடு சொல்லமைப்பிலும் பொருளமைப்பிலும் நிரம்ப ஒற்றுமையுடையது. இதை இளமையில் பாடிய புலவர், அனுபவம் செறிந்த முதுமையில் சடகோபரந்தாதி பாடினார் என்று கொள்வதில் இழுக்கில்லை.

பிற்காலத்தே இறைவனிடம் முறையீடு செய்வதுபோலப் புலவர் அந்தாதி பாடியுள்ளனர். அவற்றுக்குத் தோற்றுவாய் செய்யும் நூல்களில் இதுவும் ஒன்று போலும். சில பாடல்கள் கவிச்சுவை பொருந்த உள்ளன. எடுத்துக்காட்டு, பாடல் 25:

> தொழுவார், வலம்வரு வார்,துதிப் பார்,தம் தொழில்மறந்து
> விழுவார், அருமறை மெய்தெரி வார்,இன்ப மெய்புளகித்து
> அழுவார்,இனும் கண்கள் நீர்மல்குவார்,என்கண் ஆவதென்னை
> வழுவாத செஞ்சொற் கலைமங்கை பால்அன்பு வைத்தவரே.

---

* இத்தனியன்கள் மூன்றையும் வைணவ இலக்கியம் என்ற அத்தியாயத்தில் ஆராய்ந்தோம்.

*இவ்வந்தாதி ஒட்டக்கூத்தர் வாக்கென்று கூறுவாருமுளர் என்பது மு. இராகவையங்கார் குறிப்பு. இதனால் நாம் அறிவது சரசுவதியைத் துதிக்கும் இவ்வந்தாதியைக் கம்பர் பாடியிரா விட்டால், மற்றொரு புலவரான ஒட்டக்கூத்தர் மீது இதை ஏற்றலாம் என்று முற்காலத்திலேயே சிலர் கருதினர்போலும். நூல் ஓரளவு நல்ல நூலேயாயினும், இதுவும் பொருந்தாது.*

*கம்பர் வரலாற்றுக் கதைகள் இந்த நூலை இவர் சரசுவதியின் அருள் வேண்டிப் பாடினார் என்று கூறும். வரலாற்றுக் கதைகளில் பெரும்பகுதி உண்மை அல்ல. இறுதிச் சீரான சீர் தரும் என்பது சீர்தந்த என்ற முதல் பாடலில் ஆதியாக மண்டலித்து வருவதால், நூல் 30 பாட்டோடு முடிகிறது என்பது தெளிவு. வடமொழித் தொடர்கள் இதில் பல பயில்கின்றன; கமலாசனம், சரோருகம், அருக்கோதயம், சந்திரோதயம், பாதாம்புயம், வேதாந்தமுத்தி, சுவேத சரோருகம், தர்க்க மார்க்கங்கள் முதலான தொடர்களைக் காண்க. இறுதிப் பாடல் பலசுருதி கூறுவதாக உள்ளது. 'உரைப்பார் உரைக்கும் கலைகளெல்லாம்' (3) என்ற பாடல், 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ' (3381) என்ற திருவாய்மொழிப் பாடலையும், 'புந்தியிற் கூரிருள் நீக்கும் மதியமென்கோ' (10) என்ற பாடல், திருவாய்மொழி மூன்றாம் பத்தின் நான்காம் பதிகத்தின் சொல்லமைதியையும் தழுவிச் செய்யப்பெற்றுள்ளன.*

*பொதுவாக நூலின் பொருளமைதியையும் சொல்லமைதியையும் பார்க்கும்போது, இது ஆசிரியருடைய இளமையில் செய்யப் பெற்றிருக்கலாமென்பது நன்கு தெரிகிறது. நூலின் தன்மையை உணர்வதற்கு எடுத்துக்காட்டாக, இரு பாடல்களை இங்கு தருகிறோம்.*

உரைப்பார் உரைக்குங் கலைகளெல்லாம் எண்ணில் உன்னையன்றித்
தரைப்பால் ஒருவர் தரவல ரோ,தண் தரளமுலை
வரைப்பால் அமுதுதந் திங்கெனை வாழ்வித்த மாமயிலேனை,
விரைப்பா சடைமலர் வெண்தா மரைப்பதி மெல்லியலே. 3

பெருந்திரு வும்சய மங்கையும் ஆகியென் பேதை நெஞ்சில்
இருந்தருளும் செஞ்சொல் வஞ்சியைப் போற்றல் எல்லா உயிர்க்கும்
பொருந்திய ஞானம் தரும்,இன்ப வேதப் பொருளுந்தரும்,
திருந்திய செல்வந் தரும்,அழி யாப்பெருஞ் சீர்தருமே. 30

## சடகோபரந்தாதி

இது கம்பர் பாடினார் என்றே வழங்குகின்ற பிரபந்தம். ஆதலால் இது பற்றிய செய்திகளை இங்கு குறிப்பிட வேண்டும். இராமாயணம் அரங்கேற்றுவதற்காகத் திருவரங்கம் சென்று அங்கு பிரணவாகார விமானத்து அறிதுயில் அமர்ந்த கருணை முகிலைச் சேவித்து நின்றபோது, அவ்விறைவன் இவருடைய பக்திக்கு மிகவும் மகிழ்ந்து, நம்மாழ்வாருக்கு இவரை ஆட்படுத்தக் கருதி, 'நம் சடகோபனைப் பாடினையோ?' என்று அர்ச்சகமுகமாக வினவினார். அப்போதே நம்மாழ்வாருடைய திருவாய்மொழியின் பொருளாகிய பரமஞான பக்தி அதிசயத்தையும் இவர் உள்ளத்தில் பெருமாள் தோற்றுவித்தருளினார். கம்பரும் உடனே நம்மாழ்வார் திருக்கோயில் முன்பு சென்று ஆழ்வாரைப் பணிந்தார். அக்கணமே இவருக்கு ஆழ்வாரது திருவருள் நோக்கமும் உண்டாயிற்று. அந்நிலையில் எழுந்த புலவர் ஆழ்வாரைப் போற்றி 'வேதத்தின் முடிசெல்க' என்று எடுத்து 100 பாடல் அந்தாதியாகத் 'தேன்எனப் பால் எனச் சில்லமிழ்து ஊற்றெனப்' பாடி, ஆழ்வாரின் சிறந்த அடியவராய் விளங்கினார். பின்னர் இராமாயண் அரங்கேற்றம் சிறப்புற நடந்தது. இவரது இராமாயணத்தில் அங்குள்ளார் முதலில் பல குற்றங் கண்டார் என்றும், இவர் சடகோபரந்தாதி பாடிய பின் அவர்கள் அக்குற்றங்களைக் காணாது இவரிடம் அபிமானம் கொண்டார்கள் என்றும் சொல்வர். இது சம்பிரதாயக் கதை. இக்கதையை முதன்முதல் சொல்பவர் பிள்ளைலோகஞ்சீயர் உபதேச ரத்தினமாலை, பாடல் 50 உரை.

கம்பர் என்பவர் உண்மையாகவே சடகோபரந்தாதி பாடியவர் என்பதற்கு ஆதாரமாகச் சடகோபரந்தாதித் தனியன்கள் பல உள்ளன. முன்னமே கூறிய வரலாறுகள் யாவும் இத்தனியன்கள் குறிப்பிடுகின்றன. பின்வரும் ஐந்து பாடல்களும் காண்க.

தேவிற் சிறந்த திருமாற்குத் தக்கதெய் வக்கவிஞன்
பாவிற் சிறந்த திருவாய் மொழிபகர் பண்டிதனே,
நாவிற் சிறந்தஅம் மாறற்குத் தக்கநம் நாவலவன்
பூவிற் சிறந்தஆழ் வான்கம்ப நாட்டுப் புலமையனே.

ஆரணத் தின்சிர மீதுறை சோதியை அந்தமிழால்
பாரணஞ் செய்த வனைக்குரு கூரனைப் பற்பலவா
நாரண னாமென ஏத்தித் தொழக்கவி நல்குகொடைக்
காரண னைக்கம்ப னைநினை வாம்உட் களிப்புறவே.

நஞ்சட கோபனைப் பாடினை யோஎன்று நம்பெருமாள்
விஞ்சிய ஆதரத் தாற்கேட்பக் கம்பன் விரைந்துரைத்த
செஞ்சொலந் தாதிக் கலித்துறை நூறுந் தெரியும் வண்ணம்
நெஞ்சடி யேற்கருள், வேதந் தமிழ்செய்த நின்மலனே.

நாதன் அரங்கன் நயந்துரை யென்னநற் கம்பனுன்றன்
பாதம் பரவிய பைந்தமிழ் நூறும் பரிவுடனே
ஓதும் படியெனக் குள்ளந் தனைஅருள், ஓதரிய
வேதந் தமிழ்செய்த மெய்ப்பொருளேஇதென் விண்ணப்பமே.

மன்றே புகழுந் திருவழுந் தூர்வள்ளல் மாறனைமுன்
சென்றே மதுர கவிப்பெரு மாள்தன் தமிழ்த்தொடையில்
ஒன்றே பதிக முரைத்தவன் பொன்னடி யுற்றுநின்றான்
என்றே பதிகம் பதிகம தாக இசைத்தனனே.

*இப்பாடல்களுள் முதல்பாட்டு தெய்வக்கவிஞர் நம்மாழ்வாரே, நம் நாவலன் கம்பநாடனே என்றும், இரண்டாம் பாட்டு நம்மாழ்வாரை நாரணனென்று ஏத்தித் தொழக்கவி நல்கிய கம்பனை நினைவாம் என்றும், மூன்றாம் பாடல் நம் சட கோபனைப் பாடினையோ என்று பெருமாள்கேட்கக் கம்பன் கவி பாடினான் என்றும், நான்காம் பாடல் பெருமாளை நோக்கிக் கம்பன் பாடலை ஓத எனக்கு உள்ளம் தருக என்றும் கூறுகின்றன. கடைசிப் பாடல் அந்தாதியின் இறுதியில் உள்ளது. இது மதுரகவி நம்மாழ்வாரைத் துதித்து, அவர் பொன்னடி அடைந்தாரென்று திருவழுந்தூர் வள்ளல் பதிகம் பதிகமாகப் பாடினார் என்று கூறுகிறது; அதாவது 100 பாடல். இப்பாடல் களால் கம்பர் என்ற பெயருடைய புலவர் திருவரங்கநாதன் ஆணைப்படி நம்மாழ்வார் மீது சடகோபரந்தாதி பாடினார் என்பது தெளிவாகத் தெரிகிறது.*

*இங்கு சில கருத்துக்களை நன்றாக உணரவேண்டும். ஒன்று இதுவரையில் கூறிய கருத்து: இது வரலாறான செய்தி. மேற் காட்டிய தனியன் பாடல்களில் ஓரிடத்திலும் கம்பர் இராமா யணம் பாடினார் என்பது சொல்லப்படவில்லை. இராமாயணம் பாடியதே கம்பருக்குரிய தனிப்பெருமை; இராமாயணம் பாடிய*

பின்னரே அந்தாதி பாடினார் என்பது கதை. ஆனால் ஒரு பாடலேனும் இராமாயணத்தைக் குறிப்பிடாமை நம்மைச் சிந்திக்கச் செய்கிறது. இரண்டாவது கருத்து, நூலிலுள்ள சில அகச் சான்றுகள். மூன்றாவது கருத்து ஒரே பெயர் வெவ்வேறு காலத்தில் வாழ்ந்த பல புலவர்களுக்கு வழங்கியமை.

இவற்றுள் இரண்டாவது கருத்தைச் சிறிது ஆராய்வோம். சடகோபரந்தாதிக்கு மற்றொரு பெயர் 'ஆழ்வார் நூற்றந்தாதி'. வைணவத்தில் நூற்றந்தாதி என்ற பெயர்வாய்ந்த சிறப்புடைய நூல்கள் மூன்று. ஒன்று திருவரங்கத்து அமுதனார் செய்த இராமானுச நூற்றந்தாதி. இதன் காலம் முன் அத்தியாயத்துள் சொல்லப்பட்டது; கி.பி. 12ஆம் நூற்றாண்டு. இரண்டாவது இந்த நூல் ஆகிய சடகோபரந்தாதி என்னும் ஆழ்வார் நூற்றந்தாதி. மூன்றாவது மணவாள மாமுனிகள் செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி; இது காலத்தால் மிகவும் பிற்பட்டது (1425) சடகோபரந்தாதியானது இராமானுச நூற்றந்தாதி ஒத்துச் செய்யப்பட்டது என்பது நூலைப் படித்த மாத்திரத்தில் நன்கு தெரியும். இந்நூல் செய்தார் யாராயிருப்பினும் இராமானுசருக்குப் பிற்பட்டவர் என்பது தெளிவு. 'எதிகளுக்கு இன்னமுதே' (54) என்று கூறுவது. இராமானுசரை நினைத்து என்று கருதலாம். முதல் பாடலில் சொல்லப்பட்ட கருத்தாகிய 'வேதத்தின் முன் செல்க; குருகூர்ப் புனிதன் கவியின் ஒரு பாதத்தின் முன் செல்லுமோ பரஞ்சுடர்?' என்று பாடியிருப்பது, பெருமாள் உலாப் போதுங்கால் வடமொழி தென்மொழி இரண்டையும் ஓதுவதற்கான முறையைக் குறித்தது என்று வைணவப் பெரியார் சொல்லுவார்:

வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந் தோர்விரிஞ்சன் முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க: குணங்கடந்த
போதக் கடலெங் குருகூர்ப் புனிதன் கவியினொரு
பாதத்தின் முன்செல்லு மே,தொல்லை மூலப் பரஞ்சுடரே. 1

இவ்வொழுங்கு இராமானுசர் அமைத்த திருவரங்கம் கோயில் ஒழுங்கினால் விளைந்தது என்பது தெளிவு. இங்கு காட்டிய குறிப்புக்களால் சடகோபரந்தாதி 12ஆம் நூற்றாண்டில் எழுந்தது என்பதை ஒப்புக்கொள்வதில் தடை இல்லை.

முன்னர் குறிப்பிட்டதைப் போல இந்நூல் பாயிரமாக நான்கு பாடல்களும், அந்தாதிப் பாடல்கள் நூறும், இறுதியில் தனிப்பாடல் ஒன்றும் கொண்டது. இந்நூல் ஆழ்வார்க்கு மிகவும் உவப்பான நூல் என்பதில் ஐயமில்லை. வைணவ மரபில் திருமால்

முதலியோரை உரிமைபற்றி அன்புபாராட்டி நம் என்றே குறிப்பிடுவார்கள். இதை 'நம்பெருமாள், நம்மாழ்வார், நம்சீயர், நம்பிள்ளை என்பர் அவரவர் தம் ஏற்றத்தால்' என்று மணவாள மாமுனி தம் உபதேச ரத்தின மாலையில் கூறுகிறார். அப்படியே சடகோபரந்தாதி பாடினோரையும், 'தேவிற் சிறந்த' என்ற பாடல் 'நம் நாவலவன்' என்று உயர்த்திக் கூறுவது காணத்தக்கது.

இனி, மூன்றாவது கருத்து ஒரே பெயரோடு புலவர் பலர் தமிழ்நாட்டில் பல்வேறு காலத்தில் இருந்திருக்கிறார்கள். நக்கீரர், கபிலர், பரணர், கல்லாடர், பட்டினத்தார், பேராசிரியர், பெருந்தேவனார், அவ்வையார் - பலர், இப்படி ஒரே பெயரைத் தரித்த பல புலவர்களுள் அவ்வையார், பட்டினத்தார் போன்ற சிலரைப் பொறுத்தவரையில், நாட்டில் மிகப்பலவான கதைகள் ஏற்பட்டிருந்தும் கூட, அவை யாவும் ஒருவர் தலையிலேயே ஏற்றப்பட்டு வந்திருக்கின்றன. இக்காலத்தில் செய்யப்பட்ட ஆராய்ச்சி காரணமாகத்தான், அவ்வையாரும் பட்டினத்தாரும் பலர் பல காலங்களில் வாழ்ந்தார்கள், வழங்குகின்ற கதைகள் பாடல்கள் யாவும் வெவ்வேறு காலத்துக்குரியன, இவற்றை ஒருவருக்கே ஏற்றுவது வரலாற்று உணர்ச்சிக்குப் பொருந்தாது என்ற அறிவு திட்டமாக ஏற்பட்டிருக்கிறது.

கம்பர் குறித்தும் இதையே சொல்லலாம். ஒன்பதாம் நூற்றாண்டில் ஒரு கம்பர் வாழ்ந்து இராமாயணம் பாடினார். மற்றொருவர் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து சடகோபரந்தாதி பாடினார். இவர் கம்பர் என்றே பெயர் தரித்திருந்தார் என்று கொள்ளுவோம்; திருவழுந்தூரில் வாழ்ந்து திருவழுந்தூர் வள்ளல் என்று பெயர் பெற்றிருந்த போதிலும், அந்தாதி பாடிய கம்பர் இராமாயணம் பாடிய கம்பராக மாட்டார். ஒருவேளை இவர் அவர் கால் வழியில் வந்தவராகலாம். இவ்வாறு கருதுவதில் இழுக்கு ஒன்றுமில்லை. இரண்டு நூல்களின் சிறப்பினாலும் நாம் இவ்வாறு சொல்ல நேர்கிறது. 12ஆம் நூற்றாண்டுக்குரிய கம்பரையும் சோழமன்னன், கூத்தர், அவ்வையார், அம்பிகாபதி ஆகியோரையும் தொடர்புபடுத்திவரும் கதைகள் யாவும் வெறும் கட்டுக்கதைகளே. இக்கதைகள் மெய் என்று நம்பியே சோழ மண்டல சதகத்துள் பல பாடல்கள் கம்பர் வரலாற்றைக் குறிப்பிடுகின்றன. தமிழ்நாவலர் சரிதையிலும் பல பாடல்களும் வரலாறுகளும் சொல்லப்பட்டுள்ளன; இவை வரலாற்றுக்குப் பயன்படா.

*'கம்பனாரிடைப் பெருமையுளது' என்று வீரசோழிய உரைகாரரான பெருந்தேவனார்' எழுதுகிறார். இப்பெருந்தேவனார் 1100க்கு முன்னும் பின்னுமாக வாழ்ந்தவர் என்று அவர் வரலாற்றில் குறிப்பிட்டோம். எனவே, இராமாயணம் பாடிய கம்பர் இவருக்கு முற்பட்டவர், சடகோபரந்தாதி பாடியவர் பிற்பட்டவர் என்பது தெளிவாகிறது. பெருமையுடையவர் கம்பராதலினாலே எல்லா நூல்களுக்கும் ஒரே ஆசிரியர் என்று சடகோபரந்தாதி, சரசுவதி அந்தாதி ஏரெழுபது, திருக்கை வழக்கம் முதலியன யாவும் அவர்மீது சுமத்தப்பெற்றன. இது பொருந்தாத கருத்து என்பதை ஆங்காங்கு விளக்கியிருக்கிறோம்.*

*இராமாயணக் கம்பர் செய்ததன்று என்று கருதிய போதிலுங்கூட, சடகோபரந்தாதி மிகவும் சிறந்த இலக்கியச் சுவை பொருந்திய நூல்; சிறப்பான பக்திச்சுவையும் பொருந்தியது. ஆசிரியர் தமக்கு ஆழ்வார் அருள்செய்தார் என்ற கருத்தைப் பலவிடங்களிலும் கூறுகின்றார்:*

**இழைத்தா ரொருவரும் இல்லா மறைகளை இன்தமிழால்**
**குழைத்தார், குருகையிற்கூட்டங்கொண்டார், குமரித்துறைவர்**
**மழைத்தார் தடக்கை களாலென்னை வானின்வரம்பிடைநின்று**
**அழைத்தார், அறிவுந்தந்தார்; அங்கும்போய வர்க்காட் செய்வனே**

**நாய்போற் பிறர்கடை தோறும் நுழைந்தவர் எச்சில் நச்சிப்**
**பேய்போல் திரியும் பிறவிய னேனைப் பிறவியென்னும்**
**நோய்போம் மருந்தென்னும் நுன்திருவாய்மொழி நோக்குவித்துத்**
**தாய்போல் உதவிசெய் தாய்க்கடியேன்பண்டென் சாதித்ததே.**

*திருமால் பதினொராம் அவதாரம் எடுத்துத் தன்னையே பாடிக் கொண்டார் என்று ஒரு பாடலில் கூறுகின்றார்* (78). மிகவும் சிறப்புப் பொருந்திய பாடல்களில் சில பின்னே காண்க:*

**மொழிபல வாயின செப்பம் பிறந்தது,முத்தி யெய்தும்**
**வழிபல வாயவிட் டொன்றா யது,வழு வாநரகக்**
**குழிபல வாயின பாழ்பட்டது: குளிர் நீர்ப்பொருநைச்**
**சுழிபல வாயொழு குங்குரு கூர்எந்தை தோன்றலினே.** 5

---

* *திருமாலின் பதினொராம் அவதாரம் : 13ஆம் நூற்றாண்டில், ஸ்ரீ பட்டனார் செய்த தமிழ்ப் பகவத்கீதையின் சிறப்புப் பாயிரமானது, மாயனே வடமொழியில் கீதை செய்தது மட்டுமன்றி, இப்போது சேமமாநகரந் தேடிவந்து பட்டனாராய்ப் பிறந்து இதைத் தமிழிலும் செய்தார் என்று கூறுவதை ஒப்பு நோக்குக. (எமது 13ஆம் நூற்றாண்டு வரலாறு.).*

சாதிக்கு மேபர தத்துவத் தை,சம யத்திருக்கைச்
சேதிக்கு மே,ஒன்று சிந்திக்கு மே,அத னைத்தெரியப் .
போதிக்கு மே,எங்கு மோங்கிப் பொதுநிற்கும் மெய்யைப்பொய்யைச்
சோதிக்கு மேஉங்கள் வேதம், – எங் கோன்தமிழ்ச் சொல்லெனவே? 18

சேராதனஉள வோபெருஞ் செல்வர்க்கு; வேதஞ்செப்பும்
பேரா யிரம்,திண் புயமாயிரம்,நறை பெய்துளவத்
தாரா யிரம், – நம் திருக்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
ஆரா அமுதக் கவியா யிரம்,அவ் அரியினுக்கே. 45

*சைவப்பெரியார் அருளிய தொடர்களை இந்நூலில் சில இடங்களில் காணலாம். 'என் போலிகள் பறித்திட்ட இலையும் முகையும் எல்லாம்' என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கு, இங்கு 'கொழுந்தோடு இலையும் முகையுமெல்லாம் கொய்யும்' (27) என்று வருகிறது. 'தாட்செய்ய தாமரைச் சைவனுக்கு என் புன்தலையால் ஆட்செய் குலாத்தில்லை ஆண்டான்' என்ற மாணிக்கவாசகர் அருள்மொழி இங்கு, 'ஆட்செய்வதெல்லாம் செய்து.... தாட்செய்ய தாமரை என்தலை ஏற்றனன்'(60) என்ற தொடரில் காணப்படுகிறது.*

சொல்லென் கெனோ,முழு வேதச்கருக்கென்கெ னோஎவர்க்கும்
நெல்லென்கெ னோ,உண்ணும் நீரென்கெ னோ,மறை நேர்நிறுக்கும்
கல்லென் கெனோ,முதிர் ஞானக் கலியென்கெனோ,புகல
வல்லென் கெனொகுருகூர் எம்பிரான் சொன்ன மாலையையே.

ஆயிர மாமறைக் கும்மலங் காரம், அருந்தமிழ்க்குப்
பாயிர நாற்கவிக் குப்படிச் சந்தம், பனுவற்கெல்லாம்
தாயிரு நாற்றிசைக் குத்தனித் தீபம்தண் ணங்குருகூர்ச்
சேயிரு மாமர புஞ்செவ்வி யான்செய்த செய்யுட்களே.

*இவ்வளவு இருப்பினும், ஒரு கருத்தைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. சடகோபரந்தாதிப் பாடல்கள் பக்திச்சுவையினாலும் தமிழ்ச்சுவையினாலும் நெஞ்சத்தைக் கொள்ளை கொள்வது உண்மையே. இராமானுசர் தம்மீது பாடப்பெற்ற இராமானுச நூற்றந்தாதியை நாலாயிரத்துள்ளேயே சேர்த்துவிட்டார்; சடகோபரந்தாதி பிற்காலத்தே பாடப்பெற்றதாயினும், மூல ஆசாரியராக நம்மாழ்வாரைப் பாடுகின்றதாகிய இன்னும் பெரிய சிறப்புடையது. சுவையிலும் பொருளிலும் நூற்றந்தாதிக்கு எவ்விதத்திலும் குறைந்ததன்று. ஆனால் எப்படியோ வைணவ சம்பிரதாயத்தில் இதற்கு இடமில்லாமல்*

போய்விட்டது. இராமானுசர் எவ்வளவுதான் சாதியை விலக்கப் பாடுபட்ட போதிலும், அவருக்குப்பின் சமயத்துறையில் சாதி யொன்றே பிரதானம் பெற்றுவிட்டது. நம்மாழ்வார் என்ற ஒரு வேளாளருக்கு யாருக்குமில்லாத சிறப்புக் கொடுத்தபின், வைணவ சமூகம் ஸ்ரீவைஷ்ணவர் என்ற பெயரால் பிராமணருக்கு மட்டுமே சிறப்பளித்திருக்கிறது. அரங்கத்தமுதனார் பிராமணர், ஆனால் சடகோபரந்தாதி பாடினார் பிராமணர் அல்லர் என்ற காரணத் தால், இவ்வழகிய நூலுக்குச் சம்பிரதாயத்தில் இடமில்லாமல் போய்விட்டதென்று தோன்றுகிறது. இத்தகைய் நிலைக்கு விலக்கு, விளாஞ்சோலைப்பிள்ளையொருவர்தான். அவர் தீண்டாத சாதி யினராயிருந்தும், அவர் செய்த சிறு நூலாகிய சப்தகாதை என் பது தென்கலைவைணவர் நித்தியானு சந்தானத்துக்குரியதாய் இன்றும் இருக்கிறது. அந்த நிலைமைக்கு ஒரே காரணம், அவர் பிள்ளை லோகாசாரியரின் மாணாக்கர் என்பதும், மணவாள மாமுனியின் ஆசிரியரான திருவாய்மொழிப்பிள்ளை அவரிடம் கற்றார் என்பதுமாகும். மற்றபடி, வைணவம் என்பது பிராமண சமூகம் ஒன்றுக்கே என்ற நிலைதான் நிலவி வருகிறது.

**மற்றுமொரு குறிப்பு:** இராமாயணம் பாடிய கம்பர் சமயப் பகைமை இல்லாதவர்; காழ்ப்பில்லாது பாடல்களைச் சொல் பவர். தம் நூலுள் சிவபிரானைத் துதித்துப் பல பாடல்கள் பாடியவர்; எண்ணரிய மறையினொடு கின்னரர்கள் இசைபாட, மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய் - காலமும் கணக்கும் நீத்த காரணன் என்ற பாடல்களைக் காண்க ஆனால் சடகோபரந்தாதிக் கம்பர், தம் சமயத்தார் எவ்வளவுதான் சுவைபடப் பாடியபோதிலும், அதிகம் சமயக்காழ்ப்பைப் பாடலில் காட்டுபவர். திருவாசகத்தைப் பழித்து இவர் சொல் கிற ஒருபாட்டைக் கண்டு, சைவர் மட்டுமல்ல, உலகத்தவர் எவரும், அறிவுடைய வைணவரும் கூடச் சிரிப்பார்கள்.

துறவா தவர்க்கும் துறந்தவர்க் குஞ்சொல்ல வேசுரக்கும்
அறவா விவைஇங்கொர் ஆயிரம் நிற்க,அந் தோசிலர்போய்
மறவா தியர்சொன்ன வாசக மாம்மலட் டாவைப்பற்றிக்
கறவாக் கிடப்பரங் கென்பெறவோ தங்கள் கைவலிப்பே. 37

இராமாயணம் பாடிய கம்பர் ஒருகாலும் இப்பாடலைப் பாடி யிருத்தல் இயலாது. இருவரும் வெவ்வேறானவர் என்பதற்கு இது மற்றுமொரு சான்று. (ஆகமவாதியரைச் சிந்தை செய்யாத தம் அறிவை ஒரு பாடலில் போற்றுகிறார். ஆகமவாதியர் - சைவர்.)

## ஏரெழுபது

கம்பர் பாடினார் என்று வழங்குகின்ற மற்றொரு நூல். உழவுத்தொழிலின் சிறப்பை மிகவும் அருமையாகப் போற்றிக் கூறுகின்றது. பாயிரம் 10, நூல் 69 கலிப்பாக்கள்; சில விருத்தப் பாடல்களுமுள்ளன. பாயிரப்பகுதியில் கணபதி திரிமூர்த்திகள் நாமகள் ஆகியோர் துதி சொல்லப்பட்டுள்ளது. அடுத்து, சோழமண்டலம் சோழமன்னன் மகாநாடு வேளாண்குடி வேளாளர் இவர்கள் சிறப்புச் சொல்லப்பட்டுள்ளது. காராளர் சிறப்பைச் சொல்லுகிறேன் என்று ஆசிரியர் பல இடங்களில் சொல்லுகிறார். சோழன் சிறப்பைச் சொல்லும்போது ஆசிரியர் சென்னி எழுபத்தொன்பது குடியுடையான் என்று சொல்லுகிறார்; இத்துணைக் குடியுடைய வேளாளர் என்பது ஒரு சாதிப்பிரிவு அல்லது வழக்குப்போலும். ஈழ மண்டலம் என்ற சொல்லாட்சி காணப்படுகிறது. நூலினுள் உழவு நாட்கோள் தொடங்கி உழவுக் கருவிகள் உழவுச் செயல்முறைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாடலால் சிறப்பித்துச் சொல்லப்படுகின்றன. காராளர் கருவி எழுபதையும் பாடவந்ததாகவே ஆசிரியர் கூறுகிறார்.

இந்நூலைக் கம்பர் செய்தார் என்பதே வழக்கு. இராமாயணக் கம்பர் வேறு என்று நாம் கருதுவதால், அவருக்கு மூன்று நூற்றாண்டுகள் பின்வந்து அந்தாதிகள் பாடிய கம்பரே இதையும் பாடினார் என்று கருதலாம். வேளாளர் வாழ்ந்த நாடு, எல்லா அறங்களும் விளங்கி, தமிழ்மன்னர் மூவரும் மகுடஞ்சூடி, இந்திரன் உலகம் போலிருந்தது என்கிறார். கருவி எழுபதின் சிறப்பையும் எழுபது பாட்டுக்களால் சொல்லப்புகுமுன் வேளாண்குடிச் சிறப்பை நான்கு பாடல்களால் கூறுகிறார். ஒரு பாடல் பின்வருவது:

> தொழுங்குலத்திற் பிறந்தாலென், சுடர்முடிமன் னவராகி
> எழுங்குலத்திற் பிறந்தாலென், இவர்க்குப்பின் வணிகரெனுஞ்
> செழுங்குலத்திற் பிறந்தாலென், சிறப்புடைய ரானாலென்
> உழுங்குலத்திற் பிறந்தாரே உலகுய்யப் பிறந்தாரே.

கருவி எழுபது என்று கூறியபோதிலும், எல்லாம் கருவிகளல்ல: செயல்களும் சேர்த்துச் சொல்லப்பட்டன. உழவுநாட்கோள், ஏர் பூட்டல் முதலான செயல்களையும் காண்க. நூல் முழுமையும் காவேரி நாட்டின் சிறப்பு. நூலின் இடையே வரும் சில

*கருத்துக்களையும் தொடர்களையும் மட்டும் இங்கு குறிப்பிடு வோம். செழுநுகத் தோடுழும் பகடு பூட்டுகின்ற கயிறிரண்டும் புவிமகள் மங்கலமாமே; ஓதுவா ரெல்லாரும் உழுவர் தம் தலைக்கடைக்கே, கோதைவெல், மன்னவர்தம் குடைவளமும் கொழு வலியே; செங்கோலை நடத்துங் கோல் ஏரடிக்கும் சிறு கோலே; காவேரி வளநாடர், ஏர் பூட்டினல்லது மற்றிரவியுந் தேர் பூட்டானே; ஏராளும் பெருக்காளர் உழுத சால் வழி யன்றி உலகு வழி யறியாதே; உயிர் தமக்கெல்லாம் மருந்தாக வைத்த முதல், செந்தமிழ்க்கு முதலாய திருவாளர் செய்முதலே; காராளர் தண் வயலிற் செஞ்சாலிக் - குலைவளையும் பொழு தினிற் செங்கோல் வளைய மாட்டாதே; ஏர் வேந்தர் போர்க் களத்தில் இரப்பவரும் தோலாரே. ஏர் நடத்தலின் சிறப்பு:*

கார்நடக்கும் படிநடக்கும் காராளர் தம்முடைய
ஏர்நடக்கும் மேனிற்புகழ்சால் இயலிசைநா டகம்நடக்கும்,
சீர்நடக்கும் திறனடக்கும், திருவறத்தின் செயனடக்கும்,
பார்நடக்கும், படைநடக்கும் – பசிநடக்க மாட்டாதே.

*உழவின் சிறப்பு:*

அலகிலா மறைவிளங்கும், அந்தணராகுதி விளங்கும்,
பலகலையாந் தொகைவிளங்கும், பாவலர்தம் பாவிளங்கும்,
மலர்குலாந் திருவிளங்கும், மழைவிளங்கும், மனுவிளங்கும்.
உலகெலாம் ஒளிவிளங்கும், – உழவருழும் உழவாலே.

*வயலின் முடிசேர்த்தற் சிறப்பு:*

தென்னன்முடி சேரன்முடி தேங்குபொன்னி நாடன்முடி
கன்னன்முடி கடல்சூழ்ந்த காசினியோர் தங்கள்முடி
இன்னமுடி யன்றியுமற் றெடுத்துரைத்த முடிகளெல்லாம்
மன்னுமுடி வேளாளர் வயலின்முடி கொண்டன்றோ.

*முடி விளம்புதற் சிறப்பு:*

வெய்யகலி வலிதொலைக்கும் வேளாளர் விளைவயலிற்
செய்யின்முடி விளம்பாரேல் விளம்புவன சிலவுளவோ?
மையறுமந் தணர்விளம்பார், மறைமனுமன் னவர்விளம்பார்,
ஐயமறு புலவோரும் அருந்தமிழ்நூல் விளம்பாரே.

*'காவலுழவர் களத்தகத்துப் போரேறி - நாவலோ என அழைத்த நாளோதை' என்ற முத்தொள்ளாயிரப் பாடலை இவர் எடுத்து ஒரு பாடலில் அமைக்கிறார்: போர் செய்வோர் நெல்லரிவாரை விளித்தற் சிறப்பு:*

நாவலோ நாவலெண நாடறிய முறையிட்ட
ஏவலோர் போர்க்களத்திர் எதிர்நிற்பர், முத்தமிழ்தேர்
பாவலோர் ரிசைவல்லோர் பற்றுடைய பதினெண்மர்
காவலோ ரெல்லாருங் கையேற்கும் பொருட்டாலே.

நூல் முழுமையும் நன்கு ஆராயும்போது கருத்துக்களின் அமைதியினாலும் சொல்லமைதியினாலும் இந்நூல் சிறப்பு உடைய ஓர் எளியநூல் என்று சொல்வதில் கருத்து வேற்றுமை இருக்க முடியாது. சங்ககாலந் தொடங்கியே உழுதூண் வாழ்க்கை மிகவும் சிறப்பிக்கப் பெற்றிருக்கிறது. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் அல்லவா? உண்டி கொடுப்போர் வாழ்வின் சிறப்பையே இந்நூல் போற்றியுரைக்கிறது.

இங்கு ஒரு கருத்தை நன்றாக நினைவு கொள்ளுதல் பயனுடையதாகும். தமிழ்நாட்டில் பண்டைக்காலத்தில் சாதி பற்றிய வேற்றுமைகள் இருந்தன என்பது உண்மை. ஆனால் இங்கு இனம் பற்றிய வேற்றுமை இல்லை. ஆரியர், திராவிடர் என்ற பேச்சே இல்லை. இந்த இரண்டினங்கள் ஒருகாலத்தில், சரித்திரக் காலத்துக்கு முன்னமேயே, உண்மையாக ஒன்றாய்க் கலந்து விட்டன. சங்க காலத்திலிருந்தே ஓரினமாகத் தமிழர் என்ற இனமாக இந்நாட்டு மக்கள் வாழ்ந்துவந்தார்கள். ஆனால் சாதி வேற்றுமையும் வேற்றுமை உணர்வும், அடியவரிடத்திலும் ஞானிகளிடத்திலும் தெய்வசந்நிதியிலும் இல்லாமற் போனபோதிலும், அதன் விளைவுகளைச் சாமானிய மக்களிடையில் வரலாறு நெடுகிலும் பார்க்கிறோம். இந்த வேற்றுமை நீங்கவேண்டும் என்ற கிளர்ச்சி பிற்காலத்தில் ஓங்கிற்று அப்போதுதான் வெவ்வேறு மரபுடையோர் தத்தம் சாதி மரபு பற்றி நூல் செய்வித்துத் தம் குலப்பெருமையை நிலைநாட்ட எண்ணினார்கள் போலும்.

இந்த ஏரெழுபது என்பது இங்கு குறித்த உணர்வின் விளைவாக எழுந்த நூல்களுள் முதலாவது. இதன் காலம் 12ஆம் நூற்றாண்டு என்பது வரலாறு. ஒட்டக்கூத்தர் செங்குந்த மரபைச் சிறப்பிக்க வேண்டி ஈட்டி எழுபது பாடினார் என்பது ஒரு கதை. அதை முன்னமே நாம் ஆராய்ந்தோம். முதுபெரும் பண்டிதராகிய மு. இராகவ ஐயங்கார் அவர்கள் இந்தக் கதைகளை மெய்யென்று நம்பியே அந்நூலுக்கு விரிவாக முன்னுரை எழுதியிருக்கிறார். எந்த அளவுக்குக் கதைகள் உண்மையான சம்பவங்கள் என்றே நம்பப்பட்டன என்பதற்கு இவர்கள் முன்னுரை எடுத்துக்காட்டாகும்.

இந்த வழியில் சென்ற நூல்கள் மிகப்பல. ஆயிர வைசியரைப் போற்றுகின்ற பந்தனந்தாதி முன்னமே சொல்லப்பட்டது. எழுபது என்ற பெயரில் வந்த நூல்களும் அனேகம். செம்பொற்சிலை எழுபது என்பது ஒன்று. இதுவும் மற்ற யாரும் பாடினால் சிறப்பாயிராது என்று கருதிக் கம்பர் தலையிலேயே சுமத்தப் பட்டது. இதன் தொடர்கள் யாவும் ஏரெழுபதை அடியொற்றி அமைந்திருப்பது காணத்தகும். இது வன்னிய பூபதிகள் மீது பாடப்பெற்றது. வாளெழுபது என்பது மற்றொரு நூல்; தரும புத்திரன் பாடினான் என்று இதன் பாயிரம் கூறும். இது ஐந்து கோட்டைநாட்டு மறவரைப் போற்றுகின்ற நூல். இது எழு சீர்க்கழி நெடிலடி விருத்தமாகவுள்ளது. இதன் பாயிரத்தில் ஆசிரியர் கைக்கோளர் கூற்றாகவும் உழவர் கூற்றாகவும் பாடல் சொல்லி, அவர்களுக்கு மறுமொழியாக மறவர் ஒரு பாடல் சொல்லியதாகச் செய்திருக்கிறார். மேலும், 'காராளர் பெருமை யைக் கம்பன் ஏரெழுபதில் சொன்னான், கைக்கோளர் மரபை ஒட்டக்கூத்தன் ஈட்டி எழுபதில் சொன்னான், மறவர் வலியை நான் வாள் எழுபதில் பாடுகிறேன்' என்று இவர் பாடுகிறார். இவர் காலம் 18ஆம் நூற்றாண்டாக இருக்கலாம். இவருக்குமுன் ஏர் ஈட்டி இரண்டு நூல்களும் ஏற்பட்டிருக்க, செம்பொற்சிலை என்பது இவருக்குப் பின்னால் வந்திருக்கக்கூடும் என்று நாம் கருத இடங்கொடுக்கிறது.

இவற்றால் பெறுவது, ஏரெழுபது இராமாயணக் கம்பர் நூலல்லவெனினும், மற்றொரு கம்பரால் பாடப்பெற்று, மிக்க புகழ் அடைந்து, இதுபோன்ற வேறுபல நூல்கள் பின்னால் தோன்ற வழிகாட்டிற்று என்பதாகும். ஒரு பொருளின் மேல் எழுபது பாடல் பாடுவது ஒரு பிரபந்த வழக்கு பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் சிலவற்றாலும், பதினொராந் திருமுறை யுள் கண்ட திருஈங்கோய்மலை எழுபது, கோயில் திருபண்ணியர் விருத்தம் முதலியவற்றாலும் இதை அறியலாம்.

கம்பர் என்ற புலவர் தமக்கு வேளாளர் தந்த ஆதரவைப் பல இடங்களிலும் புகழ்ந்து பல தனிப்பாடல்கள் பாடியதாகக் கதைகள் காணப்படும். அக்கதைகளில் உண்மையானவை இக் கம்பருக்குப் பொருந்தக் கூடும். இவருடைய போற்றுதலுணர்வே, ஏரெழுபது என்ற நூலாக உருக்கொண்டது போலும்.

இவ்வளவு நாம் கூறியபோதிலுங்கூட, ஏரெழுபது 12ஆம் நூற்றாண்டு நூலென்பதற்கு ஆதாரமில்லை. இந்நூலில் சோழ

மண்டலம், ஒன்பதுகோட்டை வேளாளர் என்ற பாடல்கள் பிற்காலச் செருகலாகும்.

முழுவதும் புனைந்துரையாகவே பாடுகின்ற பாண்டி மண்டல சதகம் கம்பர் ஏரெழுபது பாடினார் என்று கூறுகிறது (23):

உழுதுண்டு வாழ்பவ ரேவாழ் பவர்மற் றுலகிலுள்ளோர்
தொழுதுண்டு பின்செல் பவரென்று வள்ளுவர் சொன்னவரப்
பழுதின்றி யேகம்ப னாரேர் எழுபது பாடியவர்
வழுவொன்றி லாதஅவ் வேளாளர் பாண்டியன் மண்டலமே.

சோழமண்டல சதகம், சடையன், புதுச்சேரிக் குடையான், சேதிராயன் முதலான பெரியோர் பலர் கூடி, கம்பநாடன் களி கூறும் படி பரிசில் ஈந்து, புவியேழும் புகழ் ஏர் எழுபது என்னும் பெருங்காப்பியம் பெற்றார் என்று கூறுகிறது:

குணங்கொள் சடையன் புதுச்சேரிக்
குடையன் சேதி ராயன்முதற்
கணங்கொள் பெரியோர் பலர்கூடிக்
கம்ப நாடன் களிகூர
இணங்கும் பரிசில் ஈந்துபுவி
ஏழும் புகழ்ஏர் எழுபதெனும்
மணங்கொள் பெருங்காப் பியப்பனுவல்
வகித்தார் சோழ மண்டலமே. (78)

இதை ஏற்றுக்கொள்வதானால், பரிசிலுக்காகப் பாடும் இக்கம்பன் இராமாயணக் கம்பனல்ல என்றே முடிவு செய்வது பொருந்தும்.

**திருக்கை வழக்கம்**

இதுவும் கம்பர் தலையில் சுமத்தப்பட்ட ஒரு சிறுநூல். ஏரெழுபதினுடன் சேர்த்தே சொல்லப்பெறுவது. 59 கண்ணிகள் கொண்ட நீண்ட கலிவெண்பா. வேளாளருடைய கையின் பெருமையைப் புகழ்ந்து கூறுவது. அறுபத்துமூன்று நாயன் மாருள் சாக்கியர், மூர்த்தி, இளையான்குடி மாறர், அரிவாள் தாயர், விறன்மிண்டர், அப்பர், ஏயர்கோன் கலிக்காமர் ஆகியோர் வரலாறுகள், பழையனூர் நீலி, சடையப்ப வள்ளல், கம்பர், சேக்கிழார், ஒட்டக்கூத்தர், ஏரெழுபது, பரணிநூல் ஆகிய பிரசித்தமான பல வரலாறுகளைக் குறிப்பிடுகிறது. சேக்கிழாரைக் குறிப்பிடுவதால் பிற்கால நூல் என்பது வெளிப்படை. இது 17ஆம் நூற்றாண்டுக்குரிய நூலாயிருக்கலாம்; நாம் கருதும் கம்பர் பாடியதன்று. திருக்கை வழக்கம் என்ற தொடர் சாசனத்தொடர்.

## அத்தியாயம் 14

# பிறவகை இலக்கியம்

### முன்னுரை

இதுவரையில் 12ஆம் நூற்றாண்டில் தோன்றி நூல் செய்த பெரும்புலவர் பலர் வாழ்க்கை வரலாற்றையும், அவர்கள் செய்த நூல்களையும், பல தலைப்புக்களில் ஆராய்ந்தோம். இவர் களையன்றி நூல் செய்து பெயர் விளங்காதவர்களும், பெயர் விளங்கி நூல் செய்ததாகத் தெரியாதவர்களுமாகவுள்ள சில புலவர்களைப் பல வாயில்களால் அறிய நேர்கிறது.

இடைக்காலத்தில் கந்தியார் என்ற பெயர் கொண்ட பெண்பாற் புலவர் பலர் இருந்திருக்கிறார்கள். பரிபாடல் உரைச் சிறப்புப் பாயிரத்தாலும், சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியர் உரையினாலும், அந்த நூல்களுள் கந்தியார் தம் பாடலை இடை மடுத்தார் என்று அறிகிறோம். சிந்தாமணியில் பாடல்களை இடைமடுத்த கந்தியார் இந்த நூற்றாண்டுக்கு உரியவர். நெற்குன்ற வாணரால் பெரிதும் போற்றப்பெற்றவராக நம்பிகாளி என்ற ஒரு பெரும்புலவர் இக்காலத்தே வாழ்ந்திருந்தார். அவருடைய வரலாற்றின் ஒருபகுதி தெரிந்தபோதிலும்கூட, அவர் செய்த நூல்களோ பாடல்களோ தெரியவில்லை.

சில புலவர்கள் வாழ்ந்தார்கள் என்று சாசன வாயிலாக அறிகிறோம். ஒருவர், வீரைத்தலைவர் பரசமயகோளரி என்ற பெயருடையவர், முதற்குலோத்துங்க சோழன் காலத்து வாழ்ந்து தல புராணங்கள் பாடினார் என்ற வரலாறு தெரிகிறது. பிற செய்திகளோ நூல்களோ தெரியவில்லை. அப்படியே ஓவாத கூத்தர் என்ற புலவர் ஒருவர் பெயர் மட்டும் அறிகிறோம்.

இவ்விடத்தில் ஒன்றைக் குறிப்பிடலாம் என்று தோன்று கிறது. உண்மையிலேயே வெவ்வேறு பெயர் உடையவர்களாய்

வாழ்ந்திருந்த சாமானியப் புலவரும் அவர் போன்றாரும் பாடிய பாடல்களும் செய்த நூல்களும் அவர்களைப் பற்றிய கதை களும் எப்படியே பிற்காலத்தில் பிரசித்தமான பெரும்புலவர் களின் தலையில் ஏற்றப்பெற்றிருப்பதை இலக்கிய வரலாற்றில் காண்கிறோம். கதைகளைவிட மனமில்லாததாலும், ஆராய எண்ணாததாலும், கவிச்சுவை தோன்றாமையாலும், அபிமானத் தாலும் பெரும்புலவர்கள் தேவையற்ற பல பழிகளுக்கு உள் ளாகியிருக்கிறார்கள். சிலரை இவ்வத்தியாயத்துட் சுட்டிக் காட்டுகிறோம். கம்பர் என்ற பெயர் சூட்டப் பெற்றவராய் இராமாயணம் பாடியவர் அல்லாத ஒரு புலவரை முன் அத்தி யாயத்தில் குறிப்பிட்டோம். கம்பர் வரலாற்றோடு தொடர் புண்டாக்கப் பெற்ற மற்றோர் ஆசிரியனான குணாதித்தன்சேய் என்பவனை இங்கு ஆராய்கிறோம். இப்புலவன் காகுத்தன் கதை பாடினான் என்பது பாடற்குறிப்பு; காகுத்தன் கதையே இராமாயணம் என்றுகூறி ஆராய்ந்து முடிவு கட்டியவர்களுடைய கருத்துக்களையெல்லாம் நகைச்சுவையோடு தான் பார்க்க வேண்டும்.

தமிழ் நாவலர் சரிதை கூறும் வாணியன் தாதனை இங்கு பார்க்கிறோம். இவ்வாணியன் தாதன் என்பவன் வாணிதாசன் எனக் கருதத்தக்க ஒட்டக்கூத்தர் அல்லன் என்பதே எமது கருத்து; வாணியன் என்பதற்கும் வாணிதாசன் என்பதற்கும் உள்ள வேற் றுமை வெளிப்படை, இவ்வாறு தெரியவந்த ஆசிரியர்களை யும் நூல்களையும் பற்றிக் கிடைத்த செய்திகள் இவ்வத்தியா யத்துள் ஆராயப்பெறும்.

## கந்தியார்

கந்தியார்* என்றபெயர் அவ்வையார் என்ற பெயரை ஒத்தது. அவ்வையார் என்றபெயர் பலர் அறிந்த ஒரு மூதாட்டியாரைக் குறிப்பது. கந்தியார் என்றசொல் அதேபோல, சைன சமயத்தில் மணமாகாது துறவு பூண்டிருந்த ஒரு பெண்மணிக்கு வழங்கிய பெயராகும். கந்தி என்ற சொல், சைனப் பெண்டிருள் தவக் கோல முடையாரைக் குறிப்பிடுவது. தவப்பள்ளியிலிருக்கும் தவக்கோலமுடைய முதியவள் கவுந்தி என்று சிலப்பதிகாரவுரை

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு நூல் காண்க.

கூறும்; கைம்மைக் கோலமுடையவள் கவுந்தி, கந்தி; யாப்பருங் கலவிருத்தி மேற்கோட் பாடலொன்று, குந்திதேவியைக் கவுந்தி என்றே கூறுகிறது. இப்பெயரோடு பல காலத்தில் பலர் வாழ்ந் திருந்தார்கள் என்று நாம் அறிகிறோம். இவர்கள் அனைவரும் தமிழ்ப்புலமை நிரம்பியவர்கள் இது அமையக் கூடியதே. பக்தி யோடு சமய நூலையும் தமிழ்நூலையும் வட நூலையும் படித்துக் கொண்டிருந்தவர்களுக்குப் புலமை அமைவதில் வியப்பில்லை. கந்தியார், அருக தெய்வ பக்தியோடு சமய நூல்களை ஓது வதிலேயே பொழுது போக்கியவர்கள். பல சைனசமய நூல்கள் தோன்றிய 15ஆம் நூற்றாண்டில் இத்தகைய ஒரு கந்தியார் இருந்து 'உதயணகுமார காவியம்' என்ற சிறுகாப்பிய நூல் ஒன் றைச் செய்தாரென்று அந்நூற்றாண்டுப் புலவர் வரலாற்றில் குறிப்பிட்டிருக்கிறோம். அந்நூல் தமிழ்ச்சுவை உடையதன்று. ஆயினும், உதயணன் வரலாற்றைக் கூறுகின்ற ஒரு தமிழ் நூல் என்ற அளவில் மிகவும் பயன்பட்டிருக்கிற ஒரு நூலாகும்.

செந்தமிழ்ப் பத்திரிகை இருபதாம் தொகுதியுள், பெயர் விழையான் என்பவர்* 'கந்தியார்' என்றபெயரில் எழுதிய கட்டுரையால் பின்வரும் செய்திகள் தெரியவருகின்றன. பல கவித்திரட்டு என்ற ஒருநூல் அவருக்குக் கிடைத்தது. அதில், 'அஞ்சிலோதி யாடவை யஞ்சாய்' என முடிக்கவிடுத்த சங்கத் தார்க்குப் பேரை வைணவி கந்தியார் சொற்ற செப்பும் வினாவும்:

செப்பு:

அஞ்சிலோதி யாரிடராற் பேரின் பமைந்திசினே
ரஞ்சிலோதி யன்றோ வறிதலின – லஞ்சிலோதி
யஞ்சிலோதி யாரிப் படுநெல் லறைக்கரும்பு
வஞ்சிலோதி யாடவையஞ் சாய்.

வினா:

கொண்டல் வண்ணன் கண்ட சுவைநலங்
கண்டீ ருண்டீர் கேட்டீ ரறியீர்
துண்ட மெட்டே தொண்டை கொண்ட
வெண்டிசைக் குத்தி ஞண்டுழு வேரல்
மண்டெறி யீனா வெண்டளி யண்டம்
தண்டமிழ் பயில்வீர் கொண்டுரைப் பீரே.

---

* இவருடைய கூற்றுக்கள் யாவுமே கற்பனை.

என்று காணப்படுகிறது.* இது கொண்டு அவ்வாசிரியர், கந்தியார் என்பவர் பேரை (தென் திருப்பேரை) யிலிருந்த ஒரு வைணவப் பெண்மணி என்று எழுதியிருக்கிறார். இது பொருத்தமுடைய தாய்த் தோன்றவில்லை. சங்கத்தார் காலத்தில் பெண்கள் இருந் தால், வைணவர் சைவர் என்று பாகுபடுத்தி எங்கும் கொள்ளப் பட்டதாகத் தெரியவில்லை. பிற்காலத்தில்தான் புலமை வாய்ந்த பெண்மணிகள் இருந்தார்கள், இவர்கள் சைன சமயத்தில் துறவு பூண்டு கந்தி❖ என்று வழங்கப்பெற்றனர் என்று அறிகிறோம். இங்கு கூறப்பெற்ற தென் திருப்பேரை வைணவக்கந்தி என ஒருவர் இருந்தாரானால், காலம் மிகவும் பிற்பட்டதாயிருக்க வேண்டும். சுமார் 17-18 நூற்றாண்டுகளாகலாம். நாம் இங்கு ஆராயக்கருதிய கந்தியாரினும் இவர் வேறாவர்.

உதயணகுமார காவியத்துக்கு முந்தி இருந்த கந்தியாருள் பெயரளவால் சிலர் இப்பொழுது தெரிய வருகிறார்கள். ஒருவர் சுமார் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து சீவக சிந்தாமணியிலும் பரிபாடலிலும் இடையே இடைச்செருகலாகப் பல பாடல் களைச் சேர்த்துவிட்டார் என்று நாம் அறிகிறோம். இவரைக் குறித்துச் சில கருத்துக்களை இங்கு கூறலாம். பரிமேலழகர் எழுதிய பரிபாடல் உரையின் சிறப்புப் பாயிரத்துள் கந்தியாரைப் பற்றி ஒரு குறிப்புக் காணப்படுகிறது.

கண்ணுதற் கடவுள் அண்ணலங் குறுமுனி
முனைவேல் முருகன் என இவர் முதலிய
திருந்துமொழிப் புலவர் அருந்தமி ழாய்ந்த
சங்க மென்னுந் துங்கமலி கடலுள்,
அரிதின் எழுந்த பரிபாட் டமுதம்
அரசுநிலை திரீஇய அளப்பருங் காலம்
கோதில் சொன்மகள் நோதகக் கிடத்தலின்,
பாடிய சான்றவர் பீடு நன்குணர
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில்

---

* இக்கட்டுரைச் செய்தி முழுமையும் கற்பனை, பொருளற்ற புதுப் படைப்பு. இதைச் சொல்லவில்லை என்று யாரேனும் நினைக்கக் கூடுமென்று இங்கு அதைச் சொன்னோம். இப்புனைவை விடுக.

❖ நோற்பாள் பெயராக, கந்தி கௌந்தி என இரு சொல் வடிவங்களைச் சூடாமணி நிகண்டு தருகிறது.

தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்,
எழுதினர் பிழைப்பும், எழுத்துரு ஒக்கப்
பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்,
ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்
திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலில்.

இங்கு 'கண்ணுதற் கடவுளும் குறுமுனியும் முருகவேளும் இருந்து பழங்காலத்தில் தமிழாராய்ந்த சங்கமென்னும் கடலுள் எழுந்த பரிபாடல் என்னும் அமுதமானது அரசுநிலை மாறுதலால் நெடுங்காலம் படித்துப் பாராட்டுவோரற்றுக் கிடந்தது. அக் காலத்தில் பழைய நூல்களுக்கிடையே தம்முடைய சொற்களைச் செருகி இடைச்செருகலை உண்டு பண்ணினவர் கந்தி என்பவர்' என்று அறிகிறோம். இவ்வாறு கந்தியாலும் எழுதினோராலும் பாடகராலும் ஏற்பட்ட வழுக்களைக் களைந்து பரிமேலழகர் உண்மையான பாடத்தைக் கண்டு உண்மைப் பொருளைச் சுருங்கிய உரையில் விளங்க முடித்தார் என்று அறிகிறோம். இதனால் கந்தியார் பரிமேலழகர் காலத்துக்கு முந்தி வாழ்ந் திருந்து பரிபாடலுள் தம்முடைய புன்சொற்களை இடை மடுத்தார் என்று ஏற்படுகிறது. பரிமேலழகர் காலம் சுமார் கி.பி. 1271 என வரையறை செய்யப் பெற்றுள்ளது.* எனவே இக்கந்தியார், அக்காலத்துக்கு முற்பட்டவராவார். இவருடைய காலம் ஒரு நூறுஆண்டுக் காலம் முற்பட்டது. 12ஆம் நூற் றாண்டு என்று கொள்வது பிழையாகாது.

மேலும், நச்சினார்க்கினியர் உரையினால் சீவக சிந்தாமணி யுள் கந்தியார் மிகவும் அதிகமான பாடல்களைச் செருகியிருக் கிறார் என்று ஏற்படுகிறது. ஐயரவர்கள் அச்சிட்ட சிந்தாமணி உரைப்பதிப்பில் பாடல்களின் தொகை 3145; சமாஜம் வெளி யிட்ட மூலப்பதிப்பில் 3154 பாடல்கள். இங்கு 9 பாடல்கள் மிகையாக அச்சிடப்பட்டுள்ளன; இப்பதிப்பு, வையாபுரிப் பிள்ளையவர்களும் யாமுமாக இருந்து ஐந்து சிந்தாமணி ஏடு களை ஒப்புநோக்கி அச்சிட்ட பதிப்பு ஏடுகளில் இப்பாடல்கள் யாவும் இருக்கக் கண்டே பதிப்பித்தோம். 'திங்கள் மும்மாரி பெய்க' என்ற இறுதி வாழ்த்துப்பாடல் இது பதிப்புக் கணக் கிலும் சேர்க்கப்படவில்லை.

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூல் காண்க.

இரண்டிலுமுள்ள இறுதி மூன்று பாடல்களும் இங்கு கருதத்தக்கவை. இவற்றுள் முதற்பாடல்: 'முந்நீர் வலம்புரி சேர்ந்தசைந்து' என்பது. 'இது தேவர் குருக்கள் கூறினார் என்றுணர்க' தேவர் இங்ஙனம் தம்மைப் புனைந்துரைத்தலாகாமையின்' என்று நச்சினார்க்கினியர் கூறுகிறார். மேலும் அவர் எழுதுவது இங்கு கருதத்தக்கது: 'இருபத்தேழென்றார், ஒன்றைப்பத்தாற் பெருக்கின இருநூற்றெழுபதைப் பத்தாற் பெருக்கின இரண்டாயிரத்து எழுநூற்றை. எனவே தேவர் அருளிச் செய்த செய்யுள் இரண்டாயிரத்தெழுநூறென்றே கொள்க.' ஆகவே திருத்தக்கதேவர் பாடிய பாடல் 2700. ஏனைய அதிகப் பாடல்கள், கந்தியார் சேர்த்தவை. 'மற்றை 445 பாடல்களும் கந்தியார் என்னும் பெண்புலவரால் இடையிடையே பாடிச் சேர்க்கப்பட்டன என்று சிலர் கூறுகின்றனர். அச்செய்யுட்கள் இன்னவையென்று புலப்படவில்லை.' என்பது சிந்தாமணி அச்சிட்ட ஐயரவர்கள் குறிப்பு. மேலும், நூலின் இறுதியில் சிந்தாமணியில் வரும் எட்டு மணங்களைக் கூறும் 'தத்தை குணமாலை' என்ற பாடலையும், இலம்பகங்கள் பதின்மூன்றையும் பெயர் குறிப்பிடும் 'பகைமாற்று' என்ற பாடலையும் சொல்லி, 'இவை கந்தியார் கூற்று' என்று நச்சினார்க்கினியர் கூறுகிறார்.

தத்தைகுண மாலையொடு தாவில்புகழ்ப் பதுமை
ஒத்தஎழிற் கேமசரி ஒண்கனக மாலை
வித்தகநல் விமலையொடு வெஞ்சுரமஞ் சரிதான்
அத்தகை இலக்கணையொ டாகமணம் எட்டே.

பகைமாற் றொருபரன் வாழ்த்தவைச்சொற்
பதிக இலம்பகமோ
வகைமாற் றொருநா மகளோ கோவிந்தை
மணமுறு தத்தைகுணம்
மிகைமாற் பதுமை கேசரி கனகம்
விமலையர் வீழ்சுரமஞ்
சகைமாற் றொடுமண் மகள்பூ விலக்கணை
முத்தியீ ராறொன்றே.

அன்றியும், நூலின் இடையிலும் நச்சினார்க்கினியர் கந்தியாரைக் குறிப்பிடுகிறார். குணமாலையார் இலம்பகம், 236ஆம் பாடல் உரை,

ஊன்பிறங் கொளிறும்வோன் ஓர்த்துத்தன்உவாத்தி சொல்லால்
தான்புறங் காட்டப் பட்டு. (1089)

என்றும், அடுத்த பாட்டில்,

ஈன்றதாய் தந்தை வேண்ட இவ்விடர்உற்ற தென்றால்
தோன்றலுக் காண்மை குன்றாது என்றசொல் இமிழிற் பூட்டி. (1090)

என்றும், தேவர் மனத்தை இறுகப் பிணித்தமை தோன்ற, கட்டி என்றும், பூட்டி என்றும் செய்யுள் செய்தமை பற்றி, கந்தியாரும் இடையிடையே பாடியிட்ட செய்யுட்களிலும் அப்பொருள் தரக் கட்டி என்று செய்யுள் செய்தாரென்று உணர்க என்பது காண்க. 442ஆம் பாடலின் பின், நச்சினார்க்கினியரே இரு பாடல் களைச் சுட்டி, ‘இவை பயில வழங்கா’ என்று குறிப்பிடுகிறார். முன்னமே குறித்தவாறு, மூலம் மாத்திரம் உள்ள ஏடுகளில் காண்கின்ற பாடல்கள் நச்சினார்க்கினியர் உரை பெறவில்லை. அவை கந்தியார் வாக்கு என்று நச்சினார்க்கினியர் கருதினார் போலும். இவை 9 பாடல்கள். ஏனைய பாடல்களுக்கு நச்சினார்க் கினியர் உரை எழுதியுள்ளார். அவையே முன்சொன்னபடி 445. இதனால் நாம் பெறுவது கந்தியார் வாக்கைத் திருத்தக்கதேவர் வாக்கினின்றும் வேறு பிரித்துக் காணமுடியவில்லை என்ப தாகும். கந்தியாருடைய புலமை சிறப்பானது என்று அறிவதற்கு இதனினும் வேறுசான்று வேண்டுவதில்லை.

இதுகாறும் கூறியவற்றால் கந்தியார் என்ற நல்லிசைப் புலமையுடைய மெல்லியலார் ஒருவர் வாழ்ந்து தம் புலமை யாலும், சமயச் சார்பாலும், ஈடுபாட்டாலும், சமய சிந்தாமணி என்று சைனர் கருதிய சீவக சிந்தாமணியுள் 445 பாடல்களை இடைமடுத்தார் என்பது தெரியப்படும். இவர் காலம் நச்சி னார்க்கினியர்க்கு முன் எனவே, 16ஆம் நூற்றாண்டுக்கு முற் பட்டவர் என்று கருதவேண்டும். பரிபாடலில் இடைமடுத்த கந்தியாரும் இவரும் ஒருவரே எனக் கொள்ளும்போது, இவர் காலம் 12ஆம் நூற்றாண்டு என்று முன்னமே செய்த முடிவு பொருந்தக் கூடியதே.

கந்தியார், பரிபாடல் எழுபது பாட்டுக்களுள் இன்னாருக்கு இத்தனை பாட்டு உரியது என்று வரையறுக்கிற,

திருமாற்கு இருநான்கு, செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டு, காடுகாட் கொன்று, – மருவினிய

வையையிரு பத்தாறு, மாமதுரை நான்கென்ப –
செய்யபரி பாடல் திறம்.

என்ற பாடலைப் பாடினார் என்பது வழக்கு.

கந்தியின் பாட்டு என்பது, கந்தன் பாட்டு என்பதன் பாட பேதமாகப் பல்பரிக் கூத்துள் ஒன்றாய் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையுள் காணப்படுகிறது. இது ஒருகால் கந்தி போல் வேடந்தரித்து ஆடுவதாகலாம்.

ஒருகருத்து, தேவர் சிந்தாமணியை 2700 செய்யுளாகச் செய்தார் என்று மேலே சொல்லப்பட்டது. முந்நீர் வலம்புரி என்ற பாடல் 'மெய்ந்நீர் திருமுத் திருபத்தேழ் கோத்துமிழ்ந்து திருவில் வீசும், செந்நீர்த் திருவடம்போற் சிந்தாமணி, என்று கூறுகிறது. இருபத்தேழ் என்பதைப் பெருக்கி நச்சினார்க்கினியர் இருநூற்றெழுபது, இரண்டாயிரத் தெழுநூறு என்று காட்டு கிறார். இப்படியும் இருக்கலாம்; அல்லது சொச்சமாக உள்ளதை விலக்கி இருநூற்றெழுபது என்று முழு எண்ணாகவும் சொல்லப் படலாம். அங்ஙனமாயின், 2700க்கும் அதிகமாக, 2800க்கும் உள்ளாகப் பாடல்கள் இருந்திருக்கலாம்.

## நம்பிகாளி

இப்பெயர் கொண்ட புலவரொருவர் நெற்குன்றவாணர் காலத்தில் வாழ்ந்து அவரைப்பாடி அவரால் வரும் பரிசில் பெற்றார். நம்பிகாளிக்கு 'யாம் விற்கும் பரிசனமாகி விட்டோம்' என்று அவர் இவரைப் பாடித் தம்மை அடிமை கொடுத்த நிலையையும் அவர் குறிப்பிடுகிறார். இவர் ஊர் தொண்டை நாட்டுள்ள வல்லை என்னும் திருவல்லம் என்று தெரிகிறது.

இவர் நெற்குன்றவாணர் மீது பாடல் பாடிச் சென்று அவர் வீட்டிலில்லாமையால் அவர் தாதியால் பரிசளிக்கப் பெற்றா ரென்று வாணர் சரிதத்தில் கண்டோம். அவரைக் குறித்த அற்புத வரலாறுகள் கொங்குமண்டல சதகத்துள் சொல்லப் பட்டுள்ளன. நம்பிகாளி யாதவ குலத்தினர். தல யாத்திரை யாகப் பல தலங்களும் சுற்றிவந்த சமயம் ஒருநாள், கொங்கு மண்டலத்துள்ள நெருவூர் சென்று அடைந்தார். இவருடைய முருக பக்தியையும் தமிழ்ப் புலமையையும் கேள்வி வாயிலாய் அறிந்த அவ்வூர்ப் பிராமணர்கள் இவர்மீது அழுக்காறு

கொண்டிருந்தார்கள். இவர் வந்தசமயம் இவர் மாணாக்கர்க்கும் அவர்களுக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது.

'உங்கள் தமிழ் தெய்வத்தமிழ் என்பது உண்மையாயின் உங்கள் ஆசிரியரான நம்பிகாளியிடம் சொல்லி ஒரு பாடல் பாடி இப்பட்ட மரம் தளிர்க்கச் செய்யுங்கள் பார்க்கலாம்' என்று அங்கிருந்த ஒரு பட்டமரத்தைக் காட்டினார்கள். இதைக் காளி அறிந்தவுடன் தம் மாணாக்கர் வேண்டுகோளுக்காக முருகப் பெருமானை நோக்கி ஒரு பாட்டுப் பாடினார்:

தெய்வத் தமிழென்னும் செம்மொழியும் அம்மொழிநேர்
செய்விப்பர் தேவர் எனல்தேறத் – தெய்வம்
சுரந்தளிக்கும் மாநெருவூர்ச் சோலையிலே பட்ட
மரந்தளிர்க்க, இன்று வளர்ந்து.

உடனே மரந்தளிர்த்தது. கண்ட பொறாமையாளர் வெட்கித் தலை குனிந்தனர் என்று ஒரு வரலாறு சொல்லப்பட்டுள்ளது. இதைக் குறிப்பிடும் கொங்குமண்டல சதகப்பாடல் பின்வருவது.

பரந்த கடலுலக மெல்லா மறியப் பரமசிவன்
நிரந்தர மாயருள் சண்முக வேலன்நல் நேயத்தினால்
புரந்தரன் போற்றும் நெருவூரிற் காழிப் புலவன்பட்ட
மரந்தழை யக்காளி கவிபாடிய துங்கொங்கு மண்டலமே. (78)

(காழிப்புலவன் - காளி, நம்பிகாளியார்).

'இந்நம்பிகாளியார் மிகவும் சிறந்த புலவராய், ஒட்டக் கூத்தரோடு சேர்த்துச் சொல்லப்பெறும் தகுதியுடையவராய், வாழ்ந்தார் என்று அறிகிறோம். பிற்காலத்தில் அனதாரியப்பப் புலவரைச் சிறப்பிக்க வந்த பாடல், 'கம்பனென்றும் கும்ப னென்றும் காளி ஒட்டக்கூத்தனென்றும் பேர் கொள்வரோ' என்று சொல்லுமிடத்து இதைக் காணலாம். மேலும் தக்கயாகப் பரணியுரைகாரர் 457ஆம் தாழிசையுரையில், 'பண்டு நம்பி காளியார் கடற்குப் பெயர் மழுவென்றிட்டு எறிதலும் கூர்த்தலும் திரைத்தலும் உடைய தென்றார்' என்று எழுதுகிறார். எங்கு இப்படிச் சொன்னார், எந்தநூல் என்பது விளங்கவில்லை. எனினும், இப்பெயருடைய ஒரு பெரும்புலவர் முதற்குலோத் துங்கன் தொடங்கி இரண்டாம் குலோத்துங்கன் காலம் வரை யில் பெரும் புகழோடு வாழ்ந்தார் என்பது இக்குறிப்புக்களால் நன்கு விளங்குகின்றது.

## வீரைத்தலைவன் பரசமய கோளரி மாமுனி

இப்பெயர் கொண்ட புலவர் முதற்குலோத்துங்க சோழன் ஆட்சியின் இறுதியில் வாழ்ந்து நூல்கள் செய்தார் என்று கல்வெட்டுக்களால் அறிகிறோம். மாமுனி என்றமையால் இவர் துறவியும் மடாதிபதியுமாக இருந்தார்போலும். வீரைத்தலைவன் என்ற அடைமொழியும் இவர் தலைவராக வாழ்ந்தமையைப் புலப்படுத்தும்.

பரசமய கோளரி என்றமையால் சமய வாதத்தில் மிகவும் வல்லவராயிருந்து பிற சமயத்தாரை அடக்கினார் என்று கருதலாம். பரசமய கோளரி என்று திருஞான சம்பந்தப் பெருமானைச் சேக்கிழார் பாடுவது, பின்னும் சிலகாலம் கழித்து இக்குலோத்துங்கன் பேரனான இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலாகும்; நம்பியாண்டார் நம்பி இத்தொடரைக் குறிப்பிடுகிறார்.

திருப்பாதிரிப் புலியூர்ப் பாடலேசுவரர் கோயில், மேற்குத் திருமதிலில் காணப்பெறும் மூன்று பாடற் சாசனங்கள் இவரைப் பற்றிக் கூறுகின்றன. சாசனங்கள் சிதைந்த நிலைமையில் உள்ளன. ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 41.

திருவாழுங் கறைஞாழற் கிளைமருதம்...
...சாசனந்தென் மருதம் பாகைக்
கருவாழ வருங்கமலா லயற்குக்கன்னி
வனபுரா ணம்பாடிப் பரிசில்...
மருவாரும் நாடகமும் செய்தாற்குச் சிறப்பாம்
மாலையூரினி லிருபூவும் விளையும் பாரில்
ஒருமா நன்நில... பருங் கொழுகிளையினோடும்
ஊழிதொறு மிறையிலியே யுரைத்தானே.

மாங்கொல் லையிலிரண்டு மாவொருமா முக்காணி
ஓங்கு மறப்பெருஞ் செல்வி யொரு காணி...
பூவமர் காணியினிற் பூம்புலியூர் நாடகம்தென்
நாவலன் பெற்ற நலம்

*ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 49:*

தழைத்ததிருப் பாதிரிப் புலியூரான் வீரைத்
தலைவனிரும் பைப்பரசமய கோளரிமா முனிக்கு
கொழித்த அஷ்டாதச புராணங்க...
... தானங் கன்னிவன புராணம்
வழுத்தபடி காட்டுதலா ணந்தருமவ் விருத்தி
பாலையூரு... யிரு பூ விளையு நி...
பழுத்துமறை தனமாயுள் ளனவுமுண்ண
விறையிலியாம் வகைதந்தோம் இரண்டு மாவே.

*குலோத்துங்க சோழனுடைய ஆட்சியாண்டுகள் 41, 49 முறையே கி.பி. 1111, 1119. இம்முனிவர் ஊர் இரும்பை - இரும்பை மாகாளம் போலும். இவர் அஷ்டாதச புராணம், கன்னிவன புராணம், பூம் புலியூர் நாடகம் என்பன பாடினார். இந்நாடகம் அங்கு ஆடப் பெற்றது. இவற்றின் பொருட்டு அரசன் இவருக்கு இறையிலி யாக நிலங்கள் அளித்தான் என்ற செய்திகள் வருகின்றன.*

*நூல்கள் ஒன்றும் இக்காலத்தே இல்லை. (கன்னிவனம் பூம்புலியூர் என்பன திருப்பாதிரிப்புலியூர்) அக்காலத்தில் நாடக நூல் இருந்தது, நடிக்கப்பெற்றது என்று கூறுவது சிறப்பு.*

## *ஒவாத கூத்தர்*

*இப்பெயருடைய புலவர் பாடலோ நூலோ கிடைக்க வில்லை. இவர் இருந்தாரென்பது மட்டும் ஒரு சாசனத்தால் தெரிகிறது.*

*தஞ்சை ஜில்லா பூந்தோட்டமிருந்து திருவீழிமிழலை செல்லும் சாலையருகுள்ள கூத்தனூர் சரசுவதி கோயிலில் கிடந்த ஒரு விக்கிரக ஆதார சிலையில் பின்வரும் சாசனம் காணப்பட்டது: 'ஸ்ரீ சரசுவதி தேவியை எழுந்தருளிவித்தார் இவ்வூர் நன்செய் 20ம் காணி உடைய மலரி உடையார். இந்தக் கவிச்சக்கரவர்த்திகள் பேரர் கவிப்பெருமாளான ஓவாத கூத்தர்.' இதனால் அறிவது இவ்வூரில் சரசுவதி தேவிக்குக் கோயில் கட்டியவர் மலரியுடையாரெனும் கவிச்சக்கரவர்த்தி யின் பேரரான ஓவாத கூத்தர் ஆகிய கவிஞர் என்பதாகும்.*

ஒட்டக்கூத்தர் மலரியில் பிறந்தவர் என்பது தண்டியலங் கார மேற்கோளான 'சென்று செவியளக்கும்' என்ற பாடலால் அறிந்தோம். மலரி - இன்று திரு வெறும்பியூர் என வழங்கும் தேவாரத்தலம்; திரிசிராப்பள்ளியருகே உள்ளது. கூத்தர் சரசு வதி கடாட்சம் பெற்றவர் என்பது வரலாறு.

**ஆக்கம் பெருக்கு மடந்தை வாழியே**
**ஆற்றங் கரைசொற் கிழத்தி வாழியே**
**கோக்கும் தமிழ்க்கொத்த னைத்தும் வாழியே**
**கூத்தன் கவிச்சக்கர வர்த்தி வாழியே.**

என்ற தக்கயாகப்பரணித் தாழிசை கூத்தரையும் சரசுவதியை யும் வாழ்த்துகின்றது. ஆற்றங்கரைச் சொற்கிழத்தி - கூத்தனூரில் அரிசிலாற்றங்கரையில் கோயில் கொண்டிருக்கும் கலைமகள். இக்கூத்தனூர் சோழ அரசனால் ஒட்டக்கூத்தருக்கு முற்றூட் டாகக் கொடுக்கப்பட்டதென்பர். கூத்தன் - ஒட்டக்கூத்தர் என் பது ஐயரவர்கள் குறிப்புரை, தாழிசை 813, தக்கயாகப்பரணி.

இச்சாசனத்தில் குறிப்பிடப்பட்டவர் ஒட்டக்கூத்தரின் பேரரான ஓவாத கூத்தர்: ஓவாத - இடைவிடாத. நடராசப் பெருமான், இரவு பகல் இடைவிடாது ஆடுபவராதலால், ஓவாத கூத்தர். அவர் பெயரை இவர் தரித்திருந்தார் போலும். கவிப் பெருமாள் என்று சிறப்புப் பெயர் கூறுதலால் இவரும் கூத் தரைப் போலப் பெரும் புலவராயிருந்தார் போலும்.

முதுகுளத்தூர் - திருமாலுகந்தான் கோட்டைச் சிவன் கோயில், கோயிற்பட்டி ஆதனூர்ச் சிவன் கோயில் முதலிய வற்றில் ஓவாத கூத்தருடைய அறக்கட்டளைகள் பொறிக்கப் பட்டுள்ளன.* அவர் இவராக இருக்கலாம். இவற்றின் காலம் 13ஆம் நூற்றாண்டு.

ஒட்டக்கூத்தர் இரண்டாம் இராசராசன் ஆட்சியில் இருந்து உலாப் பாடினார் - காலம் 1150 - 1163. 97வயது இருந்தார் என்பர். அவர் பேரனார் 1170க்கு மேல் இருந்திருக்கக் கூடும். ஆகவே இவ் ஓவாத கூத்தர் 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த புலவராகிறார்.

---

* சாசன தமிழ்க்கவி சரிதம், மு. இராகவையங்கார், 1937 பக்கம். 68-9.

## குணாதித்தன் சேய்

ஒன்றை மற்றொன்றாக மயங்க வைப்பது நூற்குற்றங்களுள் ஒன்றென்று இலக்கணங்கள் கூறும். அங்ஙனமே தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒருபெயரை மற்றொரு பெயராக மயங்கியுணர்ந் ததன் விளைவாக எத்துணையோ பிறழ்வு உணர்ச்சிகள் தோன் றியுள்ளன. இதற்கு எடுத்துக்காட்டு, காகுத்தன்கதை என்ற நூலும் அதன் ஆசிரியரான குணாதித்தன் சேய் என்ற புலவன் பெயரும் வரலாறும்.

குணாதித்தன் சேய் என்ற புலவனொருவன் இருந்தான்; அவன் காகுத்தன் கதை என ஒரு நூல் பாடினான்; அவனுடைய ஊர் திருவழுந்தூர் நாட்டு மூவலூர்; அவன் பாடின காலம் சகம் 1100: இச்செய்திகள், ஒரு தனிப்பாடலால் தெரிய வருகின்றன.

**ஆவின் கொடைச்சகரர் ஆயிரத்து நூறொழித்துத்**
**தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு – மூவலூர்ச்**
**சீரார் குணாதித்தன் சேய்அமையப் பாடினான்**
**காரார்கா குத்தன் கதை.**

என்பது பாட்டு. இது சிறப்பான பாடலன்று. சக ஆண்டு 1100 என்று சொல்லவந்த புலவர், ‘காமதேனு போன்ற கொடை பொருந்திய சகரர் ஆயிரம் பேரை ஒழித்து’ என்கிறார்; சக ஆண்டைச் சகரர் ஆண்டு என்று பிழைபட வழங்கும் வழக்கும் உண்டு. அதனால் இவர் இவ்வாறு சொல்லுகிறார் போலும். இனி, சிறப்புடைய குணாதித்தனது புதல்வன், காகுத்தன் கதையைப் பாடினான் என்பது பாட்டில் சொல்லப்பட்ட பொருள். பாடின புலவனுக்குப் பெயர் தானும் சொல்லவில்லை; அவன் தகப்பன் சிறப்புற்றிருந்தான்; அவன் சீரார் குணாதித்தன்; அவனுடைய புதல்வனே நூல் செய்தான்; செய்தநூல் ‘காகுத்தன் கதை’ என்பதாகும். இன்று இந்தநூல் கிடைக்கவில்லை; ஒருகால், அல்லியரசாணி மாலை, தேசிங்குராஜன் கதை என்பன போன்ற ஓர் அமைப்புடைய கதையாயிருக்கும் போலும். காகுத்தன் - ககுத்தன் வமிசத்தில் பிறந்தவனாகிய இராமன்; இராமனது கதை என்று கருதுவதில் தவறில்லை.

காகுத்தன் கதை என்றதால் இது இராமாயணமே என்று பலர் எண்ணி விட்டார்கள். இது காரணமாகத்தான் போலும்

இந்தப் பாடலை இராமாயண ஏட்டில் எழுதியிருப்பது. இராமாயணத்தைப் பாடியவர் கம்பர் என்பதை இதுவரை யாரும் மறுத்ததில்லை. கவிச்சக்கரவர்த்தி என்றும் அவரைப் புகழ்ந்தார்கள். தந்தை பெயரால் அவரைச் சுட்டவேண்டிய அவசியம் ஏற்பட்டதில்லை; தந்தை பெயரும் இன்றுவரை தெரியாது. ஆனால் காகுத்தன் கதை பாடினவன் சாமானியப் புலவன், குணாதித்தன் மகன் என்ற அளவிலேதான் அவன் அறியப்படுகிறான். அவனைப் பெரும்புலவரான கம்பர் என்று எண்ணியது மயக்கவுணர்வேயாகும்.

மேலும், கம்பரைக் குறித்தபோதெல்லாம் திருவழுந்தூர் வள்ளல் என்றே சொல்லக் காண்கிறோம். ஆனால் காகுத்தன் கதை பாடினவனோ, திருவழுந்தூர் நாட்டு மூவலூர் என்ற ஊரினன். இவனை இராமாயணம் பாடிய கவிச்சக்கரவர்த்தி யாக மயங்க வேண்டிய அவசியமே இல்லை. அன்றியும், ஒரு பாடல் ஓர் ஏட்டின் முகப்பிலோ இறுதியிலோ எழுதியதனால் மட்டும் அது அந்த நூலுக்கு உரியதாகாது. உதாரணமாகத் தமிழில் பல பாடல்களைச் சொல்லலாம். 'மதிபாய் சடை முடித்து' என்ற விநாயக வணக்க வெண்பா, 'தன்றோள் நான் கினும்' என்ற ஆசிரியப்பா, 'பொத்தகம் படிக மாலை' என்ற நாமகள் துதி, 'தேனறா மகிழ்த் தொடையலும்' என்ற நம்மாழ் வார் துதி முதலான பல பாடல்களை எடுத்துக்காட்டாகக் கூற லாம். கண்ணுடைய வள்ளல் மாணாக்கர் செய்த நூலேட்டின் இறுதியில் பல இடங்களில் வள்ளலின் வாழ்த்துக் காணப்படு கிறது; அது கொண்டே நூல் வள்ளல் நூல் ஆகிவிடாது. 'ஆவின் கொடை' என்ற பாட்டு இராமாயண ஏட்டில் காணப்பட்டதனா லேயே இது இராமாயணத்துக்குரிய சிறப்புப்பாயிரமாக ஆகாது.

இந்த மயக்கம் முதன்முதலாக மகாவித்துவான் ரா. இராகவையங்காரவர்களுக்கு ஏற்பட்டது. அவர் செந்தமிழ் மூன்றாம் தொகுதியில் கம்பர், சடையன் முதலான பெயர்கள் வரும் பாடல்கள் பலவற்றை ஒன்று தொகுத்து, மிகவும் அழகான முறையில் மிக நீண்ட ஆராய்ச்சிக் கட்டுரை எழுதியிருக்கிறார். வாணியன் தாதன், திரிகர்த்தராயன், குலோத்துங்கசோழன் முதலிய பலரைப் பற்றிய பல்வேறு கதைகள் அங்கு மிகவும் அழகாகக் கோக்கப்பட்டுள்ளன; கால ஆராய்ச்சியும் விரிவாக உள்ளது. அவரே முதன்முதலாக 'ஆவின் கொடைச்சகரர்' என்ற

பாட்டு கம்பரைக் குறித்தது என்று சொன்னவர். கட்டுரை மிகவும் அழகாகப் புனையப்பட்டிருப்பினும், அது முழுமையும் பொருந்தாத உரையாகும்; ஏனெனில் அதன் அடிப்படை பிழை.

இங்கு நாம் அறிய வேண்டுவது, பாடலில் குறிப்பிட்டபடி குணாதித்தன் சேய் என்று சொல்லப்படுகின்ற பெயர் தெரியாத புலவன் ஒருவன் இருந்தான், அவன் காகுத்தன் கதை என்ற ஒரு நூல் பாடினான் என்பதாகும்.

தமிழ் நாவலர் சரிதை என்ற நூல் 17ஆம் நூற்றாண்டின் இறுதியில் தொகுக்கப் பெற்றது. தொகுத்தவர், தாம் செவி வாயிலாக அறிந்த பல பாடல்களையும் அவை எழுந்த சந்தர்ப்பங் களையும் தாம் கேட்டறிந்தபடி தம் நினைவுக்காக ஒருசேரத் தொகுத்து வைத்தார். இதன்கண் 269 பாடல்கள் உள்ளன. புறநானூற்றுப் பாடல் தொடங்கி அந்தக்கவி வீரராகவ முதலியார் வரை வரலாறுகள் இதன்கண் உள்ளன. ஆனால் இங்கு பல்வேறு செய்திகள் பொருத்தமில்லாமல் பல்வேறு ஆசிரியர் மீது ஏற்றப்பட்டுள்ளன. கம்பர் என்று வழங்குகின்ற அனேகப் பாடல்கள் இவ்வாறு பொருத்தமில்லாமலே உள்ளன. கம்பர் என்ற புலவர் தம்முடைய மாணாக்கர் வெற்றி பொருந்திய காகுத்தன் கதையை எழுதுவதற்கு இரவில் வெளிச்சத்திற்காகப் பந்தம் பிடிக்கும்படி திருவொற்றியூர்க் காளிக்கு உத்தரவிட்ட தாக ஒரு பாடல் உள்ளது.

> 'ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே
> வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை – பற்றியே
> நந்தா தெழுதுதற்கு நல்லிரவின் மாணாக்கர்
> பிந்தாமற் பந்தம் பிடி.

இது முன்பு கம்பர் காளியைப் பந்தம் பிடியென்று பாடியது'. இது இராமாயணக் கம்பருக்குத் தொடர்புடையது ஆகாது, அவர் இவ்வளவு ஆடம்பரத்தோடு நூல் எழுதினார் என்று வரலாறு இல்லை. நிறைகுடம் தளும்பாது, குறைகுடமே தளும்பு மாதலால், பெயர் தெரியாத குணாதித்தன் சேய்க்கு இவ்வரலாறு பொருந்தக்கூடும். இது உண்மைதான் என்பதற்குப் பாடலில் வருகின்ற காகுத்தன் மெய்ச்சரிதை என்ற தொடரே சான்றா கும். கம்பர் தாம் செய்த மாக்கதையாகிய இராமவதாரத்தைச் சடையன் வெண்ணெய் நல்லூரில் செய்ததாக நூல் வரலாற்றில்

சொல்லுகிறார். அவர் திருவொற்றியூருக்குப் போகவேண்டிய அவசியமில்லை, போனதாகவும் வரலாறில்லை; ஆதலால் இப் பாடல் கம்பரைக் குறிக்காது, காகுத்தன் கதை பாடிய குணா தித்தன் சேயையே குறிப்பதாகும்.

ஆவின் கொடை என்ற பாடலில் குறிப்பிட்டபடி, இப் புலவன் காலம் சகம் 1100 (கி.பி. 1178). இவன் பெயரும் தெரிய வில்லை, செய்த நூலும் கிடைக்கவில்லை.

வரலாறுகளை ஆராய்ந்தோர் இராமாயணம் பாடிய கம்பர், காகுத்தன் கதை பாடிய குணாதித்தன் சேய், சடகோபரந்தாதி பாடிய கம்பர், ஏரெழுபது பாடிய ஆசிரியர் ஆகிய அனைவரும் ஒருவரே என்று எண்ணியதால் தவறான முடிவுகள் கொள்ள நேர்ந்தது. இராமாயணம் பாடிய கம்பரை ஆராய்வது இங்கு நமது நோக்கம் அல்லவாதலால், இதுபற்றி அதிகம் விளக்க வில்லை.

## வாணியன் தாதன்

12ஆம் நூற்றாண்டில் வாணியன் தாதன் என்ற ஒரு புலவன் இருந்தான். இவனையும் கம்பரையும் தொடர்புபடுத்திப் பல செய்திகள் தமிழ் நாவலர் சரிதை கூறுகிறது. சில செய்திகளுக்குத் தொண்டை மண்டல் சதகமும் ஆதரவு தருகிறது. இச்செய்தி களை ஆராயப் புகுமுன் ஒரு குறிப்பை நினைவில் கொள்ளுதல் அவசியமாகும். சதகம் பாடிய படிக்காசுப் புலவரின் காலம் 17ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி, 1675 - 1700. அந்த நூற் றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த அந்தக்கவி வீரராகவ முதலியார் பாடல் வரையில் தொகுத்துக் கூறுகின்ற தமிழ் நாவலர் சரிதையின் காலமும் அதுவேயாகும். இரண்டு ஆசிரியரும் ஒருவரேயா என்பது தெரியவில்லை. இருவரும் நட்புப் பூண்டு வாழ்ந்திருத்தலும் கூடும். இருவரும் எந்த ஆதாரமுமில்லாமல் செவி வாயிலாகக் கேட்ட செய்திகளைச் சதகத்துள்ளும் சரிதை யுள்ளும் கோத்தமைத்திருக்கிறார்கள். ஆகவே செய்திகள் அனைத்தையும் உண்மை என்று கொள்வதற்கில்லை. இந்த நினைவோடு மேல்வரும் வரலாறுகளைப் பார்க்கலாம்.

கம்பருடைய புகழையறிந்த சோழமன்னன் அவரைத் தன் அவைக்கு அழைத்து வரிசை பல அளித்துக் கவிச்சக்கரவர்த்தி

எனப் பட்டமும் தந்து கம்பநாடு என ஒருநாடு நல்கிச் சிறப்புச் செய்தான். கம்பரும் அப்போது பல அற்புதங்கள் நிகழ்த்தினார். காவிரிப் பெருக்கடங்கும்படி, 'கன்னி அழிந்தனள்' என்ற பாடல் பாடினார். இவ்வாறு இவர் சிறப்புடன் விளங்கிய காலத்தில் வாணியமரபில் தோன்றிய தாதன் என்னும் பெயருடைய புலவனொருவன் தன் புலமைப் பெருக்கால் அரசனிடத்துப் பல விருதுகளும் சிறப்பும் பெற்று, கூவம் என்ற பெயருடைய திருவிற்கோலம் என்னும் ஊரையும் அளிக்கப்பெற்றான். சாமானியப் புலவனைப் பெருஞ்சிறப்புச் செய்தது கம்பருக்குப் பிடிக்கவில்லை. அதன்மேல் அவர் சோழ மன்னனை நோக்கி,

கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப் பானங் குலக்கவிக்குக்
காளம் பிடித்திடிற் சின்னம் படும், மன்னர் காதலியார்:
வேளம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்கவெம் பேய்க்கிளம்பேய்
தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே.

என்ற பாடலைப் பாடி, புலவர்களின் தகுதி நோக்கிச் சிறப்பு செய்யவேண்டும் என்று அறிவுறுத்தினார். இதைத் தாதன் அறிந்து கோபம் கொண்டான். அப்போது கம்பர் மும்மணிக் கோவை என்ற ஒரு நூல் பாடியிருந்தார். அந்தநூல் முற்றும் பிழை என்று அவன்,

கைம்மணிச் சீரன்றிச் சீரறி யாக்கம்ப நாடன்சொன்ன
மும்மணிக் கோவை முதற்சீர் பிழை, முனை வாளெயிற்றுப்
பைம்மணித் துத்திக் கணமணிப் பாந்தட் படம்பிதுங்கச்
செம்மணிக் கண்பிதுங் கப்பதம் போர்த்த செயதுங்கனே.

என்ற பாடலால் அவரைப் பழித்தான். 'கம்பர் உவச்சர் குலம். இக்குலத்தார் கோயிலில் மணி அடிக்கும் தொண்டு செய்பவர் என்று உள்ள வழக்கிற்கு ஏற்ப இப்பாட்டில் கைம்மணிச் சீர் அன்றிச் சீர் அறியாக் கம்பநாடன் என்று கூறினன்' என்பர். பின்னர் ஒருகால் கம்பர் கூவம் என்ற ஊர் வழியாகச் சென்றார். அப்போது அவ்வூரிலுள்ளார் கம்பரை அணுகித் தங்கள் ஊரைச் சிறப்பித்து ஒரு பாடல் பாடும்படி வேண்டினர். கம்பர், இவ்வூர் வாணியன் தாதனுக்கு உரிமையானது, இவ்வூரினர் அவனுக்கு ஆட்பட்டவர்கள், அவன் எம்மிடம் பகைமை கொண்டிருக்கும் காரணத்தால் யாம் இவ்வூரைப் பாடமாட்டோம் என்று

*கூறினார். எனினும் ஊரார் கம்பருக்குச் சிவிகை சுமந்து அடைப்பை இட்டுப் பல வகையாலும் வழிபட்டு அவரை மகிழ்வித்து அவரிடம்,*

ஓங்கிய செந்தமிழ்த் தாதற் கடிமையவ் வூரதனால்
நாங்கவி சொல்வது மில்லையென் றேகம்ப நாடன்சொல்ல
ஆங்கவ னேறுஞ் சிவிகை சுமந்தும் அடைப்பை யிட்டுக்
தாங்கவி கொண்டதுங் கூவந் தியாக சமுத்திரமே

*என்ற பாடல் பெற்றனர். இச்செய்தியைத் தொண்டை மண்டல சதகமும் கூறுகிறது.*

பேணிய செந்தமிழ்த் தாதனுக் கேயன்பு பெற்றமையால்
நாணிய கம்பன் சிவிகையுந் தாங்கி நயந்ததமிழ்
பூணிய நின்றதும் பொச்சாப் பிலாது புகுந்துபின்னும்
வாணியன் தாதற்குத் தாதா னதுந்தொண்டை மண்டலமே. **(45)**

*பின்னர் காலகதியினால் இருவரும் பகைமை மறந்து நட்புக் கொண்டு வாழ்ந்தனர். அக்காலத்தில் கம்பர் தாதனுடைய கொடைத்திறத்தைச் சிறப்பித்து:*

தாதா வென்றாலுந் தருவென்று சொன்னாலும்
தாதா வென்றாலுந் தருவனோ தாராதான்
தாதா வென்றாலுந் தருவென்று சொன்னாலுந்
தாதா வென்றாலுந் தருவனந் தாதனே.

*என்ற பாடல் பாடினார். இந்த நட்பு வளர்ந்தோங்கிய காரணத் தினால் பின்னர் கம்பர் இறந்தபோது தாதன்:*

இன்றோ நங்கம்ப னிறந்தநாள், இப்புவியில்
இன்றோதான் புன்கவிகட் கேற்றநாள் – இன்றோதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள்.

*என்று தன்னைத் தாழ்த்தியும் கம்பரைச் சிறப்பித்தும் ஒரு பாடல் பாடி வருந்தினான்.*

*பிற்காலத்தில் சுந்தர பாண்டியம் என்ற மதுரைப் புராணம் பாடிய அனதாரிப்பரைச் சிறப்பிக்க வந்த ஒரு பாடல் தாதனைக் குறிப்பிடுகிறது என்பதை ஒட்டக்கூத்தர் வரலாற்றில் கண்டோம்.*

சாதி பற்றிய பல பாடல்கள் இச்சதகத்துள் மேற்கோளாக வந்துள்ளன. சதகத்திலும் தமிழ் நாவலர் சரிதையிலும் காண்கின்ற செய்யுட்கள் குறித்த சந்தர்ப்பத்தில் உண்மையாகவே பாடப்பட்டன என்று கொள்வதற்கு இடமில்லை. இவற்றுட் பல, முன்னமே குறித்தபடி 17ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் வாழ்ந்த புலவர்கள் (சதகமுடையாரும் சரிதமுடையாரும்) கற்பனையில் விளைந்த செய்திகளே. இக்கற்பனைகளில் சொல்லிய தாதனும் கம்பரும் உண்மையில் அச்சம்பவங்களில் தொடர்புடையவர்கள் அல்லர் என்று கருதவேண்டும்.

வாணியன் தாதன் என்ற வரலாறு நூல்களில் சொல்லப் பட்டமையால் இப்பெயரை இங்கு குறிப்பிட்டு ஆராய்ந்தோம். இவ்வரலாறு உண்மை என்று கருதியதனால் அன்று.

வாணிதாசன் இராமாயணம் உத்தரகாண்டம் பாடினான் என்று சோழ மண்டல சதகம் (80) குறிப்பிடுகின்றது. இச்சதகம் தோன்றியது 18ஆம் நூற்றாண்டின் தொடக்கம். முன்வந்த கதை களையும் பின்கேட்ட கதைகளையும் ஒன்று சேர்த்து இந்நூல் பாடப் பெற்றுள்ளது. பல செய்திகள் ஆதாரமற்றவை. இங்கு வாணிதாசன் பாடினான் என்று கூறுவது சரசுவதி தேவி உபாசக ராகிய ஒட்டக்கூத்தர் என்பார் பாடியது எனப் பொருள்படும். அவர் உத்தர ராமாயணம் பாடியது முன்னமே அவர் வர லாற்றில் ஆராய்ந்தோம். அங்கு குறிப்பிட்ட வாணிதாசன் இத் தலைப்பில் ஆராய்கின்ற வாணியன் தாதன் அல்லன்.

## ஆளவந்த பிள்ளையாசிரியர்

பெயர் மாத்திரம் கேட்கப்படுகின்ற எத்தனையோ ஆசிரியர் களில் இவரும் ஒருவர். மலைபடுகடாம் என்ற பத்துப்பாட்டின் இறுதிப் பாடல் 145ஆம் அடியின் உரையில் நச்சினார்க்கினியர் இவர் பெயரைக் குறிப்பிடுகிறார். 'தீயினன்ன ஒண்செங்காந்தள்' என்பது தொடர்; தீயின் அன்ன ஒண் செங்காந்தள் என்று பிரித்துப் பொருள்கொள்ள நிற்பது. தீயின் நன்ன! ஒண் செங் காந்தள் என்று பிரிக்க இடம் கொடுப்பதால் இது ஆனந்தக் குற்றத்தின் பாற்படும் என்று இப்பெயருடைய ஆசிரியர் குற்றங் கூறினாராம். 'இதற்கு நன்னனென்னும் பெயர் தீயோடொத்த தன்மையின், ஆனந்தமாய், பாடினாரும் பாட்டுண்டாரும்

இறந்தார் என்று ஆளவந்த பிள்ளையாசிரியர் குற்றங் கூறினாராலெனின், அவர் அறியாது கூறினார்; செய்யுள் செய்த கௌசிகனார் ஆனந்தக் குற்றமென்னுங் குற்றமறியாமற் செய்யுள் செய்தாரேல், இவர் நல்லிசைப் புலவராகார்; இவர் செய்த செய்யுளை நல்லிசைப் புலவர் செய்த ஏனைச் செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் காரணம் ஆனந்தக் குற்றமென்பதொரு குற்றம் இச்செய்யுட்கு உறாமையானென்றுணர்க' என்பது நச்சினார்க்கினியர் உரைப் பகுதி. மேலும் அவர் இது ஆனந்தக் குற்றமாகாது என்று விளக்கி எழுதிக்கொண்டு போகிறார். இங்கு நாம் கருதவந்தது ஆளவந்த பிள்ளையாசிரியர் என்ற பெயர் மட்டுமே. வேறு யாரும் இவரைக் குறிப்பிடவில்லை. இவர் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருத்தல் கூடும்.

## முனையதரையன் மனைவி

நரசிங்கமுனையர் மரபில் வந்த ஒரு தலைவன், விக்கிரம சோழனது படைத்தலைவருள் ஒருவன்; முனையதரையன் என்பது இவன் பெயர்கூத்தர் விக்கிரமசோழன் உலாவில் இவனைக் குறிப்பிடுகிறார். இச்சோழன் பாண்டியர் ஐவருடன் நிகழ்த்திய போரில் படைத்தலைமை வகித்த முனையர்கோன் இவனே. போரில் தோற்ற பாண்டியருள் வல்லபன் ஒருவன். 1118க்கு முன் பாண்டியன் தோல்வியையும் முனையர்கோன் வெற்றியையும் ஒரு பழம்பாடல் இலக்கியச் சுவைபடக் கூறுகிறது. முனையர்கோன் மதுரையைப் பிடித்தபோது, மீனவன் தோற்றுப் பாலை வழியே ஓடினான்; பாலையின் வெம்மை அவன் கால்கள் பொறுக்கவில்லை. பாண்டியனுக்கு வடிம்பலம்ப நின்றான் என்று ஒரு பட்டமும் உண்டு; கடல் அவன் பாதத்தை வந்து அலம்பிற்று என்று புராணகதை சொல்லும்; அப்படி கடலையே குடித்தனவாகிய அவன் பாதங்கள் இப்போது ஓடிய ஓட்டத்தில் கொப்புளித்தனவாம்:

வடித்தவேல் முனையர்கோன் வழுதி மாநகர்
இடித்தபோது, எதிர்முது கிட்ட மீனவன்
வெடித்தவேல் அடவியை மிதித்த தாள், கடல்
குடித்ததே ஆயினும், கொப்பு ளித்ததே.

போருக்குச் செல்லும் வீரர்களுக்குப் புதியஆடை கொடுத்து* வாழ்த்தி அனுப்பும் பணியை இவன் செய்து வந்தான். இவன் பெரும் வெற்றி வீரனாயிருந்தமையால், இவன் கையால் புத்தாடை பெற்று அணிந்து போருக்குச் செல்வது வீரர்களுக்கு அதிகமான வீர உணர்ச்சியைத் தரும் என்ற நினைப்புப் போலும். இந்த இயல்பை ஒட்டக்கூத்தர் குறிப்பிடுகிறார். விக்கிரம சோழன் உலாவருங்கால், அமைச்சரும் தளபதிகளும் உடன் வருகிறார்கள், சோழனுடைய தந்தை முதற்குலோத்துங்கன் காலத்தில் கலிங்கப்போர் வென்று, கலிங்கத்துப் பரணி தோன்றக் காரணமாயிருந்த கருணாகரத் தொண்டைமான், சோழகோன், திருமறையோன் கண்ணன் முதலான பலர் வருகிறார்கள். அவர்களுள் முனையர்கோனும் ஒருவன் (கண்ணி. 69 - 70).

– பலர் முடிமேல்
ஆர்க்கும் கழற்கால் அனகன் தனதவையுள்
பார்க்கும் மதிமந்த்ர பாலகரில் – போர்க்குத்
தொடுக்கும் கமழ்தும்பை தூசினொடும் சூடக்
கொடுக்கும் புகழ்முனையர் கோனும்.

(அனகன் - விக்கிரமசோழன். தும்பைப் பூ அணிதல் போர் செய்தலின் சின்னம். தூசு சூட - புத்தாடை அணிய).

இம்முனையர்கோன் என்னும் முனைய தரையன், திருக் கண்ணபுரத்தில் வாழ்ந்தான்; இன்று கலெக்டர் என்று சொல்வதுபோல, அன்று அரசிறை வசூலிக்கும் தண்டத் தலைவனாயிருந்தான். இவன் திருமால் பத்தியிற் சிறந்தவன். திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியுள்ள சௌரிப் பெருமாளிடத்து ஈடுபாடு மிக்கவன். ஒரு சமயம் அப்பகுதியில் கொடிய பஞ்சம் உண்டாகி மக்கள் பெரும் துன்பமுற்றனர். பஞ்சம் நேர்ந்த காலம் கி.பி. 1129. இது, கோவிலடியில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டொன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. 'ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் விக்கிரம சோழ தேவற்கு யாண்டு 11ஆவது..... திருப்பேர்ப் பெரும்குறி மகாசபையோம் இவ்வூர் வடபிடாகை திருச்சடை

* போருக்குச் செல்பவர் புதிய ஆடை உடுத்திச் செல்வது ஒரு மரபு. 'வேல் கைக்கொடுத்து வெளிது விரித்து உடீஇ...செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே' என்ற புறநானூற்றுப் பாடல் (279) இதை நன்கு தெரிவிக்கும்.

முடித் திருச்சடை முடியுடைய மகாதேவர் கோயிலில் திரு மண்டபத்தில் கூட்டம் குறைவறக் கூடியிருந்து..... பண்ணின பரிசாவது, நாளும் பொல்லாததாய், நம்மூர் அழிந்து குடியோடிப் போய்க் கிடந்தமை.....' என வருவதால் அறியலாம். பஞ்சத்தின் கொடுமையைக் கண்ட முனையதரையன், அரசனுக்குச் செலுத்தும் பொருட்டுத் தான் வசூலித்து வைத்திருந்த திறைப் பணத்தையும் நெல்லையும் மக்களுக்கு வழங்கி நாடுபட்ட இன்னலை ஓரளவு போக்க உதவினான். இதனால் அரசிறை உரிய காலத்தில் அரசனுக்குப் போய்ச் சேரவில்லை; நிலையை அறியாத மன்னனது ஆணையின்படி, முனையதரையன் சிறை யிடப்பட்டான். அவனது மனைவி கண்ணபுரத்துத் திருமாலைத் தன் கணவன் விடுதலைபெற வேண்டுமென்று குறையிரந்து வந்ததோடு, அரசனுக்கும் தன் சுற்றத்தாரைக் கொண்டு உண்மை நிலையைக் கூறுமாறு செய்தாள். கண்ணபுரத்துப் பெருமாள் அரசன் கனவில் தோன்றி அவனை விடுதலை செய்யுமாறு கூறினார் என்று வரலாறு கூறும். சோழனும் அவனை விடுதலை செய்து தக்கபரிசு நல்கித் திருக்கண்ணபுரத்திற்கு அவனை அனுப் பியும், அப்போது உடனே அவன் ஒருபோர் முனைக்குப் போக வேண்டியிருந்தமையால் திருக்கண்ணபுரம் செல்லவில்லை, பாசறைக்குச் செல்ல நேரிட்டது. சிலநாள் சென்றும் அவன் திரும்பாமையால் மனைவி அவனுக்கு ஓர் ஓலை அனுப்பினாள். 'வெற்றி பொருந்திய தலைவனே, இன்று விடுதலை பெற்று நீ வந்தால் என்னை உயிரோடு காணலாம்: இன்று தவறி நாளை வந்தால், அப்போது நிலை என்ன என்பதையும் நீ அன்று அறிந்து கொள்ளலாம். (நான் உயிர் தரிக்கமாட்டேன் என்பது பொருள்) அன்பு நிறைந்த நமது காதல் வாழ்க்கையை மனத்தில் உன்னி விரைந்து வருவாயாக':

இன்றுவரில் என்னுயிரை நீபெறுவை; இற்றைக்கு
நின்றுவரில் அதுவும் நீ அறிவை: – வென்றி
முனையா! கலவி முயங்கியவா றெல்லாம்
நினையாயோ, நெஞ்சத்து நீ.*

அவனும் போர் முடிந்து விரைந்து தன் இல்லம் அடைந்து மனைவி மக்களைக் கண்டு மகிழ்ந்திருந்தான். அன்று சிறப்பாக

* தமிழ் நாவலர் சரிதை இப்பாடலைத் தந்து, இதைப் பாடியவள் தாதி என்று கூறும்: அது பொருந்தாமை உணர்க.

அவன் மனைவி நெய்ப்பொங்கல் மிக்க சுவையுடையதாகச் செய்து, தன் வீட்டில் வழிபடும் சௌரிப் பெருமாள் திருவுருவத்துக்கு நிவேதனம் செய்து, பின் அவனுக்குப் படைத்தாள். பொங்கல் மிக்க சுவையுடையதாயிருந்தது. சிறையில் நல்ல உணவு பெறாதிருந்தமையால், இப்பொங்கல் அவனுக்கு அமுதம் போன்றிருந்தது. குழந்தை மனத்தோடு அவன் 'இப்பொங்கல் சௌரிராசப் பெருமானுக்கே தகும்' என்று சொல்லி உண்டான்.

> பாலும் அரிசியும் பசும்பயறும் பாக மாக வேவிரவி
> ஏலம் இழுதும் சருக்கரையும் இட்டட் டுண்ணும் போதிலன்னான்
> சால மதுரம் என்ன அவை சவுரி ராசனுக்கே தகும் –

என்றான் என்பது புராணப் பாடல்.

இவ்விருவருடைய பக்தியின் முதிர்வைப் பெருமாள் உலகுக்கு உணர்த்த வேண்டி, தம் மேனியெங்கும் அந்நெய்ப் பொங்கல் வழிந்து ஓடுமாறு காட்டி, அப்பொங்கலின் பிதிர்வுகள் ஆலயத்திலிருந்து முனையதரையன் வீடுவரை சிதறியிருக்குமாறும் செய்தார். பொழுதுவிடிந்து கோயில் பட்டாசாரியர் கோயில் கதவைத் திறந்து பார்த்தபோநது, பொங்கல் கோயிலில் சிந்தியிருந்ததைக் கண்டார். அரசன் வரை செய்தி எட்டிற்று. பின்னும் பார்த்தபோது, முனையதரையன் வீடுவரை நெய்யடையாளம் செல்லவே, அவனுடைய அன்பைப் பெருமாள் ஏற்றுக்கொண்ட செய்தியையும் அனைவரும் உணரலாயினர். அன்றுமுதல் முனையதரையனும் ஆலயத்துக்கு நிலமும் நிபந்தங்களும் அமைத்து, நாள் தோறும் பொங்கல் நிவேதனம் வழங்க ஏற்பாடு செய்தான். அவ்வேற்பாடு இன்றும் நடந்து வருகிறது; அந்நிவேதனம் 'முனையோதரன் பொங்கல்'* என்றும் முனியோதனம் என்றும் இன்றும் வழங்கப்படுகிறது. கோயிலில் முனையதரையன் சிலையும் பிற்காலத்தில் அமைக்கப்பட்டு, உச்சிக்காலத்தில் பெருமாள் நிவேதனம் ஆனபின் முனையதரையனுக்கு ஓர் ஆராதனை இன்றும் நடந்து வருகிறது.

முனையதரையன் பொங்கல் வரலாற்றைச் சோழ மண்டல சதகம் ஒரு பாடலில் (39) கூறுகிறது.

---

* இவ்வரலாறு, நாராயணசாமி நாயக்கர் பாடிய திருக்கண்ணபுரத் தலபுராணம், முனியோதன அத்தியாயம் என்ற பகுதியில், புராணத் தன்மைக்கேற்பச் சிறிது மாற்றியும் விரித்தும் கூறப்பட்டுள்ளது.

புனையும் குழலாள் பரிந்தளித்த பொங்க லமுதும் பொரிக்கறியும்
அனைய சவுரி ராசருக்கே ஆமென் றருந்தும் ஆதரவின்
முனைய தரையன் பொங்கலென்று முகுந்தற்கேறும் முதுசீர்த்தி
வனையும் பெருமை எப்போதும் வழங்கும் சோழமண்டலமே.

## இராசராச சோழனும் தேவியும்

*தமிழ் நாவலர் சரிதையில் இரு வெண்பாக்கள், சோழனும் தேவியும் பாடியனவாகக் காணப்படுகின்றன. கண்டன் என்ற பெயராலும், சோமன் வாழ் புவனை என்றமையாலும், இராச ராசன் (2) என்று தெரிகிறது. முதற்பாடல் தலைவி நாயகன் பிரிவால் வருந்தி, அவன் தேரில் கட்டிய கொடியைத் தூரத்தே கண்டு பாடுவது. மற்றது, பிரிவிடையாற்றாத தலைவியைத் தோழி வற்புறுத்தல் என்னும் கூற்று.*

காடுமீ னம்படக் கண்டநம் கண்டன்வேற்
கோடுமே யுந்துறைத் தொண்டிஇக் கோனகர்
தேடுநீ டுங்கொடி தெரியநாம் உய்யவந்து
ஆடுமே பாடுமே அன்னமே இன்னமே.

மலையினும் கானினும் போயினார் வருவரே
முலையின்மேற் பசலைபோய் முதல்நிறங் கொள்ளுமே
துலையிலங் கியகொடைச் சோமன்வாழ் புவனையில்
தலையிலங் கியதடத் தன்னமே இன்னமே.

*(இரு பாடல்களிலும், அன்னமே இன்னமே என்றுள்ள முடிவைப் பார்க்கும்போது, சமுத்தி கொடுத்து இருவர் பாடிய பாடல்களோ என்று கொள்ளத் தோன்றுகிறது.)*

## சாசனக் கவிதை

*சோழ மன்னரும் பாண்டி மன்னரும் கோயிற் சுவர்களிலும் தனிப்பட்டயங்களிலும் தங்கள் கொடைகளைப் பொறித்த காலத்து, அழகான வாசகங்களாக அவற்றை எழுதினார்கள். அரசனுடைய சிறப்பைச் சொல்லுகின்ற பகுதி மெய்க்கீர்த்தி எனப்படும். இதை ஒரு பிரபந்த வகையாகவே பாட்டியல் இலக்கணங்கள் குறிப்பிடுகின்றன. அரசருடைய வெற்றிப் பிரதாபங்களை முறையாகச் சொல்லும்போது, இவ்வாசகம்*

அமைக்கும் புலவர், அழகிய தொடர்களையும், கருத்துக்களையும், உவமைகளையும், எதுகை மோனையோடு அமைத்திருக்கிறார். வெவ்வேறான சுமார் ஐம்பது மெய்க்கீர்த்திகள் காணப்படுகின்றன என்று அறிகிறோம். இவற்றை மட்டும் தனியே ஆராய்வது, சுவைமிக்கதும் பயனுடையதுமான ஓர் ஆராய்ச்சியாகும். மெய்க்கீர்த்திகள் போலவே, சாசனங்களிடையே சுவைமிக்க பாடல்களும் எழுதப்பட்டுள்ளன. இவை பெருந்தொகுதியாகவும் கிடைக்கின்றன. இவற்றுள் இந்நூற்றாண்டுக்குரிய சிலவற்றைத் தேர்ந்தெடுத்துக் கீழே தருகிறோம்.

**காலிங்கராயன்**

இவன் சிதம்பரம் நடராசப் பெருமானுக்குப் பல திருப்பணிகள் செய்தான். முதல் குலோத்துங்கன் அவன் மகன் விக்கிரமன் ஆகிய இருவர் காலத்திலும் படைத்தலைவனாக இருந்தான். பொன்னம்பலக் கூத்தன் மணவிற் கூத்தன் நரலோகவீரன் என்றெல்லாம் இவன் வழங்கப் பெறுகிறான். கோயில் பிரகாரத்து வெளிப்பக்கம் வடபுறச் சுவரில் 38 பாடல்கள் உள்ளன. சில காண்க.

தில்லையிற்பொன் னம்பலத்தைச் செம்பொனால் வேய்ந்துவா
னெல்லையைப்பொன் னாக்கினான் என்பரால் – ஒல்லை
வடவேந்தர் செல்வமெலாம் வாங்கவேல் வாங்குங்
குடைவேந்தன் தொண்டையார் கோ.

தென்வேந்தன் கூனிமிர்த்த செந்தமிழர் தென்கோயில்
பொன்வேய்ந்து திக்கைப் புகழ்வேய்ந்தான் – ஒன்னார்க்குக்
குற்றம் பலகண்டோன் கோளிழைக்கும் வேற்கூத்தன்
சிற்றம் பலத்திலே சென்று.

நட்டப் பெருமானால் ஞானங் குழைத்தளித்த
சிட்டப் பெருமான் திருப்பதியம் – முட்டாமைக்
கேட்பார்க்கு மண்டபத்தைச் செய்தான்தெவ் வேந்தர்கெட
வாட்போர்க்குந் தொண்டையார் மன்.

எவ்வுலகு மெவ்வுயிரும் ஈன்றும் எழிலழியாச்
செவ்வியாள் கோயிற் றிருச்சுற்றைப் – பவ்வஞ்சூழ்
எல்லைவட்டந் தன்கோற் கியலவிட்ட வாட்கூத்தன்
தில்லைவட்டத் தேயமைத்தான் சென்று.

மாசிக் கடலாடி வீற்றிருக்கு மண்டபமும்
பேசற் றவற்றைப் பெருவழியும் – ஈசற்குத்
தென்புலியூர்க் கேயமைத்தான் கூத்தன்திசை யனைத்து
மன்புலியா ணைநடக்க வைத்து.

இவனே திருவதிகையிலும் சிறப்பான திருப்பணிகள் செய்தான். அவைபற்றிய வெண்பாக்கள் 26 அங்கு பொறிக்கப்பட்டுள்ளன. சில கீழே காண்க.

பொன்மகர தோரணமும் பூணணியும் பட்டிகையும்
தென்னதிகை நாயகற்குச் செய்தமைத்தான் – மன்னவர்கள்
தன்கடைவாய் நில்லாதார் தாள்வரைவாய் நின்றுணங்க
மின்கடைவேற் காலிங்கர் வேந்து.

மண்டபமும் மாளிகையும் வாழ்திசை வீரட்டர்க்
கெண்டிசையும் ஏத்த எடுத்தமைத்தான் – விண்டவர்கள்
நாள்வாங்கச் சேயிழையார் நாண்வாங்க நற்றடக்கை
வாள்வாங்கும் காலிங்கர் மன்.

அருமறை மாதாவின் அறக்காமக் கோட்டம்
திருவதிகைக் கேசமையச் செய்து – பெருவிபரம்
கண்டான் எதிர்ந்தார் அழியத்தன் கைவேலைக்
கொண்டான் நந்தொண்டையர் கோ.

போதியின் நீழற் புனிதர்க் கிறையிலிசெய்து
ஆதி அதிகையின்வாய் ஆங்கமைத்தான் – மாதர்முலை
நீடுழக்காண் ஆகத்து நேரலரைத் தன்யானைக்
கோடுழக்காண் கூத்தன் குறித்து

மைசூர் நாட்டில், பல நிபந்தங்களைக் குறிப்பிடும் சாசனங்கள் பல, நீண்ட அகவற்பாக்களாகவும் கலிவெண்பாவாகவும் காணப்படுகின்றன. இவை அரசருடைய மெய்க்கீர்த்திகளாக அன்றி, அம்மரபில் தனிப்பட்டோர் செய்த தருமங்களையும் கோயிற் பணிகளையுமே குறிப்பிடுவன. இடமின்மையால் அவற்றை இங்கு எடுத்துக்காட்ட இயலவில்லை.

ooo

## அத்தியாயம் 15

# உரைநடை

### முன்னுரை

உரைநடை அல்லது வசனம் ஒன்றேதான் இருபதாம் நூற்றாண்டின் தமிழ்நடை. கவிதை என்பது இக்காலத்தில் யாரேனும் செய்தால், முயன்று செய்யும் முயற்சியேயொழிய, கருத்தை எடுத்துப் பிறருக்கு உணர்த்துவதற்காக யாரும் இன்று கவிதையை ஒரு கருவியாகக் கொள்வதில்லை. காரணம் அச்சுத் தொழிலின் பெருக்கமும், வாழ்க்கை முறையில் ஏற்பட்டுள்ள கடுவிரைவும். ஆனால் 19ஆம் நூற்றாண்டில்கூட, புலவர் முயன்று செய்தன வெல்லாம் கவிதையாக இருந்ததோடன்றி, கருத்தை எடுத்து உணர்த்தும் கருவியாகவும் கவிதை பயன்பட்டது.

சீட்டுக் கவிகள் இத்தகையன என்பதை நாம் அறிவோம். ஆனால் அக்காலங்களில் பனையோலையில் எழுதுவதிலுள்ள இடர்ப்பாடுகளால், எழுதுவதைச் சுருக்கி, எல்லோரும் உரை நடையில் எழுதாமல் கவிதையாகவே - பாட்டாகவே - எழுதி வைத்தார்கள். இதுபற்றிய ஒரு விளக்கத்தை எமது 10, 11 நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறுகளில் விளங்கக் காணலாம்.

இனி, இவ்வத்தியாயத்துள், 12ஆம் நூற்றாண்டுக்குரிய தென்று நாம் அறிய வருகிற உரைநடையைப் பார்க்கிறோம். இரண்டே பிரிவுகளாக இவ்வுரை நடையை நாம் காணமுடிகிறது. ஒன்று இக்காலத்து உரையாசிரியர் தாம் செய்த இலக்கண இலக்கிய நூல்களின் உரைகளில் கொண்ட உரைநடை. இரண்டு, இக்காலத்தெழுந்த சோழ பாண்டிய மன்னர்களின் கோயிற் சாசனங்கள்.

**அ. உரைகளாக எழுந்தவை, காலமுறைப்படி பின்வருவன:**

1. புறநானூற்றுக்குப் பெயர் அறியப்படாத ஆசிரியர் செய்த உரை
2. வீரசோழியத்துக்குப் பெருந்தேவனார் செய்த உரை
3. சிலப்பதிகாரத்துக்கு அடியார்க்கு நல்லார் செய்த உரை
4. திருக்கோவைக்குக் கிடைத்துள்ள பழைய உரை

**ஆ. சாசனங்களாக எழுந்தவை பின்வருவன**

1. முதற்குலோத்துங்க சோழன்
2. விக்கிரமசோழன்
3. இரண்டாம் குலோத்துங்க சோழன்
4. இரண்டாம் இராசராச சோழன்
5. இரண்டாம் இராசாதிராசன்
6. மூன்றாம் குலோத்துங்கசோழன்
7. பாண்டிய மன்னர்
8. இலங்கை அரசன் விசயபாகு

**இ. மணிப்பிரவாள உரைநடை**

இந்த நூற்றாண்டில் முதல்முதல் தோன்றிற்று. முதலில் எழுதியவர் திருக்குருகைப்பிரான் பிள்ளான் - திருவாய்மொழி ஆறாயிரப்படி வியாக்கியானம். இது முழுமையும் வடசொற்கள், இலக்கண முடிவுகள்பெய்து, பெரும்பகுதி வடவெழுத்தாலேயே எழுதப்பட்டுள்ளது. இதனுள் தேர்ந்தெடுத்த சில தமிழ்ப்பகுதி களை முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம்.

## இலக்கிய இலக்கண உரைகள்

**புறநானூற்றுரை**

'நிலம்புடை பெயர்வதாயினுமென்பதற்குப் பெயருங்காலத்து யாவருஞ் செய்த இருவினையும் நீங்குதலின், அக்காலத்தும் செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென்றும், நிலத்துள்ளார் யாவரும் இவர் கூற்றிலே நிற்பாராயினுமென்றும் உரைப்பாரும் உளர். புன்கம் முன்பு இவன்பாற் செல்வதற்கு முன்புபெற்ற உணவாகவும், அமலைக் கொழுஞ்சோறு இவன்பாற் பெற்ற

உணவாகவும் கொள்க; அன்றிச் சென்ற இடந்தோறும் பெற்ற உணவாக வுரைப்பினும் அமையும். மன்றத்துச் சூடு கிழித்த ஒக்கலொடு கூட வேண்டுமொழி பயிற்றி ஆர்ந்த பாணர்க்கெனக் கூட்டுக. பாணர்க்கெனத் தம்மைப் பிறர்போலக் கூறப்பட்டது. ஆயிழை கணவ! செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென அறம் பாடிற்று, ஆதலால், பாணர்க்குச் செல்வ முழுவதுஞ் செய்தோன், எங்கோன் வளவன் வாழ்கவென்று காலையந்தியும் மாலையந்தியும் நின்தான் பாடேனாயின், பல்கதிர்ச் செல்வன் படுபறியான்; பெரும! யானோ தஞ்சம்; சான்றோர் செய்த நன்றுண்டாயின், நுண்துளியினும் பல காலம் வாழ்வாயாக வெனக்கூட்டுக. கோவதை முதலாயின வாக்காற் சொல்லவும்படாமையின், ஆன்முலையறுத்தவெனவும், மகளிர் கருச்சிதைத்த வெனவும், பார்ப்பார்த் தப்பிய வெனவும் மறைத்துக் கூறப்பட்டன. இது பரிசில்பெற்றுப் போகின்றானை நீ எம்மை நினைத்து வருவையோ என்றாற்கு, இவ்வாறு செய்த நின்னை வளவன் வாழ்கவென்றுபாடேனாயின், யானிருக்குமிடத்துப் பல்கதிர்ச் செல்வன் படுதலறியான், அதனால் இம்மையின்பம் பெறேனெனவும், செய்ந்நன்றி கொன்றோர்க்கு உய்தியில்லையெனவே மறுமையின் கண் நரகம் புகுவேனெனவும் கூறியதாகக் கொள்க'.

எளிதாக எழுதிச் செல்கின்ற இவ்வுரையாசிரியர் விசேடவுரையாக எழுதியதே இப்பகுதி.

### பெருந்தேவனார் – வீரசோழிய உரை

'இவ்விடத்து மானிட வடிவம் முன்பே யுண்டாம். ஆபரணங்கள் பின்னை வேறொருவனாற் செய்து பூட்டப்படுவன. அதுபோலச் செய்யுட்கள் முன்பே உளவாய், அலங்காரம் பின் பொருவனாற் செய்திவற்றிற் பூட்டப்படுவனவல்ல. செய்யுள் உள்ளபொழுதே இவையும் உளவாகலில், ஆடையாபரணாதிகளால் அலங்கரிக்கப்படா நின்றதொரு மானிட வடிவிற் கேற்ப உருவகஞ் செய்தாரெனக் கொள்க. அலங்காரம் எனவே ஆடையாபரணாதி என எல்லாம் அடங்கும். அது என்போல எனின், இவளை அலங்கரிக்க என்றபொழுதே எல்லாம் அடங்கினாற் போலவென்க. ஒருத்தி எல்லா ஆபரணங்களும் பூண்டு நின்றாளேயாயினும், அவற்றின் மிக்கிருந்தது ஒன்றால் ஆரம் பூண்டு நின்றாள் என்றதுபோல, ஒரு செய்யுட்குப் பல அலங்

காரமாயினும் மிக்கதொன்றால் வழங்குக. இரண்டு ஒத்திருந்த தாகில், அதனை அவ்விரண்டின் பெயரானும் வழங்கினு மிழுக்காது. இரண்டுக்கு மேற்பட்டிருக்கில் விரவியலாம் என்க. 'சொல்லே உடலாக' என்பதனாற் சொல்லாவன செய்யுட்கு உறுப்பாகிய சீர் பன்னிரண்டையும் எனக்கொள்க. ஒரு சொல்லே ஒருசீராய் வருவது சிறப்புடைத்து. எழுத்தும், அசையும், சீரும், தளையும், அடியும், தொடையும் அல்லவே யாப்பினுக்கு உறுப்பாவன எனில், அது பொருந்தாது. எழுத்துக் களை அசைக்குறுப்பு என்றமையால், அவையெல்லாம் ஒன்றுக் கொன்று உறுப்பாய் யாப்புக்கு உறுப்பாவனவாம். அன்றியும், தொடைகளையும் ஆதாரமாகச் சொன்னமையால், அது பொருந்தாது என்க'. (அலங்காரப் படலம் முதற்காரிகையுரை). இவருடைய நடைமிக்க எளிமையாயுள்ளது. சிறுவாக்கியங் களால் இயன்றது; தடைவிடைகளைக் கூறிக் கருத்தை உவமை யாலும் நன்கு விளக்குவது.

அடியார்க்கு நல்லார் – சிலப்பதிகார உரை

'நாரதன் கலகப் பிரியனாதலால் தனது யாழைப் பகை நரம்புபட இசைத்தலின், தான் இங்ஙனமிசைத்ததற்குக் காரண மின்றாகவும் இவள் கலங்கினமைதான் நமக்கறிவித்து நம்மால் இவளை முனிவிப்பான் வேண்டி நம்மை மதியானாயினானென அவளொடும் சாபமிடுகின்றவன், வீணை மங்கலமிழக்க; மண் மிசைத் தங்குக; இவன் மண்ணிற்போய்ப் பிறக்கவெனச் சாபம் இட்டானென்பது. வீணை மண்மிசைத் தங்குகவெனவே, இவனை நீங்கா வரத்தின் வந்ததாகலான் இவனும் மண்மிசைத் தங்குக வென்பதாயிற்று; எனவே, இவன் மண்ணிற் பிறவானா தலுணர்க. இவ்வீணையை உருப்பசி கையில் வீணையென்பாரு முளர். அது பொருத்தமின்று. அங்ஙனம் இவள் மண்மிசைப் பிறக்கவெனச் சபித்தலின் அதனைப் பெற்றுவந்து பிறந்த மங்கை யாகிய மாதவிவழிப் பெயராய் அவ்வழியிற்றோன்றிய அறவு போலும் அல்குலையுடைய மாதவியுடைய ஆடலையும் அவ் விடத்துக் காண்பேமென்றானென்க. ஈண்டுச் சயந்தன் சாபமும் விடையுங் கூறாதது, அரங்கேற்றுக் காதைக்கண் 'இந்திர சிறுவ னோடு, தலைக்கோற்றானத்துச் சாபம் நீங்கிய' என்றாராகலி னெனக் கொள்க. இனி, வீணையைச் சாரீர வீணையாக்கி

மங்கலமிழப்ப என்பதற்கு இவள் இக்கடவுள் யாக்கையொழிந்து மக்கள் யாக்கையில் தங்குகவெனச் சபித்தானென்பதுங் கொள்க. இனி உருப்பசிக்குச் சயந்தன் மேற்சென்ற காதன்மை புதல்வர் மேற்செல்லும் கண்ணோட்டமென்பார்க்கு அங்ஙனம் புதல் வரை நோக்கி மகிழ்வோர்க்கு அன்பு சிறத்தலொழிந்து நிலை கலங்கி ஆடல்பாடல் நெகிழ்தலும், மூன்று காலமுமுணர்ந்த முனிவன் அதனை அறியாது சபித்தானென்றலும், பொருந்தா மையின், அங்ஙனமுரைத்தல் குற்றமென்க'.

இங்கு அடியார்க்கு நல்லார் உரையியல்புகள் அனைத்தை யும் ஒருங்கு காணலாம்; காரணகாரியத் தொடர்பு, தடை விளக்கம், பிற கருத்துக்களின் மறுப்பு, மேற்கோள் போன்ற இயல்புகள். தம் கருத்துக்களையும் வேறு கருத்துக்களையும் விளக்கமாய்க் கூறுவதே இவருடைய சிறப்பியல்பு. வீணை மண்மிசைத் தங்குக என்பதற்குக் கூறிய பல நயங்களையும் காண்க.

### திருக்கோவை – பழைய உரை

'திருவம்பல நாதனிடமுமா யதிலே, பொதியின் மலையு மாயதிலே, பூம்பொழிலுமா யிருக்கிற சத்திய பூமியிலே, சொன்ன வார்த்தையை மறந்து பொருள்தர நினைக்கிறவர் புரக்கக் கடவரேயல்லவோ எனக் குறிப்பாலே இகழ்ந்தாள்; அன்றிக் கலந்தும் நினையாதவர் எனவே, காமத்துக்கும் கூட்டல்லர் என்பது கருத்து. தமியேற்கு எனவே, புரக்க வேண்டுமிடத்தும் புரவாதவர் என்பது கருத்து. தனி, தன் நாயகனைத் தன் அன்புக் குத் துணையாகப் பெறாத தனிமை'.

'புதல்வனைத் தந்த பின்பு புலத்தல் முறைமை யன்றாயினும், மணி வாணகையார் முன்பு வாயினேர்தல் பெண்மையன்றென மறுத்தாள் போலும். உலாத்தரும் புதல்வன் என்றமையால், இவன் உலாத்தருமளவும் புறத்தொழுக்கத்தே நின்றான் என்பது கருத்து. நடவா நின்ற மாணிக்கமெனவே, நம்மை வேண்டா ராயினும், மாணிக்கநடை பெற்றாலொத்த தம் புதல்வனை வேண்டாரராயினார். பரத்தையர் மேல் வைத்த அன்பினா லென்பது'.

இவ்வுரையாசிரியர் அபூர்வமாய்த் தான் தம் சொந்தக் கருத்தை எழுதுகிறார்.

## *சாசன வாசகம்*

### முதலாம் குலோத்துங்க சோழன் *(1111)*

ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவருக்கு யாண்டு 41ஆவது ஜயங் கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக் காட்டுக் கோட்டத்து ஊற்றுக் காட்டு நாட்டு குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலத்து பெருங்குறி ஸபையோம் பூமிநில விலையாவணக் கையெழுத்து நம்மூர்த்தி.... ஈசுவரமுடையர்க்கு திருஅத்த சாமத் துக்கு திருஅமுதுக்கு அரிசி குறுணிக்கும் பிள்ளையார்க்கு அரிசி இரு நாழிக்கும் நெல்லு முக்குறுணி ஒரு நாழியும் கறியமுது மூன்றுக்கு நெல்லு முந்நாழி.... அமுது ஆழாக்குக்கு நெல்லு முந்நாழியும் தயிரமுதுக்கு நெல்லு இருநாழியும் மிளகமுதுக்கு நெல்லு நாழியும் உப்பமுதுக்கு நெல்லு உரியும் அடைக்காயமுது பாக்கு பத்துக்கும் வெற்றிலை நாற்பதுக்கு நெல்லிரு நாழியும் மஞ்சள் காப்புக்கு நெல்லுரியும் திருமடைப்பள்ளிக்கு விறகுக்கு நெல் நாழியும் செக்கலத்துக்கு நெல் நாழியும் திருமெய்ப்பூச்சுக்கு நெல்லு நாழியும் சிதாரிக்கு நெல்லிரு நாழியும் திருப்பரிசட்ட மிரண்டுக்கு நெல் முந்நாழியும் மத்யான சந்திக்கு தும்பை திருப்பள்ளித் தாமம் நாழிக்கு நெல் நாழியும் பூஜிப்பார்க்கு நெல் நான்கு நாழியும் திருமஞ்சனம் வைப்பார்க்கு நெல்லிரு நாழியும் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்வார்க்கு நெல்லுக் குறுணியும் சந்தி விளக்கு நாற்பதுக்கு நெல்லு முக்குறுணியும் திருநந்தா விளக்கு ஒன்றுக்கு நெல்லுக் குறுணியும் சிறுகாலைச் சந்தி மந்திரபோனகத்துக்கு அரிசி நானாழிக்கு நெல்லுக் குறுணி இருநாழியும் கறியமுது நெய்யமுது உள்ளிட்டு வேண்டுவற்றுக்கு நெல்லு அறு நாழியும் இப்படி நிமந்தம் செல்லக் கடவதாகவும். இத்தேவர் கோயிலிலே கருணாகரஞ்சாலை அக்ர போஜனத் துக்கு கலம் அஞ்சுக்கு அரிசி குறுணி இருநாழிக்கும் நெல்லு முக்குறுணி ஒருநாழியும் கறி மூன்றுக்கு நெல் முந்நாழியும் மோருக்கு நெல்லிரு நாழியும் உப்புக்கு நெல் நாழியும் நெய் ஆழாக்குக்கு நெல்லு முந்நாழியும் பாக்குப் பத்துக்கும் வெற்றிலை நாற்பதுக்கும் நெல்லிரு நாழியும் அடுவானுக்கு நெல்லுக் குறு ணியும் செக்கலத்துக்கு நெல் நாழியும் விறகுக்கு நெல் நாழி யும் இப்படி உண்ணக் கடவதாகக் கங்கை கொண்ட சோழவள

நாட்டு விழுப்பரைய நாட்டு நெற்குன்ற நாட்டுக் குடாமூருடையான் வேளான் சங்கர நாராயணன் கொண்டுவிட்ட நாராயண விளாகமாவது வடபாற் கெல்லைக்குத் தேவர் தேவ தானமான ஏறுசேவக விளாகத்துக்குத் தெற்கும் கீழ்பாற் கெல்லை தொள்ளாகுழி எல்லையில் ஈஞ்சலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை தொள்ளாக் குழியில் தெற்கிலீஞ்சலில் மேற்கு நோக்கின கொத்தாரத்துக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை தேவியரும் பாக்கத்து எல்லைக்குக் கிழக்கும் இந்நான்கெல்லைக்கும் உட்பட்ட நிலம் இவ்வாண்டைக்கு முன்பு தரத்திலும் பரப்பிலும் உடல்பெறாது காடுகோளாய்த் தரமின்றியே பிராம்மணற்கு கூறிடுமென்றியே கிடந்த நிலம் கங்கை கொண்ட சோழவள நாட்டு விழுப்பரைய நாட்டு நெற்குன்ற நாட்டுக் குடாமூருடையான் வேளான் சங்கர நாராயணனுக்கு எம்மிலிசைந்த விலைப் பொருள் முற்றுமறக் கொண்டு விற்றுக் கொடுத்தோம், குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலத்து மகாசபையோம். இந்நிலத்து அழிவு செய்வாரும் செய்ய நினைத்தாரும் கங்கை இடைக் குமரியிடைச் செய்தார் செய்த பாவம் அனுபவிக்க கடவதாகவும். இந்நிலத்துக்கு நீர்விலை அந்தராயம் கொள்ளக்கடவ வோமல்லாதோமாகவும், இந்நிலத்திலிருப்பாரைச் சில்லிறை சோறு மாட்டு வாசற்காக ஆளமஞ்சி கொள்ளக் கடவோமல் லாதோமாகவும் சம்மதித்துள்ளமையால் இவ்வூர்க்கணக்கன் குமாரசத்தி திருச்சிற்றம்பலமுடையான் எழுத்து.

### விக்கிரம சோழன் : 1123

திருபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரமசோழ தேவற்கு யாண்டு அஞ்சாவது மிதுன ஞாயிற்று பூருவபக்ஷத்து சப்தமியும் ஞாயிற்றுக்கிழமையும் அத்தமுமாக நாள் முந்நூற்று நாற்பதினால் கேயமாணிக்க வளநாட்டு திருவாரூர் கூற்றத்து திருவாரூர் உடையார் வீதிவிடங்கர் சித்திரை திங்கள் திருநாளில் சதைய ..... தேவர் ஸ்ரீ ..... திருக்காவணத்தில் சன்னிதானத்தில் எழுந்தருளி இருந்து பதியிலாளர் தியாகவிநோதத் .....ங் கண்டருளா நிற்ப ஸ்ரீ காரியம் சுப்பிரமங்கலமுடையான் மாதவன் இரவியான மானாலைய விண்ணப்பத்தினால் பதிபாத மூலப்பட்டுடை பஞ்சாசாரிய தேவகன்மிகளுக்கும் கோயிலங்.... யார்க்கும் திருவாய் மொழி அருளினபடி நம் ஏவலால் பூலோக ராஜ்யம் செய்கின்ற சூரிய புத்திரன் மனு தன்புத்திரன் ஏறிவருகிற தேரில் பசுவின்

கன்றகப்பட்டு பிரமாதப்பட அதின் மாதாவாகிய சுரபி கண்டு துக்கித்து மனுவின் வாசலில் மணியையெறிய, அதுகேட்டு மனு தன் மந்திரி இங்கணாட்டு பாலையூருடையான் உபயகுலா மலனைப் பார்த்து நீ சென்று இதனை அறிந்து (வா என்று கட்டளையிட, அவன் பார்த்து வந்து) வாயிற்புறத்து ஒரு பசு மணி எறியா நின்றது என்று சொல்ல, அதுகேட்டு மனு புறப்பட்டு பசுவையும் பட்டுக்கிடந்த (கன்றையும் பார்த்து நிகழ்ந்த) படி வினவி தன் புத்திரன் ஏறின தேரிலே பட்டமை அறிந்து அக் கன்றுக்கு நேராகத் தன் புத்திரன் பிரியவிரதனை தேரிலே ஊர்ந்து கொடுக்கவென்று உபயகுலாமலனுக்குச் சொல்ல, அவன் சந்தாபத்தோடும் புறப்பட்டு தன் செவிகளைத் தரையிலே குடைந்து கொடுபட்டது கண்டு, துவாரபாலகன் புகுந்து உபய குலாமலன் தன் செவிகளை குடைந்துகொண்டு (உயிர் விட்ட தென்று கேட்டுத்) துக்கிதனாய் மனு தானே புறப்பட்டு தன் புத்திரனை தானே தேரிலே ஊர்ந்து கொடுக்க, அப்போதே நாம் அவனை அனுக்கிரகித்து கன்றுக்கும் மந்திரிக்கும் மனு புத்திரனுக்கும் ஜீவன் கொடுக்க அது கண்டு மனு சந்தோஷித்து கன்றினை எடுத்துக்கொண்டு பசுவுக்கு காட்டிக்கொடு (த்து அனுப்பிப் பின் பிரியவிரதனை ராஜாவாக) அபிஷேகம் பண்ணி இவனுக்கு உபயகுலாமலன் மகன் சூரியனை மந்திரியாக்கி இவனுக்கு தன்புத்திரன் மாளிகை .... மங்கல .... மூரும் கொடுத்து மனுவும் உபயகுலாமலனும் தபசினை தலைநின்றமையில் பாலையூர் உடையான் உபயகுலாமலன் வம்சத்தானாகிய பாலையூர் உடையார் சந்திரசேகரனாதி விடங்கனான குலோத் துங்க சோழ மகாபலிவாண .... வம்சாதியாக வருகிற மாளிகை மனை பழையபடி மாளிகைஆக எடுத்து குடிவைப்பிப்பதாக நாம் சொல்ல.... இதிலே நித்தமும் நம் அடியார்க்கு சோறு இடம் பெற வேண்டுமென்று இவன் நமக்கு சொன்னமையில் காட்டி பெறுவதாகவும் இம்மாளிகை வம்சாதி ஆகஸ்வமாய் வரு .... மாளிகையிலே எழுத்து வெட்டுவித்துக் கொடுக்க வென்று இப்படிக்கு திருவாய் மொழிந்தருள திரும .... தியாகவினோத பிரமராஜனால் எழுத்தினால் புகுந்த திருமுகும் ....

(இந்தச் சாசனம் சேக்கிழார் வரலாற்று ஆராய்ச்சியில் சிறப்பான இடம் பெறத்தக்கது. சேக்கிழார் மனுச்சோழர் வர லாற்றைப் பாடியிருக்கிறார். பாடிய காலம் இக்கல்வெட்டுக் குரியவனான விக்கிரமனுடைய புதல்வன் காலம். தம்காலத்

திற்கு அண்மையிலேயே மனு வரலாறு பிரசித்தமாய் வழங்கிற்று. அதுமட்டுமல்லாமல் மனுச்சோழனுடைய மந்திரி பெயர் உபயகுலாமலன், அவனுடைய மகன் பெயர் சூரியன், மந்திரிக்குப் பிறகு இச்சூரியனை இறைவனே மந்திரியாக்கினார், மனுச் சோழன் மகன்பெயர் பிரியவிரதன் என்ற செய்திகள் இங்கு சொல்லப்பட்டுள்ளன. மனுச்சோழன் வரலாறு இவ்வாறு வழங்கி வந்த போதிலும்கூட, அதுபற்றிச் சாசனத்தில் வழங்கிய குறிப்பு களைச் சேக்கிழார் பயன்படுத்திக் கொள்ளவில்லை).

## இரண்டாம் குலோத்துங்கன் : 1136

ஸ்ரீ இராஜகேசரி பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு மூன்றாவது செயங் கொண்ட சோழ மண்டலத்துப் பல்குன்றக் கோட்டத்துத் தென்னாற்றூர் நாட்டுச் சீயமங்கலத்து ஆளுடையார் தர்மீச் வரமுடையார் கோவிலிலே, சம்புபுரத்திருக்கும் பள்ளி செல்வன் இவ்வூரிலிருக்கும் பள்ளி வேணாட்டரையனைக் கைப்பிழையால் எய்து செத்தமையில், நாட்டவரும் சம்புவராயரும் கூடி, இவன் இவ்வேணாட்டரையனுக்காகச் சாவ வேண்டாம்; கைப்பிழை, புகுந்தது. இதுக்குத் தூணாண்டார் கோயிலிலே அரை விளக்கு வைக்கச் சொல்ல, அரைவிளக்குக்கு பசு பதினாறுருவும் பொறித்து விசியன் செல்வனேன், சந்திராதித்த வரை செல்வதாக. இவ்வறம் இறங்காமற் காத்தார் சீபாதம் தலைமேலன இது ஸ்ரீ மாஹேசுவரர் தன்மம். (வடஆர்க்காடு ஜில்லா, சீயமங்கலம் ஸ்தம்பேசுவரர் ஆலயத்தில் உள்ளது).

## இரண்டாம் இராசராசன் : 1162

ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு 18ஆவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்துத் தனியூர் ஸ்ரீ மதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்துத் தென்பிடாகை பெரும் பேறூராளுடையார் ஸ்ரீ காணீச்வரமுடையார்க்கு திரு முனைப்பாடி வடகரை நாட்டு வேசாலிப்பாடி அரும்பாக்கத்து அரும்பாக் கிழான் காக்கு நாயகன் பெரியான் இத்தேவற்கு வைத்த சந்தி விளக்கு ஒன்றுக்கு நான் விட்ட பசு நாலு, இப்பசு நாலுங் கைக்கொண்டு சந்திராதித்த வரை செலுத்தக் கடவோம். இக்கோயிலில் காணியுடைய சிவப் பிராமணரோம். இது பன்மாஹேச்வர ரக்ஷை.

### இரண்டாம் இராசாதிராசன் : 1171

ஸ்ரீ ராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு எட்டாவது ஜெயங் கொண்ட சோழ மண்டலத்து ஆமூர்க் கோட்டத்துச் சிறுகுன்ற நாட்டுக் காரிகைக் குளத்தூர்க் குளத்துளான் திருச்சிற்றம்பல முடையான் பெருமானாம்பியார் ஆன பல்லவராயர் பெரிய தேவர் ராஜராஜ தேவர் பத்து கோயிற் கொத்தும் ஆனை குதிரை அகம்படி நியாய முள்ளிட்ட துறைகளுக்கும் முதலிகளுமாய் முதலிகள் ஓபரதி காரியத்துக்குங் கடவருமா யெல்லா வரிசை களும் முன்னேவல் உள்ளிட்டு முதலிகள் பெறக் கடவ ஏற்றங் களும் பெற்று நின்று பெரியதேவர் துஞ்சியருளி யப்பிள்ளை களுக்கு ஒன்றும் இரண்டும் திருநட்சத்திரமாகையால் ஆயிரத் தளிப்படை வீடும் விட்டுப் போதவேண்டிப் போதுகிற இடத் துத் திருவந்தப்புரமும் பரிவாரங்களும் உள்ளிட்டன எல் லாம் பரிகரித்துக் கூட்டிக் கொடுபோந்து ராஜராஜபுரத்திலே இருந்த இடத்துக்கு சூழ்ந்த இடன் .... யாறு மிகுதிப் .... ரத்து உடன் கூட்டத்தா .... ராலும் எல்லாக் கலக்க .... சோழ ராஜ்யத்துக் குள்ளேயே யிருப்பார் காரண வருட .... வேண்டிப் புறத்து எல்லா அடைவுகேடுகளும் வராத இடத்து இந்நூல்களும் பரிகரித்து இப்.... பெரிய தேவர் எழுந்தருளிய நாளிலே திருஅபிஷேகத்துக்கு உரிய பிள்ளைகள் இன்றியே .... ருக்கிற படியைப் பார்த்து முன்னாளிலே காரியம் இருந்தபடி விண்ணப்பஞ் செய்து கங்கை கொண்ட சோழபுரத்திலே எழுந்தருளியிருக்கிற பிள்ளைகளை பிரயாணம் பண்ணுவித்து உடையார் விக்கிரமசோழ தேவர் பேரனார் நெறியுடைப் பெருமாள் திருமகனார் எதிரிலிப் பெருமாளைப் பெரிய தேவர் துஞ்சியருளின நாளிலே மண்டை கவிப்பித்துப் போந்தாரானவாறே* இவரைத் திருஅபிஷேகம் பண்ணுவிக்கக் கடவராக நிச்சயித்து நாலாந் திரு நக்ஷத்திரத் திலே ராஜாதிராஜதேவர் என்று திரு அபிஷேகம் பண்ணுவித்து உடன் கூட்டமும் நாடு மொன்றுபட்டுச் செல்லும்படி பண்ணு வித்தருளினார் மிகை செய்யாதபடியும் பரிகரித்து இவர்கள் எல்லோரையுஞ் சேரப் பிடித்துப்பணி அழகிதாகச் செய்வதொரு படியும் பண்ணி ஈழத்தான் பாண்டி நாட்டிலே படைகளும் காரணவரானாரையும் மிகுதிப் போதவிட்டு இந்நாடு கைக் கொள்ளக் கடவனாகப் பண்ணின இடத்து பாண்டியனார் குலசேகரதேவர் தம்முடைய ராஜ்யம் விட்டுச் சோழராஜ்யத்

---

* மண்டை கவிப்பித்தல் - முடிசூட்டுதல்.

திலே புகுந்து என்னுடைய ராஜ்யம் நான் பெறும்படி பண்ண வேணுமென்று சொல்ல இவர் உடையார் குலசேகர தேவர் பெறும்படி பண்ணக் கடவராகவும் இந்த ராஜ்யத்திலே புகுந்து வந்து கைக்கொண்ட இலங்காபுரி தண்டநாயகன் உள்ளிட்டாரைக் கொன்று பாண்டியர்கள் இருப்பான மதுரை வாசலிலே இவர்கள் தலைதைப்பிக்கக் கடவராகவும் சொல்லி யிப்படி யெல்லாம் விண்ணப்பஞ் செய்து திருவுள்ளமானபடியே பாண்டியனார் குலசேகர தேவர் சோழ ராஜ்யத்தில் இருந்த நாளிலே இவர்க்கு வேண்டுவனவெல்லாங் குறைவறச் செய்து பரிகரித்து பலத்தாலும் அர்த்தத்தாலும் உற்சாகத்தாலும் பாண்டிநாடு கைக்கொண்டு தான் சொன்னபடியே இலங்காபுரி தண்டநாயகன் உள்ளிட்டாரைக் கொன்று இவர்கள் தலை மதுரை வாசலிலே தைப்பித்து பாண்டியனார் குலசேகரத் தேவர் மதுரையிலே புகுகைக்குச் செய்ய வேண்டுவனவும் வ.... ஐயத்து செய்வித்து இவரை மதுரையிலே புகவிட்டுப் பாண்டிநாடு ஈழ நாடாகாதபடி பரிகரித்துச் சோழ ராஜ்யம் சென்றபடிக்கு ஈடாகத் தொண்டைநாடும் பாண்டிநாடும் செல்லும்படியும் பண்ணி ராஜகாரியங் கொண்டு நிர்வகிக்கக் கடமை....குத் தன் கட்டளையிட்டுக் காரியங்கொண்டு செலுத்தினபடியே தமக்கு பின்பும் இக்கட்டளையிலே காரியஞ் செல்வதொருபடி காரியங் கொண்டு செல்வத்தால் நிற்க இவர் வியாதிபட்டு இன்றியே ஒழிந்தமையில் இவர் விருந்தங்களுக்கும் மக்களுக்கும் இவர்கள் விருந்தங்களுக்கும் மக்களுக்கும் பெண் மக்களுக்கும் தாயார்க்கும் உடன் பிறந்தாளுக்கும் இவள் மக்களுக்கும் இவர்கள் வற்கத்தாருக்கும் விருதராஜ பயங்கர வளநாட்டுக் குறுக்கை நாட்டு இவர் காணியான சோழேந்திர சிங்க நல்லூரில் பழம் பெயர் தவிர்ந்து யாண்டு எட்டாவது முதல் அந்தராயம் பாட்டம் உட்பட இறையிலியாய் வேறு பிரிந்த ராஜாதிராசன் குளத்தூர் நிலம் நாற்பதிற்று வேலி இந்நிலம் அனுபவிக்கும்படிக்கு ஐயங் கொண்ட சோழ மண்டலத்து மேன்மலைப் பழையனூர் நாட்டுப் பழையனூர் உடையான் வேதவனமுடையான் அம்மையப்பனாரான பல்லவராயன் நிச்சயித்தபடியே அனுபவிக்கும் விருந்தங்களில் சிற்றாலத்தூருடையான் மகளுக்கு நிலம் மூவேலியும் ஆலிநாடுடையான் மகளுக்கு நிலம் மூவேலியும் இவள் மக்கள் வாழ்க்கைப்பட்ட பெண்கள் மூவர்க்கு பேரால் நிலம் இருவேலியாக நிலம் அறு வேலியும் நெற்குன்றங்கிழார் களப்

பாளராயர் மகளுக்கு நிலம் மூவேலியும் இவர் மக்களில் அழகிய தேவனுக்கு நிலம் மூவேலியும் பெண் மக்களுக்குப் பேரால் நிலம் இருவேலியாக நிலம் அறுவேலியும் அம்பர் அருவந்தை காலிங்கராயர் மகளுக்கு நிலம் மூவேலியும் மக்களில் சேந்தன் திருநட்டமாடி வீரநம்பிதேவன் குடையான் மக்களுக்கும் இவள் மகளுக்கும் நிலம் இருவேலியும் ராஜராஜ தேவர் விருந்தங் களுக்கும் மக்களுக்கும் நிலம் எண்வேலியும் தாயார் வைப் பூருடையார் மகளார்க்கு நிலம் வேலியும் உடன் பிறந்த பெண் களில் வீழியூருடையானுக்கு புக்க பெண்ணுக்கும் இவள் மகளுக்கும் நிலம் இருவேலியும் ஆக நிலம் நாற்பதிற்று வேலி யும் அந்தராயம் பாட்டம் உட்பட இறையிலி இட்டமைக்கு உள்வரிக்கு எழுத்திட்டார் நந்தியராயர் கனகராயர் மூவேந்தராயர் ஜினத்தரையர் விசயராயர் புரவுவரி ஸ்ரீகரண நாயகம் சிறுகுடை யான் குன்றங்கிழான் காணூர் கிழவன் நரியனூருடையான் புரவுவரி ஸ்ரீகரணத்து முகவெட்டி ஈங்கை உடையான் ஆரூர் உடையான் தத்தை நல்லூர் உடையான் சிறுநல்லூர் உடையான் இப்படிக்கு பிரசாதஞ் செய்தருளின ஸ்ரீமுகத்துக்கு எழுத்திட்டார் சேதிராசர் வாணாதிரா .... வரசர் ராஜராஜ விழுப்பரையர் சிங் களராயர் நீலகங்கரையர் தீபதரையர் எழுதினான் திருமந்திர ஓலை மீனவன் மூவேந்த வேளான்'.

இச்சாசனம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. சில செய்திகளை இங்கு சுருக்கிக் கூறுகிறோம். இரண்டாம் இராச ராசன் 1163இல் இறந்தபோது, அவனுக்கு இரு பிள்ளைகள்: அவர்கள் வயது 2, 1. ஆகவே அவனுடைய அனுமதியின்மேல் பிள்ளைகளைக் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து குளத் தூருடையான் திருச்சிற்றம்பலமுடையான் பெருமான் நம்பிப் பல்லவராயன் குளத்தூருக்கு அழைத்து வந்தான். விக்கிரம சோழதேவன் பேரன் மகனாகிய எதிரிலிப் பெருமாளை இராசாதி ராசன் என்ற பெயரில் அபிஷேகம் செய்து வைத்தான். பிற் காலத்தில் இவ்விராசாதிராசன் 1178இல் இறந்துபோகவே, இரு குழந்தைகளில் மூத்தபிள்ளை வளர்ந்து மூன்றாம் குலோத்துங்க சோழன் என்று முடிபுனைகின்றான்; இவனுடைய தம்பி சங்கர சோழன்; இவ்விருவரும் முறையே குலோத்துங்கசோழன் கோவையும் சங்கரசோழன் உலாவும் கொண்டவர்கள் என்று 13ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றால் அறியலாம். இது வரலாற்றில் மிகவும் முக்கியமான செய்தி. இக்குளத்தூர்

என்பது இன்றைய பல்லவராயன் பேட்டை, மாயூரத்திற்கு அருகேயுள்ளது. ஆயிரத்தளி என்பது பழையாறை. இனி, இங்கு இராசாதிராசன், நெற்குன்றங்கிழார் களப்பாளராயர் மகளுக்கு மூன்று வேலி நிலம் கொடுத்தான் என்று அறிகிறோம். நெற் குன்றங்கிழார் திருப்புகலூர் அந்தாதி பாடியவர். சோழ அரசர் அக்காலத்தில் இவ்வேளாள குடும்பத்தில் பெண் கொண்டனர் போலும். அம்பர் அருவந்தை, சேந்தன் என்ற பெயர்களைக் காண்க. அருவந்தைக் காலிங்கராயர் மகள் சோழர் குடும்பத்தில் புகுந்தவள் போலும். அருவந்தைச் சேந்தன் பற்றிய விரிவான செய்திகள் பரம்பரையாக வருவன. (9ஆம் நூற்றாண்டில் இருந்த சேந்தன் பற்றித் திவாகர ஆராய்ச்சி பார்க்க).

## மூன்றாம் குலோத்துங்க சோழன் : 1188

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் பாண்டியன் முடித்தலையும் மதுரையும் கொண்டருளின ஸ்ரீ குலோத்துங்கச் சோழதேவர்க்கு யாண்டு 10ஆவது: செயங்கொண்ட சோழ மண்டலத்துச் சேதிகுலமாணிக்க வளநாட்டுப் பெடை நாட்டு நெல்லூரான விக்கிரம சிங்கபுரத்துப் படை முதலிகளும் மூன்று தெருவில் நகரத்தோமும் இவ்வூர்த் திருப்பாற்கடல் பள்ளி கொண்ட பெருமாளுக்கு நாங்கள் ஆயம் வைத்துக் கொடுத்த பரிசாவது: அளப்பன நிறுப்பன உட்பட்ட சரக்குக்க ளெல்லா வற்றிலும் பிள்ளையார்க்குத் தீர்ந்த சுங்கத்தில் வரி .... சின்னங் கொள்ளக் கடவர்களாகவும், கண்ணாலங்களிற் கொண்டவ னொரு சின்னமுங் கொடுத்தவனொரு சின்னமும் இடக் கடவர் களாகவும், இப்படி பரமண்டலங்களிலும் செல்வதாகவும் வைத்துக் கொடுத்தோம் சமைய நாராயணத் தன்ம தாவளரோம். இது விலக்குவான் கெங்கைக் கரை குராற்பசுக் குத்தினான் பாபத்தைப் படுவான்.

## சடையவர்மன் வீரபாண்டியன் : 1179

ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கர வர்த்திகள் ஸ்ரீவீரபாண்டிய தேவர்க்கு யாண்டு 4வது நாயற்று அபரபக்ஷத்து நவமியும் ஞாயிற்றுக் கிழமையும் பெற்ற ரோகிணி நாள் உடையார் திருநெல்வேலி உடைய நாயனார் கோயில் ஆதி சண்டேச்சுவர தேவர்க்கு கீழ் வேம்ப நாட்டுத் திருநெல்வேலிக் கைகோட் சேனாதிபதிகளோம் விலைப்பிரமாணம் பண்ணிக்

கொடுத்த பரிசாவது: உடையார் திருநெல்வேலி உடைய நாயனாற்குத் திருமுடி .... அறுகும் தாளிப்பூவுஞ் சாத்தி இடைக்கட்டு மடத்தில் இருக்கும் திருத்தொண்டீச்வர தேவற்கு இவ்வூர் பதியிலாரில் கூத்தன் நம்பிராட்டியான செய்ய பெருமாள் தலைக்கோலியேன் திருவிடைக்கட்டில். மடத்தில் திருமேனிகளில் நம்பியாரூரனான இராக்கதப் பெருமாளுக்கும் நம்பியாரூரற்கும் ஜீவனத்துக்குக் கூத்தன் நம்பிராட்டியான மனஞ் செய்த பெருமாள் தலைக்கோலி எங்கள் பக்கல் விலைகொண்டு இட்ட நிலமாவது முள்ளிநாட்டு பிரம்மதேயம் சேரவன் மகாதேவிச் சதுர்வேதி மங்கலத்துக் கீழ்படாகை பத்தன்மடையிலான் ஜீவிதம் கைக்கொண்டமையில் செம்மே .... வாய்க்காலுக்குக் கிழக்கும் வீரகேரளப் பிலாற்றுக்கு தெற்கு பத்தொன்பதாங் கண்ணாற்று இரண்டாஞ் செய்யில் தெற்கடைய நிலம் 4ம் இதன் கண்ணாற்று ஆறாஞ்செய்யில் வடக்கடைய நிலம் 4ம் இந்நிலமொருமாவும் எம்மிலிசைந்த விலைப் பொருள் இவர் பக்கல் கொண்டு சிறுகாலைச் சந்திக்கு அறுகும் தாளிப்பூவுஞ் சாத்திப் பறிக்கிற திருத்தொண்டர்களில் நம்பியாரூரர் இராக்கதற்கும் நம்பியாரூரற்கும் ஜீவனத்துக்கு விற்று விலைப்பிராமணம் பண்ணிக் கொடுத்தோம். ஆதிசண்டேச்வர தேவற்கு கைக்கோட் சேனாபதிகளோம் விற்றுக் கொடுத்த கடமை அந்தராயம் பொன்வரி உழுதான்குடி மற்றெப்பேற்பட்ட சில்வரியும் தான் இறுப்பாராகவும். மேற்படி விற்றுக் கொடுத்த இந்நிலத்துக்கு இதுவே விலையோலையும் இதுவே பொருள் செலவோலையும் ஆவதாகவும். இதுவல்லது வெறுவிலை யாவணக்கிலாவணப் பொருள் மாவறுதிப் பொருட்சிலவோலை காட்டவுங் காணவும் கடவதல்லவாகவும். இப்படி சம்மதித்து ....

### சடையவர்மன் குலசேகர பாண்டியன் : 1192

மாமதிக்கலம் விளக்கிய கோமுதற்பேர்ச் சடையபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலசேகரதேவர்க்கு யாண்டு இரண்டாவது: நாள் முப்பத்தைஞ்சினால் மதுரோ தயவள நாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக் கோயிற் பள்ளியறைக் கூடத்துப் பள்ளிப் பீடம் மழவராயனின் எழுந்தருளி இருந்து மழவராயர் சுவாமிகள் செல்வத் திருவாரூர் தக்ஷண கோளகி மடத்து ஆசாரிய சிஷ்யரில் தற்புருஷ சிவர் செய்யத் திருவாய்மொழிந் தருளின்படி இவ்வாசாரியர் மாடக்குளக் கீழ் மதுரைத் திருஞான

*சம்பந்தன் மடத்துக்குப் பாகனூர்க் கூற்றத்துச் சோழ குலாந்தகச் சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீவல்லவன் கட்டளையிலும் பராக்கிரம பாண்டியன் கட்டளையிலும் தம் பெயரால் ஐயன் மழவராயர் விலைகொண்டு கொடுத்த இந்த நிலமும் பராக்கிரம பாண்டியன் கட்டளைக் கீழ் கூற்றில் யஜ்ஞமூர்த்தி யாண்டான் பற்றாய் ஐயன் மழவராயர்க்குக் காணியாய் வரக் கொடுத்த நிலமும் உட்பட இவ்வூர் கடமையிறுக்குங் கோலால் வேலி நிலம் இரண்டாவது முதல் காராண்மை மீயாட்சியும் அந்தராயமும் வினியோகமுமாக்கலமுந் தடிப்பதக்கும் பாடி காவலும் தருவ தான அச்சும் காரியவாராச்சியும் .... பாட்டமும், விக்கிரமப் பேறும் மற்றும் .... உட்பட மடப்புற இறையிலியாகப் பெற வேணுமென்று ஐயன் மழவராயர் நமக்குச் சொன்னமையில் இவ்வூர் சுவாமிகள் செல்வத் திருவாரூர் தக்ஷணகோளகி மடத்து .... மடவாய மாடக் குளக்கீழ் மதுரைத் திருமடத்துக்குப் பாகனூர்க் கூற்றத்துச் சோழ குலோத்துங்கச் சதுர்வேதி மங்கலத்து சீவல்லவன் கட்டளையிலும் பராக்கிரம பாண்டியன் கட்டளை யிலுந் தன் தம் பெயரால் ஐயன் மழவராயர் விலை கொண்டு கொடுத்த நிலமும் பராக்கிரம பாண்டியன் கட்டளைக்கீழ்க் கூற்றில் யஜ்ஞ மூர்த்தி ஐயன் மழவராயர்க்கு .... இவர்க்குக் கொடுத்த சலமும் உட்பட இவ்வூர் கடமையிறுக்குங்கோலால் நிலமும் வேலியும் இவ்வாண்டு முதல் காராண்மை மீயாட்சியும் அந்தராயமும் வினியோகமுமாக்கலமுந் தடிப்பதக்கும் பாடி காவலுந் தருவ.... பஞ்சுபிலி சந்து .... மற்றும் எப்பேற்பட்டனவும் உட்பட மடப்புற இறையிலியாக இட்டு வரியிலார் எழுத்திட்ட உள்வரியும் நம் .... தரச் சொன்னோம். கைக்கொண்டு இப்படி சந்திராதித்தவச் செல்வதாக.*

### இலங்கை அரசன் விசயபாகு (12ஆம் நூற்றாண்டு)

*நமோ புத்தாய. ஸ்ரீ லங்கா த்வீபத்து, சூர்ய வம்சத்து, இக்ஷ்வாகுவின் வழி வந்த, அநேக சத்ரு விசயம் பண்ணி, அனுராத புரம் புக்கு, புத்த சாசனம் ரக்ஷிக்க வேண்டி, சங்க நியோகத்தால் திருமுடி சூடி, அருமநத்தில் நின்றும் சங்கத்தாரை அழைப்பித்து, மூன்று நிகாயத்து சங்க சுத்தி பண்ணுவித்து, மூன்று துலாபாரம் மூன்று நிகாயத்துக்கு கொடுத்து, தசராஜ தர்மத்தால் ஐம்பத்தை யாண்டு இலங்கை முழுதும் ஒருகுடை நிழற்றித் திரு விராஜ்யஞ் செய்தருளி, எழுபத்து மூவாண்டு திருநக்ஷத்திரஞ் செலுத்தின*

கோ ஸ்ரீ சங்கபோதி பத்மரான சக்ரவர்த்திகள் ஸ்ரீ விசயபாகு தேவரநுவாகல் தேவ சேன விரத்தர்க்கு நியோகித்துப் புலநறியான விசய ராஜ புரத்து எடுப்பித்த மூலஸ்தானமாகிய அபயகிரி மகா விகாரத்து, அக்ராயதனமான, உத்தொருள் மூளையில் மூவுலகுக்குஞ் சிகாமணியாகிய தளதாபாத்ர .... தாது ஸ்வாமி தேவர்களுக்கு நித்யவாச பவநமான ப்ரதமாபிஷேகத்துக்கு மங்கலகிரகமான ஆட்டாண்டு தோறுந் திருநயன மோக்ஷம் பண்ணி, அஞ்சன நீருக்கும் கண்ணாலஞ் செய்யும் மங்கல மகா சிலாமய புத்த தேவர்க்கு, கந்த குடியான தளதாய்ப் பெரும்பள்ளி உங்கள் ரக்ஷையாக வேண்டுமென்று சகல சாஸ்திராகம சீலாசார சம்பன்னரான ராஜகுரு உதூருள் மூளையில் வ்யாரிணி முகலன் மகாஸ்தவிரர் ராஜா மத்வரோடும் கூட எழுந்தருளியிருந்து, எங்களை அழைத்து அருளிச் செய்தமையில், மாதந்திரத்தோம் கூடி, எங்களுக்கு மூதாதைகளாயுள்ள வளஞ்சேயரையும் எங்களோடு கூடிவரும் நகரத்தாருள்ளிட்டோரையும் கூட்டி, மூன்றுகைத் திருவேளைக்காரன் தளதாய்ப் பெரும் பள்ளி யென்று திருநாமஞ்சாத்தி, எங்களறமாய் எங்கள் காவலாய் நிற்க வேண்டுமென்று, அறங்காவலுக்கு படைப்படையால் ஓரோ சேவகரையும் ஓரோ வேலி நிலமுமிட்டுக் கொடுத்து, இப்பள்ளி நோக்கின ஊர்களும் பரிவாரமும் பண்டாரமும் அபயம் புக்காரையும் பட்டுங் கெட்டுங் காக்கக் கடவோமாகவும் - அழிவு பட்டிடங்கள் அழிவு சோர்ந்ததும் எங்கள் அந்வயமுள்ள தனையும் எஞ்ஞான்றும் இதுக்கு வேண்டுவனவெல்லாம் செய் வோமாகவும் - பண்ணின இந்த வ்யவஸ்தை சந்திராதித்த வரை நிற்பதாகக் கைவினா வேற்றிச் செம்பிலுங் கல்லிலும் வெட்டுவித்துக் கொடுத்தோம். வலங்கை இடங்கை சிறுதனம், பிள்ளைகள் தனம், வடுகர், மலையாளர், பரிவாரக் கொந்தம், பல கலனையு முள்ளிட்ட திருவேளைக் காரரோம். இப்படித் திரம்புவானும், திரம்பச் சொல்லுவானும், திரம்பச் சம்மதித் தானும் மாதந்திரத்துக்குப் பிழைத்து படைப்பகையன் பஞ்ச மகா பாதகஞ் செய்தானும், தேவர் பூதர் மாதவத்தோர்க்குக் கொடுத்தன கொள்ளும் கொடும்பாவியும் புத்த தர்ம சங்க ரத்நங்களுக்குப் பிழைத்தானும், புகும் நரகம் புகுவான். அறமற வற்க ஸ்வஸ்திஸ்ரீ. (இலங்கை பொலன்னருவாவில் உள்ளது)
*சாசனமாலை, எஸ். ராஜம், 1960.*

○○○

## ஆதார நூல்கள்

ஒவ்வோர் அதிகாரத்திலும் நூலாராய்ச்சியின் இறுதியில் அந்தந்த நூல் பற்றிய சிறப்பான பதிப்புக்களைப் பற்றியும் பிற நூல்களையும் குறிப்பிட்டிருக்கிறோம். பின்னும் பயன்பட்ட வேறுசில நூல்களைக் கீழே தருகிறோம்.

ஐயரவர்கள் பதிப்பு - திருக்கழுக்குன்றத்து உலா, பாச வதைப் பரணி, பத்துப்பாட்டு, புறநானூறு.

மு. இராகவையங்கார் நூல்கள் - ஆராய்ச்சித் தொகுதி, சாசனக்கவி சரிதம், பெருந்தொகை.

வையாபுரிப்பிள்ளை - கம்பன்.

வெள்ளை வாரணனார் - பன்னிரு திருமுறை வரலாறு.

சீனி வேங்கடசாமி, மறைந்த தமிழ் நூல்கள்.

செந்தமிழ் சித்தாந்தம் தொகுதிகள். விநோதரசமஞ்சரி, புலவர் புராணம், தமிழ் நாவலர் சரிதை, தனிப்பாடல் திரட்டு தமிழறி யும் பெருமாள் கதை.

யாப்பருங்கலவிருத்தி, பன்னிரு பாட்டியல், மாறனலங் காரம், தொல்காப்பிய உரைகள்'

தொண்டை மண்டல சதகம், சோழ, பாண்டிய கொங்கு' நந்த மண்டல சதகங்கள்.

சம்பந்தர் தேவாரம், முத்திநிச்சயப் பேருரை, சிவஞான போதமா பாடியம்.

பொதுவான வரலாற்றுணர்வுக்குச் சதாசிவ பண்டாரத் தார் எழுதிய பாண்டியர் வரலாறு, சோழர் வரலாறு இரண்டாம் பகுதி என்ற நூல்கள் பெரிதும் பயன்பட்டன.

ஏட்டுச் சுவடிகள் - கலிங்கத்துப்பரணி, பெரியபுராணம், உத்தரகாண்டம், சிலப்பதிகாரஉரை, புறநானூற்றுரை, திரு உந்தியார், திருக்களிற்றுப்படியார் உரைகள், ஞானாமிர்த மூலம், பிரபந்த மரபியல்.

ooo

## சோழ மன்னர் பரம்பரை - நூற்றாண்டு 12 - 13

குலோத்துங்க சோழன் - I
இராசகேசரி, 1070 - 1120

விக்கிரமசோழன்
பரகேசரி, 1118 - 1133

குலோத்துங்க சோழன் - II
இராசகேசரி, 1133 - 1150

இராசராச சோழன் - II
பரகேசரி, 1146 - 1163

குலோத்துங்க சோழன் - III
பரகேசரி, 1178 - 1218

இராசராசன் - III
இராசகேசரி, 1216 - 1256

இராசேந்திரன் - III
பரகேசரி, 1246 - 1279
(மக்கள் இல்லை)

பெண் - ஆளுடை நாச்சியார்

மகன் - நெறியுடைப் பெருமாள்

எதிரிலாப் பெருமாள்
இராசாதிராசன் - II
இராசகேசரி, 1163 - 1178

சோழர் வமிசம் முடிந்தது.

## ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணை

| காலம் | இலக்கியம் இலக்கணம் உரை | சைவம் | வைணவம் | சைனம், பிற |
|---|---|---|---|---|
| 1100 - 1125 | சயங்கொண்டார்<br>புறநானூற்றுரையாசிரியர்<br>பெருந்தேவனார் | பரசமய கோளரி<br>மாமுனி | திருக்குருகைப்பிரான்<br>பிள்ளா | வச்சத்<br>தொள்ளாயிரம் |
| 1125 - 1150 | அவ்வையார்<br>ஒட்டக்கூத்தர்<br>தண்டியாசிரியர் | சேக்கிழார்<br>திருவியலூர்<br>உய்யவந்தார்<br>தில்லையுலா<br>திருக்கோவை<br>பழைய உரை | திருவரங்கத்தமுதனார்<br>அருளாளப்பெருமான்<br>எம்பெருமானார் | அருங்கலச் செப்பு<br>முனையதரையன்<br>மனைவி<br>வாணியன்தாதன்<br>அம்பிகாபதி<br>கண்டனலங்காரம்<br>கண்டன்கோவை |
| 1150 - 1175 | அடியார்க்கு நல்லார் | நெற்குன்றவாணர் | | ஆளவந்தபிள்ளை<br>யாசிரியர்<br>கம்பர் - 2, கந்தியார் |
| 1175 - 1200 | குணவீரபண்டிதர் | திருக்கடவூர்<br>உய்யவந்தார்<br>வாகீசமுனிவர் | பட்டர் | குணாதித்தன் சேய்<br>ஓவாத கூத்தர் |

## ஆசிரியர் பெயர் கால அகராதி

| ஆசிரியர் பெயர் | நூல் | உடன் காலத்தவர் | காலம் | பாகம் பக்கம் |
|---|---|---|---|---|
| அடியார் நல்லார் | சிலப்பதிகார உரை | பொப்பண்ண காங்கேயன் | 1150 - 1175 | 2:8 |
| அம்பிகாபதி | அம்பிகாபதி கோவை | - | 1150 | 2:260 |
| அரங்கத்தமுதனார், திரு. | இராமானுச நூற்றந்தாதி | இராமானுசர் முதலாயினார் | 1130 | 2:192 |
| அருங்கலச்செப்பு ஆசிரியர் | அருங்கலச்செப்பு | - | 1125 | 2:224 |
| அருளாளப் பெருமாள் எம்பெருமானார் | பிரமேயசாரம், விஞ்ஞானசாரம் | இராமானுசர், சீடர்கள் | 1135 | 2:207 |
| அவ்வையார் | ஆத்திசூடி, மூதுரை கொன்றை வேந்தன், நல்வழி | அசதி | 1150 | 1:345 |
| ஆளவந்தபிள்ளையாசிரியர் | - | - | 1150 | 2:310 |
| உய்யவந்த தேவர், திருக்கடவூர் | திருக்களிற்றுப்படியார் | குரு ஆளுடைய தேவர் | 1178 | 2:159 |
| உய்யவந்த தேவர், திருவியலூர் | திருஉந்தியார் | சீடர் ஆளுடைய தேவர் | 1148 | 2:159 |
| எம்பெருமானாரடியாள் | தாலாட்டு | இராமானுசர் | 1130 | 2:221 |
| ஒட்டக்கூத்தர் | மூவருலா, பரணி பிள்ளைத்தமிழ் | சோழ மன்னர் மூவர் | 1100-1160 | 1:255 |
| ஓவாத கூத்தர் | - | - | 1185 | 2:302 |

| ஆசிரியர் பெயர் | நூல் | உடன் காலத்தவர் | காலம் | பக்கம் |
|---|---|---|---|---|
| கண்டன் அலங்காரம் பாடியவர் | கண்டன் அலங்காரம் - பாடல்கள் | இராசராசன் II | 1160 | 2:256 |
| கண்டன் கோவை பாடியவர் | கண்டன்கோவை - பாடல்கள் | இராசராசன் II | 1160 | 2:259 |
| கந்தியார் | சிந்தாமணி பரிபாடல் இடைச்செருகல் | - | 1175 | 2:293 |
| கம்பர் II | சடகோபரந்தாதி, சரசுவதி அந்தாதி | - | 1175 | 2:278 |
| குணவீர பண்டிதர் | வச்சணந்திமாலை, நேமிநாதம் | குலோத்துங்கன் III | 1195 | 2:109 |
| குணாதித்தன் சேய் | காகுத்தன் கதை | - | 1178 | 2:304 |
| குருகைப்பிரான் பிள்ளான் திரு | திருவாய்மொழி ஆறாயிரப்படி | இராமானுசர் | 1110 | 2:201 |
| சயங்கொண்டார் | கலிங்கத்துப்பரணி | குலோத்துங்கன் I | 1112 | 1:1 |
| சேக்கிழார் | திருத்தொண்டர் புராணம் | குலோத்துங்கன் II | 1110-1150 | 1:62 |
| தண்டியாசிரியர் | தண்டியலங்காரம் | குலோத்துங்கன் II | 1145 | 2:81 |
| தனியன் பாடிய ஆசிரியர் | தனியன் - பாடல்கள் | - | - | 2:215 |

| ஆசிரியர் பெயர் | நூல் | உடன் காலத்தவர் | காலம் | பக்கம் |
|---|---|---|---|---|
| திருக்கோவை பழைய உரையாசிரியர் | திருக்கோவையுரை | - | 1150 | 2:77 |
| தில்லையுலா ஆசிரியர் | தில்லையுலா | குலோத்துங்கன் II | 1145 | 2:239 |
| தீபங்குடிப்பத்து ஆசிரியர் | தீபங்குடிப்பத்து | குலோத்துங்கன் I | 1115 | 2:235 |
| நம்பிகாளி | பாடல் | நெற்குன்றவாணர் | 1150 | 2:299 |
| நெற்குன்றவாணர் | புகலூர் அந்தாதி | குலோத்துங்கன் II | 1150 | 2:250 |
| பட்டர் | கைசிக புராண உரை | - | 1192-1220 | 2:210 |
| பரசமய கோளரி மாமுனி | கன்னிவன புராணம்<br>பூம்புலியூர் நாடகம்<br>அட்டாதச புராணம் | குலோத்துங்கன் I | 1111-1119 | 2:301 |
| புறநானூற்றுரையாசிரியர் | புறநானூற்றுரை | - | 1120 | 2:68 |
| பெருந்தேவனார் | வீரசோழிய உரை | - | 1105 | 2:122 |
| முனையதரையன் மனைவி | தனிப்பாடல் | விக்கிரமசோழன் | 1130 | 2:311 |
| வச்சத்தொள்ளாயிர ஆசிரியர் | வச்சத்தொள்ளாயிரம் | குலோத்துங்கன் I | 1105 | 2:272 |
| வாகீச முனிவர் | ஞானாமிர்தம் | - | 1190 | 2:177 |
| வாணியன் தாதன் | தனிப்பாடல் | - | 1150 | 2:307 |

# சொல்லாட்சியும் பொருளும்

○○○

# மேற்கோள் செய்யுள் அகராதி

○○○

# பொருள் அகராதி

ooo

# சிறப்புப் பெயரகராதி

○○○



இலக்கிய ஆராய்ச்சி என்பது
எவ்வளவுதான்
அறிவியல் ரீதியாகச் செய்யப் புகுந்தாலும்,
மக்கட் சமுதாயத்தினுடைய
மரபுகளையும்
குறிக்கோளையும்
கற்பனைகளையும்
உண்மை நிலையையும்
அடியோடு மறுத்து எழுதல் இயலாது.
இவ்வாராய்ச்சி முழுமையும்
புதிய முயற்சியாதலால்
இவற்றுள்
பிழையோ தவறான முடிவுகளோ
இருத்தல் இயல்பே.
மேலும்
இனிச் செய்கின்ற
ஆராய்ச்சிகளாலும்,
இனிக் கிடைக்கின்ற
நூல்கள், சாசனங்களாலும்
எமது முடிவுகள் சிறிது மாறினும்
அதற்காக
வருந்த வேண்டியதில்லை.



The PARKAR